த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—529

# ஒப்பந்தச் சட்டவியல்

(பி.காம்., சட்டப் படிப்புகளுக்குரியது)

ஆசிரியர்
ஏ. ஆர். சனகன், எம்.ஏ., பி.எஸ்ஸி., பி.டி., பி.எல்.,
இளநிலைப் பேராசிரியர்,
சட்டக் கல்லூரி,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—November, 1973

T.N.T.B.S. (C.P.) No. 529



**LAW OF CONTRACTS**

A. R. JANAKAN

**Price Rs. 7-55**

Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
BHARANI PRESS,
11, Venkatadri Naicken Street,
Kuyappettai, Madras-12.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஒப்பந்தச் சட்டவியல்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 529ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 564 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை ; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்



## தனி ஒப்பந்தங்கள்

# 1. முகவுரை

சட்டப்படி செயற்படுத்துவதற்குரிய ஓர் உடன்பாட்டை "ஒப்பந்தம்" (Contract) என்று மொழிவர். இச்சொல் இலத்தீன் மொழியிற் காணப்படும் 'Contractum' (ஒன்றுதல்) என்னும் சொல்லின் அடிச்சுவட்டில் தோன்றியதாகும்.

தொடக்கத்தில் வணிகர்களிடையே உருவாகிய உடன்பாடுகளை ஆண்ட இச்சட்டம், நாளடைவில் விரிவடைந்து பல பகுதிகளாகப் பிரிந்து இன்றைய நிலையில் நாம் கண்ணுறும் ஒப்பந்தச் சட்டமாக உருக்கொண்டுள்ளது.

ஒப்பந்தச் சட்டமானது (Law of Contracts), பொது ஒப்பந்தங்கள் (General Contracts), தனி ஒப்பந்தங்கள் (Special Contracts) என்னும் இரு பெரும் பிரிவுகளை உள்ளடக்கிக்கொண்டு விளங்குகின்றது.

தனி ஒப்பந்தங்கள் என்பவற்றில் ஈட்டுறுதி ஒப்பந்தம் (Contract of Indemnity), பொறுப்புறுதி ஒப்பந்தம் (Contract of Guarantee), ஒப்படைவுகள் (Bailments), முகவரியம் (Agency), பொருள்கள் விற்பனை (Sale of goods), கூட்டாண்மை (Partnership), பங்கமைப்பு நிறுவனங்கள் (Companies), காப்பீடு (Insurance), மாற்று முறையாவணங்கள் (Negotiable Instruments), நொடிப்புநிலைச் சட்டம் (The Law of Insolvency or Bankruptcy) முதலியவை உட்பொதிந்துள்ளன.

வணிகர்களிடையே ஏற்படும் உடன்பாடுகளின் விளைவினால் உண்டாகும் உரிமைகளும் அவற்றால் ஏற்படும் கடமைகளும் இதனுள் விரிவாக வலியுறுத்தப் படுகின்றன.

வணிகவியலில் சம்பந்தப்படாத, நிலம் வாங்குபவர் விற்பவர் இடையே ஏற்படும் முறைபாடுகள், மாற்றுச் சீட்டுப் போன்ற மாற்று முறையாவணத்தின்கண் உண்டாகும் முறைபாடுகள்

அனைத்தும் ஒப்பந்தச் சட்டத்தினால் கட்டுப்படுத்தப் படுகின்றன. அன்றாட வாழ்க்கையில் ஒவ்வொரு மனிதனையும் இவ்வொப்பந்தச் சட்டம் பல்வேறு நிலைகளில் பிணைத்து இணைத்து விடுகின்றன.

நாம் நண்பர்களிடமிருந்து பொருள்களைக் கடனாகப் பெறு கின்ற நிலையிலும், பேருந்து, தனி உந்து வண்டிகளில் பயணம் செய்கின்ற நிலையிலும், தேவையான பொருள்களை வாங்குகின்ற நிலையிலும், பொழுதுபோக்கிற்காக ஈடுபட்டு விளையாடும் நிலை யிலும், அரங்குகளில் படம் பார்க்கச் செல்லும் நிலையிலும் ஒப்பந்தச் சட்டத்தினால் சில உரிமைகளைப் பெற்று அதன்மூலம் சில கட்டுப்பாடுகளுக்கு ஆளாகின்றோம். அத்தகைய சட்டத்தின் நுணுக்கங்களை ஆராய்ந்து அறிந்து தெளிவது நமக்குப் பெரும் பயன் அளிக்குமன்றோ ?

வணிகவியலில் கொடுக்கல் வாங்கல்கள் (transactions) பெரும் பாலும் அசையும் பொருள்களைப் பற்றியனவாகவே இருக் கின்றன ; உடனுக்குடன் ஏற்படும் விலை மாற்றத்தினாலும், அவ் விலை மாற்றத்தை எண்ணிச் செயற்படும் முறைகளிலும் ஒப்பந் தங்கள் ஏற்படுகின்றது.

கடன்கள், பங்குகள் முதலான **பருவியலற்றவைகளும்(Incorpo-reals)** இங்கு அசையும் பொருள்களாகக் கணக்கிடப் படுகின்றன.

**பருப்பொருள்களின் (Corporeals)** சட்டப்படியான உரிமை யாளர்கள் அவற்றை நிலைநிறுத்திக் கொள்ளத் தேவையும் முறையு மான வலியுறுத்தல் வழிப் பெறும் (force) முறையையும் கையாளலாம்.

அதனையும் மீறி இழப்பின், ஈடு செய்யப்பெறும் பொருட்டுச் சட்டத்தின் துணைகொண்டு நீதி மன்றத்தினை நாடலாம். இதனைக் **கையுரிமைப் பொருள் (Chose in possession)** என்பர்.

சான்றாகத் தங்கமோதிரத்தினை இழந்த சட்டப்படியான உரிமையாளர், களவாடியவனிடமிருந்து அதனை மீட்க நியாய மான வலியுறுத்தல் வழிமுறை நிகழ்த்தி அதனைப் பெறலாம். அவ்வாறு பெற இயலாவிடின் எடுத்தவன் அந்த இழப்பினுக்கு ஈடுகட்ட அவன் மீது உரிய சட்டப்படியான நடவடிக்கையை மேற்கொள்ளலாம். இதற்குச் சட்டம் துணை நின்று வழிவகை செய்கின்றது.

இம்முறைக்கு மாறான ஒன்றினை **வழக்குரிமைப் பொருள் (Chose in Action)** என்பர்.

மாற்றுச் சீட்டின் மேல் நூறு ரூபாய் கடன் கொடுத்த ஒருவர் அவரிடம் கடன் பட்டவர் ரூபாய் நூற்றினைக் கையில் வைத்துக் கொண்டு அவருக்குக் கொடுக்க மறுப்பாராயின் அவ்வாறு கடன் கொடுத்தவர் நியாயமான வலியுறுத்தல் வழி அத்தொகையைப் பெறமுடியாது. அத்தொகையைப் பெற அவர் வழக்கு மன்றத்தின் துணையை நாடி அம் மன்றத்தின் தீர்ப்பைத்தான் பெற முடியும். வழக்கு மன்றத்திற்குச் செல்லும் உரிமையைத்தான் அக்கடன் கொடுத்தவர் பெற முடியுமே தவிர, மற்ற எந்த உரிமையையும் அவரால் அடையமுடியாது என்பது தெளிவு.

வழக்குரிமைப் பொருளில், கடனுறுதிச் சீட்டுகள் (promissory notes) மாற்றுச் சீட்டுகள் (Bills of exchange). காசோலை (chegue) போன்ற மாற்று முறையாவணம், பங்கமைப்பு (கம்பெனி) பங்குகள், காப்பீடுகள், கடனீட்டுப் பத்திரங்கள் முதலியன அனைத்தும் அடங்கும்.

வணிகவியல் ஒப்பந்தங்கள் பண்டைக் காலத்தில் அன்றைய சமுதாயத்திற்குத் தேவையான அளவு உருவாக்கப் பெற்று நிறைவேற்றப்பட்டன. அவ்வொப்பந்தங்கள் இன்றுள்ள சமுதாய வளர்ச்சிக்கு ஏற்பச் சட்ட உருப்பெற்று நடைமுறையில் உள்ளன.

இன்றைக்குள்ள சட்டம் மேலைநாடான இங்கிலாந்து வணிகவியல் சட்டத்தின் அடிப்படையில் வளர்ந்து, நம் நாட்டுப் பாராளு மன்றத்தில் உருவாக்கப் பெற்ற விதிகளைக் கொண்டு இலங்குகின்றது. அது, நம் நாட்டின் வணிக சமுதாயத்தில் தொன்று தொட்டு நிலவி வந்த நடைமுறைகளையும் பழக்க வழக்கங்களையும் கருத்தில் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது.

கி. பி. 1872-ல் உருவாக்கப்பட்ட இந்த ஒப்பந்தச் சட்டம் (Law of Contracts) இங்கிலாந்து நாட்டு வணிகவியல் கொள்கைகளைத் தழுவி இந்தியா முழுமைக்கும் பொருந்துவதாக அமைந்துள்ளது. இச்சட்டம் இந்தியாவிலுள்ள எல்லா வழக்கு மன்றங்களிலும் அனைத்து மத இனச் சமுதாயப் பிரிவினரையும் கட்டுப்படுத்தும் தன்மையது ஆகும்.* எனினும், அவை வழக்காறுகளையும் (Usages) வழமைகளையும் (Customs) பாதிக்காத முறையில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இச்சட்டத்தின் விதிகளில் சில இரத்தாகியுள்ளன.

ஒப்பந்தச் சட்ட முகப்புரையில் (preamble) "ஒப்பந்தச் சட்டத்தில் பொதுவான ஒப்பந்தக் கொள்கைகள் விளக்கப்பட்டும், தனி ஒப்பந்தங்களான ஒப்படைவு, ஈட்டுறுதி ஒப்பந்தம்,

பொறுப்புறுதி ஒப்பந்தம், முகவரியம் முதலியன விரித்துக் கூறப்பட்டுமுள்ளனவேயன்றி, இவற்றுள் அடங்காத ஒப்பந்தங்களும் நடைமுறையில் ஏற்படலாம்,'' என்று கூறப்பட்டுள்ளது. அந் நிலையில் இந்து, முகமதிய ஒப்பந்தச் சட்டங்களின்படி வழக்குகள் முடிவாகும்.

விற்பனைப் பொருள்கள் பற்றிய விதிகளுக்கும் கூட்டாண்மை பற்றிய விதிகளுக்கும் தனிச் சட்டங்கள் அவைகளுக்கென்றே வகுக்கப்பட்டுள்ளமையால், ஒப்பந்தச் சட்டத்தினின்றும் அவை நீக்கப்பட்டுவிட்டன.

மாற்று முறையாவணம், சரக்கேற்றிகள் (carriers), புகையூர்திகள் முதலியவற்றிற்குத் தனித்தனிச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன.

சட்டம், முறையான வாழ்வை அளிக்கின்றது. முறையான வாழ்வினால் மனிதன் எதிர் காலத்தை எண்ணி நம்பிக்கையோடு அச்சமின்றி வாழலாம். இயற்கை வகுக்கும் சீரான அமைப்பைச் சட்டத்தினால் பெற இயலும். சொத்துரிமைச் சட்டம் மனிதனுக்கு எங்ஙனம் சொத்துக்களின் மீது உரிமை கொண்டாட வழிவகை செய்கின்றதோ, அவ்வாறே ஒப்பந்தச் சட்டமும் மனிதனின் உரிமையை நிலைநிறுத்தி அதனால் ஏற்படும் கடமையைத் தவறாமல் புரிவதைக் காக்க வழிவகை செய்கின்றது.

# 2. முதனிலை

## (Preliminary)

(பி. 1) இந்திய ஒப்பந்தச் சட்டம் சம்மு, காசுமீர் மாநிலங்களைத் தவிர ஏனைய இந்திய எல்லைகளுக்குட்பட்ட அனைத்து மாநிலங்களிலும் வாழும் அனைத்துப் பிரிவினரையும் கட்டுப் படுத்தும்.

இச்சட்டம் அனைத்து ஒப்பந்தங்களையும் கட்டுப்படுத்தும் முழுமையான ஒன்றன்று. தனி ஒப்பந்தங்களான ஈட்டுறுதி, பொறுப்புறுதி, ஒப்படைவு, முகவரியம் முதலியவற்றைத் தவிர விற்பனைக்கான ஒப்பந்தம், அசையாப் பொருளின் அடைமானம், குத்தகைகள் ஆகியவையும் இச் சட்டத்திற்குப் புறம்பானவைகளாகக் கொள்ளப்படுகின்றன.

மேலும் மாற்று முறையாவணச் சட்டம் சொத்துரிமைச் சட்டம், குறித்தவகை மாற்றீடு (Specific Relief Act)பங்கமைப்புச் சட்டம், விற்பனைச் சட்டம், கூட்டாண்மைச் சட்டம், புகையூர்திச் சட்டம் போன்றவைகள் வெவ்வேறான ஒப்பந்தச் சட்டங்களாகும். எனவே, இந்திய ஒப்பந்தச் சட்டம் முழுமையான ஒன்றன்று என்பது பொருந்தும். இந்தச் சட்டம் நாட்டின் வழக்காறுகளையும் வழமைகளையும் பாதிக்கவில்லை. வளர்ந்தோங்கி வரும் சமுதாயத்தில் முன்னேற்றம் அடைந்துள்ள வணிகவியலின் காரணமாகச் சட்டமன்றங்கள் புதுப்புதுச் சட்டங்கள் பலவற்றைத் தோற்றுவித்து ஒப்பந்தக்காரர்களின் உரிமையைப் பெரிதும் கட்டுப்பாட்டில் வைத்துள்ளன.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தில் காணப்படும் சட்டச் சொற்களின் விளக்கம் பல்வேறு தலைப்புகளில் அடங்குகின்றன. அவற்றின் விளக்கத்தையும் சட்டப்பிரிவுகளையும் ஈண்டு ஆராய்வோம்.

**புரிவுரை (Proposal—**முன்னுரைத்தல்)

ஒருவர் மற்றொருவரிடம் ஒரு காரியத்தைச் செய்வதாகவோ செய்யாமையாகவோ அறிவித்து, அதற்கு அவரது இசைவைப் பெற விரும்பினுல் அது 'புரிவுரை' எனப்படும் (பி. 2. இ.ஒ.ச).

புரிவுரை எந்த அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும் என்பதைப் புரிவுரையாளர் (proposer) தெளிவாகத் தெரிவித்தல் இன்றியமையாததாகும். அஃது ஏற்பவரின் இசைவைப் பெறு வதாக இருத்தல் வேண்டுமேயன்றிக், கட்டளையாக இருத்தல் கூடாது. சான்ருக: "நீ வாங்குவதாயிருந்தால், நான் என் வீட்டை விற்க இசைகிறேன்" என்று ஒருவர் மற்றொருவரிடம் கூறினுல் அது, புரிவுரையாகாது.

புரிவுரை என்பது ஒரு காரியத்தைச் செய்ய விரும்புதல் அல்லது ஒரு காரியத்தைச் செய்ய விரும்பாமை ஆகிய இரண்டில் ஒன்றனை ஒருவர் மற்றொருவருக்குத் தெரிவித்து அவரது இசைவை வேண்டுவதாகும்.

ஒரு காரியத்தைச் செய்வதற்குரிய **முனைவு (offer)** அல்லது ஒரு காரியத்தைச் செய்யாமைக்குரிய முனைவு வெளிப்பட்டு அதற்கு மற்றவரின் இணக்கம் அறிய முற்படுவது புரிவுரையாகும். எனவே, "நான் உனக்கு வேலை செய்கிறேன்" அல்லது "நாட்டிற்காக உயிர்த்தியாகம் செய்வேன்" என்பன போன்ற கூற்றுகள் புரிவுரையாகா! இதில் ஏற்பவரின் இணக்கம் தேவையில்லை. ஆனுல் "நான் உன்னைத் திருமணம் செய்து கொள்ள இசைகிறேன்" அல்லது "நான் இந்த நூலை ஐந்து ரூபாய்க்கு விற்கிறேன்" என்ற கூற்றுகளில், ஏற்பவரின் இசைவு வேண்டப் படுவது நன்கு தெளிவாகின்றது.

முனைவு (offer) என்னும் சொல் இங்கிலாந்துச் சட்டத்திலும் புரிவுரை (proposal) என்னும் சொல் இந்தியச் சட்டத்திலும் பயன்படுத்தப்படுகின்ற ஒரே பொருளைத் தரும் இருவேறு சொற்களாகும். ஒப்பந்தத்தில், சட்டமுறையான நெருக்கத்தை ஏற்படுத்தக்கூடிய ஒன்ருக முனைவு அமையவேண்டும். அன்ருட வாழ்வில் காணும், விருந்தழைப்பு போன்றவை முனைவினை ஏற்படுத்தா.

**Kalai haldar** *vs.* **Sheikh 23 W. R. 217** இவ்வழக்கைக் காண்போம்.

'அ' என்பவர் 'ஆ' என்பவரை விருந்திற்கு அழைத்தார். 'ஆ' என்பவர் விருந்திற்குச் செல்ல இயலவில்லை. 'அ' என்பவர் 'ஆ' என்பவருக்காகத் தயாரிக்கப்பட்ட உணவு வீணுயிற்று என்று வழக்குத் தொடுத்தார். இவ்வழக்குத் தள்ளப்பட்டது.

(வ-2) **Balfour** *vs*. **Balfour** *(1919)* 2 K. B. 571

'அ' என்பவர் இலங்கையில் வாணிகம் செய்து வந்தார். அவருடைய மனைவி 'ஆ' என்பவர் உடல்நிலை காரணமாக இங்கிலாந்தில் தங்கியிருந்தார். 'அ' என்பவர் தன் மனைவி இங்கிலாந்தில் தங்கியிருக்கும் வரையிலும் திங்கள்தோறும் 30 பவுன் அளிப்பதாக ஒப்புக்கொண்டிருந்தார். எனினும், ஒப்பந்தப்படி 'அ' என்பவர் நடந்து கொள்ளவில்லை. 'அ' என்பவரின் மனைவியாகிய 'ஆ' என்பவர் வழக்குத் தொடுத்தார். அவ்வழக்குத் தள்ளப்பட்டது.

நீதிபதி அட்கின் "இத்தகைய ஒப்பந்தங்கள் நெருக்கமான உறவின், நட்பின், காரணமாக ஏற்பட்ட ஒப்பந்தங்கள் ஆதலால் சட்டப்படி, செல்லத்தக்கவை அல்ல" என்று கூறினர். எனவே முனைவு என்பது சட்ட முறையான நெருக்கத்தை உண்டாக்கல் வேண்டும்.

(வ-3) **Appleson** *vs*. **Littlewood** *(1939)* 1. All Eng. REP 464

உதை பந்தாட்டப் போட்டி நடத்துபவர்களுக்கும் போட்டியாளர்களுக்கும் இடையில் ஏற்பட்ட ஒப்பந்தம் சட்ட முறையான நெருக்கத்தை உண்டாக்கவில்லை என்று கூறப்பட்டு, வழக்குத் தள்ளப்பட்டது.

(வ-4) **Farrina** *vs*. **Fickus**

ஒரு தந்தை, தன் மகளின் திருமணத்திற்கு முன்பு மணமகனுக்கு ஒரு முடங்கல் வரைந்திருந்தார். அம்முடங்கலில் "எனக்குப்பின் என்னுடைய சொத்தின் ஒரு பங்கு என் மகளுக்கு உரிமையாக்கப்படும்" என்ற தனது எண்ணத்தை வெளிப்படுத்தியிருந்தார். அதன் அடிப்படையில் மணமகன் சொத்துரிமை வேண்டி வழக்குத் தொடர்ந்தான்.

இந்த வழக்கில் தந்தையின் எண்ணந்தான் வெளியாகியுள்ளதே தவிர, சட்டமுறையான நெருக்கத்தை உண்டாக்கக்கூடிய

ஒப்பந்த முனைவாக இதனை ஏற்பதற்கு இல்லை என வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது.

### ஏற்பு (Acceptance) [பி 2 (b)]

ஒருவர் ஒன்றனைப் புரிவதாக முனைதலை, மற்றொருவர் ஏற்கும் செயல்தான் ஏற்பு எனப்படும்.

புரிவுரையில் உள்ள கட்டுவரம்புகளை (நிபந்தனைகளை) நிறைவேற்றலும், ஒன்றுக்கொன்றுன உறுதியுரைக்கான (Reciprocal promise) புரிவுரையுடன் முனைந்த மறுபயனை (consideration) ஏற்பதும், புரிவுரையினை ஏற்பதாகும். (பி. 8) புரிவுரையானது ஏற்பாளர் ஏற்ற பின்னர் உறுதியுரையாகின்றது.

### உறுதியுரை (Promise)

ஒருவர் ஒரு காரியத்தை செய்தலாகவோ, செய்யாமையாகவோ மற்றொருவரிடம் தெரிவித்து அதனை அவர் ஏற்றுக் கொண்டால் அது உறுதியுரை எனப்படும். அவ்வாறு தெரிவிப்பவர் "உறுதியுரை அளிப்பவர்" (Promisor) என்றும், அதனை ஏற்றுக் கொள்பவர் "உறுதியுரை ஏற்பவர்" (Promisee) என்றும் அழைக்கப் பெறுவர். [பி 2 b. c]

### மறுபயன் (Consideration)

உறுதியுரை அளிப்பவர் விரும்பியபடி, உறுதியுரை ஏற்பவர் அல்லது மற்றொருவர் செய்யும் செயல், செயல் தவிர்ப்பு அல்லது அளிக்கும் உறுதியுரை "மறுபயன்" என்று கூறப்படும். ஒருவர் மற்றவருக்கு உறுதியுரை அளிக்கும் நோக்கமே, மற்றவரிடமிருந்து யாதேனும் ஒரு கைம்மாறு கருதித்தான் என்பது தெளிவு. பெற்றுத் தரும் ஆற்றலை உடையவர்தாம் மறுபயன் அளிக்கும் அந்த மற்றவர் என்பதனை மறுபயன் விளக்கத்தினின்றும் நாம் அறிய முடிகின்றது.

சான்றாக 'ஆ' என்பவரின் குழந்தையை அவருடைய விருப்பத்திற்கு இணங்க, 'அ' என்பவர் கவனித்து வந்தார். 'ஆ' என்பவர் அச்செயலுக்காக ரூபாய் ஐந்நூறு அளிக்க 'அ' என்பவருக்கு உறுதியுரை செய்கிறார். இங்கே 'அ' என்பவரின் செயலானது, ரூபாய் ஐந்நூற்றுக்கான மறுபயன் பொருட்டாகியது.

பிரிவு 23-ல் சட்டப்படியான மறுபயன் குறித்த எடுத்துக் காட்டுகள் நான்கு குறிக்கப்பட்டுள்ளன. அவற்றை இங்கே காண்போம் :

1. 'அ' தன் வீட்டினை 'ஆ' வுக்கு ரூபாய் 10,000/-க்கு விற்க ஒப்புகிருர். இங்கே ரூபாய் 10,000/- கொடுக்க, 'ஆ' தரும் உறுதியுரையானது வீட்டை விற்க 'அ' செய்யும் உறுதி யுரைக்கு மறுபயனுகும். அதே போன்று 'ஆ' பணம் கொடுக்கச் செய்யும் உறுதியுரைக்கு 'அ' வீட்டை விற்கச் செய்யும் உறுதி யுரையானது மறுபயனுகும். இவை இரண்டும் சட்டப்படியான மறுபயன்களாகும்.

2. 'ஆ' வுக்கு 'இ' ரூபாய் 1000/- தரவேண்டும். அந்தப் பணத்தை ஆறுமாத கெடுவிற்குள் 'இ' கொடுக்காவிட்டால் அக்கெடுவின் முடிவில் 'அ' தான் 'ஆ' வுக்கு உறுதியுரை அளிக்கிருர். 'ஆ' வும் 'இ' க்குக் கால கெடுவினை அளிக்க உறுதியுரை செய்கிருர். இங்கே இருதரப்பு உறுதியுரைகளும் மறுதரப்பின் மறுபயன்களை எண்ணியே என்பது தெளிவாகிறது.

3. 'ஆ'க்கு 'அ' குறிப்பிட்ட தொகை தரவேண்டும். அதற்கு ஈடாக 'அ' தன் பயணக்கப்பல் உடையினை 'ஆ'வுக்குத் தருவதாக உறுதியுரை அளிக்கிருர். 'ஆ' வின் தொகைக்கு 'அ' வின் உறுதியுரையும் 'அ' வின் உறுதியுரைக்கு 'ஆ' தொகையும் மறுபயன்களாயின.

4. 'ஆ' வின் குழந்தையைப் பராமரிக்க 'அ' உறுதியுரை செய்கிருர். ஆண்டொன்றிற்கு ரூபாய் ஆயிரம் 'அ'வுக்குத் தர 'ஆ' உறுதியுரை அளிக்கிருர். இங்கே ஒருவரின் உறுதி யுரையானது மற்றவரின் உறுதியுரைக்கு மறுபயனுயிற்று.

ஓர் ஒப்பந்தம் இனிதே நிறைவுற, மறுபயன் இன்றியமையாத் தேவையாகும். ஒப்பந்தம் ஒன்றனை எடுத்து ஆராய்ந்தால், உறுதியுரை, மறுபயன் ஆகிய இரு தனித்தனி கூறுகள் இருப்பது நன்கு விளங்கும்.

**உடன்பாடு (Agreement)** *(பி 2. e)*

ஒவ்வோர் உறுதியுரையும், ஒவ்வொரு தொகுப்பு உறுதி யுரைகளும் ஒன்றற்கொன்று மறுபயன் அளிக்கக்கூடிய உடன் பாடாகும்.

செய்தது அல்லது செய்யப்போவது பற்றி இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்டவர் கருத்தொருமித்தலே, 'உடன்பாடு' என்பர். உடன்பாடுகள் ஐவகைப்படும்.

ஒப்பந்தக்காரர்களின் எண்ணத்திற்கிணங்க சட்டப்படி நிறைவுடைய உடன்பாட்டை செல்லு நிலையது (valid agreement) என்றும்; சட்ட விளைவு ஏற்படுத்தாத உடன்பாட்டை இல்லா நிலை உடன்பாடு (void agreement) என்றும் மொழிவர்.

ஒப்பந்தத்தின் ஒரு சாரார் அதனைத் தவிர்க்கும் உரிமை உடையவரெனில், அவ்வொப்பந்தம் தவிர்க்கத் தக்கது எனப்படும். அவ்வாறு தவிர்க்கப்படும் வரை, அவ்வொப்பந்தம் சட்ட செல்லுடையதாகும். இதனைத் தவிர்தகு உடன்பாடு (viodable agreement) *(பி (2) g)* என்பர்.

எல்லாவற்றுனும் தகுதிபெற்ற ஒப்பந்தமானது, சட்ட நிறைவுகள் இல்லாக் காரணத்தால் சட்டப்படி செல்லுபடியாகாத உடன்பாடாக மாறிவிடுகிறது. இதனைச் செல்லுமாறு செய்ய முடியாத உடன்பாடு (unenforceable agreement) எனக் கூறலாம்.

சான்றுகக் கடனுறுதிச் சீட்டுப் போதுமான அரசிறை தலை (revenue stamp) ஒட்டப்படாததாலோ, அறவே அரசிறை தலை ஒட்டப்படாத காரணத்தினுலோ, சட்டப்படி செல்லாததாகி விடுகிறது.

சட்டத்திற்கு மாறுன உடன்பாடு சட்ட முரணுன உடன்பாடு (Illegal agreement) எனப்படும்.

**இல்லாநிலை உடன்பாடும் சட்ட முரணுன உடன்பாடும்**

சட்ட முரணுன உடன்பாடுகள் அனைத்தும் இல்லாநிலை உடன்பாடுகளே ஆகும். ஆனுல் இல்லாநிலை உடன்பாடுகள் அனைத்தும் சட்ட முரணுன உடன்பாடுகள் ஆகா.

சான்றுகப் பகடைப் பணைய (wagering Contracts) ஒப்பந்தங்கள் சட்டச் செல்லாற்றல் இல்லாதனவே யொழிய சட்ட முரணுனவையல்ல.

**ஒப்பந்தம் (Contract)**

இதுகாறும் கூறியவற்றுள் ஒப்பந்தம் என்றுல் என்ன என்பது தெளிவாகும்.

சட்டப்படி செயல்படுத்துவதற்குரிய ஓர் உடன்பாடே 'ஒப்பந்தம்' எனப்படும் (இ. ஒ.ச. 2வது பிரிவு). எனவே ஒப்பந்தம் என்பது சட்டப்பிணைப்பான கடப்பாடு (obligation) ஏற்படுத்துகின்ற ஓர் உடன்பாடாகும்.

இத்தகைய சட்டப்பிணைப்பால், ஒருவர் மற்றவரிடம் பெறும் உரிமையையும், மற்றவருக்குச் செய்ய வேண்டிய உரிமையினால் ஏற்பட்ட கடமையையும் வலியுறுத்தப்படுகிறது. மத, இன, சமுதாயப் பிணைப்பாக இல்லாமல் சட்டப் பிணைப்பாக இருந்தால் தான் வழக்கு மன்றத்தில் இப்பிணைப்பால் உருவாகும் மறுபயன் களை நிலைநாட்ட இயலும்.

சான்றாக 'ஆ' என்பவருக்கு வீடுகட்டித்தர 'அ' என்பவர் உடன்படுகிறார். 'அ' என்பவருக்கு ரூபாய் 5000/- தர 'ஆ' என்பவர் உடன்படுகிறார். இத்தகைய உடன்பாடு ஒப்பந்த மாகிறது. இவ்வுடன்பாட்டினால் 'அ' என்பவர் வீடுகட்டித் தரவேண்டி, 'ஆ' என்பவர் சட்டப்படியான நடவடிக்கை எடுக்க ஏதுவாகின்றது.

'இ' என்பவருக்கு வாக்குகள் பெற்றுத் தராமலிருந்தால் 'ஆ' என்பவருக்கு ரூபாய் 1000/- தருவதாக 'அ' என்பவர் உடன்படுகிறார். இந்த உடன்பாடும் ஓர் ஒப்பந்தமே. இந்த உடன்பாட்டினால் 'ஆ' என்பவர் வாக்குச் சேகரிக்கும் பணியினைச் செய்யாது விடுகிறார்.

எனவே, ஒப்பந்தம் என்பது ஒருவரை ஒரு குறிப்பிட்ட பணி யினைச் செய்யவோ, செய்யாதிருக்கவோ செய்கின்ற உடன் பாடாகும்.

# 3. உடன்பாடும் ஒப்பந்தமும்

சட்டப்பிணைப்பை ஏற்படுத்துகின்ற உடன்பாடு ஒப்பந்த மாகிறது. சில உடன்பாடுகள் சட்டப்பிணைப்பினை ஏற்படுத் தாமலும் போகலாம்.

சான்றுகக் கொடைத் தன்மையை (gift)க் குறிக்கும், **மாற்றளிப்பு ஆவணம்** (Conveyance) திருமண உடன்பாடுகள் போன்ற உடன்பாடுகள் சட்டப்பிணைப்பை ஏற்படுத்துவன ஆகா. இத்தகைய பிணைப்புகள் உடன்பாடு எனப்படுமேயன்றி ஒப்பந்த மாகா.

தகுதி வாய்ந்தவர்களிடையே யாதொரு கட்டாயமுமின்றி மறுபயன் கருதிச் சட்டப்படியான காரியங்கள் குறித்து ஏற்படும் உடன்பாடுகளே ஒப்பந்தங்கள் எனப்படும் (பி. 10). இதனையே ஆன்சன் (Anson) என்பவர். "Contract is that form of agreement which directly contemplates and creates an obligation" என்றார்.

ஒப்பந்தங்கள் அனைத்தும் உடன்பாடுகளாகும். ஆனால் உடன் பாடுகள் யாவும் ஒப்பந்தங்களாகா. உடன்பாடு, ஒப்பந்த நிலை யைப்பெறச் சட்டச் செல்லுபடியாக வேண்டும். ஒப்பந்தங்கள் பலவகைப்படும். அவற்றின் விளக்கங்களையும் தன்மைகளையும் ஈண்டுக் காண்போம்.

### தவிர்தகு ஒப்பந்தம் (Voidable)

இருதரப்பினரில் ஒரு தரப்பினரின் விருப்பு இல்லையெனில், சட்டப்படி செயல்படாத உடன்பாடு "தவிர்தகு ஒப்பந்தம்" எனப்படும். (இ. ஒ. ச. பிரிவு 2)

'அ' என்பவர் தனது தொழிற்சாலையில் நாள் ஒன்றிற்கு 10,000 கிலோ சாயம் தயாரிக்கப்படுவதாகப் பொய் சொல்லி,

'ஆ' என்பவரை நம்பவைத்து அத்தொழிற்சாலையை 'ஆ' வாங்க வழி செய்கிறார். இத்தகைய ஒப்பந்தம் 'ஆ' என்பவரின் விருப்பத்தின் பேரில் தவிர்தகு ஒப்பந்தம் ஆகிவிடலாம்.

### இல்லாநிலை ஒப்பந்தம் (Void)

சட்டப்படி செயல் படுத்த இயலாத ஒப்பந்தம் 'இல்லாநிலை ஒப்பந்தம்' எனப்படும். [இ. ஒ. ச. 2 (g) பிரிவு] இல்லாநிலை ஒப்பந்தத்தில் மூன்றும் நபர், ஒப்பந்தக்காரரிடமிருந்து எவ்வகை உரிமையும் பெற இயலாது. ஆனால் தவிர்தகு ஒப்பந்தத்தில் ஒப்பந்தக்காரரிடமிருந்து ஒப்பந்தம் முறியும் முன்னர் மூன்றும் நபர் உரிய உரிமை பெற வழி உள்ளது.

### சட்டப்படி செல்லுமாறு செய்ய முடியாத ஒப்பந்தம் (Unenforceable Contract)

சட்டப்படிச் செல்லுமாறு செய்ய முடியாத ஒப்பந்தம், சான்றுறுதி (proof) இல்லாமையால் சட்டப்படி செல்லாற்றுப் படுத்த முடியாத நிலையை அடைகின்றது. முறைதவறி எழுதப் பட்ட ஒப்பந்தங்களும், போதுமான அரசிறை தலை ஒட்டப்படாத ஒப்பந்தங்களும், அரசிறை தலையே ஒட்டப்படாத ஒப்பந்தங்களும், காலங்கடந்த ஒப்பந்தங்களும் இவ்வகையைச் சார்ந்தனவாகும்.

### நிறைவேறிய ஒப்பந்தம் (Executed Contract)

முழுவதும் நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தமானது இரு தரப்பினரிடையே சட்டப்பிணைப்பினை ஏற்படுத்தி அவர்களை முறைப்படி உரிமையுள்ளவர்கள் ஆக்குகின்றது.

'ஆ' என்பவருக்குக் குதிரையை விற்க 'அ' என்பவர் உடன் படுகிறார். 'அ' என்பவர் குதிரையை 'ஆ' என்பவரிடம் ஒப் படைக்கச் சட்டத்தினால் பிணைக்கப்படுகிறார். ஆனால் அதே நேரத்தில் குதிரையின் விலையைப் பெறுகின்ற உரிமையை 'அ' என்பவர் பெறுகின்றார். அதே போன்று 'ஆ' என்பவரும் சட்டப் பிணைப்பினால் 'அ' என்பவருக்கு உரிய தொகையினைச் செலுத்த வேண்டியவராகின்றார். அதே நேரத்தில் 'அ' என்பவரின் குதிரையினைப் பெறும் உரிமையை 'ஆ' என்பவர் அடைகிறார்.

ஒப்பந்தத்தில் ஈடுபட்ட இருவரில் ஒருவர் தன் பங்கைச் சரிவர நிறைவேற்றினாலும் அவ்வொப்பந்தம், நிறைவேறிய ஒப்பந்தமாகி விடுகின்றது. கடன் பெறும் ஓர் ஒப்பந்தத்தில், கடன் கொடுத் தவர் பணத்தைக் கொடுத்துவிட்டாலே அது நிறைவேறிய ஒப்பந்

தமாக முழுமை அடைகின்றது. ஆனல் ஒப்பந்தத்தில் ஈடுபட்ட இருவரில் ஒவ்வொருவரும் அவரவரின் பங்கை நிறைவேற்ருவிடின், அது நிறைவேற்றப்பட வேண்டிய ஒப்பந்தமாகின்றது.

**நிறைவேற்ற வேண்டிய ஒப்பந்தம் (Executory Contract)**

ஒன்றைச் செய்வதென்ரோ, செய்யாமையென்ரோ இரு தரப்பினரில் ஒரு தரப்பினர் சம்மதிக்கும் ஒப்பந்தம், நிறைவேற்றப்பட வேண்டிய ஒப்பந்தம் எனப்படும்.

சனவரி முதல் 'ஆ' என்பவரை வேலையில் அமர்த்திக் கொள்ளுவதாக 'அ' என்பவர் உறுதியுரை அளித்தார். இது நிறைவேற்றப்படவேண்டிய ஒப்பந்தத்தின்பாற்படும்.

'ஆ' என்பவரின் வீட்டினை ரூபாய் ஆயிரம் கொடுத்து வாங்க 'அ' என்பவர் ஒப்பந்தம் செய்து அதற்கு ரூபாய் 200/- மட்டும் கட்டுகிருர். 'ஆ' என்பவர் 'அ' என்பவருக்குத் தன் வீட்டினை ஒப்படைக்கின்ருர். ஆனல் விற்பனைப் பத்திரத்தில் கையெழுத்திட்டு நிறைவேற்றவில்லை. இங்கே இரு சாராரும் நிறைவேற்ற வேண்டிய காரியங்கள் பல உள்ளன. ஆகவே இதுவும் நிறைவேற்றப்பட வேண்டிய ஒப்பந்தமே ஆகும்.

**ஒருதலை, இருதலை ஒப்பந்தங்கள் (Unilateral and Bilateral Contracts)**

ஒரு தரப்பினர் மட்டும் அளித்த உறுதியுரை அடங்கிய ஒப்பந்தம், ஒருதலை ஒப்பந்தம் எனப்படும்.

புகைவண்டி நிலையங்களில் உள்ள சுமை தூக்கிகள் (porters) நம்மைக் கேட்காமலே நம் பொருள்களை நம் அனுமதியின் பேரில் எடுத்துச்சென்று புகைவண்டிப் பெட்டியில் வைத்துவிட்டு அதற்குக் கூலி கேட்பது ஒருதலை ஒப்பந்தத்திற்குச் சான்ருகும். இது நிறைவேறிய ஒப்பந்தத்தின் பாற்படும். இதில் மறுபயன் ஏற்கெனவே நிறைவேற்றப்பட்டிருக்கும்.

ஒருவருக்கொருவர் அளிக்கும் உறுதியுரைகள் அடங்கிய ஒப்பந்தம் இருதலை ஒப்பந்தமாகும். இதனை நிறைவேற்ற வேண்டிய ஒப்பந்தம் எனவுங் கூறுவர். இதில் மறுபயனும் நிறைவேற்றப்படவேண்டும்.

நிறைவேறிய ஒப்பந்தத்திற்கும் நிறைவேற்ற வேண்டிய ஒப்பந்தத்திற்குமுள்ள வேறுபாட்டினை Union of India vs. Chamanlal Co., A. I. R. 1957 Sc 652 என்ற வழக்கின் தீர்ப்பு

தெளிவாகியுள்ளது. நிறைவேறிய மறுபயனில் உறுதியுரையாக ஒரு செயல் நிறைவேறி இருக்கும். அச்செயலே மறுபயனுகும். அச்செயல் நிறைவேறும் வரையில் ஒப்பந்தம் நடைமுறை காணுது. புகைவண்டி நிலையத்தில் பெறுகின்ற பயணச்சீட்டு இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். ஆனுல் அதற்கென உள்ள சட்டம் மறு பயனைக் குறைவற நிறைவேற்றியுள்ளது. எனவே அடுத்துவரும் உறுதியுரைக்கு (subsequent promise) மறுபயன் இல்லை. இது மறுபயன் இல்லா வெற்று உடன்பாடாகும். (Nudum pactum) இதன்மீது நடவடிக்கை எதுவும் எடுக்க இயலாது. நிறைவேறிய மறுபயனில் கடம்பாடு (obligation) ஒரு பக்கமே காணப்படும்.

நிறைவேற வேண்டிய மறுபயனில் கடம்பாடு இரு பக்கங் களிலும் காணப்படும். உள்ளபடியே இதில் ஒரு உறுதியுரை ஒன்றுக்கொன்முன உறுதியுரையிஞல் பெறப்பட்ட ஒன்றுகும். இங்கே உறுதியுரைகள் பரிமாற்றம் ஆனபின்னரே ஒப்பந்தம் முடிவாகிறது.

எனவே, இதில் ஒருசாரார் தனது உறுதியுரையினை உடனே நிறைவேற்ற யாதொரு தடையும் இல்லை. இதனுல் அடுத்த சாராரும் முன்னவரோடே, தமது உறுதியுரையினையும் நிறை வேற்ற வேண்டும் என்ற நியதி இல்லை.

ஒப்பந்தங்களை வேறு முறைகளிலும் வகைப்படுத்துவர்.

விதித்துறைகள் வெளிப்படையாகச் சொல்லப்பட்டிருக்கும் ஒப்பந்த (Express Contract)த்தை வெளிப்படை ஒப்பந்தம் என்று அழைப்பர். இதில் ஒப்பந்தம் சொல்லப்பட்டோ எழுதப்பட்டோ இருக்கும். நடத்தைக் குறிப்பு ஒப்பந்தத்தில் (Tacit Contract) ஒரு வருடைய நடத்தைக் குறிப்பிஞல் ஒப்பந்தம் உருவாகிறது.

சான்முக நூல் விற்பனை நிலையத்துள் சென்ற ஒருவர், நூல் ஒன்றினைத் தேர்ந்தெடுத்து, அதற்குரிய விலையினையும் பணம் செலுத்தவேண்டிய இடத்தில் செலுத்தி, ரசீது பெற்று வெளியே வரும்போது இத்தகைய ஒப்பந்தம் உருவாகிறது.

உட்கிடை ஒப்பந்தம் (Implied Contract) என்பது, உட்கிடை யாகவோ, தொடர்புடைய தரப்பினரின் செயல்களிலிருந்து ஊகிக்கும் வகையிலோ (விதித்துறைகள்) அமைந்த ஒப்பந்த மாகும். இதனை ஒப்பந்தப் போல்வு (Quasi Contract) என்றும் அழைக்கலாம். இது கருத்தொருமித்துச் செய்து கொண்ட ஒப்பந்தம் அன்றெனினும் ஒப்பந்தம் போன்றே ஒரு பொறுப்பைத்

தோற்றுவிக்கும் செயல் அல்லது நிகழ்ச்சியாகும். இதனைக் கொள் நிலை ஒப்பந்தம் (Constructive Contract) என்றும் சொல்லலாம்.

ஒரு செயல் அல்லது பொருள் இல்லாவிட்டாலும், சில சட்ட நோக்கங்களைக் கருதி அதை உள்ளதாகவே கொள்ளுதல் கொள் நிலையாகும்.

சான்றாக 'இ'க்கு சேரவேண்டியதை 'அ' என்பவருக்குக் கொடுத்துவிடின் சட்டப்பிணைப்பில் 'ஆ' என்பவர் அந்தப் பணத்தை 'அ' என்பவருக்கு மீண்டும் செலுத்த வேண்டியவர் ஆகின்றார். 'ஆ' என்பவர் பணத்தைப் பெறும்பொழுது அத்தகைய உறுதியினைத் தரவில்லை எனினும் சட்டப்படி அவர் அத்தொகையினை 'அ' என்பவருக்குத் திருப்பிக் கொடுத்தே ஆக வேண்டும்.

இதுகாறும் சட்டப்படி செயல்படுத்துவதற்குரிய ஒப்பந்தம் கொள்கின்ற அடிப்படைகள், அவற்றின் வகைகள் ஆகியவற்றைக் கண்டோம். இனிவரும் பாடங்களில் அவற்றை விரிவாக ஆராய முற்படுவோமாக !

# 4. ஒப்பந்தக் கூறுகள்

திரு. சர் வில்லியம் ஆன்சன் என்னும் பேரறிஞர் "சமுதாயத்தில் ஒழுங்கை நிலைநாட்ட சட்டம் தேவைப்படுகிறது. ஒழுங்கினால் மக்கள் நம்பிக்கையான எதிர்காலத்தைப் பெறுவர்," எனக் கூறியுள்ளார்.

மனிதன், ஒன்றனை எதிர்நோக்கிச் செய்யும் உறுதியுரையினையும், நிறைவேற்ற வேண்டிய கடமையினையும் எதிர்நோக்கிய உறுதியுரையினைப் பெறும் உரிமையையும் ஒப்பந்தச் சட்டத்தினால் பெறுகின்றான்.

குறிப்பிட்ட கொள்கைகளின் அடிப்படையிலேயே ஒப்பந்தங்கள் நிறைவேறும். அப்போதுதான் அவ்வொப்பந்தங்கள் நிறைவேறச் சட்டம் வழிவகை செய்யும்.

ஒருவர் செய்யும் உறுதியுரை அல்லது உடன்பாட்டினைச் சட்டவழி தீர்மானிக்கும் நிகழ்வுகளை விளக்குவதே 'ஒப்பந்தம்' என அறுதியிடலாம்.

ஒப்பந்தச் சட்டம் ஒருவர் சுட்டிய உரிமையை (Right in Personam)க் குறிக்கின்றது. ஒருவர் சுட்டிய உரிமை என்பது குறித்த ஒருவர்மீது மட்டும் கட்டுப்பாடு சுமத்துவது ஆகும்.

'அ' என்பவர் 'இ' என்பவருக்கு ரூபாய் 100/- கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருந்தால், 'இ' என்பவருக்கு அத்தொகையைப் பெறும் உரிமை 'அ' என்பவரின்மீது எழுகிறது.

மன்று சுட்டிய உரிமை (Right in Rem) என்பது இதனினின்றும் வேறுபட்டது.

பொதுப்படையாக மக்கள்மீது சுமத்தப்படும் கட்டுப்பாடு உலகத்தின்மீது சுமத்தப்படுவதற்கு ஒப்பாகும். அது குறிப்பிட்ட சிலர் நீங்கலாக உலகத்தின்மீது செலுத்தப்படுவதாகும்.

அவ்வுரிமைக்கு மாருக, உலகத்தவர் எச்செயலையும் செய்தல் தகாது என்று விலக்கும் தடையியல் தன்மையையே அது கொண்டதாகும்.

எனவே 'அ' என்பவருக்கு ஒரு நிலத்தின்மீது சொத்துரிமை இருந்தால், அந்நிலத்தை அவர் அனுபவிப்பதில் உலகத்தவர் வேறு எவரும் குறுக்கிடுதல் கூடாது. இத்தகைய உரிமை மன்று சுட்டிய உரிமை எனப்படும்.

மேற்கூறியவற்றிலிருந்து சொத்து உரிமைகள் மன்று சுட்டிய உரிமையின் கண்ணும், ஒப்பந்த உரிமைகள் நபர் சுட்டிய உரிமையின் கண்ணும் சேர்கின்றன என்பதை அறியலாம்.

ஒப்பந்தமானது, சட்டப் பிணைப்பையும் உடன்பாட்டையும் ஒன்றுடன் ஒன்று பின்னிக் காண்பது மூலம் நீதிவழி நிலைநாட்டப் படுவதாகும். இத்தகைய சட்டப்பிணைப்பினை "Vinculum Juris" என்றும் கூறுவர்.

சட்டப் பிணைப்புகள் ஏற்பட, கீழ்க்காணும் கட்டுவரம்புகள் (நிபந்தனைகள்) தேவைப்படுகின்றன.

(i) இரண்டு நபர்கள் அவசியம் இருத்தல் வேண்டும்.

(ii) குறித்த செயலை அல்லது செயல்களைத் தொடர்பு கொண்டதாகச் சட்டப்பிணைப்பு இருத்தல் வேண்டும்.

(iii) பிணைப்புகள் சமூகப் பழக்க வழக்கங்களை ஒட்டியதாக இல்லாமல் சட்டப்படியானதாக இருத்தல் வேண்டும்.

(iv) கருத்தொற்றுமை கொண்ட உள்ளங்கள் இருத்தல் வேண்டும்.

தொடர்புடைய நபர்கள் ஒப்பந்தத்தின் கருப்பொருளை ஒரே நேரத்தில் ஒன்றுபோல உணர்ந்து ஒன்றிய கருத்தின்மீது உடன்பாடு கொள்ளல் வேண்டும். இதையே வேறு சொற்களில் கூறுவதானல், கருத்தொற்றுமை கொண்ட உள்ளங்கள் (Identity of minds) உடையவர்களாக அந்தத் தொடர்புடைய நபர்கள் இருப்பார்கள்.

(v) ஒப்பந்தக்காரர்கள் உடன்பாடு கொள்ளும் தங்கள் விருப்பத்தினை வெளிப்படையாக மற்றவர் புரிந்து கொள்ளும் விதத்தில் அறியச் செய்தல் வேண்டும். (Felthous *vs*. Bindley) *(1862) 142* E.R. *1037.*

ஒப்பந்தத்தினை நிறைவேற்றத் தேவையான கருப்பொருள்கள் யாவை என்பதை இதுகாறும் கூறியவற்றினின்று ஓரளவு அறிந்திருக்கலாம். சுருங்கக்கூறின் ஒப்பந்தம் சட்டப்படி நிறைவேற மேற்கண்ட கட்டு வரம்புகள் அவசியமாகின்றன.

**(1) கருத்தொருமை (Consensus ad idem)**

ஒரே கருத்துடன் இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்டவர் ஒன்றைக் குறித்து உடன்படுதல் கருத்தொருமை ஆகும். இதனையே கருத்தொற்றுமை கொண்ட உள்ளங்களிடையே ஏற்படுகின்ற உடன்பாடு என்பர்.

சான்றாக : 'அ' என்பவருக்குச் சென்னையில் ஒரு வீடும் கல்கத்தாவில் ஒரு வீடும் ஆக இரண்டு வீடுகள் உள்ளன. அவர் அவற்றில் ஒன்றினை 'ஆ' என்பவருக்கு விற்க முனைகிறார். 'ஆ' என்பவரும் அதற்கு உடன்படுகிறார். 'அ' என்பவர் விற்க எண்ணியது சென்னையிலிருந்த வீடாகும். 'ஆ' என்பவர் வாங்க எண்ணியதோ கல்கத்தாவில் இருந்த வீடாகும். ஆக இருவர் உடன்பாட்டிலும் தெளிவு இல்லாமையால், அதாவது கருத்தொருமை இல்லாமையால் இவ்வொப்பந்தம் இல்லாநிலை ஒப்பந்தமாகிறது (void). இதிலிருந்து கருத்தொருமை, ஒப்பந்தத்திற்கு மிகவும் இறியமையாதது என உய்த்துணரலாம்.

**(2) மறுபயன் (Consideration)**

மறுபயன் இல்லாமல் இருப்பின் எந்த ஒப்பந்தமும் செல்லுபடியாகாது. ஒப்பந்தக்காரர்கள் தத்தம் உறுதியுரையினை வலியுறுத்திச் சட்டப்பிணைப்பு உடையதாக விளங்கச் செய்ய மறுபயன் தேவைப்படுகிறது. சாதாரணமான (Simple) அல்லது வாய்மொழி (Parol) ஒப்பந்தங்கள் அனைத்திற்கும் மறுபயன் அவசியமாகிறது. மறுபயன் இல்லையெனின் அவை பணிக்கொடையாகக் (Gratuitous) கருதப்படுவதால் இல்லாநிலை ஒப்பந்தங்களாகும்.

இங்கிலாந்தில், வழக்கின் தீர்ப்புகள் பதிவான ஒப்பந்தங்கள் (Contracts of record) என்றும், கையெழுத்திட்டு, முத்திரையிட்டு, கொடுக்கப்பட்ட ஒப்பாவணங்கள் முறை ஒப்பந்தங்கள் (Formal Contracts) என்றும், தனி ஒப்பந்தங்கள்(Special Contracts)என்றும் மூவகையாகக் கருதப்படுகின்றன. இத்தகைய ஒப்பந்தங்களில்

மறுபயன் வலியுறுத்தப்படுவதில்லை. இத்தகைய ஒப்பந்தங்கள் இந்திய ஒப்பந்தச் சட்டத்தில் இடம் பெறவில்லை.

**(3) ஒப்பந்தக்காரரின் தகுதி**

தகுதியற்றவர்களிடையே ஏற்படும் ஒப்பந்தம் செல்லுபடியாகாது. வெளிநாட்டு மன்னர்கள், தூதுவர்கள் அறிவு முதிர்ச்சி அடையாத நபர்கள் (சிறுவர்கள்) முதலானவர்களுடன் செய்கின்ற ஒப்பந்தங்கள் இல்லா நிலையினை எய்தும் (void) ஒப்பந்தங்களாகக் கருதப்படுகின்றன.

**(4) ஒப்புதலில் கோளாறு**

கருத்தொருமை இல்லாத காரணத்தினாலும், வலுக்கட்டாயத்தினாலும் (Coercion) மோசடியாலும் (Fraud) திரித்துக் காட்டுவதனாலும் (Mis-Representation) தகாநிலை வற்புறுத்தலினாலும் (Undue influence) பெறப்படும் ஒப்புதல்களினால் ஆன ஒப்பந்தங்கள் அனைத்தும் செல்லுபடியாகா. கருத்தொருமை இல்லாமையால் ஒப்பந்தம் இல்லாநிலையினை (void) எய்துகின்றது. ஏனையவற்றால் பெறப்படும் ஒப்பந்தங்கள் தவிர்தகு (voidable) ஒப்பந்தங்களாகும்.

**(5) இல்லாநிலை அல்லது சட்ட முரணான உடன்பாடுகள்**

இல்லாநிலை அல்லது சட்ட முரணான உடன்பாடுகள் கொண்ட ஒப்பந்தங்கள் செல்லுபடியாகா ஒப்பந்தங்களாகும்.

'இ' என்பவரைக் கொலைசெய்ய 'ஆ' என்பவருக்கு ரூபாய் 100/- கொடுப்பதாக 'அ' என்பவர் செய்கின்ற ஒப்பந்தம் எல்லா வகையானும் சரியாக இருப்பினும் கொலை செய்தல் என்னும் செயல் சட்ட முரணானது என்பதால் அவ்வுடன்பாடு செல்லுபடியாகாது.

'ஆ' என்பவரின் வீட்டினை பரத்தை மனையாக பயன்படுத்தும் பொருட்டு 'அ' என்பவர் ரூபாய் 100/- வாடகைக்கு எடுத்துக் கொள்ளச் செய்கின்ற உடன்பாடு கொண்ட ஒப்பந்தம் செல்லுபடியாகாது. இங்கே வீட்டைவாடகைக்கு எடுப்பதன் நோக்கம் 'ஆ' என்பவருக்குத் தெரிந்திருப்பதால், இந்த ஒப்பந்தம் சட்ட முரணான ஒன்றாகக் கருதப்படுகிறது.

மேற்கூறிய இரண்டிலும், ஒப்பந்தம் இல்லா நிலையினை (void) அடையும் காரணத்தை நன்கு அறியலாம்.

மேற்சொன்ன ஐந்து இன்றியமையாக் கூறுகளும் கொண்டே ஒப்பந்தம் உருவாகிறது (பி. 10). அடுத்து வரும் பாடங்களில் **ஒப்பந்தம் உருவாக இன்றியமையாதன யாவை என்பதைப்பற்றிக் காண்போம்.**

# 5. முனைவு

## (Offer)

முனைவு என்ற சொல் இங்கிலாந்து நாட்டிலும் புரிவுரை என்ற சொல் இந்தியாவிலும் ஒரே பொருளைக் குறித்து வழங்கப்படும் இரு சொற்களாகும.

வில்லியம் ஆன்சன் என்பவர் " ஓர் உடன்பாடு ஏற்பட்டதா இல்லையா என்று அறிய அதன் வரையுரைகளை(Terms)க் கண்டறிதல் வேண்டும். அவற்றினின்றும் திட்டவட்டமான முனைவும் திட்டவட்டமான ஏற்பும் உள்ளனவா என்பதும் அறியக்கூடும்" என்று கூறியுள்ளார். இந்த வகையில் ஆய்வு, செய்வதானது ஒப்பந்தம் ஒன்று உருவாகியுள்ளதா என்பதை அறியப் பயன்படுகின்றது.

ஒரு காரியத்தைச் செய்வதாகவோ செய்யாமையாகவோ ஒருவர் மற்றொருவரிடம் தெரிவித்து அதற்கு அவரது இசைவைக் கோரினால் அது " புரிவுரை " எனப்படும். இ. ஒ. ச. (பி. 2)

'ஆ' என்பவர் வாங்க விரும்புவதாயின் 'அ' என்பவர் தன் வீட்டை ரூபாய் 5000/-க்கு விற்பதற்குரிய தனது இசைவைத் தெரிவிக்கிறார் என்று கொள்வோம். இங்கே 'அ' என்பவர் புரிவுரை செய்த புரிவுரையாளராக (Offeror or promisor) உள்ளார். இதற்கு 'ஆ' என்பவர் உடன்பட்டு தன் இசைவினைத் தெரிவிப்பின் 'ஆ' என்பவர் ஏற்பு தெரிவிக்கும் முனைவேற்பாளராகிறார். (Offeree or promisee) முனைவு முழுமைபெறக் கீழ்க்காணும் தேவைகள் இன்றியமையாதனவாகின்றன.

(i) சரியான, முடிவான, திட்டவட்டமான, வரையறைகள் கொண்டதாக முனைவு இருத்தல் அவசியம்.

திட்டவட்டமான வரையுரைகள் (terms) அல்லது திட்ட வட்டவட்டமாக ஆக்கப்படக்கூடிய வரையறைகள் கொண்டவை யாக முனைவு இருத்தல் வேண்டும். வரையறைகள் தெளிவற்றும், உறுதிப்பட முடியாத நிலையிலும் இருப்பின் அவை முனைவாகா. வணிகரிடையே ஏற்படும் பெரும்பாலான ஒப்பந்தங்கள் தெளிவற்ற வரையறைகளினால் சட்டப்படிச் செல்லுபடியாகாமல் போய்விடுகின்றன.

**Guthing** *vs*. **Lynn** *(1831)* 109 E.R. 1130 வழக்கில் குதிரை ஒன்றை வாங்கியவர், வாங்கிய குதிரை அதிர்ஷ்டத்தை அள்ளித் தந்தால் வாங்கிய விலைக்குமேல் 5 பவுன் தருவ தாகவோ அல்லது மேலும் ஒரு குதிரை வாங்குவதாகவோ விற்ற வரிடம் உடன்பாடு செய்து கொண்டார். இங்கே வரையுரை தெளிவாக இல்லாத காரணத்தினால், உடன்பாடு சட்டப்படி செல்லவில்லை.

**Taylor** *vs*. **Portington** *(1855)* வழக்கில் 'ஆ' என்பவரின் வீட்டை 'அ' என்பவர் சில கட்டுவரம்புகளின் பேரில் 3 ஆண்டுக் காலத்திற்கு வாடகைக்கு எடுத்துக்கொண்டார்.

வீடு முழுவதும் பழுது பார்க்கப்பட்டு வரவேற்பு அறை தற்கால நாகரிகப்படி அலங்கரிக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது கட்டுவரம்பு ஆகும். மாற்றம் கொள்பவைகளை இங்கே வரை யறைகளாக ஆக்கப்பட்டதால், உறுதியுரை செல்லுபடியாக வில்லை.

**Montreal Gas Co** *vs*. **Vasey**......*(1900)* A.C. 595 வாடிக்கை யாளரின் வாடிக்கை சரிவர நடைபெறுமேயானால் மீண்டும் அவரையே அடுத்த ஆண்டிற்கும் வாடிக்கையாளராகக் கொள்வ தாகச் செய்து கொள்ளப்பட்ட உடன்பாடு திட்டவட்டமான வரையறையின்றி உள்ளமையால் செல்லத்தக்கதல்ல என்று இவ் வழக்கு தள்ளுபடியாயிற்று.

**Bishop Baxter** *vs*. **Anglo Eastern Ect., Co** *(1944)* K.B. 12 வழக்கில் போர்க்கால நிலைமைக்கேற்ப பொருள்கள் வாங்குவ தாகக் கொள்ளப்பட்ட உடன்பாடு ஒப்பந்தமாகவில்லை.

நிலையில்லா உடன்பாடுகளும், நிலையுள்ள உடன்பாடுகளாக மாற்றப்பட முடியாத உடன்பாடுகளும், இல்லா நிலையை (void) எய்தும்.

Inthilas & Co *vs.* Arcos Ltd. *(1932) 147*.L.T. *503* வழக்கின் தீர்ப்பில், ஒப்பந்தங்களின் வரையறைகளுக்குப் பொருள் விளக்கம் கொள்ள, சில கொள்கைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

வழக்கில் கூறப்படும் ஆவணங்களைப் பரந்த எண்ணத்துடன் நேர்மையாகக் கவனிப்பதும் குற்றம் காண்பதில், கடுமையின்றி, ஆனால் அதே நேரத்தில் குறைவின்றி கவனிப்பதும் வழக்கு மன்றத்தின் கடமையாகும். ஒப்பந்தக் கொள்கைகள் உணர்த்தும் கருத்துக்குப் புறம்பாகச் செல்லாமல் அவற்றை வைத்து ஒப்பந்தக்காரர்கள் ஒப்பந்தம் மேற்கொள்வதற்காகக் கொண்ட கருப் பொருளை உய்த்துணர முற்பட வேண்டும். எனவே உடன் பாட்டின் சொற்கள் விளங்குவதற்குக் கடினமாக இருப்பினும் ஒப்பந்தக்காரர்களின் நேர்மையான உட்கருத்தினை கண்டு கொள்வதில் வழக்கு மன்றத்திற்கு இடர்ப்பாடு இராது என்பதை மேற்குறித்த வழக்கின் தீர்ப்பிலுள்ள சில விளக்கக் கொள்கை களால் தெரிந்து கொள்ளலாம்.

**(ii) முனைவு, சட்ட விளைவு ஏற்படுத்துவதாக இருத்தல் வேண்டும் :**

Balfour *vs.* Balfour. *(1919) 2*. K.B. *571* All E.R. Rep. *860* வழக்கில், நீதிபதி அட்கின் என்பவர் "நெருக்கமான உறவின், அல்லது நட்பின் காரணமாக ஏற்படுகின்ற உடன்பாடுகள் சட்ட நெருக்கத்தை உண்டாக்கும் ஒப்பந்தங்களாகா," என்று கூறியுள்ளார்.

"சட்ட விளைவுக்கு உட்படுத்தாது" என்ற நிபந்தனையுடன் கூடிய சில உடன்பாடுகளும் சட்டவழி செல்லாதவையாகின்றன.

Rose & Frank Co *vs.* Crompton Bros Ltd. (1925) A.C. 445; Thyagaraj Mudaliar *vs.* Vedathanni 59 (Mad 446(P.C.)முதலான வழக்குகளில் ஒப்பந்தம் சட்டப்படியாகச் செல்லத் தக்கவை அல்ல என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

சட்டக் கட்டுப்பாட்டைத் தவிர்க்கும் நிபந்தனை பொதுவாக சட்ட நெறிக்கு உட்பட்டிருந்தால் அது பொதுக்கொள்கைக்கு மாறுபட்டதல்ல என்றும், தரப்பினரைக் கட்டுப்படுத்த வல்லது என்றும் Appleson *vs.* Little wood*(H)* Ltd *(*1939*)* 1 A. E.R. 464 வழக்கில் தீர்ப்பாயிற்று.

விலை விவரம் தெரிவிக்கும் பட்டியலும் (Quotation) முனைவும் ஒன்றல்ல, வெவ்வேறானவை. முனைவிற்கான அழைப்பும் (chaffer) முனைவாகாது.

State Aided Bank of Travancore Ltd *vs*. Dhirt Ram. I.L.R (1942) Bom. 318 P.C.—வழக்கில், ஒருவர் கோரியதன் பேரில் அவருக்கு அனுப்பிவைக்கப்பட்ட வைப்புத்தொகைக்கான வட்டி விவரங்கள் அடங்கிய வங்கியின் கடிதம் முனேவாகாது என்றும் அது வணிக வரையறை அடங்கிய விவரப்பட்டியலே (Quotation) என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது. வங்கி கொடுக்கும் படிவத்தினே, (Form) அவர் நிறைவு செய்து கொடுக்கப்பட்டு அதன் மீது வைப்புத் தொகையைப் பெற்றுக் கொண்டதற்கான பற்றுச் சீட்டைக்கொடுத்து, வங்கி அதனே ஏற்கும் பொழுதுதான் ஒப் பந்தம் முழுமை பெறும் என்று தீர்ப்பு கூறப்பட்டுள்ளது.

**கீழ்க் காண்பவை முனேவிற்கான அழைப்புகளாகும்**

(1) பொருளின் விலேப்பட்டி (Catalogue of Goods for Sale).

(2) வணிகர் காட்டும் கட்டுவரம்பு மேற்கோள் (The mere quotation of terms by trade).

(3) விசாரணேயின் மீது கூறப்படும் குறைந்த அளவு விலே விவரம்.

(4) விற்க, ஏலம் விடுவதற்கான, ஒப்பந்தப்புள்ளி விளம் பரங்கள்.

**இனிக் கீழ்வருவன முனேவுகளாகும்.** அவை :

(1) குறிப்பிட்ட கால கெடுவில் பொருள்களே வழங்குவதற் கான ஒப்ப அறிவிப்பு (A tender to supply goods at a certain time).

(2) கடன் கோரிக்கை.

(3) ஏலம் கேட்டல்.

Harvey *vs*. Facey (1893) A.C. 552. வழக்கில் "நீங்கள் 'Bumbur Hall Pen'-ஐ எங்களுக்கு விற்பீர்களா? குறைந்த அளவு விலேயினேத் தந்தி மூலம் தெரிவியுங்கள். தந்திக்கான செலவு ஏற்கப்பட்டது," என்று 'F' என்பவருக்கு 'H' என் பவர் தந்திச் செய்தியனுப்பினுர்.

"Bumper Hall Pen-இன் குறைந்த அளவு விலே £ 900" என்று 'F' என்பவர் பதில் தந்திச் செய்தி கொடுத்தார்.

"நீங்கள் குறித்த £ 900 விலேக்கு 'Bumper hall pen'-ஐ நாங்கள் வாங்கச் சம்மதிக்கிறேம். விற்பனேக்கான பத்திரங்களே அனுப்பி வைக்கவும்" என்று 'H' என்பவர் 'F' என்பவருக்குத் தந்தி அனுப்பினுர். இறுதியாக 'F' என்பவரிடமிருந்து பதில் கிடைக்

காமல் போகவே 'H' என்பவர் வழக்குத் தொடர்ந்தார். வழக்குத் தள்ளுபடியாயிற்று.

'H' என்பவர் முதலில் அனுப்பிய தந்தியில் உள்ள இரண்டு கேள்விகளில் ஒன்றனுக்கு மட்டுமே 'F' என்பவர் பதிலளித்திருந் தார். "Bumper hall pen-ஐ எங்களுக்கு விற்பீர்களா ?" என்ற கேள்விக்கு 'F' என்பவரின் பதில் வரவில்லை. ஆனால் 'H' என்பவர் மீண்டும் தெரிவித்த சம்மதம்தான் முனைவாயிற்று. இந்த முனை வினை ஏற்பதோ அல்லது ஏற்காமல் இருப்பதோ, 'F' என்பவரின் விருப்பத்தின் மாட்டமைவதாகும். எனவே ஒப்பந்தம் முழுமை பெறவில்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

Mac Pherson *vs.* Appanna A.I.R. (1951) S.C. 184 என்ற வழக் கிலும், இந்த அடிப்படையிலேயே தீர்ப்பு வழங்கப்பட்டது.

Spencer *vs.* Harding *(1870)* L.R. 5 C.P. *561* வழக்கில் எதிர்வாதி ஒருவர் முழுமையான வணிகத்தினை ஏற்க வேண்டி ஒப்பந்தப்புள்ளி கேட்டு ஒரு சுற்றறிக்கை அனுப்பியிருந்தார். அதில் ஒப்பந்தப்புள்ளியை உடைத்துப் பார்ப்பதற்கான காலமும் நேரமும் குறிப்பிடப்பட்டிருந்தன. வாதி அனுப்பிய ஒப்பந்தப் புள்ளி மிக உச்ச அளவினதாக இருந்தும் ஒப்பந்த அறிவிப்பு நடைபெறவில்லை. வாதியின் வழக்கினை விசாரித்து, எதிர்வாதி அனுப்பிய சுற்றறிக்கையை முனைவாகக் கொள்வதற்கில்லை என்று நீதி மன்றம் அறிவித்தது.

மேற்சொன்ன தீர்ப்புகளினின்று விற்பனை நிலையங்களில் உள்ள பொருள்களின் மீது காணப்படும் விலைப்பட்டி, முனைவிற் கான வெறும் அழைப்பே தவிர முனைவு அல்ல என்பது தெளி வாகின்றது.

வணிகர்கள் அறிவிக்கின்ற விலை விவரங்கள் முனைவு பெறு வதற்கான அழைப்புகளே என்பதும், பேரம் பேசவேண்டிய முனைவுகள் அன்று என்பதும், தெள்ளிதின் விளங்கும்.

ஏல வழக்குகளில் இத்தீர்ப்புகளின் கொள்கையை ஏற்பது கடினமாயிருந்தும், தொடர்ந்து தீர்ப்பான வழக்குகளினால் சட்டம் நிலைத்தது.

ஏலத்தில் ஏலம் கேட்டவரிடமிருந்துதான் (Bidder) முனைவு எழுகின்றது. இதனை ஏற்பதோ தவிர்ப்பதோ ஏலம் கூறுபவரின் விருப்பத்தைப் பொறுத்தது ஆகும். ஏலங்களில் சுத்தியைத் தட்டுவதின் மூலம் ஏற்பானது அறிவிக்கப்பட்டிருக்கின்றது. அத்தகைய சுத்தியைத் தட்டுதலுக்கு முன்னர், ஏலங் கேட்பவர் தான் முதலில் கேட்டதை மறித்தழிக்கலாம் (Revoke).

**Payne** *vs.* **Cave, (1789), 3 Term Rep. 148.** வழக்கில், எதிர் வாதி புழுத்தொட்டி ஒன்றினை £ 40-க்கு ஏலம் கேட்டு சுத்தி யால் தட்டுமுன்னர் தான் அவ்வாறு முதலில் கேட்டதைப் பின்னழித்தார். **(Withdrew).** மீண்டும் விற்றபோது எதிர் வாதியே அதனை £ 30 விலைக்கு வாங்கினுர். ஏலங்கூறிய வாதி, இழப்பினை ஈடு செய்ய எதிர்வாதி மீது வழக்கிட்டார்.

ஏலங் கேட்டதனுலேயே ஏற்பாயிற்று **(Acceptance).** மீண்டும் ஏலங் கேட்டவர் அதை மறித்தழிக்க முடியாது என்பது அவரின் வாதமாகும். அவரின் கூற்றினை ஏற்க மறுத்து வழக்கு மன்றம் தீர்பளித்தது.

"ஏலங் கூறுபவரின் கூற்று, முடிந்த முனைவாகாது. எனவே அதனை ஏலங்கேட்டவருடன் செய்யும் உடன்பாடாகக் கொள்ள இயலாது.

முனைவானது, ஏலங்கேட்பவர் மேலும் விலையினைக் கூட்டு வதற்காகச் செய்கின்ற ஒரு தொடர்புகொள் முயற்சியே தவிர வேறன்று. ஏலங் கேட்பவர் கூறும் விலைதான் முனைவாகும். அதனை ஏற்பதோ மறுப்பதோ ஏலங் கூறுபவரின் விருப்பத்தைப் பொறுத்தது.

ஏலத்தில் ஏலங் கூறுபவர் சுத்தியைத் தட்டுவதன் மூலமோ அல்லது நடைமுறையிலுள்ள ஒரு வழக்கத்தின் மூலமோ, முனை வினை ஏற்பதாகத்தான், அறிவிக்கிறுர். அதற்கு முன்னர் எவரும் ஏலத்தினின்றும் தன்னை விடுவித்துக் கொள்ளலாம்.

இத்தகைய கொள்கைகள் அத்தீர்ப்பினின்றும் பெறப்பட்ட வைகளாகும்.

**Harris** *vs.* **Nickesson (1873) L R. 8. Q B. 286**—வழக்கில், எதிர்வாதி தான் விளம்பரப் படுத்தியபடி குறிப்பிட்ட இடத்தில் நடத்துவாக இருந்த ஏலத்தினை நடத்தவில்லை. வாதி ஏலம் நடத்தப்படவிருந்த இடத்திற்குச் சென்றதற்கான இழப்பை ஈடு செய்ய எதிர்வாதி மீது வழக்கினைத் தொடர்ந்தார். 'இத் தகைய விளம்பரம் ஏலங்கேட்க வருகின்றவர்களுக்குத் தக்க உறுதியுரை **(Promise)** ஆகாது' என்று வழக்குத் தள்ளுபடி யாயிற்று.

வழக்கு மன்ற ஏலங்களிலும் இத்தீர்பின் கொள்கை ஏற்கப் பட்டது.

**Raja of Bobbili** *vs.* **Akela Suriyanarayana Rao (1919) 42. Mad. 776.**—வழக்கில் பொப்பிலி அரசர் ரூபாய் 3,25,00.-க்கு ஒரு சொத்தினை வழக்கு மன்ற ஏலத்தில் கேட்டார்.

பிறிதொரு நாளுக்கு ஏலம் தள்ளி வைக்கப்பட்டபோது வேறொருவர் ரூபாய் 1000/-ஐ மேல் வைத்து ஏலம் கேட்டார். விற்பனை நாளுக்கு முன்னர் அவ்வாறு கூடுதல் விலைவைத்துக் கேட்ட நபர் இறந்து விட்டார். எனவே முன்னர் கேட்ட பொப்பிலி அரசருக்கு ஏலம் விட்டதாக அறிவிக்கப்பட்டது. பொப்பிலி அரசர் இதனை ஏற்க மறுத்துச்சொத்தினை வாங்க வில்லை. வழக்கு மன்றத்தில் பொப்பிலி அரசரின பொறுப்பில் மீண்டும் ஏலம் விடத் தீர்ப்பாயிற்று.

ரூபாய் 1000/-ஐ கூடுதலாக வைத்து ஒருவர் கேட்டவுடனே பொப்பிலி அரசர் கேட்டவிலை காலாவதியாகிவிட்டது என்றும், அதிகப்படியாகக் கேட்டவரின் முனைவும் உடனே ஏற்கப்பட்ட தனால் அதுவும் காலாவதியாயிற்று என்றும் உயர்நீதி மன்றத்தில் தீர்ப்பு வழங்கப் பட்டது.

**புகையூர்தி வழக்கு**

புகையூர்தி வழக்குகளில், அட்டவணையில் காணப்படும் வரை யறைகள் முனைவாகுமா அல்லது முனைவிற்கான அழைப்பாகுமா என்பதை அவற்றின் தன்மையைக் கொண்டு உய்த்துணரப் படுதல் வேண்டும். இவற்றில் முனைவேற்பவர் (Offeree) முனைவின் வரை யறைகளை அறியாதவராக உள்ளார். இங்கு முனைவு தெரிவிக்கப் பட்டிருப்பினும், முனைவேற்பவர் முனைவின் வரையறைகளை அறியாதவராகக் கருதப்படுகின்றார்.

பல ஒப்பந்தங்கள், அச்சடிக்கப்பட்ட ஆவணங்களில் உள்ளன. சான்றாகப் புகையூர்தி, கப்பல் பங்கமைப்பு நிறுவனங்கள் முதலானவை தருகின்ற பயணச் சீட்டில் பல வரையறைகள் காணப்படினும் அதனைப் பெறுபவர் அவற்றின் தன்மையை அறி யாமலே அதனைப் பயன்படுத்துகிறார். அவ்வரையறைகள் தெளி வாக அச்சடிக்கப்பட்டிருப்பின் அவருக்குத் தெரியப்படுத்தப் பட்டவையாக கொண்டு அவரைக் கட்டுப்படுத்தும் தன்மையன என்று ஆகும்.

கொடுக்கப்படும் பணத்திற்காக பயணச்சீட்டு முறையாக அளிக்கப்படுவதனால், பங்கமைப்பு நிறுவனங்கள் பயணச் சீட்டைக் கொடுப்பதன் மூலம் முனைவினை வெளியிடுகிறது என்றும், பணம்

கொடுத்துப் பின்னர் பயணச் சீட்டைப் பெறுவதன் மூலம் பயணி தனது ஏற்பைத் தெரிவிக்கிறுர் என்றும் ஏற்று ஒப்பந்தம் முடிவானதாகக் கொள்ளவேண்டும் என்ற கருத்தினைச் சர் எஃப். போலாக் என்பவர் தெரிவிக்கிறுர்.

இவ்வாருகப் பங்கமைப்பு நிறுவனங்கள் வெளியிடும் அட்டவணைகளும், அறிக்கைகளும், இன்ன பிறவும் அவைகள் தன்னகத்தே இருசாராரையும் (பொதுமக்கள் ; பங்கமைப்பு) பிணைக்கும் வரையறைகள் கொண்டனவாக இருப்பினும் ; அவைகளின் தன்மைகளை முறையாக முன் கூட்டி பிணைப்பினை ஏற்படுத்த விரும்புகின்றவருக்கு அறிவிப்பினும், அவைகள் பொதுமக்கள் ஏற்று நடப்பதற்கான உண்மையான முனைவினை ஏற்படுத்தாது என்று அறிஞர் போலாக் கூறிப் போந்தார்.

எனவே புகையூர்தி அட்டவணையில் காணப்படும் நேரங்கள் ஒருவரை ஏமாற்றத்திற்கு உள்ளாக்குமாறுலும், சட்ட நெறிக் குட்படுத்தப்படும் ஒப்பந்தமாகாது. ஆறுல் அத்தகைய அறிக்கைகள் வேண்டுமென்றே ஒருவரை வஞ்சிக்கவோ, மோசடி செய்யவோ ஏற்படுத்தப்பட்டவையாறுல், அது உரிமைத் தீங்கு (Tort) சட்டத்தின் கீழ் நடவடிக்கை எடுக்கப்படுவதற்குரியதாகும்.

(iii) முனைவு தனி மனிதர் ஏற்கும் முனைவாகவோ, பொதுவாக யார் வேண்டுமாறுலும் ஏற்கும் (offer at...Large முனைவாகவோ இருக்கலாம். ஆறுல் அதனை அறுதி செய்யப் பெற்ற (Ascertained) நபர் ஏற்கின்ற வரையில் ஒப்பந்தம் ஏற்படாது. பொதுவாக யார் வேண்டுமாறுலும் ஏற்கும் முனைவுகளை தனி மனிதர் ஏற்கும் முனைவுகளினின்றும் பிரித்து "குறித்த வகை முனைவுகள்" (specific offers) என்று அவற்றிற்கு சர் ஜான் சால்மண்ட் பெயரிட்டுள்ளார்.

காணுமற்போன தன் மகனைத் திருப்பிக் கொண்டு வந்தால் 'ஆ' என்பவருக்கு ரூபாய் 100/- தருவதாக 'அ' என்பவர் சொன்ஞல், அதனைத் தனியார் ஏற்கும் முனைவு என்று சொல்வர்.

ஆறுல் யார் ஒருவர் காணுமற்போன தன் மகனை அழைத்து வருகின்றுரோ, அவருக்கு ரூபாய் 100/- தருவதாகப் பொது விளம்பரம் தரப்படுமாறுல் அதனைப் பொது முனைவு (Genral offer) என்று கூறுவர், இதனை யார் வேண்டுமாறுலும் ஏற்றுக் காணுமற்போன பையனை அழைத்து வந்து ஏற்குமாறு செய்யலாம்.

பொது முனைவினை விளக்கும் பேர்பெற்ற வழக்கு Carlill vs. Corbolic Smoke Ball Co *(1893)* I.Q.B. *256* ஆகும்.

**வழக்கின் பொருண்மைகள் (Facts)**

குளிர் காய்ச்சலைப் போக்கும் மருந்து விற்பனை செய்யும் நிறுவனமான Carbolic Smoke Ball Co விளம்பரம் ஒன்றைச் செய்திருந்தது. அந்த விளம்பரத்தில் எவரேனும் தங்கள் மருந்தை நாள் ஒன்றிற்கு மூன்று வேளை வீதம் தொடர்ந்து இரண்டு வாரங்கள் தாங்கள் அறிவித்துள்ள முறைப்படி பயன்படுத்திய பின்னரும் குளிர் காய்ச்சல் நீடிக்கப் பெற்றால் அன்னாருக்குத் தாங்கள் £ 100 தருவதான தங்கள் முனைவினைக் குறிப்பிட்டு இருந்தனர்.

மேலும் தாங்கள் அதனை உண்மையாகச் செயல்படுத்த விரும்புகிறோம் என்பதை மெய்ப்பிக்க வேண்டி £ 1000/-யை அலையன்ஸ் வங்கியில் வைப்புத் தொகையாகக் கட்டி வைத்திருப் பதாகவும் அந்த விளம்பரத்தில் தெரியப்படுத்தியிருந்தனர்.

திருமதி கார்லில் என்பவர் அந்நிறுவனம் அறிவித்துள்ள முறைப்படி மருந்தினைப் பயன்படுத்தியும் குளிர்க் காய்ச்சலினால் அவர் தாக்கப்பட்டார். எனவே விளம்பரத்தின்படி உரிய தொகையைக் கோரி திருமதி கார்லில் என்பவர் அந் நிறுவனத் தின் மீது வழக்குத் தொடர்ந்தார்.

எதிர்வாதியான நிறுவனம் சாமர்த்தியமாகக் கீழ்க்காணும் குறிப்புகளை வைத்து எதிர் வழக்குரைத்தது.

(அ) உலகு அனைத்தையும் ஒப்பந்தத்திற்குள்ளாக்கும் விளம் பரம் நடைமுறையாக்க இயலாததொன்றாகும்.

(ஆ) விளம்பரம், முனைவிற்கான அழைப்பே (Invitation to offer) தவிர முனைவாகாது.

(இ) முனைவிற்கான வரையறைகள் தெளிவாக இல்லை. அறிவித்துள்ள முறைப்படி மருந்து உட்கொள்ளப்பட்டதா என் பதனைக் கண்டறியக் கூடவில்லை.

(ஈ) வாதியின் கோரிக்கையானது சூதாட்டச் சட்டத்தின் கீழ் பந்தயம் என்ற தலைப்பினில் அடங்குவதால் சட்ட நெறியினை மீறும் காப்பீடாகும்.

(உ) விளம்பரம், பொருளை எளிதில் விற்பதற்கான ஒரு யுக்தியாகக் கையாளப்பட்டதே தவிர சட்ட நெறியில் பிணைத்துக் கொள்ள அல்ல.

(ஊ) வாதி தன் ஏற்பினை அறிவிக்கவில்லை.

(எ) அந்த உறுதியுரைக்கு மறுபயன் ஏதும் இல்லை-

(ஏ) மேலும் அத்தகைய உறுதியினால் இத்தகைய வழக்கினைப் பலர் மேற்கொண்டால் நிறுவனம் பெரிய அளவில் பாதிப்பிற்குள்ளாகும்.

ஆனால் உயர்நீதி மன்றம் மேற்சொன்னவைகளை நிராகரித்து கீழ்க்காணும் அடிப்படைக் கொள்கைகளை வகுத்தது.

(அ) தனி நபருக்கன்றி உலகம் அனைத்திற்கும் விடுக்கப்பட்ட முனைவானாலும், யாரொருவரேனும் அந்த முனைவின் நிபந்தனையை விளம்பரப்படி ஏற்று நடப்பாரேல், அவருடன் ஒப்பந்தம் நிறைவேறியதாகும்.

(ஆ) விளம்பரம் முனைவிற்கான அழைப்பாகாது ; முனைவே ஆகும்.

(இ) முனைவின் வரையறைகள் தெளிவற்றதாகவும், உறுதியற்றதாகவும், குளிர்காய்ச்சல் ஏற்பட கால வரையறை நிர்ணயிக்காததாகவும், மருந்து உட்கொள்ளப்பட்டதைக் கண்காணிக்க வழியற்றதாகவும் இருப்பினும் நியாயமான காலம் உட்கிடையாக (Implied) உய்த்துணரப்படுமாறு உள்ளதால் இவைகளை உறுதிப்படுத்தி நிர்ணயிக்க முடியும்.

(ஈ) இந்த உடன்படிக்கை சூதாட்டத்தின்பாற்படாது. எனவே சட்டநெறிக்குட்படும்.

(உ) விளம்பரம், விற்பனையை அதிகரிக்கச் செய்யும் ஒரு வெறும் முறையல்ல. வங்கியில் £ 1000/- போடப்பட்டிருப்பதால் ஒப்பந்தக்காரரைச் சட்டப்படி பிணைக்கும் எண்ணமே ஆகும்.

(ஊ) ஏற்பு அறிவிப்பு (Acceptance) என்பது முனைவாளர் (Offeror) நன்மையைக் கருத்தில் கொண்டு ஏற்படுத்ததப்பட்ட ஒன்றாகும். அதனை முனைவாளர் வற்புறுத்தாமல் விடலாம். மேலும் இவ் வழக்கில் ஏற்பின் உரிமை விடுப்பு (Waiver) உட்கிடையாக உள்ளது. நிபந்தனைகளை ஏற்றுச் செயல்பட்டதானது ஏற்பாயிற்று.

(எ) மருந்தை உட்கொண்டு வாதி ஊறுக்கு உள்ளானார். அதுவே மறுபயனாயிற்று. அதனால் எதிர்வாதி மருந்து விற்றதனால்

ஆன பலன் அடைந்தார். எனவே மறுபயன் உள்ள ஒப்பந்தமாக இது கருதப்படுகிறது.

(ஏ) இத்தகைய உறுதியுரையினைப் பலரும் ஏற்றால் ஏற்படும் பெருமளவு இழப்பினைக் கருத்தில் கொண்டு எதிர்வாதியினை வழக்கினின்றும் விடுவிக்க இயலாது.

மேற்சொன்னவாறு வழக்கின் நிலைகளை விளக்கித் தீர்ப்பு வழங்கப்பட்டது.

இவ்வழக்கினின்று பெறப்பட்ட பின்வரும் கொள்கைகள் ஆராயப்பட்டு தெளிவாக மேற்கொள்ளப்பட்டன.

(i) விளம்பரம் ஒன்றை என்றுமே முனைவிற்கான அழைப்பாகக் கொள்வதற்கில்லை. சில வேளைகளில் அதுவே முனைவாகவும் உள்ளது.

(ii) பொது முனைவானது குறித்த நபருக்கில்லை எனினும் அத்தகைய முனைவு பேரம் பேசி முடிவாக வேண்டியதொன்று எனினும், முனைவின் நிபந்தனையை ஏற்று அதன்படி ஒருவர் நடப்பின் ஒப்பந்தம் முடிவாகிறது.

(iii) புரிவுரை ஏற்பு (Acceptancc of proposal) புரிவுரையாளருக்கு அறிவிக்கப்படுதல் வேண்டும். எனினும், அத்தகைய **ஏற்பு அறிவிப்பு** முனைவாளரின் (offeror) நன்மையைக் கருதித்தான்; எனவே, முனைவாளர் அதனை வேண்டாமெனலாம் அல்லது கட்டுவரம்பின்படி நடந்து அதற்கான அறிக்கையுடன் ஏற்பு அறிவிப்பினையும் முனைவேற்பாளர் தெரிவிக்க முனைவாளர் சம்மதிக்கலாம்.

(iv) இத்தகைய விளம்பர முனைவினால் முனைவாளர் பல வழக்குகளுக்கு உள்ளாகி பெரும் இழப்பிற்கு உள்ளாக நேரிடும் என்ற காரணத்திற்காகச் செல்லத் தக்க ஒப்பந்தத்தினின்றும் முனைவாளரை விடுவிக்க நியாயம் ஏதும் கிடையாது.

பொது முனைவானது, ஒப்பந்தப் புள்ளியினின்றும் (Tender) மாறுபட்டதாகும். ஒப்பந்தப் புள்ளியினை நிலை முனைவு (Standing offer) எனலாம்.

இதில் குறிப்பிட்ட காலவரைக்குள் முனைவு ஏற்கப்படக் கூடியதாக இருக்கும், அதனை ஏற்பதனால் அது காரணமாகவே (Ipso Facto) சட்டநெறிக்குள்ளாகும் பிணைப்புகள் ஏற்படுவ

தில்லை. பின்னர் ஏற்படும் பேரமும், அதனுல் ஏற்படும் முனைவேற்பினுலேயே ஒப்பந்தம் முடிவாகின்றது. இத்தகைய ஒப்பந்தப் புள்ளி தொடர் முனைவு (Continuing offer). நிலையில் உள்ளது. ஆனுல் அனைத்துமே அது போன்று இருக்கத் தேவையில்லை. மேலும் பொதுவாகப் பொது முனைவாகவும் இருக்க வேண்டியதில்லை.

சான்ருக 'ஆ' என்பவர் ஏற்பதானுல் 'ஆ'வுக்குக் குறித்த நாளிலிருந்து இரண்டாண்டு காலத்திற்குக் குறிப்பிட்ட விலைக்கு நிலக்கரி வழங்க 'அ' என்பவர் முனைந்தால் அதுவே ஒப்பந்தப் புள்ளி அல்லது ஒப்பந்த அறிவிப்பு (Tender) ஆகும்.

இதில் 'ஆ' என்பவர் தனக்கு வேண்டிய நிலக்கரி முழுவதையும் அல்லது ஒரு பகுதியை 'அ' விடமிருந்து தான் பெற வேண்டும் என்ற பிணைப்பில் இல்லை. 'அ'வும் உறுதியுரைக்கான தனியான மறுபயன் இல்லாத வரையில் அத்தகைய முனைவினை இரண்டாண்டு காலத்திற்குத் தொடர்ந்து வைத்திருக்க வேண்டும் என்ற பிணைப்பில் இல்லை.

ஆனுல் 'ஆ' என்பவர் ஒரு பகுதி நிலக்கரிக்குக் கட்டளையிட்டால்கூட அது முனைவேற்பாகி விடும். உடனே முனைவு அவ்வளவில் ஒப்பந்தமாக மாறி, 'அ' என்பவரின் நிலக்கரியினை உறுதியுரையில் குறித்த விலைக்கு வழங்கக் கட்டுப்படுத்தும். [Offord *vs*. Davies and another (1862) 142 E. R. 1336; Chaturbhuj Vithal Das Jasani *vs*. Moreshwar Parashram (1954) S.C.J. 315 (S. C.)].

மறுபயன் கருதி 'அ' குறித்த இரண்டு ஆண்டுக் காலம் வரை முனைவினை மறித்தழிக்காமலிருக்க உடன்பட்டு சம்மதித்தால் அதனை விருப்பத்தேர்வு (option) என்பர். அத்தகைய விருப்பத்தேர்வானது 'அ' என்பவரைக் கட்டுப்படுத்தும்.

Bengal Agency and Stores Syndicate *vs*. T. N. Khanna I. L. R. (1945) I. Cal 87.

வழக்கில் விற்பனையாளரின் குறிப்புத்தாளில் அடியிற்காணும் குறிப்பு காணப்பட்டது.

"இருப்பில் உள்ளவரைதான் பொருள்கள் விற்பனைக்குரியன. போர், வேலை நிறுத்தம் அல்லது ஏனைய கட்டுக்கடங்கா எதிர்பாராத நிலைமையினுல், கொடுப்பதற்கு ஏற்படும் கால தாமதத்திற்கு விற்பனையாளர் பொறுப்பல்ல. விலையானது அறிவிப்பின்றி மாற்றத்திற்குரியது".

மேற்சொன்ன குறிப்பு ஒப்பந்த அறிவிப்பு ஆவணமே (Document of Tender) அன்றி முடிந்த ஒப்பந்தமன்று என்று தீர்ப்பு கூறப்பட்டது.

முனைவினை ஏற்க எத்தகைய கட்டுவரம்பினையும் ஏற்கும் முறையினையும் முனைவாளர் நிர்ணயிக்கலாம். எவரையும் எந்த ஒரு முனைவினையும் ஏற்கக் கட்டாயப்படுத்தப் படுவதில்லை, ஆதலான் முனைவில் காணப்படும் கட்டுவரம்புகள், வரையறைகள் இழிவானவைகளாக இருப்பினும், அவை அனைத்தையும் ஏற்று நிறைவேற்றாமலிருப்பின், அம் முனைவேற்பு செல்லத் தக்கதல்ல.

(v) முனைவு, முனைவேற்பாளருக்கு அறிவிக்கப்படல் வேண்டும். ஒப்பந்தம் நிறைவேற வேண்டி ஒன்றிய உள்ளங்கள் தேவை என்பது நாம் அறிந்ததே. எனவே முனைவு பற்றி முனை வேற்பாளர் அறியாமல் இருந்தால் ஏற்பு சரியாகாது. ஆதலான் ஒப்பந்தம் முடிவாகாது.

தனி முனைவு, பொது முனைவு அனைத்திற்கும் இவ்விதி பொருந்தும்.

அமெரிக்க வழக்கான (Fitch *vs*. Snedaker (*1868. 38.* N.Y. *248*)-ல் குறிப்பிட்ட தகவல் அறிய வெகுமதி அளிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

இந்த அறிவிப்புப்பற்றித் தெரியாமலே ஒரு நபர் குறிப்பிட்ட தகவலை அறிவித்தார். பின்னர் வெகுமதி கோரி வழக்குத் தொடர்ந்தார்.

நபர் வெகுமதி பற்றி அறியாமல் இருந்ததால் அதுபற்றிய முனைவினை அவர் ஏற்றுக் கொண்டதாக கருத முடியாது என்று கொண்டு எத்தகைய ஒப்பந்தமும் வழக்காளரிடையே ஏற்பட வில்லை; எனவே வழக்கு செல்லாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இந்த கொள்கையே Lalman *vs*. Gowri Dutt (11. A. L. J. 489) என்ற வழக்கிலும் கடைப்பிடிக்கப்பட்டது.

## பல வரையறைகள் கொண்ட முனைவுகள்

பல்வேறு வகையான வரையறைகள் கொண்ட முனைவுகளின் வரையறைகள் அனைத்தும் ஏற்பாளருக்கு அறிவிக்கப்பட வேண்டும்.

Henderson *vs*. Stevenson (1875. L.R. 2. H.L.) வழக்கில், வாதி, எதிர்வாதி நிறுவனத்தில் பயணச் சீட்டு பெற்றிருந்தார். பயணச் சீட்டின் பின்புறம் " நிறுவனமானது, பயணிக்கு அல்லது

அவரது பொருளுக்கு ஏற்படும் இழப்பிற்கோ, பாதிப்பிற்கோ, அல்லது கால தாமதத்திற்கோ பொறுப்பேற்காது" என்று அச்சிடப்பட்டிருந்தது.

நிறுவன ஆட்களின் கவனக் குறைவினுல் கப்பல் உடைந்து வாதி, பொருள் இழப்பிற்கு உள்ளானுர்.

வழக்கில் "வாதி, பயணச் சீட்டின் பின்புறம் கண்டிருந்த வரையறைகள் பற்றிக் காணுமலும், அறியாமலும் இருந்ததனுல் அவற்றை ஏற்றுச் சம்மதித்தார் என்பதற்கில்லை என்று கூறி இழப்பினை நிறுவனம் ஈடு செய்ய வேண்டும்" என்று தீர்ப்பாயிற்று.

Parker *vs.* South Eastern Railway Co (1877) 2. C.P.D. 416 இவ் வழக்கில் பயணச் சீட்டின் பின்புறம் உள்ள வரையறைக்குப் பயணியின் கவனம் ஈர்க்கப்பட்டிருந்தால் போதுமானது என்று தீர்ப்பளிக்கப் பட்டது.

இவ்வழக்கில் சீட்டின் முன்புறத்தில் "பின்புறம் காண்க" என்று அச்சடிக்கப்பட்டிருந்ததால், பயணச் சீட்டின் பின்புறத்தில் உள்ள வரையறைகள், பயணியின் கவனத்தை ஈர்த்ததாகக் கொள்ளப்பட்டது.

Richardson *vs.* Rountree (1894) A.C. 217 வழக்கில் இக் கொள்கைகள் தெளிவாக்கப்பட்டன.

நிறுவனத்தார் வரைமுறைகளை பயணியின் கவனத்திற்கு தெளிவாகக் கொணர வேண்டிய வழிமுறைகளைக் கையாள வேண்டும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது.

பணம் செலுத்தியதற்காகப் பெற்ற பற்றுச் சீட்டின் பின் புறம் உள்ள வரையறைகள், பணம் பெற்றவரைக் கட்டுப்படுத்தும் தன்மைற்றவையாகும் என்று Chapleton *vs.* Barry U.D.C. (1940) I.K.B. 532 வழக்கில் கூறப்பட்டது.

Mackilligam *vs.* Compagnie, Des, Messageries Martimes வழக்கில் பயணச் சீட்டு பெற்ற ஓர் ஆங்கிலேயருக்கு அதன் பின் புறம் ஃபிரெஞ்சு மொழியில் அச்சடிக்கப்பட்டுள்ளது தெரியாது என்று வாதிக்கப்பட்டது. ஆனுல் பின்பிறம் யாதோ கட்டு வரம்புகள் காணப்படுகின்றன என்பதை அறிந்திருந்த அந்த ஆங்கிலேயர் அதனைத் தெரிந்து கொள்ள முற்பட்டிருக்க வேண்டும். அல்லது அதனின் ஆங்கிலமொழி பெயர்ப்பினை

நிறுவனத்தாரிடம் கேட்டறிந்திருக்க வேண்டும் என்று தீர்ப் பாயிற்று.

இவ்வழக்குகளினின்றும் நாம் அறிவதென்ன? பல்வேறு வகை யான வரையறைகள் கொண்ட ஆவணச் சீட்டைப்பெறும் முனைவேற்பாளர் அவ்வரையறைகளை அறியும் வண்ணம் முனை வாளர் வழிசெய்ய மேற்கொள்ளவேண்டும்.

பின்னர் முனைவேற்பு உட்கிடையாகும். முனைவேற்பாளர் அறிந்ததாகக் கையெழுத்திடினும் அத்தகைய வரையறைகள் திரித்துக் காட்டப்படாமலிருந்தால் (Misrepresentation) அவை முனைவேற்பாளரைக் கட்டுப்படுத்தும்.

வேற்று மொழியில் இருந்தாலும் முனைவேற்பாளர் அதனின் மொழிப்பெயர்ப்பைப் பெற்று, அறிய முயலவேண்டும் என்பதும் அவ்வரையறைகள் அவரைக் கட்டுப்படுத்தும் என்பதும் அறியப் படும் கூற்றுகளாகும்.

# 6. ஏற்பு

ஒருவர் ஒன்றைச் செய்வதாக முன் வந்து முனைகின்ற நிலையில், அதனை மற்றொருவர் ஏற்கின்ற செயல் ஏற்பு எனப்படும்.

ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவு 2 (b) ஏற்பினைப் பின்வருமாறு விளக்குகிறது:

இசைவைத் தெரிவிக்கும் நபரிடம் புரிவுரையை அறிவித்து அதற்கான இசைவை அவர் தருவாரானால் அப்புரிவுரை ஏற்கப்பட்டதாகும்.

புரிவுரை ஏற்கப்பட்ட பின்னர் உறுதியுரை (Promise) ஆகிவிடுகிறது.

இதனை சர் வில்லியம் ஆன்சன் ஒரு வேடிக்கையான சான்றினைக் கொண்டு விளக்குகிறார்,

வெடிமருந்துள்ள தொடர்வண்டிக்கு எரியும் குச்சியினை வைத்தால் எவ்விதம் வெடிக்குமோ அதே போன்று முனைவு ஏற்கப்பட்ட உடன் வெடித்து அல்லது முற்றி ஒப்பந்தமாகி விடுகிறது என்கிறார்.

இசைவாளர் (offeree) முனைவினை ஏற்ற பின் ஏற்பாளரா கின்றார்.

புரிவுரை (Proposal) உறுதியுரையாவதற்கு (Promise) ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவுகள் 7-உம் 8-உம் சில கட்டுவரம்புகளை நிர்ணயிக்கின்றன.

புரிவுரையின் கட்டுவரம்புகளை நிறைவேற்றுவது அல்லது புரிவுரையுடன் அளிக்கப்படும் எதிர் உறுதியுரைக்கான மறுபயனை ஏற்பது என்பது புரிவுரையை ஏற்பதாகும்.

செல்லு நிலை ஏற்புக்கான இன்றியமையாத கூறுகளை 7-ம் பிரிவு விளக்குகிறது.

(i) புரிவுரை உறுதியுரையாக மாற்றப்பட வேண்டுமானால் ஏற்பானது வரையறைக்குட் படாததாகவும் (Unqualified) முழுமையானதாகவும் (Absolute) இருத்தல் வேண்டும்.

கட்டுவரம்புக்குட்பட்ட ஏற்றல் ஏற்பாகாது.

வரையறைக்குட்படாமலும் முழுமையானதாகவும்ஏற்பானது இருத்தல் அவசியம்.

Sewak *vs*. Municipal Board (Air 1937) (All 328)

'அ' வும் 'ஆ' வும் விற்பனை ஒப்பந்தம் ஒன்றனுக்கு எழுத்து மூலம் உடன்பட்டனர். உடன்பாட்டின் இறுதியில் ஒப்பந்தம் 'நாளடைவில்' என்று முடிந்தது. இது முடிந்த ஒப்பந்தமாகாது.

(ii) புரிவுரையில் இன்ன வகையில் தான் ஏற்க வேண்டும் என்று குறிப்பிடப்படாத வரையில் ஏற்பானது நடைமுறையில் உள்ள ஏற்கத் தகுந்த வழியில் அமைதல் வேண்டும்.

இன்ன வகையில் தான் ஏற்க வேண்டும் என்ற பின்னரும். ஏற்பினை வேறு வகையினால் ஏற்றுக்கொண்ட பின்னர் குறிப்பிட்ட காலவரையறைக்குள் புரிவுரையாளர் தான் கூறிய வழியில்தான் புரிவுரை ஏற்கப்பட வேண்டும் என ஏற்பாளரை வலியுறுத்தலாம். தவறினால் ஏற்பினை ஏற்றதாகக் கொள்ளப்படும்.

ஆங்கிலச் சட்டத்தில் இத்தகைய ஏற்பு சட்டப்படியாகச் செல்லாது. உறுதியுரைக்கான புரிவுரையோ, ஏற்போ, எழுத்து மூலம் தரப்பட்டிருந்தால் வெளிப்படை (Express) என்று ம்வேறு வகையான உய்த்துணரப்படுமாறு தெரிவிக்கப்படின் உட்கிடை (Implied) என்றும் ஒப்பந்தம் கருதப்படுகிறது.

உட்கிடை ஒப்பந்தத்தை நடத்தைக் குறிப்பு ஒப்பந்தம் (Tacit Contract) என்று அழைப்பதே பொருந்தும்.

(iii) ஏற்பினை நடைமுறையில் உள்ள ஏற்கத் தகுந்த வழியில் அறிவிக்கப்படல் வேண்டும்.

அறிவிக்கப்படாத எண்ணங்களுக்கு வழக்கு மன்றம் முக்கியத்துவம் கொடுக்க இயலாத காரணத்தால் புரிவுரை போன்றே ஏற்பும் வெளிப்படையான நடத்தையினால் எண்ணத்தை வெளிப்படுத்தக் கூடியதாக அமைதல் வேண்டும்.

இன்ன வகையில்தான், அறிவிக்கப்படுதல் வேண்டும் என்பதில்லை. ஒப்பந்தக்காரர்களின் விருப்பத்திற் கிணங்க எப்படி

வேண்டுமானாலும் அமையலாம். ஆனால் மௌனத்தை, (Silence) அறிவிப்பின் செயலாகக் கருதுவதற்கில்லை.

**Brogden vs. Metropolitan Railway Co. (1877) 2 A.C, 666.**

எழுத்து மூலம் அனுப்பப்பட்ட புரிவுரையின் மீது 'அங்கீகரிக்கப்பட்டது' என்று எழுதி ஏற்பாளர், அதனை, தன் மேசை அறைக்குள் வைத்துக்கொண்டார்.

பின்னர் வழக்காடியபோது, புரிவுரையாளருக்கு, இந்த ஏற்பு அங்கீகரிக்கப்பட்டிருந்தும், அவ்வாறு அங்கீகரிக்கப்பட்டதை அறிவிக்காமல் இருந்ததால் செல்லத்தக்கதல்ல என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

வெளிப்படையான அறிவிப்பில்லாத ஏற்புக்குரிய எண்ணம் மட்டும், சட்டத்திற்குப் போதுமானதல்ல.

**Felt House vs. Bindley 11. C. B. (N. S.) 869.**

'பெ' என்பவர் 'ந' என்பவரின் குதிரையை £ 30-க்கு வாங்குவதற்கானத் தன் முனைவினைத் தெரிவித்தார். 'மேலும் இதுபற்றி நீ ஒன்றும் சொல்லாமல் இருந்தால் £ 30-க்குக் குதிரை என்னுடையதாகின்றது எனறு கருதுகின்றேன்' என்ற தன் முனைவை அதில் வெளியிட்டார். 'ந' என்பவர் அதற்குப் பதிலளிக்கவில்லை. ஆனால் தன் ஏலதாரரான (Auctioner) 'ஆ' என்பவரிடம் குதிரையை ஏலம் விடத் தேவையில்லை என்று கேட்டுக்கொண்டார். ஆயினும் தவறுதலாக 'ஆ' என்பவர் குதிரையினை ஏலம் விட்டுவிட்டார். 'பெ' என்பவர் குதிரையினை ஏலம் விட்டதற்காக வழக்குத் தொடர்ந்தார்.

வழக்கில் 'ந' என்பவரின் மௌனத்தை ஏற்பாகக் கருதுவதற்கில்லை என்றும், அறிவிக்கப்படாத ஏற்புடன் கூடிய ஒப்பந்தத்தை முடிந்த ஒன்றாகக் கருதுவதற்கில்லை' என்றும் தீர்ப்பாயிற்று.

(iv) ஏற்புக்கான அறிவிப்பினை, முனைவாளர் வேண்டுமானால், உரிமையுடன் தேவையில்லை என்று விட்டுவிடலாம். அத்தகைய அறிவிப்பு, முனைவாளரின் நன்மையைக் கருதித்தான் சட்டப்படி வலியுறுத்தப்படுகிறது.

எனவே முனைவாளர் குறிப்பிட்ட வழியில், ஏற்பினை ஏற்பதாக அறிவித்து, தெரிவிக்கவேண்டிய சூழ்நிலையைத் தவிர்க்கலாம்.

சான்றாகப் புரிவுரையினை ஏற்றதன் அடையாளமாகக் குறிப்பினைக் காண்பித்தால் போதுமானது என முனைவாளர் சொல்லி அதன்படி ஏற்பாளர் குறிப்பால் அறிவித்திடின் ஒப்பந்தம் முடிவாகி விடுகிறது,

Carllil vs. Carbolic Smoke Ball Co என்ற வழக்கில் இத்தகைய குறிப்பே ஏற்பாகக் கருதப்பட்டு வழக்குத் தீர்ப்பாகியது என்பதனை இங்கே நினைவு கூர்வது பொருத்தமானதாகும்.

(v) முனைவு வீழுமுன்னர், அல்லது திரும்பப்பெறுமுன்னர், அல்லது மறுக்கப்படுமுன்னர் ஏற்கப்படல் வேண்டும். ஏற்ற பின்னர் முனைவு திரும்பப்பெற இயலாத ஒன்ருகி விடுகின்றது.

(vi) ஏற்பு, முனைவில் காணப்படும் கட்டுப்பாட்டினுள் முழுமையானதாக இருத்தல் வேண்டும். எனவே முனைவில் உள்ள கட்டுப்பாடுகளை வேறுபடுத்தியோ, கூட்டியோ ஏற்பின் ஏற்பாகாது. ஆனல் முனைவிற்கான எதிர் முனைவாகும் (Counter offer) இதனை, ஏற்பது முனைவாளரின் விருப்பத்தினைப் பொறுத்தது ஆகும்.

வீடு ஒன்றினை ரூபாய் 5000/- க்கு விற்பதற்கான முனைவினை ரூபாய் 3000/-க்கு ஏற்பதாக அறிவித்தால், அத்தகைய அறிவிப்பு எதிர்முனைவு என்று கூறப்படும்.

இந்த முனைவினை ஏற்பது, முன் முனைவாளரின் விருப்பத்தைப் பொறுத்ததாகும்.

Harvey vs. Facey என்ற வழக்கிலும் இத்தகைய எதிர் முனைவினைக் கண்டிருக்கின்ருேம்.

(vii) வீழ்ந்த (Lapse)திரும்பப்பெற்ற (Revocation) மறுக்கப்பட்ட முனைவுகளின் தன்மைகள் பற்றி இப்போது காண்போம்:

**வீழ்ந்த (Lapse) முனைவு**

(அ) ஏற்பிற்கு முன்னர், முனைவாளர், இசைவாளர் இருவரில் யார் இறந்துவிட்டாலும் முனைவு வீழ்வடையும்.

முனைவாளர் இறந்த பின்னர் இசைவாளரால் ஏற்கப்படுகின்ற ஏற்பும், அல்லது இசைவாளர் இறந்த பின்னர் அவரின் வாரிசுகள் ஏற்கின்ற ஏற்பும் ஒப்பந்தச் சட்டத்திற்கு முரணுனதாகும். எனவே முனைவு வீழ்வடையும்.

மேற்சொன்ன ஏற்புகளில் கருத்தொருமை இருக்க இயலாது; எனவே ஒப்பந்தச் சட்டத்தின் முக்கிய கொள்கை பழுதடைகிறது.

முனைவாளரின் இறப்புப்பற்றி, அறியாத இசைவாளரின் ஏற்பும் சட்டப்படியாகாது என்று ஆங்கிலச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

ஆனால் இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 6-வது பிரிவு 4-வது துணைப் பிரிவின்படி அத்தகைய ஏற்பு செல்லுபடியாகும். முனைவாளரின் பித்து (Insanity) நிலைக்கும் இவ்விதி பொருந்தும்,

(ஆ) முனைவினைக் குறிப்பிட்ட கால கெடுவிற்குள் ஏற்காத ஏற்பும், காலக்கெடு குறிப்பிடாத முனைவினை, நியாய வரம்பிற்கு உட்பட்ட காலத்திற்குள் ஏற்காத ஏற்பும் செல்லுபடியாகா. இவற்றான முனைவு வீழ்வடையும்.

நியாய வரம்பிற்குட்பட்ட காலக்கெடு, வழக்குகளுக்கேற்ப மாறுபடும்.

முனைவு மறித்தழிப்பு (Revocation of offer)

(அ) இசைவாளர் முனைவினை ஏற்குமுன்னர், முனைவாளர் அந்த முனைவினை மறித்தழிக்கலாம். அதற்கான அறிவிப்பினை முனைவு ஏற்பதற்கு முன்னர் செய்தல் வேண்டும், இசைவாளர் அத்தகைய அறிவிப்பினை அறிந்தவராக இருத்தல் வேண்டும். அந்த அறிவிப்பினை அறியும் வாய்ப்பினை அவர் பெற்றிருந்தார் என்று முனைவாளர் கூறினால் போதுமானதாகாது.

Curtis *vs.* London city and Midland Bank (1908) I. K. B. 293.

வரைபவர் (Drawer), காசோலையின் மாற்று உத்திரவினை (Countermand) உரிய காலத்திற்குள் தந்தி மூலம் வங்கிக்கு அறிவித்தார், எனினும் வங்கிப் பணியாளர்களின் கவனமின்மையால், மேலாளரின் கவனத்திற்கு, வரைபவரின் மாற்று உத்திரனைப் பற்றிய செய்தியைக் காசோலையினை மாற்றுமுன்னர் கொண்டு செல்லப்படவில்லை.

வழக்கில், மேலாளரின் கவனத்திற்கு மாற்று உத்தரவிற்கான அறிவிப்பினைக் கொண்டு வராத நிலையில், காசோலையினை மாற்ற அனுமதித்தது செல்லுபடியாயிற்று.

Dickinson *vs.* Dodds (1876) 2 Ch. D. 463.

முனைவாளர், முனைவினை நிறைவு செய்ய இயலாத நிலையினை அடைந்தாரானால், அது பற்றிய விவரம் இசைவாளர் எவ்வழியில் அறிந்திருப்பினும் முனைவு மறித்தழிக்கப் பட்டதாகக் கொள்ளப் படும்.

(ஆ) முனைவாளர் முனைவினை ஒப்புக் கொண்ட குறிப்பிட்ட காலவரையறைக்கு முன்னதாகவே மறித்தழிக்கலாம். ஆனால் இத்தகைய மறித்தழிப்பிற்கான அறிவிப்பினைப் பெறுமுன்னர், இசைவாளர் முனைவினை ஏற்றால் இது இயலாத ஒன்றாகிவிடுகின்றது.

அல்லது முனைவாளர் குறிப்பிட்ட காலவரையறையில் முனை வினைமறித்தழிக்காமல் இருக்க, மதிப்புள்ள மறுபயன் பெற உடன் பட்டிருந்தால் முனைவினை மறித்தழிக்க இயலாது. Cooke vs. Oxley (1889) 3. T. R. 653 — வழக்கில் இங்ஙனம் தீர்ப்பு வழங்கப் பட்டது.

சோம சுந்தரம் பிள்ளை vs. சென்னை மாநில அரசு (1947) I. MLJ 123. என்ற வழக்கில் ஏலம் கேட்டவர் தன்னுடைய ஏலத்தை மீட்டுக் கொள்ளலாம் எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**முனைவு மறுத்தொழிப்பு (Rejection of offer)**

முனைவினை ஏற்க, இசைவாளர் மறுத்து முனைவாளருக்கு அறிவித்தாலும், அல்லது இசைவாளர் எதிர் முனைவினை விடுப்பி னும், அல்லது இசைவாளர் முனைவினை சில வரையறைக்குட்படுத்தி ஏற்றாலும் முனைவு மறுத் தொழிக்கப்படுவதாகும்.

மேற்சொன்ன வேறுபாடுகளைத் தவிர இங்கிலாந்துச் சட்டத் தினின்றும் இந்தியச் சட்டம் மாறுபடவில்லை.

**அஞ்சலில் ஒப்பந்தம் அமுலாதல் (Contract by Post)**

முனைவாளரும், இசைவாளரும் நேரடியாக இருக்கும் வேளை யில், முனைவு ஏற்பாகி ஒப்பந்தமாகின்ற காலத்தைச் சரியாகக் குறிப்பிட இயலும்.

ஆயினும் இவ்விருவரும் அஞ்சல் மூலம் ஒப்பந்தங்கள் குறித் துத் தொடர்பு கொள்ளும் பொழுது சிக்கல்கள் உருவாகின்றன.

பல ஒப்பந்தங்கள் அஞ்சல் மூலமாகவே நடைமுறைக்கு வருகின்றன. எனவே அவற்றிற்கான சட்ட திட்டங்கள் பற்றி அறிந்து கொள்வது அவசியமாகின்றது.

(அ) முனைவாளர், குறிப்பிட்ட வழிவகையைக் கோராத வரையில், அஞ்சல் பெறும் முனைவினை அஞ்சல் மூலமே ஏற்கலாம்.

Henthorn vs. Fraser (1892) 2 Ch 27 இவ்வழக்கில் ஒப்பந்தக் காரர்கள் அஞ்சல் மூலம் தொடர்பு கொள்ள விரும்பிய சூழ்நிலை இருந்திருக்குமானால் முனைவு, அஞ்சல் மூலம் பெறுவிடினும் ஏற் பினை அஞ்சல் மூலம் தெரிவிப்பதில் தவறில்லை எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவு 4-ல் முனைவிற்கான அறிவிப்பை இசைவாளரின் கவனத்திற்குக் கொண்டு வந்த பின்னரே அறிவிப்பு பெற்றதாகக் கொள்ளப்படும் என்று சொல்லப்பட்டுள்ளது.

சான்ருக 'ஆ' என்பவருக்குத் தன் வீட்டினைக் குறித்த விலையில் விற்க 'அ' என்பவர் அஞ்சல் மூலம் அறிவிக்க விரும்பினுல், அத்தகைய அறிவிப்பு அஞ்சலினை 'ஆ' என்பவர் பெற்ற பின்னரே, அவர் அறிவிப்பினை அறிந்தவராவார்.

(ஆ) Adams vs. Lindsell (1818) I. B. & Ald. 681. இவ்வழக்கில் அஞ்சல் மூலம் அனுப்பப்படும் முனைவினை இசைவாளர் பெற்ற பின்னரே அவருக்கு அறிவிக்கப்பட்டதாகக் கொள்ளப்படும் என்றும், வழக்கமான அஞ்சல் சேரும் நாளில் அவருக்கு அறிவிக்கப்பட்டிருக்கும் என்று கொள்வது முறையாகாது என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

(இ) இசைவாளர் ஏற்பிற்கான அறிவிப்பினை அஞ்சலில் சேர்த்த உடனே ஒப்பந்தம் தொடங்கி விடுகிறது. அஞ்சல் முகவரி சரிவர எழுதப்பட்டு, போதுமான அஞ்சல் தலை ஒட்டப்பட்டு அஞ்சல் பெட்டியில் சேர்க்கப்பட்டால் அக்கணமே ஒப்பந்தம் நிறைவுபெறுகிறது.

எனவே எங்கு ஏற்பானது, அஞ்சலில் சேர்க்கப்பட்டதோ, அந்த இடமே ஒப்பந்தம் ஏற்பட்ட இடமாகிறது.

இவ்விதம் இசைவாளரால் முறையாக அஞ்சலில் சேர்க்கப்பட்ட ஏற்பினை முனைவாளர் பெறுமுன்னர் இசைவாளர் விரும்பினுலும், திரும்பப் பெற்றுக்கொள்ள இயலாது என்கின்ற காரணத்தினுல்தான், ஒப்பந்தம் உருவாகிவிட்டதாகக் கொள்ளப்படுகிறது.

சான்ருக 'அ' என்பவரின் முனைவு ஒன்றினை 'ஆ' என்பவர் ஏற்று அஞ்சல் மூலம் அறிவிக்கின்ருர். முனைவாளர் 'அ' என்பவரைப் பொறுத்தவரை, ஏற்பை அஞ்சலில் சேர்த்தவுடன் ஏற்பு அறிவிப்பு நிறைவு பெற்று விடுகிறது.

ஆனுல் இசைவாளர் 'ஆ' வைப் பொறுத்தவரை அத்தகைய அஞ்சலின் 'அ' என்பவர் பெறுகின்ற பொழுதுதான், ஒப்பந்தம் முழுமைபெற்றதாகக் கொள்ளப்படும்.

Dunlop vs. Higgins (1848) I. H. 2. C. 381. இவ்வழக்கில் ஏற்பிற்கான அறிவிப்பு அஞ்சல், காலம் கடந்து முனைவாளரை அடைந்தது. இந்த இடைவெளிக் காலத்தில் (ஏற்பினை அஞ்சலில் சேர்த்த பின் முனைவாளரைச் சேராமுன்) முனைவாளர் தனது முனைவினை மறித்தழித்தார்.

இவ்விதம் மறித்தழித்ததைச் செல்லாது என்றும் முனைவாளரைப் பொறுத்தவரை ஒப்பந்தமானது ஏற்பை அஞ்சலில் சேர்த்தவுடன் முழுமை பெற்றுவிட்டது என்றும் தீர்ப்பாகியது.

Household Fire Insurance Co. *vs*. Grant (4 Ex. D. 216)

'ஆ' என்பவரின் பங்குகளை வாங்குவதற்கான தன் முனைவு ஒன்றினை 'அ' என்பவருக்கு அஞ்சலில் அறிவித்தார். 'அ' என்பவர் தனது இசைவினை அஞ்சல் மூலம் அறிவித்தார்.

ஆனல் இசைவினை அறிவித்த அஞ்சல், இடைவழியில் தொலைந்து விட்டது. முனைவாளரால் இசைவினை அறிவித்த அஞ்சலைப்பெற இயலவில்லை. இருப்பினும் முன் கூறிய வழக்கின் முடிவே இதற்கும் பொருந்துவதாகக் கருதப்பட்டு ஒப்பந்தம் 'ஆ' என்பவரைப் பொறுத்தவரை நிறைவு பெற்றதாகக் கொள்ளப் பட்டது.

இத்தகைய கட்டுப்பாட்டினல் முனைவாளர் பாதிக்கப்படுவ தில்லை. காரணம் யாதெனில், அவர் விருப்பப்படி ஏற்புக்கான அறிவிப்பை பெறுவதற்கான வாய்ப்பு அவருக்கு உண்டு.

மேலும் குறிப்பிட்ட காலத்திற்குள் அத்தகைய அறிவிப்பு தனக்குச் சேர வேண்டும் என்றும் அவர் தனது முனைவில் நிர்ண யிக்கலாம்.

ஒப்பந்த வழக்குகளைத் தீர்த்துவைக்க இவ்விதிமுறைகள் பெரிதும் துணைசெய்கின்றன. இவ்விதி முறைகளில் ஆங்கிலச் சட்டம் சற்று வேறுபடுகிறது.

இங்கிலாந்துச் சட்டத்தின்படி ஏற்பிற்கான அறிவிப்பை அஞ்சலில் சேர்த்த பின்னர் முனைவாளர், இசைவாளர், இரு வரைப் பொறுத்தும் ஒப்பந்தம் நிறைவு பெற்று விடுகிறது.

ஆனல் இந்தியச் சட்டத்தில் முனைவாளரைப் பொருத்தவரை தான், அஞ்சலில் சேர்த்தவுடன் நிறைவுபெறுகிறதே ஒழிய இசை வாளரைப் பொறுத்தவரை அத்தகைய அறிவிப்பை முனைவாள ரின் கவனத்திற்குக் கொணர்ந்த பின்னர்தான், ஒப்பந்தம் நிறைவு பெறுவதாகிறது. அவரின் கவனத்தைக் கவருமுன் இசை வாளர் அத்தகைய ஏற்பினை மறித்தழிக்கலாம், என்று ஒப்பந்தச் சட்டத்தின் 5-வது பிரிவு கூறுகிறது.

எனவே அஞ்சலில் சேர்க்கப்பட்ட ஏற்பு முனைவாளரை அடையுமுன் தந்தி மூலமாக இசைவாளர் ஏற்பினை மறித்தழிக்க லாம் என்பது இதனல் உள்ளங்கை நெல்லிக்கனி ஆகிறது.

(ஈ) மறித்தழிப்புப் பற்றிய அறிவிப்பு இசைவாளரை அடை கின்ற வரையில், முனைவாளர் இசைவாளர் ஆகிய இருவரையும்

பொறுத்தவரையில் அது நிறைவு பெற்றதாகாது. இதிலும் இந்தியச்சட்டம் மாறுபடுகிறது.

முனைவாளரைப் பொறுத்து, அத்தகைய மறுத்தழிப்பு அறிவிப்பினை அஞ்சலில் சேர்த்தவுடன் நிறை பெற்று விடுகிறது.

ஆனால் அம்மறித்தழிப்பு இசைவாளரின் கவனத்திற்கு அத்தகைய அறிவுப்பு கொணரப்படுகின்றவரையில் நிறைவு பெறுவதில்லை.

சான்றாக 'அ' என்பவர் தந்தி மூலமாகத் தன் புரிவுரையினை மறித்தழிப்பதாகக் கொண்டால் 'அ' என்பவரைப் பொறுத்தவரை, மறித்தழிப்பு பற்றிய தந்தியினை அஞ்சலில் சேர்ப்பித்தவுடன் நிறைவு பெற்றுவிடுகிறது.

ஆனால் 'ஆ' என்பவரைப் பொறுத்து தந்தியினை அவர் பெற்ற பின்னரே மறித்தழிப்பு நிறைவு பெறுகின்றது.

ஒப்பந்தம் ஒன்று நிறைவுபெற்று அதன் கட்டுவரம்புகள் ஏற்கப்பட்ட பின்னர், மேற்கொண்டு புதிய விவகாரங்கள் பற்றி யாதேனும் இரு தரப்பினரிடையே தொடர்பு ஏற்படுமானால் அத்தகைய தொடர்பு ஏற்கனவே ஏற்கப்பட்ட நிறைவுபெற்ற ஒப்பந்தத்தைப் பாதிக்காது.

ஆயினும் இரு தரப்பினரும் ஒருமனப்பட்டும் கருத்தொருமித்து மாற்றத்தை விரும்பினாலும், முதலில் ஒப்பந்தமானதை அழித்துக்கொண்டாலும், அல்லது இருதரப்பினரும் அத்தகைய ஒப்பந்தத்தை நிறைவுபெறாத, முடிவாகாத ஒப்பந்தமாகக் கருதினாலும் ஒப்பந்தம் மாறுபட வழியுண்டு. இதனை,

Jainarain *vs*. Surajmall Sagur Mull (1949) F. L. J. 216 (F. C.)

என்ற வழக்கின் தீர்ப்பினின்றும் அறிய முடிகிறது.

ஒப்பந்தத்தினை இரு தரப்பாரும் ஆவணமாக்கினால்தான் (document) ஒப்பந்தம் நிறைவு பெற்றதாகும் என்று கருதினால் அந்நிலையில் ஒப்பந்தம், ஆவணமாகிய பின்னரே நிறைவுபெற்றதாகக் கருதப்படும்.

இதற்கிடையில் ஒப்பந்தத்தைச் செல்லுபடியாக்க இயலாது.

அவ்வாறின்றி ஒப்பந்தத்தை ஆவணமாக்க விரும்பி அதனை கட்டுவரம்புடையதாகச் செய்யாமலிருப்பின், ஒப்பந்தமானது ஆவணமாக்கப்படாவிடினும் செல்லும் தகைமைத்தாகும்.

அதேபோன்று ஒப்பந்தக்காரர்கள் விரும்பாவிடின், ஆவணமாகிவிட்ட காரணத்தினாலேயே ஒப்பந்தங்கள் செல்லுபடியாவதில்லை.

மேலும் முற்கூறிய வழக்கில் மூன்ருவது நபரை ஒப்பந்தத்தில் பிணைத்து மற்ற இருவரும் ஒப்பந்தம் செய்துகொள்வதும், அதனை நிறைவுபெற்ற ஒப்பந்தமாகக் கருதச் செய்வதும் ஏற்றுக் கொள்ளப்பட இயலாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

மூன்ருவது நபர் தன்னுடைய உடன்பாட்டினை அத்தகைய ஒப்பந்தத்திற்குத் தெரிவித்துத் தன்னையும் அவ்வொப்பந்தத்தில் பிணைத்துக் கொள்ளாத வரையில் அத்தகைய மற்றையோரின் உடன்பாடு அம் மூன்ரும் நபரைப் பாதிக்காது.

பிற்காலத்தில் ஒப்பந்தம் செய்துகொள்ள, மேற்கொள்ளும் உடன்பாடு, ஒப்பந்தமாகாது.

ஓர் ஒப்பந்தத்தின் வரைமுறைகள் மீது உடன்பாடு அப் போதைக்கப்போதே ஏற்பட வேண்டும்.

தவணை முறை கிரயத்தின் (Hire Purchase System) வரை முறைகள் பற்றி மேற்கொள்ளும் உடன்பாட்டை நிறைவுபெற்ற ஒப்பந்தமாகக் கருத இயலாது.

அத்தகைய வரைமுறைகள் இரு தரப்பினரின் ஒப்புதலுடன் மாறுபடக்கூடிய காரணத்திஞல் வழக்கு மன்றத்திஞல் அவற்றை வரையறுக்க இயலாது.

தொலைபேசிமூலம் ஒப்பந்தம்

முனைவாளர் தொலைபேசி மூலம் முனைவு பற்றி அறிவித்தால், இசைவாளர் தன் ஏற்பினைத் தொலைபேசி மூலம் அறிவிக்கலாம்.

அவ்விதம் செய்யின் ஒ ப் ப ந் த ம் நிறைவுபெற்றதாகக் கொள்ளப்படும். அத்தகைய ஒப்பந்தம் முனைவாளர் இருந்த இடத்தில் ஏற்பட்ட ஒப்பந்தமாகக் கருதப்பட்டு, அவ்விடத்து வழக்கு மன்றத்தின் மூலம் அத்தகைய வழக்குகள் தீர்த்து வைக் கப்படும்.

Bhagwandas *vs.* Girdharlal (Air 1966 S. C. 543)

இவ்வழக்கில் அகமதாபாத்திலிருந்த முனைவாளருக்குக் கம்கான் என்னுமிடத்திலிருந்த இசைவாளர் தன் இசைவினை தொலைபேசி மூலம் அறிவித்தார். ஒப்பந்தம் அகமதாபாத்தில் நிறைவுபெற்றதாக வழக்கில் கொள்ளப்பட்டது.

# 7. மறு பயன்

முனைவு ஏற்கப்பட்டதும் ஒப்பந்தமாக மிளிருகிறது. முனைவு ஏற்கப்படுவதே, யாதேனும் ஒரு மறுபயன் கருதித்தான் என்பது தெளிவு. இசைவினைத் தெரிவித்து உறுதியுரை அளிப்பதன்மூலம் முனைவாளர் மறுபயனை அளிக்க வேண்டியவராகிருர். மறு பயன் இல்லாமல் ஏற்படும் ஒப்பந்தச் சட்டத்தில் செல்லுபடியாவ தில்லை என்றும் அறிந்துள்ளோம்.

இந்திய ஒப்பந்தச்சட்டத்தின் 10-வது பிரிவு உடன்பாட் டினை செல்லுமாறு செய்ய (Enforceability) சட்டப்படியான மறுபயன் தேவை என்று நிர்ணயக்கின்றது.

மறுபயன் இல்லாமல் மேற்கொள்ளுகின்ற உடன்பாடு இல்லா நிலையது (Void) ஆகும் என்று 25-வது பிரிவு கூறுகிறது.

மறுபயன் சட்ட நிறைவு பெற இயலாத (unlawful) சூழ் நிலைகளை 23-வது, 24-வது பிரிவுகள் விளக்குகின்றன.

மறுபயன் பற்றிய வரைவுரையினை பிரிவு 2 (d) பின்வருமாறு கூறுகிறது:

"வாக்குறுதி அளிப்பவர் விரும்பியபடி, வாக்குறுதி பெற்றவர் அல்லது மற்றெருவர் செய்யும் செயல், செயல் தவிர்ப்பு அல்லது அளிக்கும் உறுதியுரை மறுபயனுகும்"

இங்கிலாந்துச் சட்டம், மறுபயன் பற்றிச் சட்டப்படியான வரைவுரை எதனையும் செய்யவில்லை.

இதனுல் பலவகையான குழப்பங்களுக்கு உள்ளாகி வழக்கு களின் தீர்ப்புகள் பலவகையாக விளங்குகின்றன.

Currie vs. Misa (1875) L. R. 10 Ex. 153) என்ற வழக்கில் ஒருவர் பெறும் உரிமை (Right) நலன் (Interest) பலன் (Profit)

அல்லது நன்மை (Benefit) முதலானவைகளும், அன்றி, மற்றவர் கொள்ளும் பொறுதி (சகிப்புத்தன்மை) (Forbearance) அடையும் இடையூறு (Detriment) பெறும் இழப்பு (Loss) அல்லது பொறுப் பேற்பு முதலானவைகளும் மதிப்புள்ள மறுபயனாகக் கருதப் பட்டன.

முந்தைய இங்கிலாந்துச் சட்டத்தில், முத்திரையிட்ட வரை மொழி உடன்பாடு அல்லது வினையெழு கட்டுப்பாடு (Sealed convenant) நியாயவழி ஒப்பந்தம் (Contract real) ஆகிய இருவகை ஒப்பந்தங்களும் அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

இவைகளை நீதிப் பேராணை (writ) மூலமாகத்தான் வலியுறுத்த (Enforceable) முடிந்தது.

இங்கிலாந்திலும் சமுதாய வளர்ச்சி காரணத்தினல், இவைகள் போதா என்ற எண்ணத்தினுலும், எதிர்பார்த்த பலன் கிட்டாத தாலும், 16ஆம் நூற்றுண்டில் வழக்கறிஞர்கள் கோட்பாடு (Assumpsity) மூலமாக, இவற்றிற்குத் தீர்வு கண்டனர். அதே வழக்கறிஞர்கள் பணிக் கொடையினை மறுபயனாகக் கொண்ட ஒப் பந்தங்களைச் சட்டப்படி செல்லும் நிலையாக்கத் தேவையில்லை என் பதனையும் ஆராய்ந்து முடிவெடுத்தனர்.

இக்காலத்தில் தான் தனி (Simple) அல்லது வாய்மொழி (Parol) ஒப்பந்தங்கள் அங்கீகரிக்கப்பட்டன.

இத்தகைய ஒப்பந்தங்கள் செல்லுமாறு செய்யப்பட (enforceablity) மறுபயன் தேவைப்பட்டது.

லத்தீன் கொள்கையான ‘Ex. Nudo Paeto Non Oriture actio’ (மறுபயனில்லா ஒப்பந்தந் தந்து உறுபயனில்லை வழக் குரிமை) ஏன்னும் கோட்பாடு மேற்கொள்ளப்பட்டது.

முத்திரையில்லாத ஒப்பந்தங்களும், மறுபயனுடன் இருப்பின் அவை சட்டப்படியாகச் செல்லத் தக்கவையாக்கப்பட்டன.

ஏனையன, பணிக்கொடை உறுதியுரைகளாகக் கொள்ளப் பட்டு இல்லாநிலை (Void) எய்தின.

எழுத்து மூலம் ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தம் கையெழுத்திடப் பட்டு, முத்திரையாகி உறுதியுரையாளரால் கொடுக்கப்பட்டு, மற்றவரால் பெறப்பட்டால் அவற்றை ஒப்பாவண முறை ஒப்பந் தங்கள் (Formal Contracts) என்றழைத்தனர்.

இங்கிலாந்துச் சட்டப்படி, மறு பயனில்லா ஒப்பந்தங்களும், கூட்டுருமம் (Corporation) செய்யும் ஒப்பந்தங்களும், பங்கமைப்பு

நிறுவனங்களின் பங்கு மாற்றங்களும் முத்திரையுடன் இலங்க வேண்டும்.

இயற்றுச் சட்டத்தினை வலியுறுத்தும் வழக்கு மன்றங்கள் இத்தகைய முத்திரையுடன் கூடிய ஒப்பந்தங்களை இவற்றிற்கு மறு பயன் இருந்திருப்பினும், இல்லையென்றாலும் கண்ணை மூடிக் கொண்டு செல்லுபடியாக்கின.

இத்தகைய ஒப்பந்தங்கள் இங்கிலாந்து நாட்டைத்தவிர, நம் நாடாகிய இந்தியாவில் அறிய முடியாத ஒன்றாகும்.

எழுத்துமூலம் உள்ள ஒப்பந்தம் முத்திரையுடன் கூடிய ஒப்பந் தத்தினின்றும் மாறுபட்டது.

இங்கிலாந்துச் சட்டத்தில் சில சாதாரண ஒப்பந்தங்களும் எழுத்து மூலம் இருக்கவேண்டும் என்பது, நியதியாக உள்ளது.

இந்தியாவில் வாய்மொழி ஒப்பந்தங்களும், மாற்று முறை யாவணம்; பங்குச் சீட்டுகள்; காப்பீட்டு உறுதிமொழியாவணம் போன்ற எழுத்து மூலமான ஒப்பந்தங்களும் காணப்படுகின்றன.

17-ம் நூற்றாண்டு முழுவதிலும், 18-ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் மறுபயன் கொள்கை நிறுவப்பட்டு ஒப்பந்தங் களில் ஏற்கப்பட்டது.

ஆயினும் 1765-ல் அரசாயத்தின் (King's Bench) தலைமை நீதிபதியான லார்ட் மான்ஸ் பீல்டு, Pil!ans *vs*. Van Mirop (1865) 3 Burr 1663) என்ற வழக்கில் இக்கொள்கையினை ஏற்க மறுத்து அத்தகைய மறுபயனை ஒப்பந்தக்காரர்களின் எண்ணத்திற்கான சாட்சியமாகத்தான் கொள்ளலாமே தவிர, அதனையே வலியுறுத்தி ஒப்பந்தத்தைச் செல்லாநிலையாக்க முடியாது என்று தீர்ப் பளித்தார்.

எனினும் 1778-ல் Rann *vs*. Hughes (1778), 7 Term. R. 350 n.) என்ற வழக்கில் பிரபுக்கள் மன்றம் மீண்டும் மறுபயன் கொள்கையை நிலை நாட்டிற்று.

மீண்டும் 1813-ல் மான்ஸ்பீல்டு பிரபுவின் வழிவந்தவர்கள் இக்கொள்கையினை எதிர்த்தனர்.

Lee *vs*. Muggeridge (1813), 5 Taunt 36. என்ற வழக்கில் வாதியினைத் தனது மருமகனுக்குக் கடனளிக்கக் கோரியும், அதற் காகத் தன்னுடைய தனிச் சொத்தினைக் கடன்தொகை அளவிற் குப் பிணைப்பதாகவும், தனது கணவருக்குப் பின்னர் தன் நிறை

வேற்றுளர்கள் (Executors) அத் தொகையினை அளிப்பர் என்றும் திருமணமான வெண்மணி ஒருத்தி எழுதியிருந்தார்.

வழக்கில் நிறைவேற்றுளர்கள் பணத்தைக் கொடுக்கவேண்டும் மெனத் தீர்ப்பாயிற்று.

மறுபயன் கொள்கை *1840*-ல் **Eastwood** *vs*. **Kenyon(1840) 11 A. & E.** 438 என்ற வழக்கில் மீண்டும் செல்லுபடியாக்கப் பட்டது. எனவே மறுபயன் கொள்கை இங்கிலாந்துச் சட்டத்தில் வேரூன்றி இன்றுவரை நிலைத்துள்ளது.

இந்தியாவிலும் இக்கொள்கை சில மாறுபாடுகளுடன் ஏற்கப் பட்டு, ஒப்பந்தச் சட்டமாக இலங்குகின்றது.

**மறுபயன்**

சர். பிரடரிக் போலக் என்பவர் "முனைவாளரின் ஒரு செயலோ, செயல் தவிர்ப்போ, அல்லது அதற்கான உறுதி யுரையோ, மற்றவரின் உறுதியுரைக்கு ஈடாக இருப்பின், அத் தகைய மதிப்புள்ள உறுதியுரைச் சட்டப்படியாகச் செல்லுமாறு செய் யப்படல் ஆகும்" (Enforceable) என்று மறுபயனை வரைவுரைத் தார். இதனைப் பிரபுக்கள் மன்றமும் ஏற்றது.

ஒப்பந்தச் சட்டத்தின் 2(d) ஆவது பிரிவு மறுபயன் பற்றிக் பின்வருமாறு வரைவுரைத்துள்ளது :

"உறுதியுரை அளிப்பவரின் விருப்பத்திற்கிணங்க உறுதியுரை ஏற்பவர், அல்லது மற்றவர் ஒரு செயலைச் செய்தலும், செய்யாது தவிர்த்தலும் அல்லது செய்யினும், செய்யத் தவிர்த்திருப்பினும் அல்லது ஒரு செயலைச் செய்யவோ செய்ய தவிர்க்கவோ உறுதி யுரையளிப்பின், அத்தகைய அவரின் செயல், அல்லது செயல் தவிர்ப்பு அல்லது உறுதியுரை, உறுதியுரையளிப்பவரின் உறுதி யுரைக்கான மறுபயனாகும்."

ஆகலான் மறுபயனானது, நிறைவேறிய மறுபயன், நிறை வேற்ற வேண்டிய மறுபயன் என இரு வகைப்படும்.

**நிறைவேறிய மறுபயன்**

செயல் ஒன்றிற்குப் பதிலாகச் செய்த உறுதியுரையோ, அல்லது உறுதியுரை ஒன்றிற்குப் பதிலாகச் செய்த செயலோ, நிறைவேறிய மறுபயனாகும்.

இத்தகைய நிறைவேறிய மறுபயனில் ஒருவரின் செயலினுல் ஏற்பட்ட முனைவினுலோ, அல்லது ஏற்பினுலோ, ஏனையவர் கடம் பாட்டிற்கு உள்ளாக்கப் படுகின்ருர்.

நிகழ்காலச் செயல் அல்லது சகிப்புத் தன்மைக்குச் சான்று : ரொக்க மதிப்புள்ள பொருள் ஒன்றினைத் தருதல் அல்லது பணத்தையே பட்டுவாடா செய்தல் அல்லது சில பணிகளைச் செய்தல் அல்லது சட்டப்படியாகச் செய்யத் தேவையற்ற ஒரு செயலைச் செய்தல் அல்லது மேற்சொன்னவைகளில் யாதேனும் ஒன்றைச் செய்ய உறுதிமொழி உரைத்தல் போன்றவை.

'ஆ' என்பவரிடமிருந்து பெற்ற ரூபாய் 5/-க்குப் பதிலாக 'அ' என்பவர் நூல் ஒன்றினைத் தருவதாக 'ஆ' என்பவருக்கு உறுதி மொழி உரைத்தார்.

'அ' என்பவர் அடையும் பலன் அதாவது ரூபாய் 5 ஆனது அவர் அளித்த உறுதியுரைக்குக் கிடைத்த மறுபயனுகும். அவர் உறுதியுரை, நூல் ஒன்றினைத் தருவதாகும்.

இதையே வேறு கோணத்தில் பார்ப்போமானுல், 'அ' என்ப வரின் உறுதியுரைக்காக 'ஆ' என்பவர் ரூபாய் 5/-ஐப் பிரிந்து, இகந்து (Detriment) வசதிக் குறைவு முதலானவற்றிற்கு உள்ளா கின்ருர்.

எனவே உறுதியுரை அளிப்பவரான 'அ' என்பவருக்கு ஏற்படும் நன்மையைவிட, உறுதியுரை ஏற்பவரான 'ஆ' என்பவர் அடை யும் அசௌகரியம் சிறிதேயாயினும், அதனையே சட்டம் வற்புறுத்து கின்றது என்பது தெளிவாகிறது.

**நிறைவேற்ற வேண்டிய மறுபயன்**

உறுதியுரைக்கு மறு அல்லது பதில் உறுதியுரை செய்தலோ, அல்லது சகிப்புத்தன்மை காட்டலோ நிறைவேற்ற வேண்டிய மறு பயனுகும்.

'ஆ' என்பவருக்கு ரூபாய் 100/- கொடுப்பதாக 'அ' என்பவர் உறுதியுரை செய்து 'ஆ' என்பவர் 2 மூட்டை நெல் தருவதாக உறுதியுரை செய்தால், அவர்கள் இருவரிடையே இருதலை ஒப்பந் தம் உண்டாகிறது.

இரு தரப்பினரும் செய்யும் உறுதியுரைகள் ஒன்றுக்கொன்ருன உறுதியுரைகளாகும் (Reciprocal Promises)

'ஆ' என்பவர் செய்யும் உறுதியுரைக்கு 'அ' என்பவர் செய்யும் உறுதியுரை மறுபயன் ஆகிறது. அதே போன்று 'அ' என்பவர்

செய்யும் உறுதியுரைக்கு 'ஆ' என்பவர் செய்யும் உறுதியுரை மறு பயனாகும்.

இதனால் ஒரு உறுதியுரை மற்ற உறுதியுரையினைத் தாங்கிக் கொள்கிறது.

உறுதியுரை ஒன்றிற்குப் பதிலாக எதிர் உறுதியுரை செய்தாலாவது, நிறைவேற்ற வேண்டிய மறுபயனாகும்.

இத்தகைய ஒப்பந்தம் ஏற்படுங்கால் இருதரப்பினரும் கடப்பாடுகளை (obligations) நிறைவேற்றாத நிலையில் உள்ளனர். அவை அனைத்தும் எதிர் காலத்தில் நிறைவேற்ற வேண்டியவைகளே ஆகும்,

திருமணம் செய்துகொள்ள மேற்கொள்ளும் உடன்பாடு, கடனுக்காகப் பின்னைப் பொருளைத் தருவதாகச் செய்துகொள்ளும் பொருள் விற்பனை உடன்பாடு போன்றவைகள் இத்தகைய நிறைவேற்ற வேண்டிய மறுபபனுக்கான சான்றுகளாகும்.

இந்தியாவிலும் மறுபயனில்லா ஒப்பந்தம் இல்லா நிலையது (Void) ஆகின்றது.

ஒப்பந்தச் சட்டத்தின் 25-வது பிரிவு "மறுபயனற்ற உடன்பாடு இல்லா நிலையது" என்றுரைக்கின்றது, ஆனால் அப்பிரிவு இதற்கான விதி விலக்குகளையும் கூறியுள்ளது. அவைகளைக் கீழே காணலாம் :

(i) ஒப்பந்தக்காரர்களிடையே உள்ள நெருங்கிய உறவினால் இயற்கையான அன்பினால்; பாசத்தால் உண்டான, பதிவான எழுத்து மூலமான ஒப்பந்தம்.

(ii) தன்னிச்சையான முந்தைய சேவைகளை ஈடு செய்ய மேற்கொள்ளும் ஒப்பந்தம்.

(iii) காலங்கடந்த கடனைத் தீர்க்க எழுத்து மூலம் கையெழுத்திட்டு உறுதியுரை அளிப்பவர் செய்யும் உறுதியுரை.

**மறுபயன் பற்றிய விதிகள்**

**(i) ஒப்பந்தம் நிறைவுபெற மறுபயன் அவசியமாகிறது.**

பணிக்கொடைக்கான உறுதியுறையும் மறுபயன் இல்லா உறுதியுரையும் இல்லா நிலையதாகின்றன.

Abdul Aziz *vs*. Masum Ali 36 All 268. மசூதி ஒன்றினைப் புதுப்பிக்க 'ஆ' என்பவருக்குக் கட்டணம் கொடுப்பதாக 'அ' என்பவர் உறுதியுரை செய்தார். ஆனால் தொகையினைத் தர வில்லை.

வழக்கில் இவ்வொப்பந்தத்தினால் 'அ' என்பவருக்கு எந்த விதமான நன்மையோ, 'ஆ' என்பவருக்கு எவ்வகையான இழப்போ ஏற்படாததனால், ஒப்பந்தம் இல்லா நிலையது என்று தீர்ப்பாகியது.

Kedarnath *vs*. Gorie Mohamed 14 C.A.L. 64. நகராட்சிக் கூடம் அமைக்க வேண்டி 'ஆ' என்பவருக்குக் கட்டணம் செலுத்த 'அ' என்பவர் உறுதியுரை அளித்தார். 'அ' என்பவரின் உறுதியுரையினை நம்பி 'ஆ' என்பவர் வரைபடங்கள் பெற்று ஒப்பந்தக் காரரிடம் (Contractor) கட்டட வேலையினையும் ஒப்படைத்துப் பண சம்பந்தமான சில பொறுப்பு நிலைகளுக்கும் உள்ளானார்.

'அ' என்பவர் தன் உறுதியுரையினை நிறைவேற்றவில்லை. அதனால் வழக்கு ஏற்பட்டது.

இவ் வழக்கில் 'அ' என்பவருக்கு எந்த விதமான நன்மையான மறுபயன் ஏற்படவில்லை எனினும், 'ஆ' என்பவர் அடைந்த கேடு, ஒப்பந்தத்திற்கான மறுபயன் ஆகியது. ஏனெனின் 'அ' என்பவர் செய்த உறுதியுரையின்மீது 'ஆ' என்பவர் கடம்பாட்டிற்கு (Liability) உள்ளானார். **உரிமை இயல் வழக்கு** (Suit) தீர்ப்பாணை (Decreed) ஆகியது.

Gowri Dutt Ganesh Lall Firm *vs*. Madho Prasad and others (1943) 2. MLJ. 417 (P.C.)

பங்குதாரர்களிடமிருந்து ஏற்கனவே சேர வேண்டிய தொகைக்கு, அத்தகைய பங்குதாரர்களுடன் புதியதாகச் சேர்த்துக் கொள்ளப்பட்ட பங்குதாரரும், கடனாளர்களுக்கு ஒப்புதல் அளித்தார். அதன் பேரில் கடனாளர்களால் வட்டி குறைக்கப் பட்டு மேலும் தொகைகள் அளிக்கப்பட்டன.

வழக்கில் வட்டி குறைந்ததும், புதிய தொகைகள் அளித்ததும் போதுமான மறுபயனாகக் கொள்ளப்பட்டன.

**(ii) பயன் கருதாத மறுபயன் அல்லது முந்தைய மறுபயன் Post Consideration) மறுபயனாகாது (Past consideration is no consideration).**

'ஆ' என்பவரின் உயிரை 'அ' என்பவர் காப்பாற்றினர். 'ஆ' பவர் நன்றிக் கடனாக 'அ' என்பவருக்கு ரூபாய் 100/- தர உறுதி யுரை செய்தார்.

இதில் மறுபயன் முந்தையது. ஒன்றை எதிர்பார்த்து அல்ல. எனவே இதை மறுபயனாகக் கொள்ள இயலாது.

'அ' என்பவரின் செயல் 'ஆ' என்பவரின் உறுதியுரையின் மீது செய்யப்பட்டதல்ல. 'ஆ' என்பவர் உறுதியுரை கூறுமுன்னரே, 'அ' என்பவர் தன் செயலைச் செய்திருந்தார்.

Roscorla *vs*. Thomas *(1842)* 3.Q.B. 234 எதிர் வாதி குதிரை ஒன்றை வாதிக்கு விற்றார். மறுநாள் குதிரை வாங்கியதன் மறு பயனாக எதிர்வாதி, குதிரை திடகாத்திரமானது என்றும், எத் தகைய களங்கமும் இல்லாதது என்றும் உறுதியுரையினைச் செய்தார்.

ஆனால் குதிரை களங்கமுடையதாக இருத்தலைக் கண்ட வாதி, வழக்குத் தொடர்ந்தார்.

வழக்கில் நம்புறுதி *(*Warranty*)*க்கான மறுபயன் இல்லை என் றும், உறுதியுரைக்கு முன்னரே விற்பனை முடிந்து விட்டதென்றும், ஆதலால் மறுபயன் முந்தையதாயிற்று என்று தீர்ப்பு அளிக்கப் பட்டது.

முந்தைய மறுபயன் சில நேரங்களில் மறுபயனாகக் கருதப் படும்.

*(அ)* உறுதியுரை அளிப்பவரின் வேண்டுகோளின்மீது, உரு வாகும் முந்தைய மறுபயன் செல்லும் நிலையது.

**Lampleigh** *vs*. **Brathwait** *(*1915*)*, **H.O.B. 105** மேன்மகன் ஒருவனைக் கொன்ற எதிர்வாதி, அரசரின் மன்னிப்பைப் பெற அவரால் முடிந்த அனைத்தும் செய்ய வாதியான லாம்லேயிடம் கோரினான்.

வாதியான லாம்லே அதனைப் பெறச் சில செலவினங்கள் மேற் கொண்டான். பின்னர் எதிர்வாதி லாம்லே எடுத்துக்கொண்ட சிரமத்திற்கெனத் தான் £120/- தருவதாக உறுதியுரை அளித்தான்.

அதன்படிச் செய்யத் தவறிய காரணத்தினுல் வாதி வழக்காடினுன்.

வழக்கில், தன்னிச்சையான, மரியாதையான செயல் இல்லாததாலும், எதிர்வாதியின் வேண்டுகோளின்மீது செய்யப்பட்ட சேவை என்பதாலும் உடன்பாடு செல்லு நிலையது என்று தீர்ப்பாகியது.

இவ்வழக்கின் தீர்ப்பில் சிறிது மாற்றம், இதற்கு பின்னர் எழுந்த Kennedy *vs.* Brown (1863, 13. C.B.N.S. 677 வழக்கில் கொள்ளப்பட்டது.

உறுதியுரை அளிப்பவரின் வேண்டுகோளுக்கு இணங்கிச் செய்யப்படும் செயலும், பின்னர், உண்டாகும் மறுபயன் கருதிச் செய்யப்பட்டிருந்தால் ஒழிய அத்தகைய முந்தைய மறுபயன் செல்லுபடியாகாது என்று தீர்ப்பாகியது. இந்தியாவில் இம் மாற்றம் ஏற்கப்படவில்லை என்பது,

Sindha *vs.* Abraham (20 BOM 755) – வழக்கினின்றும் அறியலாம்.

(ஆ) முந்து முறை கடன் (Precedent Debt)

முந்து முறை கடன், கடனைத் தீர்ப்பதாகச் செய்யும் உறுதியுரை செல்லு நிலையதாகும். காலம் கடந்த கடன் குறித்துக் கடன் தந்தவருக்குக், கடன் ஏற்றவர் தருகின்ற ஒப்புதல், முந்திய மறுபயன் எனினும் செல்லுபடியாகக் கூடிய ஒன்ருகும்.

(இ) மாற்றுமுறையாவணம் (Negotiable Instrument)

முன் கடன் (Antecedent debt) அல்லது கடம்பாட்டால் (Liability) உண்டான மாற்றுச்சீட்டுக்கான மதிப்புள்ள மறுபயன் செல்லு நிலையதாகும்.

(iii) உறுதியுரை ஏற்பவரிடமிருந்து (Promisee) மறுபயன் தோன்றல் வேண்டும்.

மறுபயனுக்கு முற்றிலும் புதியவர் ஒப்பந்தத்தின்மீது வழக்காட முடியாது.

Tweddle *vs.* Atkinson (1861) 1 B & S. 393. 'அ' என்பவரின் தந்தைக்கும், மாமனுருக்கும் இடையில் குறிப்பிட்ட தொகைகளை 'அ' என்பவரின் திருமணத்திற்குப் பின்னர் 'அ' என்பவருக்குக் கொடுக்க ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்டது.

ஒப்பந்தப்படி 'அ' என்பவரின் தந்தை பணத்தைக் கொடுத்து விட்டார்.

பணம் செலுத்தத் தவறிய மாமனார்மீது 'அ' வழக்குத் தொடர்ந்தார். 'அ' என்பவர் மறுபயனுக்கு அப்பாற்பட்ட புதியவர் என்று கூறி வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

இங்கிலாந்துச் சட்டம் இதற்குச் சில விதிவிலக்குகளை அளிக்கின்றது.

ஆனால் இந்தியச் சட்டத்தில் மறுபயன் யாரிடமிருந்து வேண்டுமானாலும் தோன்றலாம் என்றும், உறுதியுரை ஏற்பவரிடமிருந்துதான் தோன்ற வேண்டும் என்ற நியதி இல்லை என்றும் கூறப்பட்டுள்ளது.

Chinnaya *vs*. Ramaya. 4. Mad 137. 'அ' தனது சொத்தில் சிலவற்றைத் தன் மகளுக்குக் கொடையாக ஆவணம் செய்து தந்தார்.

அதில், தனது உடன் பிறந்தானுக்கு, ஆண்டு பணம், தான் கொடுத்து வந்தது போன்று தன் மகளும் கொடுக்கக் கோரி இருந்தார்.

அதே நாளில், மகளும், 'அ' வின் உடன் பிறந்தானுக்கு ஆண்டு பணம் தர எழுத்து மூலம் உடன்பட்டார்.

பின்னர் உறுதியுரையினை நிறைவேற்ற மகள் மறுத்தார்.

மகள், 'அ' வின் உடன்பிறந்தானிடமிருந்து, எந்தவிதமான மறுபயனும் தோன்றவில்லை என்பதனால் ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியத்தில் தான் இல்லை என்று வழக்கில் வாதாடினாள்.

வழக்கில் "உறுதியுரை ஏற்பவர் அல்லது வேறு யாராயினும்" என்று இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் பிரிவு 2 (d)-ல் காணப்படும் சொற்களின்படி, மறுபயனுக்கு அப்பாற்பட்ட புதியவரும் உரிமையியல் வழக்கில் உரிமை உடையவராகின்றார்" என்று கூறித் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**ஒப்பந்தத்திற்கு அப்பாற்பட்ட புதியவர், இரு நாட்டுச் சட்டங்களின்படியும் வழக்காட இயலாது.**

**ஆனால், மறுபயனுக்கு அப்பாற்பட்ட புதியவர் இந்தியச் சட்டத்தில் வழக்காட உரிமை உடையவர் ஆகிறார் என்பதனை உய்த்துணர்ந்து அறிதல், மிகவும் நன்மையைப் பயக்கும்.**

ஒப்பந்தத்திற்கு, மறுபயனுக்கு அப்பாற்பட்ட புதியவர் இங்கிலாந்துச் சட்டப்படி வழக்காட இயலாது என்பதனை Dunlop

Pneumatic tyre Co *vs*. Selfridge & Co. Ltd 1915 A.C. 847 என்ற வழக்கில் தெளிவாக்கப்பட்டது.

ஒப்பந்தத்திற்கு அப்பாற்பட்ட புதியவர் வழக்கிடல் இயலாது என்பதற்கு இரு விலக்குகள் இங்கிலாந்துச் சட்டத்தில் காணப்படுகின்றன.

(அ) பொறுப்புரிமையின் (Trust Beneficiary) பயனுளி, அத்தகைய உரிமையில் காணப்படும் நியமங்களை நிறைவேற்ற வழக்காட உரிமை படைத்தவராகிறார். அத்தகைய பயனுளி, பொறுப்புரிமை ஒப்பந்தத்திற்கு அப்பாற்பட்ட புதியவரல்லவா ?

(ஆ) கடம்பாடு (Liability) அல்லது முரண்தடை (Estoppel) ஒப்புக் கொள்ளல்.

சான்றாக 'ஆ'விடமிருந்து 'இ'க்குத் தரும் பொருட்டு 'அ' பெறுகின்ற பணம்பற்றி, 'அ', 'இ'யிடம் ஒப்புக் கொண்டால், 'இ'யின் முகவராக 'அ' கருதப்பட்டு பணம் தர வேண்டிய பொறுப்புக்கு உள்ளாகிறார்.

மேற்சொன்ன விலக்குகளே அன்றி இந்திய சட்டத்தில் மேலும் இரண்டுவிதி விலக்குகள் காணப்படுகின்றன. அவை பின் வருமாறு:

(இ) சட்டத்தாலோ, ஒப்பந்தத்தாலோ மூன்றுமவரின் நன்மைக்காகத் தனிப்பட்ட ஒருவர் நிலையியல் சொத்தின் மீது "**பொருட் பிணைப் பொறுப்பு**" (Charge) ஏற்படுத்தி மற்றவர் உரைக்கும் உறுதிமொழியானது சட்ட முறையானதாகும். இதில் மூன்றுமவர், ஒப்பந்தத்திற்கும் அப்பாற்பட்ட புதியவர் என்பது கண்கூடு.

Khwaja Muhammed *vs*. Husaini Begum 32 All 410 (P.C.)

'இ'யின் திருமணத்திற்கு முன் 'இ' தந்தையுடன் 'இ'யின் மாமனார், 'அ' 'இ'-ன் கைச்செலவிற்காக (Kharchi-Pandan) குறிப்பிட்ட தொகை தர 'அ'வின் நிலையியல் சொத்தின் மீது **பொருட்பிணைப் பொறுப்பு** ஏற்படுத்தி இருந்தார்.

வழக்கில், 'அ' தனக்குச் சாதகமாக Tweddle *vs*. Atkinson வழக்கின் தீர்ப்பை மேற்கோள் காட்டி, 'ஆ' யானவர் ஒப்பந்தத்திற்கு முற்றிலும் அப்பாற்பட்டவர் என வாதித்தார்.

வழக்கில் 'இ'க்கு உரிமை உண்டு என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

(ஈ) இந்து குடும்பங்களில் ஆண்களினுல் குடும்ப ஏற்பாடுகள் செய்யப்படுகின்ற காலங்களில், பெண்களின் திருமணத்திற்காக, அவர்களின் வாழ்க்கைப் பொருள் உதவிக்காக நிர்ணயிக்கப்படுகின்ற ஏற்பாடுகள் செல்லு நிலையனவாகும்.

இவைகளின் நன்மைபெறும் நபர்கள் ஒப்பந்தத்திற்கு அப்பாற்பட்ட புதியவர்களாக உள்ளவராயினும் வழக்கிடல் உரிமை பெற்றவர்களாவர்.

Sundararaja *vs*. Lakshmi Ammal 38 Mad 788

ஓர் இந்து கூட்டுக் குடும்பத்தினர் பங்கீடு பிரித்துக்கொண்ட போது பெண்களின் திருமணத்திற்காக, வாழ்க்கைப் பொருளுதவிக்காகக் குறிப்பிட்ட தொகையை ஒதுக்கி உடன்பாடு மேற்கொண்டனர். இவ்வழக்கில், பெண்கள் வழக்கிட உரிமை பெற்றுள்ளனர் எனத் தீர்ப்பாயிற்று.

(உ) மறுபயனுனது நிறைவேறியதாக, நிறைவேற்ற வேண்டியதாக இருக்கலாம்.

(ஊ) போதுமானவையாக மறுபயன் இருக்கவேண்டும் என்ற நியதி இல்லை.

ரூபாய் 100/-ஐ விட்டுத் தர ஒரு சிறு மிளகைக்கூட மறுபயனுகக் கொள்ளலாம்.

மறுபயன் போதுமானதுதானு என்பது பற்றி வழக்கு மன்றம் கணக்கில் கொள்வதில்லை.

உறுதியுரை அளிப்பவர்தான், மறுபயனின் அளவைத் தீர்மானித்துக் கொள்ளவேண்டும்.

சான்ருகப் புகை பிடித்தல், பொடி போடுதல் போன்ற தனது கெட்ட பழக்கங்களில் ஒன்றை வெகுமானம் ஒன்றிற்கு ஈடாக விட்டுவிடுவதாக உறுதியுரை அளித்தல் போன்றவைகளிலும் மறுபயனின் அளவு கவனிக்கப்படுவதில்லை.

Thomas *vs.* Thomas (1842) 2. Q. B. 851 என்ற வழக்கில் இது பற்றிய விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

(எ) **மறுபயன் பொய்மையாக இருத்தல் கூடாது. உண்மையானதாகவும், தகுதியானதாகவும் இருத்தல் வேண்டும்.**

மறுபயனுனது, அதைச் செய்பவருக்குத் தன்னுல் செய்ய இயலாத ஒன்ருகவோ, சட்டப்படிச் செய்ய இயலாத ஒன்ருகவோ இருத்தல் கூடாது.

மந்திரத்தால், புதையலைக் கண்டுபிடித்துத் தருவதாக உறுதியுரைத்தல், இரண்டு இணைகோடுகளைச் சேர்ப்பிப்பதாக உறுதியுரைத்தல், சூதாட்டங்கள் மூலமாகப் பணம் பெற்றுத் தருவதாக உறுதியுரை செய்தல் முதலானவை பொய்மையானவை, வழக்காடத் தகுதியற்றவை என்பது தெளிவு.

அத்துடன் மறுபயன் தெளிவற்றதாக இருத்தல் கூடாது.

வழக்கிடலில் பொறுதி (Forberance) காட்டுவதாக உறுதியுரை செய்தல் மதிப்புள்ள மறுபயனாகும்.

இவ்வகை வழக்கில் கடம்பாட்டினை உறுதிப்படுத்தல் அவசியம்.

கடனுறுதிச் சீட்டின் மீது வழக்கிடாமல் இருப்பதற்காக, நிலையியல் சொத்தினைப் பிணைக்க உறுதியுரை செய்தால் அத்தகைய உறுதியுரை செல்லு நிலையதாகும்.

**மறுகோருரிமை ஒத்திசைவு (Compromise of Disputed claims)**

'அ'க்கு 'ஆ' என்பவர் ரூபாய் 1000/- தருதல் வேண்டும். 'ஆ' என்பவர் தான் பணமே தர வேண்டியதில்லை என்கிறார். பின்னர் இருவரும் ஒத்திசைந்து ஒரு முடிவுக்கு வந்தனர். அதாவது 'ஆ' என்பவர் 'அ' என்பவருக்கு ரூபாய் 500/- தந்தால் போதுமானது என்று முடிவாயிற்று. அதற்கான உறுதியுரை சிறந்த மறுபயனாகும். 'அ' என்பவர் அடைந்த ரூபாய் 500/- இழப்பு, உண்மையான மறுபயனாகிறது.

இதனால் 'அ' என்பவர் 'ஆ' தனக்குத் தரவேண்டிய பணத்திற்காக வழக்குமன்றம் சென்று உரிமையை நிலை நாட்ட வேண்டிய தொல்லையினின்றும் மீண்ட, நன்மையைப் பெற்றார்.

இத்தகைய வழக்குகளில் கோருரிமை (Claim) உண்மையானதாக இருத்தல் அவசியம்.

**கடனாளர்களோடு கொள்ளும் கடன் தீர்வு உடன்பாடு (Composition with Creditors)**

பணமுடை காரணமாகக் கடனாளி கடனாளர்களைக் கூட்டிச், செய்து கொள்ளும் கடன் தீர்வு உடன்பாடு, கடனாளியைப் பிணைக்கும் மறுபயனாகும்.

**முன்சட்டப் பிணைப்புக் கடம்பாட்டு நிலை (Pre-exiting legal obligation)**

சட்டப்படி அல்லது பணியின் நிமித்தம், ஆற்ற வேண்டிய கடமை பற்றிய செயலின் நிமித்தம், அளிக்கும் உறுதியுரை, மறுபயனாகாது.

Collins *vs*. Gode froy (1831) E.R. 1040 என்ற வழக்கில் சாட்சியம் கூற வந்தவருக்கு நியாயமான செலவினங்களுக்கு மேலாக எந்த விதமான தொகையும் தரவேண்டியதில்லை என்று தீர்ப்பாயிற்று.

ஏற்கனவே உள்ள சட்டப்பிணைப்புக் கடப்பாட்டினை நிறைவேற்ற வேண்டிச் செய்யும் உறுதியுரை செல்லு நிலையதல்ல.

ஆயினும் 'ஆ'வுக்கு ஆற்ற வேண்டிய சட்டப் பிணைப்புக் கடம் பாட்டிற்காக 'அ'வுக்கு 'இ' தருவதாக அளிக்கின்ற உறுதியுரை யானது மதிப்புள்ள மறுபயனுகக் கொள்ளப்பட்டுச் செல்லு நிலைய தாகும்.

Ramachandra Chintaman *vs*. Kalu Raju (1887) 2 BOM-362

வழக்கறிஞர் வாதாட ஒத்துக்கொண்ட பின்னர், வழக்கை வெற்றி பெற்றுத் தருவதானுல் மேற்கொண்டு பணம் தருவதாகச் செய்கின்ற உறுதியுரையானது மறுபயனுக ஏற்கத் தகுந்ததல்ல என்று தீர்ப்பாகியது.

(ஏ) சட்டப்படியான மறுபயன் மட்டுமே செல்லு நிலைய தாகும், அப்படி இல்லையெனில் ஒப்பந்தம் இல்லா நிலையதாகும்.

## மறு பயனும் ஒப்பந்த விடுவிப்பும்

ஒப்பந்தம் நிறைவுபெற மறுபயன் அவசியம் என்று அறிந் தோம்.

ஒப்பந்தத்தினின்று விடுவிப்புப் பெறவும் மறுபயன் தேவை பதை இப்போது காண்போம்.

எதிரிடை உறுதியுரைகள் மேற்கொண்ட இரு தரப்பினரும், தங்கள் உறுதியுரைகளை வலியுறுத்த விரும்பவில்லை என்று சம்ம தித்து உடன்பாடு செய்து கொண்டால், அத்தகைய உடன்பாடு மறுபயன் கொண்டு உள்ள ஒன்றென எண்ணி செல்லுநிலையதா கிறது,

முன் உறுதியுரைகளை வற்புறுத்துவதில்லை என்று இருவர் செய் கிற உறுதியுரைகளும் மறுபயன்களாகின்றன.

ஆனல் இங்கிலாந்தில் நிறைவேறிய ஒருதலை ஒப்பந்த வழக்கு களில் மறுபயனை எளிதாகக் கொள்வதற்கில்லை,

'ஆ' செய்த சேவைக்கென 'அ' தருவதாகக் கூறிய ரூபாய் ஐந்திற்கான உறுதியுரையினின்றும், பின்னர் 'ஆ' அவரை விடு

விப்புச் செய்யினும் மீண்டும் தன் உரிமையை நிலைநாட்டக்கூடிய நிலையில் உள்ளார். ஏனெனில் 'ஆ' அவ்விதம் செய்த உறுதியுரைக்கு எவ்விதமான மறுபயனும் இல்லாததனுல், அத்தகைய உரிமையை உடையவராகிறுர்.

ஆயினும் இத்தகைய உறுதியுரைக்குப் பதிலாக மதிப்பில் குறைந்த மறுபயன் பெற்றிருப்பினும் உரிமை இழந்தவராகிறுர்.

ஆனல் இத்தகைய மறுபயன் இல்லையெனினும் முறை ஒப்பந்தங்கள் (Formal Contracts) அல்லது சிறப்பு ஒப்பந்தங்களில் (Speciality Contracts) அத்தகைய விடுவிப்பு செய்த உரிமை செல்லத்தக்கதாகும்.

எவ்வாறெனில் மேற்சொன்ன இருவகை ஒப்பந்தங்களிலும் மறுபயன் வற்புறுத்தப்படுவதில்லை.

ஒருதலை ஒப்பந்தங்களில் இத்தகைய விடுவிப்புச் செய்யும் உரிமை அல்லது கோருரிமை விடுப்புரிமை முதலிய உறுதியுரைகளை (முறை அல்லது சிறப்பு ஒப்பந்தங்களில் தவிர) வற்புறுத்த இயலாது என்ற விதி முறையின் விளைவாக, "ஒத்திசையும் உளநிறைவும்"(Accord and Satisfaction) என்ற கொள்கை வெளியாயிற்று.

உரிமையை விட்டுவிடுகின்ற உடன்பாட்டினையே ஒத்திசைவு என்பர்.

ஒருவருக்கு எதிராக மற்றவர் கொண்டுள்ள உரிமையை அல்லது பாத்தியதையை நிறைவேற்ற வேண்டி ஏதோ ஒன்றைக் கொடுக்கவும், அதை ஏற்றுக் கொள்ளவும் செய்யும் உடன்பாடு, ஒத்திசைவாகும்.

அந்த உடன்பாடு நிறைவேற்றப்பட்டபின் உரிமை அல்லது பாத்தியதை குறித்து வழக்கிட முடியாது.

ஒத்திசைந்த உடன்பாட்டில் உளநிறைவே எதிர் பலனுகும்.

இக்கொள்கைக்கு இருவரையறைகள் உண்டு.

(அ) நிறைவேறிய ஒத்திசைவு உள நிறைவினைக் கொடுக்கும். ஆனல் நிறைவேற்ற வேண்டிய ஒத்திசைவில் ஒரு வழக்கு மூலம் இன்னென்றில் மாற்றப்பட்டு காலம் கடத்தப்படும்.

நூல் ஒன்றினைத் தரவேண்டிய கடம்பாட்டிற்குள்ளான ஒருவர் அதற்குப் பதிலாக எழுதுகோலைத் தருவதன் மூலம் ஒத்திசைவு பெற்று உளநிறைவினைச் செய்கிறுர்.

ஆனுல் 'எழுதுகோலை நூலுக்குப் பதிலாகத் தருகிறேன் என்று' செய்கிற உறுதியுரை நிறைவேற்ற வேண்டிய ஒன்ருக உள்ளதால், நூல் தருவதாகச் செய்த முதல் உறுதியுரை நிலைத்திருக்கும். நிறைவேற்ற வேண்டிய ஒத்திசைவினைச் சட்டப்படி வற்புறுத்த இயலாது.

(ஆ) அடுத்த வரையறையானது பின்னலின் (Pinnel) வழக்கில் விதியாக்கப்பட்டது.

The Rule in Pinnel's Case :

கடனுக்கான முழுத் தொகையை விடக் குறைந்த தொகையைச் செலுத்துவதை மறுபயனுகக் கொள்ளமுடியாது. அவ்வாறு ஒரு பகுதிப் பணத்தைத் தருதலானது, முழுப் பணத்திற்கான நிறைவைத் தருவதில்லை.

ஆனுல் ஒருபகுதி பணத்துடனே அல்லது அத்தகைய பகுதிப் பணமின்றியும் வேறு யாதேனும் கொடுத்து ஏற்கப்பட்டால், அத்தகைய ஏற்பு முழுமையான கடனுக்கான உள நிறைவை உண்டாக்கும்,

1600-ம் ஆண்டு நவம்பர் மாதம் 11-ம் தேதி தனக்குச் சேர வேண்டிய £8 - 10sh கடனுக்காக பின்னல் (Pinnel) என்பவர் கோலின் மீது (Cole) வழக்குத் தொடர்ந்தார்.

பின்னலின் வேண்டுகோளுக்கு இணங்கி அக்டோபர் முதல் நாளன்று £ 5 2sh 6 d-ஐ கோல் கொடுக்க, அதை முழு நிறைவுடன் பின்னல் முழுக்கடனுக்காக அதை ஏற்றுக் கொண்டார் என்றும் கோல் வாதிட்டார்.

ஆனுல் வழக்கு மன்றம் அவர் வாதத்தை ஏற்க மறுத்து "முழுக் கடனுக்கீடாக, குதிரை ஒன்றையோ, பருந்தையோ, உடையையோ, அல்லது மற்றவைகளையோ தான், உள நிறைவைத் தரலாம்.

ஏனெனில் கடனின் மதிப்பிற்கு மேலாக அத்தகைய பொருள்களின் மதிப்பை வாதி எண்ணினுல், தான் கடனுக்கீடாக முழு நிறைவுடன் அவற்றை ஏற்ருர் என்று கொள்ள இயலும்" என்று விளக்கித் தீர்ப்பளித்தனர்.

Foakes *vs*. Beer (1884) 9 A.C. 605 – வழக்கிலும் இக்கொள்கை ஏற்கப்பட்டது.

ஆனால், இந்தியாவில் இந்த 'ஒத்திசைவும் உள நிறைவும்' எனும் கொள்கை அனுமதிக்கப்படவில்லை.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 63-வது பிரிவு இதனை விவரிக்கிறது.

உறுதியுரைக்கான ஒரு பகுதியையோ, அல்லது அதை முழுவதையுமோ நிறைவேற்றுவதனால் உறுதியுரை ஏற்பாளர் காலத்தை நீட்டித்து அதனை நிறைவேற்றவும் அல்லது அதற்குப் பதிலாக உடனே ஏற்றும் உறுதியுரை செய்வாரை விடுவித்து தன் விருப்பம்போல் உளநிறைவு அடையலாம்.

நிறைவேற வேண்டிய ஒத்திசைவு இந்தியாவில் செல்லு நிலையது என்பதும், பின்னல் வழக்கின் விதி இந்நாட்டின் அனுமதிக்கப் படுவதில்லை என்பதும் இதனால் அறிய முடிகிறது.

இங்கிலாந்திலும் 1937-ல் சட்டச் சீரமைப்புக் குழுவானது பின்னல் வழக்கில் உரைக்கப்பட்ட விதியினை ஒழிக்கப் பரிந்துரை செய்தது.

ஆயினும் அஃது இன்னும் சட்ட நிறைவைப் பெறவில்லை. ஆனால் பின்னர் வந்த வழக்குகள் பலவற்றிலும் முன்னேற்றம் காண முடிகிறது.

# 8. ஒப்பந்தம் செய்யத் தகுதியற்றவர்கள்

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 11, 12-வது பிரிவுகள், ஒப் பந்தங்கள் நிறைவு பெறத் தேவையான சில துணைப் பொருள்கள் பற்றி விவரிக்கின்றன.

பிரிவு 11-ல் உரிமை வயதினராகவும், திடமான மனமுள்ள வராகவும், எவ்விதச் சட்டப்படியும் ஒப்பந்தம் செய்யத் தகுதி இழக்காதவராகவும் உள்ள நபர் ஒப்பந்தம் செய்யும் அருகதை அல்லது தகுதி (Competent) உடையவராவார் என்று கூறப்பட் டுள்ளது.

இங்கிலாந்துச் சட்டப்படி உரிமை வயது 21ஆகவும். இந்தி யச் சட்டத்தில் உரிமை வயது 18ஆகவும் உள்ளது.

நீதி மன்றக் காப்பாளர் (Person under court of wards), காப் பின் கீழ் உள்ளவர்களின் உரிமை வயது 21 ஆகும் என்று காப்பாளர் — காப்புளார் சட்டத்தில் சொல்லப்பட்டிருக் கிறது.

சட்டப்படி, சிலர் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ தங்களால் உரைக்கப்படும் உறுதியுரையினுல் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாதவராகவும், தன்னிடம் பிறர் உரைக்கும் உறுதி யுரையினை வற்புறுத்த இயலாத நிலையினராகவும் உள்ளனர்.

அவரவர் நாட்டு ஒப்பந்தச் சட்டப்படி ஒருவர் ஒப்பந்தம் செய்து கொள்ள தகுதியுடையவரா என்று அறிதல் வேண்டும்.

வணிகவியல் ஒப்பந்தங்களில், இது வெகுவாகக் கடைப்பிடிக் கப்படுவதில்லை.

எந்த நாட்டில் ஒப்பந்தம் செய்ய முற்படுகிருரோ, அந்நாட்டு ஒப்பந்தச் சட்டப்படி ஒப்பந்தக்காரர் தகுதியுடையவரா என்று ஆராயப்படல் வேண்டும்.

ஒப்பந்தம் செய்கின்ற தகுதியின்மையானது, தகுநிலை (Status) அல்லது மனப்பக்குவக் குறைவினால் தோன்றுவதாகும்.

தகுநிலையினால் தகுதியின்மை என்பது அரசியல் காரணங்களினால், தகுதிக் குறைவினால் ஏற்படுவதாகும்.

மனப்பக்குவக் குறைவினால் ஏற்படும் தகுதியின்மை, அத்தகையோரின் நலன் காக்கத் திணிக்கப்பட்ட ஒன்றாகும்.

12-வது பிரிவில் திடமான மனமுள்ளவர் (Sound Mind) அல்லது மனப்பக்குவம் பெற்றவர் என்று குறிப்பிடுவதன் மூலம் ஒப்பந்தக்காரர் தான் மேற்கொள்ளும் ஒப்பந்தத்தின் தன்மையை உணர்பவராகத் தன் நலன்மீது அத்தகைய ஒப்பந்தத்தின் பயன் பற்றி விவேகமுள்ள தீர்ப்பினை உய்த்துணரக் கூடியவராக இருத்தல் வேண்டும் என்பது தெளிவு.

மேலும் வழக்கமாக மனப்பக்குவமற்றும், ஏதோ சில நேரங்களில் நல்ல மனப்பக்குவம் கொண்டும் விளங்குகின்ற ஒருவர், அத்தகைய நல்ல மனப்பக்குவம் கொள்ளும் காலங்களில் ஒப்பந்தங்களை மேற் கொள்ளலாம்,

வழக்கமாக நல்ல மனப்பக்குவம் கொண்டும், ஏதோ சில நேரங்களில் மனப்பக்குவம் அற்றும் விளங்கும் நபர், அத்தகைய மனப்பக்குவமற்ற காலங்களில் ஒப்பந்தம் மேற் கொள்ளக் கூடாது. இவை அனைத்தையும் இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 12-வது பிரிவில் காணலாம்.

சான்று (அ) மனநோய் மருத்துவ விடுதியிலுள்ள நோயாளி, மனப்பக்குவம் பெறும் இடைவேளைகளில் ஒப்பந்தம் மேற் கொள்ளலாம்.

(ஆ) நல்ல மனநிலையில் உள்ள ஒருவன் காய்ச்சலால் தணுப்பு (சன்னி) கொண்டுள்ள காலங்களிலும், குடித்துவிட்டுள்ள நிலையிலும் தன் செயல் இழந்து ஒப்பந்தத்தின் வரையறைகளை உணர இயலாத நிலையிலும், விவேகமான தீர்வு காண இயலாத நிலையிலும் உள்ள நேரங்களில் ஒப்பந்தம் செய்ய முடியாது.

ஒப்பந்தம் செய்கின்ற தகுதியின்மை பொதுவாக இரு தலைப்புகளில் அடங்குகின்றது.

1. தனி நபரின் தகுநிலையானது கீழ்க்காணும் காரணங்கள் கொண்டு, ஒப்பந்தம் மேற்கொள்ளத் தகுதியின்மையை அடைகின்றது:

(அ) அரசியல் அல்லது உரிமையியல் தகுநிலை

சான்றாக ஒப்பந்தக்காரர், அந்நியநாட்டு ஆளுநர் (Ruler or Foreign State) தூதர் (Ambassadar) அல்லது தூதுவர் (Envoy) பகை நாட்டவர் (Alien Enemy) அல்லது தீர்ப்புக் குற்றவாளி (Convict) அல்லது நொடிப்பு நிலையர் (Bankrupt) ஆக இருக்கும் போது.

(ஆ) ஒப்பந்தக்காரரின் தொழில் நிலை
(சான்று : பாரிஸ்டர் (Barrister)

(இ) கூட்டுருவாக்க (Incorporation) நிலை

(ஈ) திருமண நிலை

II. மனப்பக்குவமின்மை காரணத்தினால் பின்வருவோர் ஒப்பந்தம் மேற்கொள்ளும் தகுதியின்மையினை அடைகின்றனர் :

(அ) இளவர்கள் (Minors)

(ஆ) பித்துநிலை அடைந்த நபர்கள் (Insane Persons)

(இ) பிறவி மந்தர்கள் (Idiots)

(ஈ) குடியர்கள் (Drunken Persons)

இனி இவைகள் பற்றிய விவரங்களைத் தனித்தனியே அறிய முற்படுவோம்.

## தகுநிலை காரணமான தகுதியின்மை

**(அ) அந்நிய நாட்டு ஆளுநரும் தூதரும்**

இங்கிலாந்துச் சட்டப்படி அந்நிய நாடுகளின், ஆளுநர்கள், அல்லது அரசர்கள் ஒப்பந்தங்கள் மேற்கொள்ளலாம்.

ஆயினும் அவர்களாகத் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள விரும்பாத நிலையில், இங்கிலாந்து வழக்கு மன்றங்கள், அத்தகையோர் மீது வழக்குத் தொடர இயலாது.

Mighell *vs*. Sultan of Johore (1894) I.Q.B. 1949. எவரும் அறியாமல் இங்கிலாந்திற்குச் சுற்றுலா வந்திருந்த அந்நிய அரசர் ஒருவர் ஓர் ஆங்கிலப் பெண்மணிக்கு, அவளைமணம் புரிவதாக உறுதியுரை செய்தார். அந்த உறுதியுரையினை நிறைவேற்ற வேண்டி, அவ்வரசர் மீது அப்பெண்மணி வழக்குத் தொடர்ந்தார். இங்கிலாந்து வழக்கு மன்றங்களில், அந்நிய அரசர்கள்தாமே தம்

மைத் தம்மிச்சையாக உட்படுத்திக் கொண்டாலன்றி, ஒப்பந்தங் களைச் சட்டம் வலியுறுத்த இயலாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

அந்நிய அரசர்கள், ஒப்பந்தங்களை நிறைவேற்ற வற்புறுத்தி மறு ஒப்பந்தக்காரர் மீது வழக்குத் தொடர உரிமை படைத்தவர் கள் என்பதனை மறத்தற்பாலற்கரியது.

Foster *vs*. Globe Venture Syndicate என்ற வழக்கில் அந்நிய நாட்டரசர் அலுவலகத்தினின்றும் அளிக்கப்பட்ட அத்தகைய அரசரின் தகுநிலைபற்றிய சான்றிதழ், முழு சாட்சியாகக் கொள் ளப்பட்டது.

இக் கொள்கையே, தூதர் (Ambassador), நியமன சான் றுடன் கூடிய வேற்று நாட்டரசனின் பிரதிநிதிகள் (Accredited Diplamatic Agents of Foreign Soveriegns) முதலானோருக்கும் பொருந்துவதாகும்.

ஆனல் Dickinson *vs*. Delsolar என்ற வழக்கில் உரிமை இயல் வழக்கினின்றும் சட்டவிலக்களிப்பு உண்டு என்றும், அத்தகைய தூதர்களின் கடனுக்காகப் பொறுப்புறுதி அளிப்பவர் கடப்பாட்டி னின்றும் தன்னை விடுவித்துக்கொள்ள இயலாது என்றும் தீர்ப் பளித்தனர்.

1708-ம் ஆண்டு தூதர் சிறப்புரிமைச் சட்டத்தின்கீழ், தூதர்கள் இத்தகைய உரிமைகளைப் பெற்றனர்.

இந்தியாவில் உரிமையியல் நடைமுறைச் சட்டத்தின் 86-வது பிரிவில் அந்நிய நாட்டு ஆளுநர்கள், தூதர்கள், தூதுவர்கள், மீதான வழக்குகளின் நடை முறைகள் பற்றிய விளக்கம் காணப் படுகிறது.

அத்தகையோருடன் ஒப்பந்தங்கள் மேற்கொள்ளத் தடை ஏதும் இல்லை எனினும், அவர்கள் மீது வழக்காட மத்திய அரசின் செயலாளர் ஒருவரால் சான்றிதழ் அளிக்கப்பெற்ற பின்னரே அந்த உரிமை பெறுவர் என்று அதில் கண்டுள்ளது.

**பகை நாட்டவர்**

பிரிட்டன் கப்பலின் சொத்துரிமை பெற இயலாது என்பதைத் தவிர, பகை நாட்டவர் பிரிட்டன் குடிமகனுக்குரிய ஒப்பந்த உரிமை உடையவராகிறார்.

ஆயினும் போர்க்காலங்களில், அன்னாரின் ஒப்பந்தம் கொள் ளும் தகுதியானது அதனைச் சட்டம் வலியுறுத்தும் தகுதி முதலியன கடுமையான கட்டு திட்டங்களுக்கு உட்படுவதாகும்.

பகை நாட்டவர் என்று சொன்னால், அன்னாரின் நாடு அல்லது அரசானது, பிரிட்டன் அரசுடன் போர் கொண்டுள்ளது என்பதாகும்.

பகையின் தகுநிலைக்கான நாட்டுரிமை உரைகல் ஆகாது என்று Porter *vs.* Freudenberg (1915) 1.K.B. 857 என்ற வழக்கில் வகுக்கப்பட்டது. அனைத்துச் சட்ட ஆதாரங்களையும் ஆய்ந்த பின்னர், இதில் முக்கிய கருத்து என்னவெனில், ஒருவர் வாழுமிடம் அல்லது அலுவல் மேற்கொண்ட இடத்தைத் தீர்மானிப்பதுதான்.

ஒரு பிரிட்டன் குடிமகனோ, அல்லது பொதுவானவரோ பகையால் ஆக்கிரமிக்கப்பட்ட அல்லது பகைவருக்குச் சொந்தமான இடத்தில் குடியிருப்புக் கொண்டாலும், அலுவல் மேற்கொண்டு இருந்தாலும் அவரின் நிலையானது, பகை நாட்டு எதிரியின் நிலையில் வைத்து எண்ணப்படும்.

ஆனால் பகையாளி ஒருவர் நடுநிலை நாடு ஒன்றில் அல்லது அகன்ற பிரிட்டனில் அரசின் அனுமதி பெற்றுக் குடியிருப்புக் கொள்வதனாலோ அல்லது தொழில் புரிகின்ற காரணத்தினாலோ பகை நாட்டு நண்பருக்குள்ள ஒப்பந்தம் கொள்ளும் உரிமைகள் பெற்று, வழக்கிடல் உரிமை பெற்றவர் ஆகிறார். எனவே மேற் சொன்னவைகளைக் கருத்தில் கொண்டு வழக்கில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

*(1)* பகை நாட்டைச் சேர்ந்த விரோதியானவர், போர்க் காலங்களில் அகன்ற பிரிட்டனில் இருக்கின்ற அல்லது தொழில் புரிகின்ற ஒருவருடன் ஒப்பந்தம் கொள்ளக் கூடாது.

*(2)* அத்தகையர் அரசியாரின் வழக்கு மன்றங்களில் எந்த விதமான வழக்கு மூலமும் போர் முடியும்வரை கொள்ள இயலாது.

*(3)* ஆனால் அத்தகையோர் மீது, போர் துவங்குமுன் உண்டான வழக்கு மூலத்திற்கான வழக்குத் தொடரலாம். அவர் அக் காலங்களில் தனக்கு வேண்டிய எதிர் வழக்குரை செய்து கொள்ளலாம். அத்தகைய வழக்குகளில் வழங்கப்படும் தீர்ப்புகளின் மீது, மேன்முறையீடு செய்து கொள்ளும் உரிமையும் அவருக்குண்டு.

*(4)* போருக்கு முன்னர் ஏற்பட்ட வழக்கு ஒன்றில் அத்தகைய பகை நாட்டைச் சார்ந்த எதிரி, வாதியாய் இருந்து

அவருக்கு எதிராகத் தீர்ப்பு வழங்கப்பட்டிருந்தால், அவருக்கு மேன்முறையீடு செய்து கொள்ளுகின்ற உரிமை இரு நாடுகளிடையே சமாதானம் ஏற்படும்வரை கிடையாது. இந்தியாவிலும் சட்டம் இக் கருத்தையே அனைத்திலும் மேற்கொண்டுள்ளது.

### குற்றவாளியும் (Felon) தீர்ப்புக் குற்றவாளியும் (Convict)

சிறைப்பட்டிருக்கும் குற்றவாளிகள், ஒப்பந்தங்களில் ஈடுபடவோ பிரிட்டன் வழக்கு மன்றங்களில் வழக்குத் தொடரவோ உரிமை இழந்தவராகின்றனர்.

சிறைவாசம் முடிந்த பின்னர் அவ்வுரிமைகளைப் பெறுவர். பிரிட்டனில் அத்தகையோர், அனுமதி பெற்று அவ்வுரிமைகளைப் பெறுவதும் உண்டு.

### நொடிப்பு நிலையர் (Bankrupts)

ஒருவரை, நீதி மன்றத்தில் நொடிப்பு நிலையர் என்று தீர்ப்பளிக்கப்பட்டபின்னர், அவரின் சொத்தினைக் கட்டுப்படுத்தும் வகையில் அவர் எந்த வகையான ஒப்பந்தங்களும் மேற்கொள்ள இயலாது. அதற்கான முழு உரிமையையும் நொடிப்பு நிலையர் சொத்தாட்சி அலுவலர்தான் பெறுகின்றார்.

ஆனால் மாநில நகர நொடிப்பு நிலைச் சட்டத்தில், நொடிப்பு நிலையர் கடன் பெறுவதையோ, அல்லது ஒப்பந்தம் செய்வதையோ வெளிப்படையாகவும் உட்கிடையாகவும் தடுக்கின்ற வழியில் தடுக்கப்படவில்லை என்பதும் நாம் அறிந்து கொள்ள வேண்டிய ஒன்றாகும்.

எனவே வழக்கு மன்றங்களில் அத்தகையோரின் மீது ஏற்படும் ஒப்பந்த வழக்குகள் தீர்ப்பிற்கு எடுத்துக் கொள்ளப்பட்டன என்பதை

Official Assignee :of Madras vs. Narayana Mudaliar I.I.R. (1952) M.A.D. 312 வழக்கினின்றும் அறிகிறோம்.

### (ஆ) தொழிலின் தகு நிலையால் அடையும் தகுதியின்மை

இங்கிலாந்தில், சேவைக்கான கட்டணத்திற்காகப் பாரிஸ்டர்கள். ஒப்பந்தம் மேற்கொள்ளக் கூடாது. காரணம் அவர்களின் சேவை, மதிப்புள்ள சமூக சேவையாகக் கருதப்படுகிறது. எனவே பாரிஸ்டர்கள் அத்தகைய ஒப்பந்தப்படி வழக்காடவோ, அவர்கள் மீது மற்றவர்கள் வழக்குத் தொடரவோ இயலாது. இந்தியாவில் இத்தகைய தகுதியின்மை எதிலும் குறிப்பிடப்படவில்லை.

(இ) கூட்டுருமம் (Corporation)

கூட்டுருமத்தைப் பற்றி ஒப்பந்தச் சட்டம் ஒன்றும் கூறவில்லை. சட்டவியலில் உருவாக்கப்பட்ட செயற்கை "நபர்" (Artificial Person) தான் கூட்டுருமம் என்பது. எனவே அது ஒப்பந்தம் செய்கின்ற தகுதியினைப் பெற்றுள்ளது. ஆயினும் அத்தகைய தகுதி வரையறைக்குட்பட்டது. அத்தகைய தகுதி புறக்கடையாகவோ (Necessary) அல்லது வெளிப்படையாகவோ (Express) காணப்படும்.

ஏற்கனவே கூறியபடி இந்திய ஒப்பந்தச் சட்டத்தில், ஒப்பந்தம் மேற்கொள்ளுவதற்கு கூட்டுருமத்திற்குள்ள தகுதியினை எடுத்துரைக்கப்படவில்லை. ஆயினும் 10, 11-வது பிரிவுகளில் ஒப்பந்தம் செய்பவரின் தகுதிகள் வரைவுரைக்கப்பட்டுள்ளதைக் கண்டுள்ளோம்.

கூட்டுருமத்திற்கு உடல்சுமந்த உயிர்ப்புத் தன்மை (Physical Existence) கிடையாது. ஆனால் அதன் சார்பாக நியமிக்கப்பட்ட முகவர்கள், தமது சொந்த பொறுப்பு நிலைகளுக்கு ஆளாகாமல் தங்களது பதவிக்காலம் வரை சட்ட நியதிக்குள்ளாக ஒப்பந்தம் செய்து கொள்ளும் தகுதிகளைப் பெறுவர்.

பங்கமைப்புச் சட்டத்தின்கீழ், பதிவு செய்வதன் மூலமாகவோ, சட்ட மன்றங்களில் சட்டம் நிறைவேற்றப்படுவதன் மூலமாகவோ, கூட்டுருமமானது; சிறப்புரிமைகளைப் பெறுகின்றது.

எனவே அத்தகைய கூட்டுருமத்தின் தகுதி, சட்டங்களினால் வரையறுக்கப்படுகின்றது.

தனக்குள்ள வழக்காடும் உரிமை, அல்லது தன்மீது மற்றவர் வழக்குத் தொடரும் உரிமை என இரண்டு பொறுப்பு நிலைகளுக்கும், கூட்டுருமம் தகுதி பெற்றுள்ளது.

எனவே உயிர்ப்புத் தன்மைக்கான சில உரிமைகள், சிறப்புரிமைகள் தவிர ஏனைய ஒப்பந்தங்களை மேற்கொள்ளலும், சொத்துக்களைச் சேர்த்தலும், கடன் ஒப்பந்தம் செய்தலும் ஆகிய அனைத்தும் கூட்டுருமத்தால் முடிகின்றது.

ஒரு கூட்டுருமம் ஆனது நிலைக்காலத் தன்மை, சிறப்புப் பெயர் முத்திரைச் சின்னம் முதலான சிறப்புக்களைக் கொண்டு இலங்குகின்றது. ஒன்றிற்கு மேற்பட்ட நபர்களைக் கொண்டு இயங்கும் கூட்டுருமத்தினை கூட்டுருமக் குழுமம் (Corporation Agregate) என்பர்.

சான்ருக நகராண்மைக் கழகம், நீர்வழங்கு கூட்டுருமக் கழகங்கள், புகையூர்தி, வணிக பங்கமைப்பு நிறுவனங்கள் முதலியவை இவ்வகையினைச் சாரும்.

ஒரே உறுப்பினரைக் கொண்டு இலங்கும் கூட்டுருமம், கூட்டுருமத் தனிமம் (Corporation sole) என்று அழைக்கப்படும்.

எடுத்துக்காட்டாக குடியரசுத் தலைவர், மாநில ஆளுநர், பல்கலைக் கழகத் துணைவேந்தர் போன்றவர்கள் இவ்வரிசையில் இடம் பெறுவர்.

தனி உறுப்பினரின் தொடர்நிலையால் இது கூட்டுருமமாக நிலைபெறுகிறது.

**கூட்டுரும ஒப்பந்த வரையறைகள்**

(1) கூட்டுருமத்திற்கு உயிர்ப்புத் தன்மை இல்லாக் காரணத்தினுல் அது திருமண ஒப்பந்தத்தை மேற்கொள்ள முடியாது.

(2) அன்ருட நிகழ்ச்சிகள், அல்லது முக்கியத்துவமில்லாத சிறு நிகழ்ச்சிகள், ஏனைய அனைத்து ஒப்பந்தங்களையும் கூட்டுரும முத்திரையின் கீழ்த்தான் மேற்கொள்ளல் வேண்டும்.

(3) நிறுவிய கொள்கைக்கு அப்பாற்பட்டு, கூட்டுருமம் மேற்கொள்ளும் ஒப்பந்தங்கள் வரம்பிகந்தவையாகி (Ultra Vires) இல்லா நிலையனவாகும். அதற்குப்பின் அவ்வொப்பந்தத்தை அனைத்து உறுப்பினர்களும் ஏற்பினும், அத்தகைய ஒப்பந்தக் குறைபாட்டைச் சரிசெய்ய இயலாது.

Ash Bury Railway Carriage Co. vs. Riche (1875) 7. H. L. 653

புகையூர்தி பங்கமைப்பு நிறுவனம் ஒன்று, புகை வண்டிகளை விற்பதற்காக உருவாக்கப்பட்டது. அத்தகைய அமைப்பு பெல்ஜியத்தில் புகைவண்டிப் பாதை அமைக்க ஒப்பந்தம் மேற்கொண்டது. இதனைப் பங்கமைப்பின் அனைத்து இயக்குநர்களும் ஏற்றிருப்பினும், பின்னர் அனைத்துப் பங்குதாரர்களும் அதற்கு ஒப்புதல் தெரிவித்திருந்தும்கூட அது அமைப்பு நிறுவிய கொள்கைக்கு அப்பாற்பட்ட ஒப்பந்தமாகையால், ஒப்பந்தம் செல்லா நிலையது என வழக்கில் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

(4) கூட்டுருமத்தில் செயல்முறை விதிகளில் வெளிப்படையாகவோ, உட்கிடையாகவோ கண்டிருந்தாலொழிய, கூட்டுருமம், கடன் வாங்கும் தகுதியினைப் பெறுவதில்லை. எனவே வணிகப் பங்கமைப்புகள், அத்தகைய சிறப்புரிமைகளைப் பெற்று வாணிபம் வளர்ச்சியடைய உறுதுணை செய்கின்றன.

(ஈ) திருமணம்

நாகரிகத்தில் முன்னேறியுள்ள இங்கிலாந்தில் 1883-ம் ஆண்டு வரை திருமணமான பெண்கள் செய்த ஒப்பந்தங்கள் இல்லாநிலை ஆக்கப்பட்டன. இயற்ருச் சட்டத்தில் (Common Law) கணவனும் மனைவியும் ஒரே நபராகவும், அந்த ஒரு நபர் கணவன்தானென்றும் கொள்ளப்பட்டு வந்தது. திருமணத்தினால் மனைவியின் சொத்துக்கள் அனைத்தும் கணவனைச் சார்ந்ததாக இருந்தது. எனவே சொத்தற்ற மனைவி, ஒப்பந்தம் செய்ய முடியாத நிலையில் இருந்தாள்.

நிலையியல் சொத்துக்களைப் பொறுப்புரிமை அமைப்பில் ஈடுபடுத்தி, திருமணமானவளின் தனிச் செலவினத்திற்கென (கணவன் தயவை எதிர்பார்க்காமல் இருக்க) வகை செய்திருப்பின், அத்தகைய சொத்துக்கள் ஒப்பந்தத்தினால் 'சட்டப்பிணைப்புக்குள்ளாகுமாறு இருந்தது. அத்தகைய ஒப்பந்தம் தனிப்பட்ட முறையில் அத்தகையவளைக் கட்டுப்படுத்தாமல், அவளின் சொத்துக்களையே கடப்பாடுடையதாக்கும். இதனால் அவளின் கடனுக்காகச், சிறைப்படுத்த இயலாது, தனிச் சொத்துக்களினின்றுமே அவை தீர்க்கப்படும்.

இத்தகைய ஒப்பந்தத் தகுதியின்மை, அவள் மண வாழ்க்கையில் உள்ளவரை மட்டுமே நீடிக்கும். வழக்கு மன்றத்தித் தீர்ப்பின்படி பிரிக்கப்பட்டாலும், விவாக ரத்து செய்யப்பட்டாலும், கணவன் இறந்து விட்டாலும் அவள் மீண்டும் ஒப்பந்தம் மேற்கொள்ளும் தகுதியினைப் பெற்றுவந்தாள்.

ஆயினும் கணவரின் முகவர் என்ற முறையில் மனைவி தன் ஒப்பந்தக் கடப்பாடுகளுக்குக் கணவரை உட்படுத்த இயலும்.

1870 முதல் 1949 வரை சிறிது சிறிதாக ஏற்படுத்தப்பட்ட சட்டங்கள், திருமணமானவளின் ஒப்பந்த, சொத்துரிமை தகுதியினை மாற்றித் தனி மகளின் தகுதியினை அடைந்துள்ளது.

தனி நபரைப் போன்று இப்பொழுது அத்தகைய திருமணமானவர் வழக்காடவும், தன்மீது மற்றவர் வழக்குத் தொடரக் கூடிய நிலையிலும் உள்ளார்.

தற்காலச் சட்டத்தின்மூலம் அத்தகையோர் எந்த விதமான தகுதியின்மையினையும் பெற்றிருக்கவில்லை. வரலாற்றுப் 'பெருமை' வாய்ந்த ஒன்ருகத்தான் அத்தகைய தகுதியின்மை தற்போது காணப்படுகிறது. இப்பொழுது திருமணமான பெண்மணியானவர், ஒப்பந்தம் மேற்கொள்ளும் முழுத்தகுதி பெற்றவராவார்.

இந்தியாவில், முற்காலத்தில்கூட, இந்தியப் பெண்மணி சீதன மாகப் பெற்றச் சொத்துக்களினால் ஒப்பந்தம் மேற்கொள்ளுகின்ற முழு உரிமையையும் பெற்றுத் திகழ்ந்தாள்.

இன்றைய நிலையில் இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் பெண்களுக்கு சம உரிமை வழங்கியுள்ளது. இங்கிலாந்தில் உள்ளது போன்றே இந்தியாவிலும் கணவரின் முகவராக பெண் மணி கருதப்பட்டு, குடும்பச் செலவினங்களுக்காக அவள் மேற் கொள்ளும் எத்தகைய ஒப்பந்தத்திற்கும் கணவரைக் கடப் பாட்டிற்கு உள்ளாக்கலாம்.

## மனப்பக்குவமின்மையால் தகுதியின்மை

### இளவர் (Infant) அல்லது உரிமை வயது வராதோர் (Minor)

சட்டப்படி உரிமை வயதினை அடையாதவர் இளவராவார். அத்தகையோர் உரிமை வயதினர் அல்லர். முதலிலேயே உரிமை வயது பற்றிக் கூறியுள்ளோம். இங்கிலாந்தில் 21 வயதும் இந்தியாவில் 18 வயதும் நிறைவெய்தியவர்கள் உரிமை வயதினராவார்.

இங்கிலாந்தில் 1874-ன் இளவர் காப்புச் சட்டப்படியும் (Intant Relief Act) அதற்குத் துணையாக நாட்டிலுள்ள ஏனைய சட்டங்களும், இயற்றுச் சட்டம், நேர்மைநெறி (Euity) முத லானவைகளும் இளவர் காப்புச் சட்டத்திற்கு முரணாக அமையாத வகையில் இளவர்கள் மேற்கொள்ளும் ஒப்பந்தங்கள் நிறைவேற் றப்படுகின்றன. இளவர் காப்புச் சட்டம், பொருள் விற்பனைச் சட்டம் முதலியன இது குறித்துச் சில வரையறைகளைச் செய் துள்ளன.

(அ) இளவரின் ஊண் உடுக்கையின் பொருட்டு, நன்மையின் பொருட்டு இளவருடன் செய்யப்படும் ஒப்பந்தங்கள் செல்லு நிலையனவாகும்.

(ஆ) கூட்டாண்மை, பங்கமைப்பு, குத்தகை போன்ற வகை களில் ஏற்படும் தொடர் உரிமைகள் (Recurring Rights) சட்டப் பிணைப்புகள் (Obligation) போன்ற இளவர் மேற்கொள்ளும் ஒப் பந்தங்கள் தவித்தகு நிலையதே (Voidable) ஒழிய இல்லா நிலையன வன்று. அத்தகைய ஒப்பந்தத்தை அன்னாரின் இளமையில் சட்டப் படி வற்புறுத்த இயலாது.

ஆனால் உரிமை வயது அடைந்த பின்னர் நியாய வரம்புக்குட் பட்ட காலத்திற்குள் அத்தகைய ஒப்பந்தத்தை அவர் தவிர்க்க வில்லை எனின், அவரை அவ்வொப்பந்தம் கட்டுப்படுத்தும்.

Edwards *vs*. Carter (1893) A.C. 360 வழக்கில் இத்தகைய தீர்ப்பு வழக்கப்பட்டது.

இளவரின் மனைவிக்காக திருமணத்தின்போது இளவரின் தந்தையால் செய்யப்பட்ட அறுதி ஆவணத்தை (Settlement) நிறைவேற்ற, சட்டப்படி, இளவரின் மனைவி வலியுறுத்தினுள். உரிமை வயது அடைந்த ஐந்தாண்டுக்குப் பின்னர், அதனை நிரா கரித்து விட்டதாக இளவர் கூறினர். நியாய வரம்புக்குட்பட்ட காலமாக அதனைக் கொள்ளாது, தீர்ப்பளிக்கப்பட்டது.

(இ) பணம் கொடுத்ததற்காக அல்லது கொடுப்பதற்காக, பொருள்கள் பட்டுவாடா செய்ததற்காக அல்லது செய்வதற்காக; காட்டிய கணக்குகளுக்காக, இளவருடன் செய்கின்ற ஒப்பந்தம் முழுமையாக இல்லா நிலையது (Void) ஆகும்.

(ஈ) இளவர் காப்புச் சட்டத்திற்கு முன்னர், விலைக்கு வாங்க, திருமணம் செய்து கொள்ள இளவர்கள் மேற்கொண்ட ஒப்பந் தங்கள் அவர்களால் ஒப்பப்படுகின்ற வரையில் செல்லத் தக்கன வன்று. அச் சட்டத்திற்குப் பின்னர் ஏற்பட்ட அத்தகைய ஒப்பந் தங்கள் இல்லா நிலையனவாகும். அவை புதிய மறுபயனுடனே அல்லது இல்லாமலோ ஏற்புறுதி செய்ய முடியாதவைகளாகும்.

தன்னுடைய கல்வியின் பொருட்டு அல்லது தான் பயிற்சி மேற்கொள்வதற்காக அல்லது தன் வாழ்க்கைச் செலவினைச் சம் பாதித்துக் கொள்வதற்காக, இளவர்கள் ஒப்பந்தங்கள் மேற் கொள்ளின் அவை அவர்களைக் கட்டுப்படுத்தும் என Doyle *vs*. White City Stadium (1935) I K.B. 110 என்ற வழக்கில் விளக்கப் பட்டது.

குத்துச் சண்டையைத் தொழிலாகக் கொண்ட இளவர் ஒருவர், பிரிட்டன் குத்துக் சண்டைக் கழகத்தினின்று உரிமம் (Licence) பெற, தான் மேற்கொள்ளும் குத்துச் சண்டைகளில் அக்கழகத்தின் விதிமுறைக்கு உட்படுவதாகச் செய்த ஒப்பந்தம், அவரைக் கட்டுப்படுத்தியது.

Clement *vs*. L. & N.W. Rly Co (1894) 2 Q.B 482

இளவர் ஒருவர் புகையூர்தி நிறுவனமொன்றில் சுமைதூக்கி யாக வேலை பார்த்தார். 1880-ம் ஆண்டு பணியாண்மையர் கடப்பாட்டுச் சட்டத்தின் (Employers Liability Act) கீழ், தான் அடையும் உரிமையினை விட்டுக் கொடுத்து நிறுவனக் காப்பீட்டு அமைப்பில் சேர உடன்பட்டார். சட்டத்தினல் பெறுகின்ற பய

னினும் அமைப்பால் பெறுகின்ற பயன் அதிகம் என்பதனுல் அவ் விதம் ஒப்புதல் அளித்தார். இளவரின் நன்மைக்கான அத்தகைய ஒப்பந்தம் அவரைக் கட்டுப்படுத்தும் என்று தீர்ப்பு அளிக்கப் பட்டது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 11-வது பிரிவில் ஒருவர் தன்னுட்டுச் சட்டப்படி உரிமை வயது எய்தப் பெற்றவராயும், மனப் பக்குவம் உடையவராயும் இருந்தால் ஒப்பந்தம் செய்கின்ற தகுதியினை உடையவராவார் என்று கூறப்பட்டுள்ளது. அத்தகையோர் அந் நாட்டு எச் சட்டபடிக்கும் தகுதி இழந்து இருந்தாலல்லாமல், ஒப்பந்தத் தகுதி பெறுகிருர்.

12-வது பிரிவில் திடமுள்ள மனம் என்பதற்கான வரைவுரையில் ஒப்பந்தக்காரர் ஒப்பந்தத்தின் கூறுகளை அறிந்து விவேகமுள்ள முடிவுக்கு வரக்கூடியவராக இருத்தல் வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தில், இளவர், அல்லது தகுதி இழந்த நபர்கள் மேற்கொள்ளுகின்ற ஒப்பந்தங்கள் இல்லா நிலையனவா அல்லது தவிர்தகு நிலையனவா என்பதை தெளிவு படுத்தப்படவில்லை,

Mohiri Bibee *vs*. Dhurmodas Ghose 30 Cal 532

இவ்வழக்கின் தீர்ப்பிற்கு முன்னர், இந்தியாவில் உள்ள உயர்நீதி மன்றங்கள், இளவர் மேற்கொண்ட ஒப்பந்தங்கள் பற்றி ஏகமனதான முடிவு எதையும் மேற்கொள்ளவில்லை. அந்த வழக்கிலோ இளவர் மேற்கொள்ளும் ஒப்பந்தங்கள் அனைத்தும் இல்லா நிலையன என்று தீர்மானிக்கப்பட்டது.

தான் முழுவயது அடைந்ததாகச் சொல்லி இளவர் ஒருவர் ரூபாய் 20,000/-க்கு அடைமானம் ஒன்றினை நிறைவேற்றினுர்.

காப்பாளரிடமிருந்து அவர் இளவர் என்ற அறிவிப்பு கிடைத்த பின்னரும், பணம் கொடுத்தவர் ரூபாய் 8000/- இளவருக்குத் தந்தார்.

பின்னர் இளவர் அந்த அடைமானத்தைத் தள்ளிவிடத் தொடர்ந்த வழக்கில், அவர் தான் இளவர் என்று வாதிடுவதினின்றும் முரண்தடை (Estoppel) கொண்டவர் அல்ல என்றும், பணம் தந்தவர், தான் தந்த பணத்தையும் அவரிடமிருந்து திரும்பப்பெற முடியாது என்றும், அத்தகைய ஒப்பந்தம் அடிமுதலே (Abinitio) இல்லா நிலையது என்றும் தீர்ப்பாகியது.

மேன்முறையீட்டில், இளவர் மோசடி குற்றம் இழைத்திருப்பின் வழக்கு மன்றமானது, அவர் வாங்கிய பணத்தைத் திருப்பித் தர உத்தர விடலாம் என்றும், மோசடி குற்றம் இல்லையெனில் பெற்ற பணம் செலவழியாதிருப்பின் திருப்பித்தர வேண்டிய கடப்பாட்டிற்குள்ளாவார் என்றும், ஆனால் பணத்தைக் செல விட்டிருந்தால், பணம் தந்தவருக்கு எந்த விதமானத் தீர் வழியும் (Remedy) கிடையாது என்றும் தீர்ப்பாகியது,

Vaikunta Rama *vs*. Athimoolam 38 MAD 1071 வழக்கில் மோசடிக் குற்றம் இல்லாத நிலையில் திருப்பித்தர வேண்டியதில்லை என்று தீர்ப்பாகியது. தன் உரிமை வயது 21 வரை நீட்சி பெற்றதை அறியாத நிலையில் இளவர் தான் பெற்ற பணத்தைச் செலவழித்திருப்பின் திருப்பித் தரவேண்டியதில்லை என்றும், இளமை நீடிப்பு அறிந்து மோசடியாகப் பெற்றிருந்தால் பணம் அல்லது அவருக்குக் காப்பு (Relief) கிடைப்பதற்கு முன்னர் அடைந்த நன்மை எதுவாயினும் அவர் அதைத் திருப்பிச் செலுத்தும் கடப்பாடு உடையவராகின்றார் என்றும் தீர்ப்புரைக்கப்பட்டது.

மோசடி வழியோ அன்றி அவ்வழியில்லாமலோ பெற்றனவாக இளவரிடம் அரசுப் பிணையங்கள் (Government Securities) இருப்பின், எப்பொழுதும் பெற்றுக் கொள்ளுகின்ற உரிமை அடுத்தவருக்குண்டு என்றும் அதுபோக மிகுதி உள்ள கடன் பணத்திற்குத் தொகையை இளவர் செலவழிக்காமல் வைத்திருந்தால் அதைத் திரும்பப் பெறலாம் என்றும் தீர்ப்புக் கூறப்பட்டது.

Jagarnath Singh *vs*. Lalta Prasad *31*. All *21* வழக்கிலும் இக் இக்கொள்கை ஏற்கப்பட்டது. ஆனால் அலகாபாத் உயர்நீதி மன்றம். Ajudhia Prasad *vs*. Chandanlal I.L.R. 1937 All 860 (F B) வழக்கில் அதற்கு எதிரிடையான கருத்தை மேற்கொண்டது. எனவே இந்தியாவில் இளவர் மேற்கொண்ட ஒப்பந்தம் முழுமையாக இல்லாநிலையது என்பதும் அதனை அவரே பின்னர் ஏற்புறுதி செய்து சட்டநிலையாக்கவும் அவர் தகுதியற்றவர் என்பது பொதுவிதியாகக் கொள்ளப்படுகிறது.

Arumugam *vs*. Duraisinga 37 Mad 38 Gobindram *vs*. Piranditta (1935) 16 Lah 456 (F.B.) போன்ற வழக்குகளினின்றும் இதனை அறியலாம்

இளவர் பொருட்டு அவர் காப்பாளர் (Guardian) அல்லது அவரது நிலச்சொத்தின் மேலாளர் (Estate Manager) மேற்

கொள்ளுகின்ற ஒப்பந்தமானது இந்துச் சட்டப்படி அத்தகைய ஒப்பந்தத்தினை நிறைவேற்ற இளவரைச் சட்டப்படி சிலவற்றில் வற்புறுத்த முடியும், (i) இளவரைக் கட்டுப்படுத்தக் கூடிய தகுதியுடைய ஒப்பந்தங்களைக் காப்பாளர் மேற்கொண்டாலும் இளவரின் நன்மை பொருட்டு மேற்கொண்டாலும் அத்தகைய ஒப்பந்தங்கள் செல்லு நிலையன என

Subramaniam *vs.* Subba Rao, A. I. R, 1948 (P. C.) 95 வழக்கில் முடிவாகியது.

Mir Sarwarajan *vs.* Fakhruddin Mahomed 39 CAL. 232 (PC) —வழக்கில் நிலையியல் சொத்துக்களை ஒப்பந்தம் மூலமாக வாங்கி, இளவரைக் காப்பாளர் கட்டுப்படுத்த இயலாது என்றும் பரஸ் பரக் கோட்பாட்டினுல் இளவரும் அத்தகைய ஒப்பந்தத்தினை "ஏற்றது ஆற்றுக" அல்லது குறித்துரைத்தவாறே புரிந்திடுக (Specific Performance) என்று சட்டப்படி வற்புறுத்த முடியாது என்றும் தீர்ப்பாகியது.

Suryaprakasam *vs.* Gangaraju (1955) An. W. R. 813 வழக்கில் ஆந்திர உயர்நீதி மன்றம் முழு ஆயத்தில் (Full Bench) மேற்படி வழக்கின் முடிவு, இனியும் சரியானதாகக் கொள்வதற் கில்லை என்பதனை Subramanium *vs.* Subba Rao வழக்கின் முடிவி னின்றும் தெளியலாம் என்கின்ற கருத்து மேற்கொள்ளப்பட்டது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 68-வது பிரிவு, இளவரின் சொத்து, கடப்பாட்டுக்குள்ளாகும் சில நிலைகளை விவரிக்கின்றது.

ஒப்பந்தத் தகுதியில்லா நபர் அல்லது சட்டப்படி அத்தகைய வர் காப்பாற்ற வேண்டியவர்களின் வாழ்க்கையின் இன்றியமை யாத் தேவையின் பொருட்டு, சேகரித்துக் கொடுக்கப்பட்ட பொருள்களுக்காக அத்தகைய தகுதியின்மை நபரின் சொத்துக் களின் மீது வழக்குரிமை பெறுதல் இயலும் என அப்பிரிவு கூறு கிறது.

எனவே அப்பிரிவினுல், வணிகர்கள், தாங்கள் இளவர் களின் வாழ்க்கை இன்றியமையாத் தேவைகட்காக சேகரித்துக் கொடுத்த பொருள்களுக்குரிய பணத்தைப் பெற முடிகிறது.

வணிகர்கள் விற்கின்ற பொருள்களுக்குரிய பணத்தைத் திரும்பப் பெறுவதற்கானச் சட்ட வழியினைச் சட்ட மன்றம் செய்த தன் மூலம் இல்லாநிலை ஒப்பந்தத்தைச் செல்லு நிலையாக்கவில்லை. ஆனுல் இளவரது சொத்தினை அத்தகைய ஒப்பந்தத்திற்குக் கடப்

பாடுடையதாக ஆக்கியுள்ளனர் என்பதே பொருந்தும். இளவர் பொருள் ஒன்றினைக் கடனாக வாங்கி அதற்கெனக் கடனுறுதிச் சீட்டினைத் தரின், அதன்மீது வழக்குத் தொடர வாய்ப்பில்லை. ஆயினும் அவருக்குத் தந்த பொருளினை இளவர் அடைந்த மறுபயனைக் காட்டி, ஒப்பந்தப் போல்வு (Quasi Contract) எனக் கொண்டு தீர்ப்பாணை (Degree) வழங்கப்பெற நீதி மன்றத்தினை நாடலாம்.

68-வது பிரிவில் இளவரின் வாழ்க்கைக்கு இன்றியமையாப் பொருள்களைத் தந்தமைக்காக அவ்வாறு தந்தவர் வழக்குரிமை பெற இயலும் என்பதில் சிறிது மாற்றம் கொண்டு பார்த்தால் இளவரின் நன்மைக்காக ஏற்பட்ட ஒப்பந்தங்களும் ஐயத்திற்கிடமின்றி இளவரின் சொத்தினைச் சட்டப் பிணைப்புக்குள்ளாக்கும்.

இன்றியமையாப் பொருள்களுக்கான வரைவுரையானது, 1893-ம் ஆண்டின் பொருள்கள் விற்பனைச் சட்டத்தின் (இங்கிலாந்து சட்டம்) 2-வது பிரிவில் காணப்படுகிறது.

பொருள்கள் விற்கப்பட்டு தரப்பட்ட காலத்தில் இளவரின் வாழ்க்கைக்குத் தேவையானதும், உள்ளபடியான தேவை அளவினதுமான பொருள்கள் இன்றியமையாப் பொருள்கள் எனக் கொள்ளப்பட்டன.

ஆகலான் இன்றியமையாப் பொருள்கள் எனத் தீர்மானிக்கப் படும் முன்னர் அவை பயனுள்ளவையா, இளவரின் தகுநிலை வாழ்நிலைக்குத் தேவையானவையா, ஒப்பந்தக் காலத்தில் அன்னருக்கு இன்றியமையாத்தனமாக உள்ளனவா என்பதனையும் கவனித்தல் வேண்டும்.

ஊன், உடை, பானமே அன்றி இளவரின் தகுநிலைக்குத் தகுந்த பொருள்களும் இன்றியமையாப் பொருள்களாகும், ஆல்டர்சன் என்பவர் இது குறித்துக் கூறியவற்றை இங்கு நினைவு கூர்வது நலம் பயக்கும்.

இன்றியமையாத் தேவையான பொருள்கள் என்பன அவையின்றி அந்த நபரால் நியாயமாக வாழ இயலாது என்றாகும் நிலையிலுள்ள பொருள்களாகும். முதன்மையாக உணவு, உடை, இருக்கை போன்றவை பட்டியலில் இடம் பெறும். இவை பற்றிய ஐயம் யாருக்கும் எழத் தேவையே யில்லை.

மனப்பக்குவம் பெறுவது உடலுரம் பெறுவதே போன்று முக்கியமான ஒன்று என்பதனால் கல்வி, வணிகம் புத்திகூர்மை,

நீதி, மதம்பற்றிய உண்மைகள் போன்றவைகளும் இன்றியமையா தனவே மனிதச் சமுதாயத்திடையே வளர்வதனால் அடுத்தவரின் உதவி கவனம் போன்றவைகளும் அவனது நல்வாழ்விற்கு அவசிய மாகின்றன.

எனவே இன்றியமையாதது என்பது பற்றி ஒருவர் மேற் கொள்ளும் ஒப்பந்தம், நபரின் தகுநிலை, சூழ்நிலை, முதலானவை களைக் கணக்கில் கொண்டுதான் முடிவிற்கு வரவேண்டி உள்ளது.

Ryder *vs.* Wombwell (1868) L. R. 4 Ex 32

எதிர்வாதியானவர் ஆண்டொன்றுக்கு £ 500 வருமான முடைய ஓர் இளவர், வாதியிடமிருந்து அவர் முத்து, வைர ஆப ரணங்கள் மற்றும் பழமையான வெள்ளிப் பொருள் ஒன்றினையும் வாங்கி இருந்தார்.

இந்த வழக்கில் இளவரானவர் இறந்த சீமானுடைய செல்வ மகனாய் இருப்பினும், உயர்ந்த சமுதாயத்தினரிடையே வாழ்ந் திருப்பினும் இத்தகைய செலவினங்கள் இன்றியமையாதன என்று கருதுவதற்கில்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

Nash *vs.* Inman (1908) 2. K.B.I. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழக மாணவர் ஒருவருக்கு 11 மேலங்கிகள் தைத்துக் கொடுத்த மைக்கு வழக்குத் தொடரப்பட்டது.

அவருடைய வாழ்க்கைத் தரத்திற்குப் போதுமான ஆடை களுக்கு மேலாக இவைகள் இருந்தமையால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

Peters *vs.* Fleming (1840), 6 M. & W. 42 வழக்கில் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகச் செல்வநிலையிலுள்ள மாணவர் ஒருவருக்குப் பொன் கடிகாரமும், கழுத்துச் சங்கிலியும் இன்றியமையாதன வாகக் கொள்ளப்பட்டன.

Roberts *vs.* Gray (1913) 1.K.B. 520

மேசைக்கோற் பந்தாட்ட (Billiards) விளையாட்டுக்காரரான வாதியுடன் சேர்ந்து, தொழில் முறை மேசைக்கோற் பந்தாட்ட விளையாட்டுக்காரராக உலகச் சுற்றுப் பயணம் மேற்கொள்ள எதிர் வாதி உடன்பட்டார். இதனால் வாதி, செலவினங்கள் சில மேற் கொண்டார். ஆனால் சுற்றுப் பயணத்திற்கு முன்பாக எதிர்வாதி ஒப்பந்தத்தை நிராகரித்து விட்டார். இளவர், இழப்பீட்டிற்குப் பொறுப்பாவார் என வழக்கில் தீர்ப்பாயிற்று.

இளவர் மேற்கொள்ளுகின்ற ஒப்பந்தங்கள் இல்லா நிலையன என்பதனுல், விற்பனை, அடைமானம், கடனுறுதிச் சீட்டு போன்ற ஒப்பந்தங்களில் இளவர் தன்னுடைய உரிமையினைச் சட்டப்படி வலியுறுத்த இயலாது என்று எண்ணுதல் கூடாது.

Ragavachari *vs.* Srinivasa 40 MAD 308 (F.B.) வழக்கில், இளவரின் சார்பில் கொள்ளப்பட்ட அடைமானம் செல்லு நிலையது என்றும் சட்டப்படி வலியுறுத்தப்படக் கூடியது என்றும் தீர்ப்புக் கூறப்பட்டது.

நிகழ்ந்த ஒப்பந்தம் ஒன்றினை இளவர் நிராகரிக்கும் உரிமை உடையவரா என்பதுபற்றி Valentini *vs.* Canali (1889) 24 Q. B. D. 166 வழக்கில் விளக்கப்பட்டது.

இருதரப்பினரையும் ஒப்பந்தக் காலத்திற்கு முன்னர் உள்ள நிலைக்குக் கொணர முடிந்தால், இளவருக்குப் பணத்தைத் திருப் பித்தர வழக்கு மன்றம் வலியுறுத்தும் என்றும், அந்நிலைக்குக் கொணர இயலாவிடின் ஒன்றும் செய்ய இயலாது என்றும் கூறப் பட்டுள்ளது.

சான்ருக மோட்டார் சைக்கிள் ஒன்றினை இளவர் ரூபாய் 1000/-க்கு விலைபேசி உடனே ரூபாய் 500/-கொடுத்து எஞ்சியவற்றிற்குக் கடனுறுதிச் சீட்டு எழுதித் தந்து ஒப்பந்தம் மேற்கொள்ளுகிருர்.

மோட்டார் சைக்கிள் நீண்ட காலம் பயன்படுத்திய பின்னர் ஒப்பந்தத்தை நிராகரிந்து இளவர் பணத்தைத் திருப்பித் தரும் படிக் கேட்பின், வழக்கு மன்றம் அதனைத் தள்ளுபடி செய்யும்.

கடனுறுதிச் சீட்டுப் பொறுப்பினின்று விலக்களிக்க, வழக்கு மன்றத்தால் இயலும்.

ஆனல் இளவர் மோட்டார் சைக்கிள் பெற்றவுடனே ஒப்பந் தத்தை நிராகரித்து வழக்கு தொடர்ந்திருப்பின், கடனுறுதிச் சீட்டினை இல்லா நிலையதாக்கி, பணத்தைத் திரும்பப்பெற வழக்கு மன்றம் ஆணையிட முடியும்.

இளவர்களும் முரண்தடையும் (Infants and Estoppel) இந்திய சான்றுச் சட்டத்தின் (Indian Evidence Act) 115-வது பிரிவில் முரண்தடை பற்றிய சட்டம் விவரிக்கப்பட்டுள்ளது.

"ஒருவர் மற்றவரைத் தம் கூற்றினுலோ, செயலாலோ, செய் யாமையாலோ, ஒன்றை உண்மை என்று வேண்டுமென்றே நம்பும்

படிச் செய்து அல்லது நம்புவதற்கு இடங்கொடுத்து, அந் நம்பிக்கையின் பேரில் மற்றவரைச் செயல்படச் செய்கின்றார் என்று கொண்டால், அவ்வாறு நம்பி நடந்தவர் அல்லது அவரது பிரதிநிதி, இவர்களிடையே ஏற்படுகின்ற வழக்கில் அல்லது அவரது பிரதிநிதி நம்பவைத்த பொருளை உண்மை அன்றென மறுக்கலாகாது.''

Mohori Bibi vs. Dharmadass Ghose வழக்கில் இளவர் தன் வயதை மோசடியாகக் கூட்டிச் சொன்ன காரணத்தினால்தான் இளமை நிலையினை எடுத்துக் கூறுவதினின்றும் முரண்தடை செய்யப்பட்டார் எனக் கொள்ளப்பட்டதை அறிவோம்.

ஏற்கனவே மறைக்கப்படும் ஒன்றன் உண்மையை இரு தரப்பினரும் அறிந்திருப்பின் முரண்தடைக் கொள்கையைப் ஏற்க இயலாது. எனவே தவறான தகவல் அறிவிக்கப்படும்போது, மற்றவர் அந்த அறிவிப்பு தவறு என்று அறிந்திருந்தும் ஏற்றால், இளவர் என்ற சிறப்புரிமை மறுக்கப்படுகின்ற மோசடியாக இதனைக் கொள்வதற்கில்லை என அந்த வழக்கில் தீர்ப்புரைக்கப் பட்டது.

இங்கிலாந்திலும் இந்தியாவிலும் உளப்பூர்வமாகவும் தனியான கருணையுடனும் இளவர் உரிமைகள் பாதுகாக்கப்பட்டன.

ஏமாற்று வணிகர்கள் இளவர்களினின்றும் தங்கள் வயதை எழுத்து மூலம் கூட்டி அறிவிக்கச் செய்து முரண்தடைக் கொள்கையைப் பயன்படுத்தி ஒப்பந்தத்தை நிறைவேற்ற முற்படுவர் என்பதனால் அந்தப் பொதுவிதி, வழக்கு மன்றங்களில் பயன்படுத்தப்படவில்லை.

Sadia Alikhan vs. Jaikishore. A.I.R. (1928) P.C. 152

இங்கிலாந்தின் உச்சநீதி மன்றத்துக்கு வந்த வழக்கொன்றில், வயதைப் பற்றிய தவறான தகவல் தந்திருப்பினும் இளமையைக் கூறி வாதிடுவதினின்றும் முரண்தடை செய்யப்படுவதில்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

Leslie (R) Ltd vs. Sheill

எதிர்வாதிக்கு இருமுறையாக £ 400-ஐ (£ 200, £ 200) வாதியினுடைய நிறுமம் (Firm) கடன் கொடுத்து கடன் பெற்ற போது, எதிர்வாதி இளவராயிருந்தும் உரிமை வயது பெற்றவராக வாதியினுடைய நிறுமத்திற்குத் தவறான தகவல் தந்து, கடன்கள் பெற்று முழுமையும் செலவழித்து விட்டார். வழக்கின் மெய்ம்மைகளை கணக்கில் கொண்டு ஒப்பந்தம் இல்லாநிலையது என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

இத்தீர்ப்பில் மேலும் மோசடியால் இளவர் பெற்ற பொருளை அன்னார் செலவழிக்காமல் வைத்திருந்து, அதனை அடையாளம் காண முடியுமானால் அதனைத் திருப்பித்தரச் செய்திருக்கமுடியும் என்றும் கூறப்பட்டது.

**இளவரும் மீட்டடைவிப்பும் (Infants and Restitution)**

நேர்மை நெறியின்படி, இளவர் தன் மோசடியால் பெற்ற பொருளை வாங்கிய நபர், வழக்குத் தொடருவாரானால் திருப்பித் தந்துவிட வேண்டும் என்பதனை Lesile (R) Ltd *vs*. Sheill வழக்கில் கண்டோம். "மற்றவரை ஏமாற்ற இளவருக்கு எந்தவிதமான சிறப்புரிமையும் கிடையாது" எனக் கற்றறிந்த நீதிபதி யொருவர் வழக்கொன்றில் கூறியுள்ளார். மோசடியால், ஏமாற்றுதலினால் பெறுகின்ற பொருளைத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்றே சட்டமும் வழிவகை செய்துள்ளது. Stocks *vs*. Wilson (1932) 2 K.B. 235 வழக்கில் எதிர்வாதி தனக்கு வயது நிறைவு பெற்றதாகத் தவறான தகவல் தந்து £.300-க்கு உறுதியுரை அளித்து வாதியிடமிருந்து மரச்சாமான்களும் வேறுசில பொருள்களும் பெற்றார். அவை வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் அல்ல. பின்னர் அவற்றில் சிலவற்றை £30-க்கு விற்றார். மீண்டும் மிகுதிப் பொருள்களைத் தான் பெற்ற £ 100-க்கு மூன்றாம் நபருக்கு விற்று விட்டார். வாதி வழக்கிட்டார் இல்லா நிலையதான ஒப்பந்தத்தைச் செல்லுநிலையாக்க இயலாது ஆயினும், விற்பனை மூலம் தான் விற்ற £130-க்கு இளவர் கணக்குத் தருதல் அவசியம் என்று தீர்ப்பு வழங்கப் பட்டது. Leslie *vs*. Sheill வழக்கில், சம்னர்பிரபு பெற்ற பணம் திருப்பப்படுகின்ற நிலையில் மீட்டடைவிப்பு முடிவடைகிறது என்று கூறியது நினைவு கொள்ளத்தக்கது.

இவ்விருவழக்குகளின் முடிவினின்றும், விற்ற பொருளின் அடையாளம் தெரியாத நிலையிலும், அழிக்கப்பட்ட நிலையிலும் பொருளின் மதிப்பினுக்குத் தீர்ப்பு ஆணை வழங்க வழக்கு மன்றங்கள் மறுத்துள்ளன என்பது தெளிவாகிறது. Miles-ம், Brierley-ம், மூன்றும் நபர்களைப் பொறுத்து மீட்டடைவிப்பு கொள்கை பற்றி விளக்கியுள்ளனர். இளவர் என்றறிந்த நிலையிலும் வயது பற்றி இளவரால் ஏமாற்றப்பட்ட நிலையிலும் மூன்றாம் நபர் அத்தகைய இளவருடன் மேற்கொள்ளும் ஒப்பந்தங்களின் இளவரின் நிலையையே ஒத்துள்ளார் என்றும், எனவே இளவரைப் போன்ற அவரும் பொருளின் ஆதி உரிமையாளருக்குப் பொருளைத் திருப்பித்தருதல் வேண்டும். என விளக்கியுள்ளனர். மேலும் வயதடைந்த இளவருடன் மேற்கொள்ளும் ஒப்பந்தங்களில் மீட்டடைவிப்பு உரிமையைப் பொருளின் உரிமையாளர்கள் பெறுவதில்லை.

**உரிமைத் தீங்கில் இளவரது கடப்பாடு (Infants, Liability For Torts)**

ஒப்பந்த முறிவு என்ற நிலையன்றி ஒருவரது உரிமைக்குப் பிறர் தீங்கிழைப்பின், தீர்வழியாக அறுதியிடப் படாத இழைப் பீட்டைத் தீங்கிழைக்கப்பட்டவர் பெறலாம். அத்தகைய உரிமைத் தீங்கினை ஒப்பந்தம் நிறைவேற்றுதலில் ஏற்படுகின்ற முறைப்பிழை (Misfeasance) எனக் கருதப்பட்டு, ஒப்பந்தத்தினின்றும் பிரிக் கப்பட்டு தனித்தனியாகத் தீர்க்கப்படுகிறது.

Jenning *vs*. Rundall (1799) 8. T.R. 335 வழக்கில் வாட கைக்குப் பெற்ற குதிரையை முரட்டுத்தனமாகச் சவாரி செய்து காயமுண்டாக்கிய இளவரின் மீது ஒப்பந்தத்தினின்றும் அப்பாற் பட்ட முறையில்தான், வழக்குத் தொடர இயலும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. ஆயினும் இளவர் இத்தகைய வழக்கு களில் உரிமைத் தீங்கு கடப்பாட்டினின்றும் தப்பிக்கவோ, தனி விலக்குரிமை (immunity) கோரவோ இயலாது,

Burnard *vs*. Haggis. (1863) 32. L.J C.P. 189–வழக்கில் குதிரை ஒன்றினைத் தாண்டுதலுக்குப் பயன்படுத்தக் கூடாது என்ற கட்டுவரம்புடன் இளவர் ஒருவர் வாடகைக்கு எடுத்திருந் தார். இளவரிடமிருந்து அதனைப் பெற்ற அவர் நண்பர் அதனைத் தாண்டுதலுக்குப் பயன்படுத்தி அதைக் கொன்று விட்டார். இவ்வழக்கில் இளவர் கடப்பாட்டிற்கு உள்ளானர்.

Ballet *vs*. Mingay (1943) 1. K.B, 281 இளவர் தான் வாட கைக்குப் பெற்ற ஒலிபெருக்கியினை வாதியின் சம்மதம் பெறுமல் தன் நண்பர் ஒருவருக்குத் தந்திருந்தார். வழக்கில் இளவர் கடப்பாட்டிற் குள்ளானர்.

**பித்தர், பிறவிமந்தர், குடியர் (Lunatics; Idiots and Drunken Persons)**

ஒப்பந்தச் சட்டத்தின் 12-வது பிரிவில் "பக்குவமற்ற மனம்" பற்றிய வரைவுரையில் விளக்கம் கண்டுள்ளது. பித்தர், பித்தம் தெளிந்த இடைவெளிகளில் தவிர ஏனைய காலங்களில் ஒப்பந்தம் மேற்கொள்ள இயலாது. இத்தகையோரை " நேர் புத்தி இலா நிலை"யில் (Non Compos Mentis) உள்ளவர் என்பர். இவர்கள் தகுதி பிரித்து அறியக்கூடிய சக்தியினை, நோயினல், தாங்க முடி யாத துயரினல் இன்னபிற காரணங்களினல் இழந்து விட்டவர் களாக உள்ளவராவர்.

இளமையிலிருந்தே உய்த்துணரும் சக்தியினையிழந்த இயற்கை முட்டாளினைப் பிறவிமந்தர் என்பர். தன் வயது, தன் தந்தை

யின் பெயர், இன்னபிற பொதுவானவை பற்றித் தங்குதடையின்றிக் கூறக்கூடிய ஒருவர் பிறவி மந்தராக இருக்க முடியாது. அத்தகையவர் மிக இன்றியமையாத தேவைக்காக மேற்கொண்ட ஒப்பந்தங்களைத் தவிர பிறவற்றில் அவர்களைக் கட்டுப்பாட்டிற்கு உள்ளாக்க இயலாது. சாதாரண குடியர்கள் ஒப்பந்தத்தினை முறிக்க, குடியினை ஆதாரமாகக் கொள்ள இயலாது. இத்தகையோர் தங்களுடைய நிலையறியாத நிலையில், உய்த்துணரக் கூடிய நிலையில் அறவே இல்லாதபோதுதான் ஒப்பந்தம் மேற்கொள்ளப் பட்டது என்று மெய்ப்பிக்கப்பட்டால் ஒழிய, ஒப்பந்த முறிவு ஏற்படாது என்று தீர்ப்புகள் வழங்கப்பட்டன.

இங்கிலாந்துச் சட்டத்தில் சிறிது வேறுபாடு காணப்படுகிறது, அத்தகையோர் மேற்கொள்ளும் ஒப்பந்தங்கள் தவிர்தகு நிலையது (voidable). அத்தகைய ஒப்பந்தத்தினைத் தவிர்க்க எண்ணுபவர் தன்னுடைய தகுதியின்மையினை மெய்பிப்பதுடன் மற்றவர் தன்னுடைய உண்மை நிலையினை அறிந்தவராக இருந்தார் என்பதனையும் மெய்ப்பிக்க வேண்டும்.

Imperial Loan Company *vs.* Stone (1892) 1. Q.B. 599

பித்தநிலையில் இருந்த நபர் கையெழுத்திட்ட கடனுறுதிச் சீட்டின்மீது வழக்குத் தொடரப்பட்டது. இவ்வழக்கில் சான்றுயம் (Jury) எதிர்வாதியின் பித்த நிலையை ஒப்புக் கொள்வதானலும், வாதிக்கு அத்தகைய எதிர்வாதியின் நிலை தெரியாது என்று கொண்டனர். வழக்கு மன்றம் தீர்ப்பாணை (Decree) வழங்கிற்று.

# 9. இசைவில் குறைபாடு-தவறு

அறியாமையின் காரணமாகவோ, தவறான நம்பிக்கையின் காரணமாகவோ, ஒரு பொருள் உள்ளதை குறித்துத் தவறாகக் கொள்ளுதல் "தவறு" அல்லது தவற்றுக்கோள் எனப்படும்.

ஒப்பந்தக்காரர்கள் ஒன்றிய மனம் கொண்டவர்களாக மட்டும் இருந்தால் போதாது. அவர்கள் ஒப்பந்தத்திற்குத் தருகின்ற இசைவு தன்னிச்சையானதாகவும் உண்மையானதாகவும் இருத்தல் வேண்டும். ஒப்பந்தக்காரர்களில் ஒருவர் தவற்றினாலோ, (Mistake) திரித்துக் காட்டலினாலோ, (Misrepresentation) உடற் கட்டாயத்தினாலோ (Duress) அல்லது வலுக்கட்டாயத்தினாலோ (Coercion) தகாநிலை வற்புறுத்தலினாலோ (Undue Influence) ஒப்பந்தத்திற்குத் தவறாக இசைந்திருந்தால், அத்தகைய ஒப்பந்தம் சட்டப்படி வலியுறுத்தப்படுவதற்கு உள்ளாகாது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 10-வது பிரிவில் "ஒப்பந்தக்காரர்களின் தன்னிச்சையான இசைவினால் மேற்கொள்ளும் உடன்பாடுகள் ஒப்பந்தங்களாகும்" எனக் காணப்படுகிறது.

13-வது பிரிவில் "ஒன்றைப்பற்றி, ஒன்றிய உணர்வுடன் இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்ட நபர்கள் உடன்படுகின்ற நிலையில் இசைகின்றனர்" என்று கூறப்பட்டுள்ளது.

14-வது பிரிவில் தன்னிச்சையான இசைவிற்கு (Free Consent) விளக்கம் தரப்பட்டுள்ளது.

1. வலுக்கட்டாயம் (Coercion)
2. தகாநிலை வற்புறுத்தல் (Undue Influence)
3. மோசடி (Fraud)
4. திரித்துக் காட்டல் (Misrepresentation)
5. தவற்றுக்கோள் (Mistake)

மேற்கூறியவைகளின் காரணங்களினுல் ஏற்படாத இசைவு தன்னிச்சையானது (Free) எனக் கருதப்படும். மேற் கூறியவை களின் காரணங்களினுல் இசைவு கிடைத்திருப்பின் இசைவு உண்டாக்கப்பட்டதாகக் கொள்ளப்படும். எனவே, இந்திய ஒப்பந்தச் சட்டமானது, ஓர் ஒப்பந்தத்தில் மேற்காட்டிய செல்லா நிலை ஆக்கக்கூடிய கூறுகள் காணின் அது இசைவில் குறைபாடு டையது (Flaw in Consent) என்பதைத் தெளிவாக்கியுள்ளது.

இசைவில் குறைபாட்டிற்கான காரணங்கள் பல, ஒப்பந் தச் சட்டத்தில் காணப்படுகின்றன.

1. தவறு அல்லது தவற்றுக்கோள (Mistake)

தவறில் பொருண்மைத் தவறு (Mistake of Fact) சட்டத் தவறு (Mistake cf Law) என இரண்டுவகை உண்டு,

ஒரு பொருண்மை நிலை பற்றியோ, சட்டமும் பொருண்மை யும் கலந்த நிலையில் எழும் உரிமை நிலைப்பற்றியோ தவருகக் கொள்ளுதல் பொருண்மைத் தவருகும். (அ) ஒப்பந்தப் பொருள் பற்றியதாகத் தவறு தோன்றலாம். அதாவது பொருளின் நிலை, தன்மை, அளவு ஆகியவை பற்றி ஏற்படுகின்ற தவருகும்.

(ஆ) ஒப்பந்தத்தின் தன்மையைப் பற்றிய தவருக இருக்க லாம்.

(இ) ஒப்பந்தம் மேற்கொள்ளும் நபர் பற்றியும் தவறு ஏற் படலாம். இவை அனைத்தும் பொருண்மைத் தவறில் அடங்கும்.

சட்டத்தின் பொதுவிதியைத் தவருகக் கொண்டால் சட்டத் தவறு ஏற்படுகிறது. அந்நியச் சட்டம் அல்லது பொதுநியதி அல்லது நம்நாட்டுச் சட்டம் அல்லது ஒப்பந்தக்காரர்களின் தனி உரிமைகள் இவற்றைப் பற்றி ஏற்படுகின்ற தவறுகள் இதன் பாற்படும். ஒருதலை, இருதலை ஒப்பந்தங்களில் ஏற்படுகின்ற தவறுகளும் சட்டத் தவருகும்.

(2) திரித்துக் காட்டல் (Misrepresentation)

ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொள்ளும்போதோ அதற்கு முன்போ, ஒருவரை அவ்வொப்பந்தத்தில் சேரும்படிச் செய்யும் கருத்துடன், நிகழ்கால அல்லது இறந்தகாலப் பொருண்மை குறித்துப் பொய்யான செய்தியால் அவரை மற்ருெருவர் தூண்டி இசைய வைத்த பொய்மைச் செயலாலோ, சொல்லாலோ, முக்கிய கூற்றினை மறுப்பதாலோ "திரித்துக் காட்டல்" இருக்க லாம். அத்தகைய திரித்துக் காட்டல் மாசற்றதாகவோ (Innocent) மோசடியானதாகவோ (Fraudulent) இருக்கலாம்.

**(3) வலுக்கட்டாயம் (Coercion)**

ஓர் உடன்பாட்டில் ஒருவரைச் சேரும்படிச் செய்யும் கருத்துடன், இந்தியக் குற்றச் சட்டத்தில் விலக்கப்பட்டுள்ள செயல் எதையும் செய்தல், செய்யப்போவதாக அச்சுறுத்தல், மற்றவரது சொத்தை அவருக்குப் பாதகம் விளையும் வகையில் சட்ட முரணாக நிறுத்தி வைத்தல், நிறுத்தி வைப்பதாக அச்சுறுத்தல் — இது வலுக்கட்டாயம் ஆகும். (இந்திய ஒப்பத்தச் சட்டம், 15-ம் பிரிவு) இங்கிலாந்தில் இதனையே உடற்கட்டாயம் (Duress) என்பர்.

**(4) தகாநிலை வற்புறுத்தல் (Undue Influence)**

ஓர் ஒப்பந்தம் செய்து கொண்ட தரப்பினர் இருவரில் ஒருவர் மற்றொருவரது சிந்தனைத் திறனை அடக்கி, அந்நிலையில் நேர்மையில்லாத வழியில் நலனைத் தாம் அடைந்து கொண்டால் அவ்வொப்பந்தம் தகாநிலை வற்புறுத்தலால் எழுந்ததாகும். (இந்திய ஒப்பந்தச் சட்டம் 16 (i)-ம் பிரிவு)

சர் ஜான் சால்மண்ட், இசைவுத் தவறினை இருவகையாகப் பிரித்துள்ளார். அவை கருத்தொற்றுமை பிழை (Error in Consensu) அதாவது தவற்றுக்கோள் காரணமாக இசைவுதரும் மனத்தில் ஏற்படும் பிழை என்றும் காரணப்பிழை (Error in Causa) அதாவது இசைவு ஏற்படுவதில் ஏற்பட்ட பிழை என்றும் இருவகையாகும். காரணப்பிழை வலுக்கட்டாயத்தினால், மோசடியால், தகாநிலை வற்புறுத்தலினால், அல்லது திரித்துக் காட்டலினால் ஏற்பட்டதாகலாம்.

சான்றாக 'அ' வினைச் சாட்சி கையெழுத்திடுவதாகத் திரித்துச் சொல்லி 'ஆ' கடனுறுதிச் சீட்டில் கையெழுத்திடச் செய்தார். வெளிப்படையாக நோக்குமிடத்து அவ்விருவரிடையே ஒன்றிய மனம்போல் தோன்றிடினும் உள்ளபடியான இசைவாக இதனைக் கருத இயலாது. இதில் உள்ள இசைவுத் தவறினை உண்மையில் இசைவில்லை என்றே எண்ணலாம். ஏனெனில் 'அ' வுக்கு உண்மை தெரிந்திருப்பின் கையெழுத்திட்டிருக்க மாட்டார் அல்லவா ? தவற்றுக்கோள் காரணமாக இத்தகைய சட்ட ஒழுங்கான இசைவு இல்லாததால் ஏற்படுகின்ற இசைவுப்பிழை கருத்தொற்றுமைப் பிழை எனக் கொள்ளப்பட்டு ஒப்பந்தம் இல்லாநிலையாகிறது.

மேற்காட்டிய ான்றில் 'அ' துப்பாக்கி முனையில் பலவந்தப் படுத்தப்பட்டு, கையெழுத்திடச் செய்யப்பட்டிருப்பாரானால்,

இதில் இசைவு அறவே இல்லை என்பதாகாது. ஆயினும், வலி யுறுத்தப் பட்டதனால் ஏற்பட்ட இசைவு பிழையாகும். எனவே இதனைக் காரணப்பிழை என்பர். இத்தகைய ஒப்பந்தங்கள் தவிர்தகு ஒப்பந்தங்களாகும். இப்பிழைகள் இரண்டிற்குமுள்ள நூலிழை வேறுபாட்டினை எளிதில் கண்டுபிடித்க இயலாது. சான்றாகத் தவற்றுக்கோள் ஏற்பட அடுத்த நபர் செய்கின்ற யோசனையும் காரணமாகலாமல்லவா ?. இரண்டு பிழைகளும் ஒன்றாகவே தோன்றலாம். அத்தகைய ஒப்பந்தங்கள் இல்லா நிலையாகுமேயொழிய, தவிர்தகு ஒப்பந்தங்களாகா.

**தவற்றுக்கோள் (Mistake)**

ஏற்கனவே கூறியபடி தவறு பொருண்மையாலும், சட்டத் தினாலும் ஏற்பட வழிஉள்ளது. பொருண்மைத் தவறு,

(i) இருதரப்பினராலும் அல்லது பரஸ்பரத் தன்மையாலும் இருதலைத் தவறாகவும்-

(ii) ஒருவரது தவறாகவும் அல்லது ஒருதலைத் தவறாகவும் இருவகைப்படும்.

**I. இருதரப்பினர் தவற்றுக்கோள் : பொருண்மைத் தவறு.**

பொருண்மையால் இருதரப்பினரின் மனத்திடையேயும் ஏற்படுகின்ற தவறு கருத்தொருமையைத் தவிர்க்கிறது. அத் தகைய ஒப்பந்தங்கள் இல்லாநிலையாகின்றன என **Bell** *vs*. **Lever Bros (1932) A. C. 161** வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

வாதிகளான லீவர் சகோதரர்கள், எதிர்வாதிகளான பெல், ஸ்னெல்லிங் இருவருடனும் இரு உடன்பாடுகள் மேற் கொண்டார்கள்.

முதல் உடன்பாட்டின்படி பெல், ஸ்னெல்லிங் இருவரும் லீவர் சகோதரர்களின் துணைநிறுவனம் ஒன்றில் மாதம் ஒன்றுக்கு முறையே £ 8000 £ 6000 ஊதியத்துக்கு நியமிக்கப்பட்டனர். இரண்டாவது உடன்பாட்டின்படி தங்களுடைய கால கெடுவிற்கு முன்பாக ஓய்வெடுத்துக் கொள்வதற்காக முறையே £ 30,000 £ 20,000 இழப்பீடாகப் பெற்றனர். ஆனால் அவர்கள் தொழில் புரிந்த காலத்தில் கோகோ வியாபாரத்தில் இரகசியமான நட வடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர். இத்தகைய நடவடிக்கை அவர் களுடைய முறையான ஒப்பந்தத்திற்கு முரணான ஒன்று என்ப தோடு, உடனடியாக இழப்பீடின்றிப் பணியினின்றும் நீக்கப்பட வேண்டிய ஒன்றாகும். இதனை அறியாததனால்தான் லீவர்

சகோதரர்கள் இரண்டாவது உடன்பாடு கொண்டனர். இத்தகைய அவர்களின் நடவடிக்கையைப் பின்னர் உணர்ந்த லீவர் சகோதரர்கள், பொருண்மைத் தவற்றினுல் கொடுக்கப்பட்ட இழப்பீட்டுத் தொகைக்காக வழக்குத் தொடர்ந்தனர். கீழ் வழக்கு மன்றத்தில் அளிக்கப்பட்ட தீர்ப்பினைப் பிரபுக்கள் அவை நிராகரித்துத் தவிர்தகு ஒப்பந்தமாகக்கொண்டு ஒப்பந்தத்தைச் செல்லுநிலையாக்கியது.

இ. ஒ. ச. தின் 20-வது பிரிவின்படி "பொருண்மைத் தவற்றின் காரணமாக இருதரப்பினரிடையே உடன்பாடு ஏற்படின், அத்தகைய உடன்பாடு இல்லாநிலையாகிறது."

இப்பிரிவு, இசைகின்ற மனத்தினரிடையே ஏற்படுகின்ற தவற்றுக் கோளினைச் சுட்டுகிறதேயன்றி, இசைவை வெளிப்படுத்துகின்ற முறையில் ஏற்பட்ட தவற்றுக்கோளினைக் குறிப்பிடவில்லை. ஒப்பந்தத்தை எழுத்தில் வடிக்கின்றபோது ஏற்படுகின்ற பிழையினைச் "சொற்பிழை" (Erorr in Verbis) என்பர். இத்தகைய பிழையுள்ள ஒப்பந்தத்தைத் திருத்திக் கொள்ள உரிமை ஏற்படுத்துகின்றதேயன்றி, ஒப்பந்தம் இல்லா நிலையாகாது.

20-வது பிரிவில், தவற்றுக்கோள் சில முக்கியமானவைகளில் ஏற்பட்டிருக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

**(அ) பொருள்குறித்து ஏற்படுகின்ற தவறு Scott *vs.* Coulson, (1903) 2 Ch. 249.**

ஆயுள் காப்பீட்டுப் பத்திரம் ஒன்றினை ஒருவர் விலைக்கு வாங்க ஒப்பந்தம் மேற்கொண்டார். ஒப்பந்தம் மேற்கொள்ளும்போது காப்பீட்டாளர் உயிருடன் இருப்பதாக எண்ணியிருந்தார். உண்மையில் ஒப்பந்தம் நேருகின்ற நிலையில் காப்பீட்டாளர் இறந்துவிட்டிருந்தார். அவ்வழக்கில் ஒப்பந்தம் இல்லா நிலையது என்று தீர்ப்பாகியது.

Gouturier *vs.* Hastie (1856) 10 E.R. 1065

சலோனிகாவினின்றும் இங்கிலாந்து நோக்கிக் கப்பலில் செல்லும் இந்திய தானியத்தை வாங்க ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்டது. ஆனுல் ஒப்பந்தம் ஏற்படப் பதினைந்து நாட்கள் முன்னதாகவே அக்கப்பல் சரக்கு, சூட்டினுல் பழுதடைந்து விட்டது. அதனுல் இடையிலுள்ள துறைமுகத்தில் கிடைத்த விலைக்கு அச்சரக்கு விற்கப்பட்டுவிட்டது. இருதரப்பினரும் இது குறித்து ஒப்பந்தம் மேற்கொள்ளும்போது அறியமாட்டார்கள்.

வழக்கு மன்றத்தார், இந்த ஒப்பந்தம் தவற்றுக் கோளினல் பழுதடைந்தது (vitiated) எனத் தீர்ப்பு நல்கினர்.

(ஆ) பொருளின் அடையாளம் தெரியாத நிலையில் ஏற்படுகின்ற தவற்றுக்கோள்,

Raffles vs. Wichelhaus (1864) 2. H & C 906.

பம்பாயினின்றும் பியர்லஸ் கப்பலில் வருகின்ற 125 கட்டு சூரத் பருத்தி வாங்குவதற்கான ஒப்பந்தம் மேற்கொள்ளப் பட்டது. ஆனல் அந்த பெயர்கொண்ட கப்பல்கள் இரண்டு பம்பாயிலிருந்து அக்டோபரிலும், டிசம்பரிலும் புறப்பட்டன. ஒப்பந்தம் மேற்கொண்டபோது விற்றவர் தான் விற்பது டிசம் பரில் வரும் சரக்குக் குறித்தும், வாங்கியவர் அக்டோபரில் வரும் சரக்குக் குறித்தும் வெவ்வேறுன எண்ணங்கள் கொண்டிருந்தனர். இவ் வழக்கில் ஒப்பந்தம் இல்லாநிலையதாகியது.

ஒருதரப்பினரின் தவற்றுக்கோள் அல்லது ஒருதலை தவற்றுக்கோள் (Unilateral Mistake)

22-வது பிரிவில் "பொருண்மைத் தவறினல் ஏற்பட்ட ஒருதரப்பினரின் தவற்றுக்கோள் ஒப்பந்தத்தைத் தவிர்தகு ஒப் பந்தமாக்காது," என்று கூறப்பட்டுள்ளது. ஆயினும் இந்நியதிக்குச் சில விலக்குகள் உள்ளன.

Faster vs. Mackinnon (1869) L.R. 4. C.P. 704 பொறுப் புறுதிக்காக என்று திரித்துக் கூறப்பட்டு, படித்தறியா வயதான மனிதரிடம் மாற்றுச் சீட்டில் வாங்கப்பட்ட கையெழுத்தின்மீது நடைபெற்ற வழக்கில், "பெரியவர் ஒப்பந்தத்தில் கையெழுத் திட விரும்பியிருந்ததாகக் கொள்வதற்கில்லை என்றும், மோசடி யினல் பெறப்பட்ட கையெழுத்து கருத்தொற்றுமைப் பிழையினல் ஏற்பட்ட ஒன்று என்றும் அதனல் ஒப்பந்தம் இல்லாநிலையது" எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

மாற்று முறையாவணச் சீட்டில் (Negotiable Instrument) கையெழுத்திடுபவர்கள் இத்தகைய வாதத்தை வைத்திடுமுன்னர், தங்கள்பால் எத்தகைய கவனமின்மையும் ஏற்படவில்லை என்ப தனையும் மெய்ப்பிக்க வேண்டும். முன் சொன்ன வழக்கில், பெரியவர் கையெழுத்திடுவதில் கவனமின்மையாக இருந்தார் என்று கருத இடமில்லை எனச் சான்றுயம் (Jury) முடிவெடுத்தது.

Carlisle and Cumberland Banking Co vs. Bragg (1911) 1. K.B. 489. காப்பீட்டைப் பற்றிய ஒன்றன் தொடர்பானது எனக் கூறி பிராக் (Bragg) என்பவரிடமிருந்து ஆவணம் ஒன்றில்

ரிக் (Rigg) என்பவர் கையெழுத்துப் பெற்ருர். பிராக்கும் படிக்காமல் அதில் கையெழுத்திட்டார். ஆனல் அக்கையெழுத்து வங்கியில் பெறுகின்ற மேல்வரைப்பற்று (Over Draft)-க்கான பொறுப்புறுதிச் சீட்டாகும் என்பது பின்னர் தெரிந்தது. இதற்கிடையில் பிராக்கின் பொறுப்புறுதிச் சீட்டின்மீது ரிக் மேல்வரைப் பற்றுப்பெற வங்கி அனுமதித்தது. பிராக் கவனமின்மையாக இருந்தார் என்று சான்ருயம் சொல்லிற்று. ஆயினும் வழக்கின் கூறுகளைக் கவனித்த வழக்கு மன்றத்தார் வங்கிக்கு பிராக் கடமைப்பட்டவர் அல்லர் என்பதனல் அவரது கவனமின்மையைக் கருத்தில் கொள்ள வேண்டியதில்லை எனக்கூறி அவரது பொறுப் புறுதிச்சீட்டு அவரைக் கடப்பாட்டிற்கு உள்ளாக்காது எனத் தீர்ப்புக் கூறினர். அவ்வழக்கில் மாற்று முறையாவணச் சீட்டு (Negotiable Instruments) களில் தான் ஆவணப் பிழை (Non Est Factum) கொள்கைக்கு விலக்குண்டு என்று கூறப்பட்டது. மாற்று முறையாவணச் சீட்டில் கையெழுத்திடுபவர் தன் கையெழுத்துடன் தன் மனம் ஒன்ருதது மட்டுமன்று, தானும் கவனமின்றி இருந்ததாகக் காண்பித்தாலன்றி, அத்தகைய சீட்டின் கடப்பாட்டிற்கு உள்ளாக்கப்படுவார்.

Blay *vs*. Pollard and Morris (1930) I. K. B. 628. பங்கமைப்பு ஒன்றில் பங்குதாரராக இருந்தவர், அதன் கலைப்புக்கு ஒப்பிக் கையெழுத்திட்டார். அதுபோது முன்னர் வாய்மொழி மூலம் ஒப்புக்கொண்ட உடன்பாட்டின் வரைமுறைகளில் ஒன்றனைக் குறிப்பிடாததற்கு மறுப்புத் தெரிவித்திருந்தார். உடன்பாட்டின்மீது வாடகை பாக்கியின் பொருட்டு எதிர்வாதி கடப்பாட்டிற்கு உள்ளாக்கப்பட்டார். வழக்கில் எழுத்து ஆவணத்தில் காணப்பட்ட வரைமுறை தவறு, ஒப்பந்தத்தை முறிக்காது எனக் கூறி எதிர்வாதியினைக் கட்டுப்படுத்தித் தீர்ப்பு வழங்கப்பட்டது. முடிவாக ஒப்பந்தத்தின் இயல்பினைப் பொறுத்தும் ஒப்பந்தத்தைப் பொறுத்தும் தவறு இருந்தால்தான் ஆவணப் பிழைவாதம் (Plea of Non Est Factum) பொருந்துமே தவிர, ஒப்பந்தத்தின் வரைமுறைகளைக் கட்டுப்படுத்தாது.

## II ஒப்பந்தக்காரரின் அடையாளங்குறித்து ஏற்படுகின்ற தவறு (Mistake as to the identity of the party contracted with)

'க' என்பவர் 'அ' வுடன் ஒப்பந்தம் செய்ய விரும்பி, 'ஆ' என்பவரை 'அ' வாக எண்ணி அவருடன் ஒப்பந்தம் செய்து கொள்ளின், அந்த ஒப்பந்தம் பழுதடையும். ஒன்றியமனம் அல்லது கருத்தொருமை அவ்விருவரிடையே ஏற்பட்டிருக்க இயலாதல்லவா ?

Boulten *vs*. Jones. (1887) 2 H & N 564

Jones என்பவர் Brokle Hurst என்பவருடன் வாணிகமுறையில் தொடர்பு கொண்டிருந்தார். ஜோன்சுக்குத் தேவையான பொருள்களேயும் மற்றவர் விற்றுவந்தார். பிராக்கள்ஹர்ஸ்ட்டிடமிருந்து வாணிகத்தை பௌல்ட்டன் பெற்று நடத்தினர். வழக்கம்போல் ஜோன்ஸ் தமக்கு வேண்டிய பொருளுக்கர்க பிராக்கள்ஹர்ஸ்ட்டுக்குக் கட்டளேயிட்டார். பௌல்ட்டனும் மாற்றத்தை அறிவிக்காமல் பொருள்களே அனுப்பிவைத்தார். ஜோன்ஸ் செய்தியறிந்ததும் பொருள்களுக்கான விலேயைத் தர மறுத்தார். வழக்கு மன்றமும் ஜோன்சைக் கடப்பாட்டிலிருந்தும் விடுவிப்புச் செய்தது. ஒருவர் 'அ' வுடன் ஒப்பந்தம் செய்ய எண்ணிய நிலேயில் 'ஆ' தன்னுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளும் உரிமையை நிலேநாட்ட இயலாது என்ற தத்துவத்தின்படி இவ் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

Cundy *vs*. Lindsay (1878) 3 A. C. 359.

ஒரு தெருவிலிருந்த மதிப்புக்குரிய பிளெங்கிரான் (Blenkiron) நிறுமத் (Firm) தின் பெயரைப் பாவனே செய்து கையெழுத்திட்டு பிளெங்கார்ன் (Blenkarn) என்பவர் வாதியினிடமிருந்து பொருள்களேப் பெற்று அதைப்பற்றி ஒன்றுமறியா நபரான லின்ட்சேவுக்கு விற்றுவிட்டார், வாதி பொருள்களேத் திருப்பும் படி எதிர்வாதியின் மீது வழக்குத் தொடர்ந்தார். வாதி கண்டி (Cundy) தான் செய்த ஒப்பந்தத்தில் மறு ஒப்பந்தக்காரராக பிளெங்கிரானேத் (Blenkiron) தான் கொண்டிருந்தார். பிளெங்கார்ன் (Belnkarn) உடன் செய்த ஒப்பந்தம் செல்லாது. எனவே அவரிடமிருந்து பெற்ற பொருள்களுக்கு லின்ட்சே (Lindsay) உரிமை கொள்ள முடியாது என்றும் கடப்பாட்டுக்கு உள்ளாவார் என்றும் தீர்ப்பில் கூறப்பட்டது.

Phillips *vs*. Brooks (1919) 2 K. B. 243. வாதியின் கடைக்கு வந்த நார்த் (North) என்பவர் முத்துகள் சிலவும், கணேயாழி ஒன்றும் தேர்ந்தெடுத்தார். £ 3000- க்கான காசோலேயை எழுதிக் கொடுத்துத் தன் பெயரையும் முகவரியினேயும் சர் ஜார்ஜ் புல்லோ (Sir George Bullough) என்பதாகக் கொடுத்தான். வாதியிடமிருந்து பெற்ற பொருள்களே எதிர்வாதியிடம் நார்த் (North) அடைமானம் வைத்துவிட்டான். எதிர்வாதிக்கு மோசடி பற்றிய செய்தி தெரியாது. வாதி வழக்குத் தொடர்ந்தான். வழக்கு மன்றம் ஒப்பந்தத்தை மோசடியினுல் ஏற்பட்டதாகக் கொண்டு, தவிர்தகு ஒப்பந்தமாகக் கொள்ளத் தீர்ப்பளித்தது. இவ்வழக்கு Lake *vs*. Simmons (1927) A. C. 487 என்ற வழக்குடன் தொடர்பு படுத்தப்பட்டு ஆராயப்பட்டது.

தன்னை மிராசுதாரரான 'இ' யின் மனைவி என்று கூறிக் கொண்ட பெண்மணி 'அ', இரு முத்து மாலைகளை 'ஆ' தனக்குத் தரும்படியாகத் தூண்டினார். முத்துமாலைகளைத் தம் கணவர் 'இ' யின் ஒப்புதலுக்குப் பின்னர் வாங்கிக் கொள்வதாகவும் அவருக்குக் காண்பிக்க வேண்டும் என்றும் மோசடியாகக் கூறி எடுத்துச் சென்றார். வழக்கில் 'ஆ' வானவர் 'இ' யுடன் தான் தொடர்பு கொள்ள எண்ணினாரே யல்லாமல், 'அ' வுடன் அன்று எனத் தீர்ப்புக் கூறப்பட்டது. எனவே ஒப்பந்தம் இல்லாநிலைய தாயிற்று என்றும் 'அ' க்குப் பொருள்களின் மீது எந்தவிதமான உரிமையும் இல்லை என்பதனால் அவரிடமிருந்து மற்றவரும் எந்த விதமான பாத்தியதையும் அடைய இயலாது என்றும் அதில் கூறப்பட்டது.

III உறுதியுரையின் தன்மை பற்றிய தவறு (Mistake as to quality of promise)

விற்பனையாளர் செய்கின்ற உறுதியுரையின் தன்மையினால் ஏற்படுகின்ற தவற்றுக்கோள் (Mistake) ஒப்பந்தத்தை இல்லா நிலையாக்கும் (Void), இங்குக் குறிப்பிடுவது ஒப்பந்தத்தின் பொருள்பற்றிய தவறன்று. இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டினை உய்த்துணருதல் அவசியம்.

ஒப்பந்தத்தின் பொருள் தன்மைபற்றிய தவற்றுக்கோளினைக் காட்டி யாரும் புகார் செய்வதற்கில்லை. சட்டப்படி விற்பனை யாளருக்குப் பொருள்களின் குறைபாடுகளை விளக்க வேண்டிய கடமை கிடையாது. இதனை "வாங்குபவரே விழித்திரு" (Caveat Emptor) கொள்கையின் மூலம் விளக்கப்பட்டுள்ளது. ஒரு பொருளை வாங்குபவரே, அதனால் விளையக் கூடிய இடர்நலன்களை ஏற்க வேண்டியவர். எனவே விற்பவரைவிட வாங்குபவருக்கே விழிப்புத் தேவை. இதனையே மேற்சொன்ன மெய்ம்மொழி சுட்டிக்காட்டுகிறது. இதனையே "வாங்குபவரே எச்சரிக்கை" என்றும் (Purchaser Beware) கூறப்படுகிறது.

Smith *vs*. Hughes (1871) L.R. 6 Q.B. 597 வழக்கில், மாதிரிக் காக 'ஆ' க்கு 'அ' என்பவர் புல்லரிசியை (oats) விற்றார் 'ஆ' அதனைப் பழமையானது என்றெண்ணி வாங்கிப் பின்னர் அது புதியது என அறியலானார், வழக்கில் 'ஆ' ஒப்பந்தத்திற்குக் கட்டுப்பட்டவர் எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

Ward *vs*. Hobbs (1878) 4. A. C. B. 13.

நோய்வாய்ப்பட்டிருந்த பன்றிகளைத் தெரிந்தே 'வா' வுக்கு விற்கப்பட்டது. விற்கும்போது "உள்ள குறைகளுடன்" (with

all faults) விற்பதாக ஒப்பந்தமாகியது. சின்னாட்களுக்குப் பின்னர் பன்றிகள் இறந்துவிட்டன. 'வா' வழக்குத் தொடர்ந்தார். இவ்வழக்கில் "வாங்குபவரே விழித்திரு" (Caveat Emptor) என்ற கொள்கை விளக்கப்பட்டு 'ஹா' கடப்பாடுடையரன்று என்று தீர்ப்பு நல்கப்பட்டது.

இக்கொள்கைக்கும் ஒரு விதிவிலக்கு உள்ளது. முழு நம்பிக்கையில் எழுகிற (Uberrimae Fidei) ஒப்பந்தங்களுக்கு இக்கொள்கை பொருந்தாது. இத்தகைய ஒப்பந்தங்கள் உயர்ந்த நன்னம்பிக்கையினால் ஏற்படுகின்றன. முழுநம்பிக்கையுடைய, மிக்க நல்லெண்ணத்துடன் கூடிய ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வதா, வேண்டாவா என்பதுபற்றி முடிவு செய்வதற்கு முன் தெரிய வேண்டிய எல்லாப் பொருண்மைகளையும் சூழ்நிலைகளையும் உறுதியுரை ஏற்பவர் உறுதியுரை அளிப்பவரிடம் தெரிவிப்பது கட்டாயமானது என்ற நிலையில் உள்ள ஒப்பந்தத்தை "முழு நம்பிக்கையிலெழும்" என்பர், காப்பாளர் காப்பாள் (Guardian and Ward) வழக்கறிஞர், வழக்காடி (Advocate and Client) காப்புறுதி அளிப்பவர் காப்புறுதி பெறுபவர் (Insurer and Insured) இவர்களிடையே எழும் ஒப்பந்தங்கள் முழுநம்பிக்கையின் அடிப்படையில் அமைதல் வேண்டும்.

அளிக்கப்படும் உறுதியுரையின் தன்மையில் காணப்படும் தவற்றுக் கோள் காரணமாக உள்ள ஒப்பந்தங்கள், இல்லா நிலையனவாகும் (Void).

Scriven *vs.* Hindley (1913) 3. K.B. 564. நல்ல சணலையும் சணல் கூளத்தையும் தனித்தனியாகக் குவித்து 'அ' ஏலம் கூறினான். 'ஆ' நல்ல சணல் வாங்க வந்தான். சணற் கூளம் ஏலம் கூறியபோது தவறாக நல்ல சணலுக்கு ஏலம் கூறியதாக எண்ணி 'ஆ'ஏலம் எடுத்தான். நல்ல சணலுக்கான விலையைச் சணற் கூளத்திற்குத் தந்தான். ஆனால் வழக்கில் 'ஆ' தான் அளித்த உறுதியுரையின் தன்மையில் காணப் பட்ட தவற்றுக்கோளினைக் காட்டி வாதிடுவதினின்றும் முரண்தடை (Estopped) செய்யப்பட முடியாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இதில், "வாங்குபவரே விழித்திரு" என்ற கொள்கை எடுபடாது என்றும் கூறப்பட்டது.

தீர்மானிக்கப்பட்ட ஒப்பந்தம் ஒன்று, ஒப்பந்தக்காரர் ஒருவருக்கு அதன் முழுவிவரங்கள் முன்னரே அறிந்திருப்பின் வேறாயிருந்திருக்கக் கூடும் என்று கருதப்படுமானால் அத்தகைய ஒப்பந்தம் தவற்றுக்கோள் காரணமாக இல்லாநிலையதாகாது என்று Bell *vs.* LeverBros வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது இங்கே மீண்டும் நினைவு கூரத் தக்கது.

**சட்டத் தவறு (Mistake of Law)**

சட்ட அறியாமையால் மன்னிப்புக்கோர இயலாது. (Igno-(rantia Juris Non (Haud) Excusat) என்ற தத்துவம் பொதுவிதியின்பால் அடங்கும். இத்தத்துவம் இல்லையெனில் சட்டத்தை நிலைநிறுத்த இயலுமா ? இத்தத்துவம் உள்நாட்டுச் சட்டம் பற்றிய அறியாமைக்குத்தான் பொருந்துமே யன்றி, அந்நியச் சட்டத்தைப் பொருத்ததாகாது. அந்நியச் சட்டத்தின் அறியாமைக்கு ஒருவர் வாதிட்டால் பொருண்மைத் தவற்றுக்கு ஏற்பட்ட நிலையினை அடைவர். இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 21-வது பிரிவில் "செல்லாற்றலில் உள்ள சட்டங்களை அறியாமையால் ஏற்படுத்தப் பட்ட ஒப்பந்தங்கள் தவிர்தகு ஒப்பந்தங்களாகா. ஆனால் செல்லாற்றலில் இல்லாத சட்டங்களை அறியாமையால் ஏற்படும் ஒப்பந்தங்கள் பொருண்மைத் தவறினால் ஏற்படும் ஒப்பந்தங்களுடன் வைத்து எண்ணப்படும்," என்றுக் கூறப்பட்டுள்ளது.

Kalyanpur Lime Works *vs* State of Bihar. வழக்கில் மீளா உரிமை மாற்றுச் சீட்டு(Assignment Deed) ப்பற்றிய பதிவுச்சட்ட (Law of Registration)த்தை அறியாமையானது உரிமை மாற்றினை இல்லா நிலையாக்கக் கூடியதன்று என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

சட்டத்தைத் தவருகப் புரிந்ததன் விளைவாகச் சொத்து மீதுள்ள தனி உரிமை பற்றிய அறியாமையும் பொருண்மைத் தவறின்பால் வைத்து எண்ணப்படும். Cooper *vs* Phibbs (1867) L.R. 2. H L. 149. தனக்குள்ள உரிமையை அறியாத 'அ' மீன் பிடிக்கும் உரிமை ஒன்றினை 'ஆ'விடமிருந்து குத்தகைக்கு எடுத்தான். உண்மையில் அந்த உரிகைக்குச் சொந்தக்காரனே 'அ' தான். தன்னுரிமை அறியாமையினால் ஏற்பட்ட அத்தகை ஒப்பந்தம் தவிர்க்கக்கூடிய ஒப்பந்தமாகும் என்று தீர்ப்பளிக்கப் பட்டது.

**தவற்றுக்கோளுக்கான தீர்வழி ; Remedies in Case of Mistake**

தவற்றுக்கோள் ஆனது, ஒப்பந்தத்தினை இல்லாநிலையாக்குகிறது. ஒப்பந்தம் நிறைவேற்ற வேண்டிய நிலையில் (Executory) இருப்பின், தவற்றுக்கோள் காட்டிப் புகார் செய்யும் ஒப்பந்தக்காரர் அத்தகைய ஒப்பந்தத்தினை நிராகரித்து ஏற்றது 'ஆற்றுக' (குறித்துரைத்ததை நிறைவேற்றுக (Specific Performance) என்ற விதியின்கீழ் எடுக்கப்படும் நடவடிக்கையினைத் தடுக்கலாம். நிறைவேறிய (Executed) ஒப்பந்தமானல் பயன் அடைந்த நபர் ஒப்பந்தமானது இல்லாநிலையது என அறிந்தவுடன் இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 65-வது பிரிவுப்படி பெற்றதைத் திருப்பி அளிக்கவோ-இழப்பீட்டினைச் சரிசெய்யவோ வேண்டும்.

# 10. இசைவில் குறைபாடு திரித்துக் காட்டலும், மோசடியும்

## (Misrepresentation and Fraud)

ஒப்பந்தம் ஏற்படுமுன் அல்லது ஏற்படுகின்ற காலத்தில் ஒப்பந்தக்காரருள் ஒருவர் மற்றவரிடம் கூறுகின்ற கூற்றினை அவரது எடுத்துரைப்பு எனக் கூறப்படும். அத்தகைய எடுத்துரைப்பானது நிகழ்கின்ற அல்லது முன்னர் ஏற்பட்ட, ஒப்பந்தத்தைக் குறித்த, விவரங்களைக் கூறுவதன்மூலம் மற்றவரை ஒப்பந்தத்தை ஏற்கத் தூண்டுகின்ற ஒன்றாக அமையலாம். ஒருவரது நடத்தையின் காரணமாகவும் அத்தகை செயல் வெளிப்படலாம். ஆனால் உள்ள, உண்மையான விவரம் பற்றிய ஒன்றாகவே அத்தகைய கூற்று அமையும். அத்தகைய எடுத்துரைப்புகள் அல்லது செயல்கள் ஒப்பந்தங்களின் வரைமுறைகளை வகுக்க எண்ணி வெளிப்படுத்தப்பட்டவையாக இருக்கலாம். ஒப்பந்தத்தின் வரைமுறைகளில் ஒன்றாக அத்தகைய எடுத்துரைப்பு அமையுமானால் அது கட்டுவரம்பாகவோ (Condition) நம்புறுதி (Warranty) யாகவோ அமைகின்றது. உரிமை உண்டாவது ஒரு நிகழ்ச்சியைப் பொறுத்ததெனக் கூறுகின்ற சொல்லாக கட்டுவரம்பு உள்ளது. அத்தகைய முக்கியமான அது நிறைவேற்றப் படாவிடின் ஒப்பந்தம் முறிவடையும். ஓர் ஒப்பந்தத்தின் முக்கிய நோக்கத்திற்குத் துணையாக உள்ள உறுதிமொழி நம்புறுதியாகும். வெளிப்படையாகவோ, உட்கிடையாகவோ உள்ள அவ்வுறுதியானது, ஒப்பந்தத்தின் ஒருபகுதியாகவே அமையும்.

ஒப்பந்தக்காரருள் ஒருவர் கூறுகின்ற பொய்க்கூற்றினால் மற்றவர் ஒப்பந்தத்திற்கு இசையலாம். அத்தகைய கூற்றுக் கூறப்படாவிடின் மற்றவர் ஒப்பந்தம் மேற்கொள்ளாமல் இருந்திருக்கலாம். இத்தகைய பொய்மைகள் அல்லது திரித்துக் காட்டல்கள் ஒப்பந்தங்கள் நிறைவேறக் காரணமாக அமையவோ

ஒப்பந்தங்களின் வரைமுறைகள் நிர்ணயிக்கவோ ஏற்படுத்தப் பட்டவைகளாக இருக்கலாம், ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொள்ளும் போதோ அதற்கு முன்போ, ஒருவரை அவ்வொப் பந்தத்தில் சேரும்படிச் செய்யும் கருத்துடன், நிகழ்கால அல்லது கடந்தக் காலப் பொருண்மை குறித்துப் பொய்யான செய்தியால் அவரை மற்றொருவர் தூண்டி இசையவைத்த பொய்மை திரித் துக்காட்டல் எனப்படும். இந்தப் பொய்மையானது, செயலாலோ சொல்லாலோ, முக்கியக் கூற்றினை மறைப்பதாலோ இருக்கலாம். இத்தகைய திரித்துக்காட்டல் இருவகைப்படும்.

ஒன்று, மாசற்ற (Innocent) அல்லது செல்லாநிலையாக்கப் படுகின்ற (Invalidating) திரித்துக்காட்டலாகும்.

மற்றொன்று ஓரவஞ்சக (Fradulent) அல்லது தொடர்தகு (Actionable) திரித்துக்காட்டலாகும். ஓர் ஒப்பந்தத்தின் திட்ட வரைகள் (Terms) கட்டுவரம்புகளாகவோ, நம்புறுதிகளாகவோ இருக்கலாம். திரித்துக் காட்டல் கட்டுவரம்பு தொடர்பானதாக இருப்பின் புகார் செய்யும் நபர் ஒப்பந்தத்தை முறித்துக்கொள்ள வோ இழப்பீட்டினைக் கோருகின்ற பாத்தியதையை அடையவோ செய்யலாம். ஆனால் அத்தகைய திரித்துக்காட்டல் நம்புறுதித் தொடர்பான ஒன்றானால் அவருக்கு இழப்பீட்டின் அடைகின்ற உரிமையைத் தவிர வேறொன்றும் கிடையாது. ஒப்பந்தக்காரரின் எண்ணத்தைப் பொறுத்தே ஒப்பந்தத்தின் ஒரு திட்டவரை யானது கட்டுவரம்பா அல்லது நம்புறுதியா என அறியமுடியும் என்று பொருள் விற்பனைச் சட்டத்தின் 12-வது பிரிவு செப்புகின்றது.

**மாசற்ற திரித்துக்காட்டல் (Innocent misrepresentation)**

ஒப்பந்தச் சட்டத்தின் 183-வது பிரிவில் திரித்துக்காட்டலின் வரைவுரை காணப்படுகிறது,

(1) கூறுகின்ற நபரின் செய்திக்குத் தேவைப்படாவிடினும் உண்மையென்று அவரால் நம்பப்பட்டு ஆனால் உண்மையல்லாத- உறுதிப்படுத்துகின்ற உறுதிவாக்கு அளிப்பினும்,

(2) ஏமாற்றுகின்ற எண்ணம் ஏதுமின்றி, மற்றவருக்கு அல்லது அவர் வழியாக உரிமை கோருபவருக்குப் பாதிப்பு ஏற் படும் வகையில் தவறாகச் செலுத்திக் கடமையினின்றும் தவறு வதனால் தனக்கோ-தன்வழி உரிமை கோருபவருக்கோ யாதேனும் ஆதாயம் பெற்றிருப்பினும் ;

(3) குற்றமின்றிருப்பினும், உடன் பொருள் குறித்துத் தவற்றுக்கோள் ஏற்படச் செய்விப்பினும் ;

அவை திரித்துக்காட்டல்களாகும் என்று கூறப்பட்டுள்ளது. இவற்றினின்றும் மாசற்ற திரித்துக் காட்டலின் முக்கிய கூறுகள் தெரிய வருகின்றன.
அனவ :

(அ) முழு நம்பிக்கையில் எழுகிற ஒப்பந்தங்களில், எடுத்துரைப்பு அல்லது உறுதிவாக்கு அல்லது கடமை தவறுதல் அல்லது வெளிப்படுத்த வேண்டிய ஒன்றினைச் செய்யத் தவறுதல் இருத்தல் வேண்டும்.

(ஆ) அத்தகைய எடுத்துரைப்பு அல்லது வெளிப்படுத்தத் தவறியமை, பொருண்மை காரணமாக இருத்தல் வேண்டுமே யன்றிக் கருத்துக் காரணமாக இருத்தல் கூடாது.

(இ) அத்தகைய எடுத்துரைப்பு, உண்மையற்றதாக மாற வேண்டும்.

(ஈ) அத்தகைய எடுத்துரைப்பு மறுதரப்பினரை ஒப்பந்தத்தில் கட்டுவரம்புகளாக அல்லது நம்புறுதிகளாக உள்ள திட்ட வரைகள் பற்றிக் குறிப்பிடாமல், மறுதரப்பினரை ஒப்பந்தத்தில் சேரத்தூண்டுகின்ற எடுத்துரைப்பு பற்றி மட்டும் குறிப்பிடுகிறது என்பது தெளிவு. இரண்டிற்கும் உள்ள வேறுபாடு முக்கியமான தொன்றாகும். ஒப்பந்தத்தில் ஈடுபடத் தூண்டுகின்ற எடுத்துரைப்பு முறிவதனால் ஒப்பந்த ஏற்பாட்டினைப் பாதிக்கும். ஆனால் கட்டுவரம்பு அல்லது நம்புறுதி முறிவினால் ஒப்பந்தம் ஆற்றலைப் பாதிக்கும். மாசற்ற திரித்துக் காட்டலினால் பழுதடைந்த ஒப்பந்தம் தவிர்தகு நிலையினை அடைகிறது (Voidable).

With vs. O' Flanagan (1936) Ch. 575. எடுத்துரைப்பு ஒன்று அதைச் செய்த நிலையில் அது உண்மையாக இருந்து, பின்னர் ஒப்பந்தத்தில் ஈடுபடுவதற்கு முன்பாகச் செய்தவரின் கவனத்திற்கே அது உண்மையற்றதாக மாறிவிட்டிருப்பின், அதனைத் திருத்தாத நிலையில் அது ஒப்பந்தத்தைத் தவிர்தகு ஒப்பந்தமாக்கும் என மேற்சொன்ன வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

பொதுவாக, ஓரவஞ்சகமாகச் செய்யாத நிலையில், திட்ட வரைகளை ஏற்படுத்தாத எடுத்துரைப்புகள், ஒப்பந்தத்தினைச் சட்ட நிலையாக்குகின்ற தன்மையினை எவ்விதத்திலும் பாதிப்பதில்லை.

ஆயினும் இதற்கு ஒரு விலக்கு உள்ளது. இதனைக் கீழ்க்காணும் வழக்கு, தெளிவுபடுத்துகிறது.

Banerman vs. White (1861) 142 E. R. 685.

தாவர விற்பனையின் பொருட்டு 'அ'வும் 'ஆ'வும் ஒப்பந்தம் மேற்கொண்டனர். அவற்றின் வளர்ச்சிக்காகக் கந்தகம் (Sulphur) பயன்படுத்தவில்லை என்று 'அ' வாக்குமூலம் தந்தான். 'ஆ'வும் 'அ'வுக்குத் தெளிவாகவே அவற்றின் வளர்ச்சிக்குக் கந்தகம் பயன்படுத்தப்பட்டிருப்பின் தான் வாங்க இயலாது என அறுதியிட்டுக் கூறியிருந்தான். ஆனால் 300 ஏக்கரில் ஓர் ஐந்து ஏக்கரில் மட்டும் கந்தகம் பயன்படுத்தப்பட்டிருந்ததை 'அ' எடுத்துரைப்பு தருகின்றபோது உண்மையிலேயே மறந்துவிட்டிருந்தான். இத்தகைய எடுத்துரைப்பு ஒப்பந்தத்தின் திட்டவரைகளில் ஒன்றன்று என்பது தெளிவு. வழக்கில், வாக்குமூலம் ஓரவஞ்சனையாவதில்லை எனினும் இத்தகைய எடுத்துரைப்பை தலையான, முதன்மையான கட்டுவரம்பாகக் கொண்டதால், ஒருவகையில் ஒப்பந்தத்தின் திட்டவரைகளில் ஒரு கட்டுவரம்பாகக் கொள்ளவேண்டும் எனவும், அத்தகைய கட்டுவரம்பின்றி ஒப்பந்தம் நிறைவேற்ற முற்பட்டிருக்க ஒப்பந்தக்காரர் ஒப்பியிருக்க மாட்டார் எனவும் கொண்டு ஒப்பந்தம் தவிர்க்கக் கூடிய ஒன்றாகத் தீர்ப்பாயிற்று.

### மோசடியான அல்லது கருதியே அல்லது தொடர்தகு திரித்திக் காட்டல் (Fraud os Wilful or Actionable Misrepresentation)

உண்மையற்றது என்று முறையாகத் தெரிந்திருந்தும் அல்லது அதன் உண்மையில் நம்பிக்கையற்றிருந்தும் அல்லது உண்மையா பொய்யா என்பது பற்றிய கவலையின்றி எண்ணுமலும் செய்யப்படுகின்ற திரித்துக் காட்டல் ஓரவஞ்சகமானது என்று வரைவுரைக்கப்பட்டுள்ளது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 17-வது பிரிவில் மோசடி (Fraud)க்கான வரைவுரைவும் விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளன.

"ஒப்பந்தத்தின் ஒரு தரப்பினர் அல்லது அவரது முகவர், எதிர்த்தரப்பினரை அல்லது அவரது முகவரை ஏமாற்றும் கருத்துடன் அல்லது ஒப்பந்தத்திற்குச் சம்மதிக்குமாறு தூண்டும் கருத்துடன் கீழ்வரும் செயல்களில் ஒன்றைச் செய்தல் அல்லது உட்கிடையாக்குதல்.

(i) மெய்யல்லாத ஒன்றை, மெய்யென நம்பாத ஒருவர், மெய்யெனக் குறிப்பாகத் தெரிவித்தல்;

*(ii)* ஒன்றைத் தெரிந்திருந்தும்; அல்லது உண்மையென்று நம்பியிருந்தும், அதனை வேண்டுமென்றே மறைத்து வைத்தல்;

*(iii)* நிறைவேற்றும் எண்ணும் எதுவுமின்றி வாக்குறுதி அளித்தல்;

*(iv)* ஏமாற்றத்தக்க வேறெந்தச் செயலும் செய்தல்;

*(v)* மோசடியானதெனச் சட்டம் அறிவிக்கும் செயல் அல்லது செய்யாமை.

விளக்கம் : ஓர் ஒப்பந்தத்தில் ஈடுபடுவதற்கான ஒருவரது விருப்பத்தைப் பாதிப்பவை பற்றி ஒன்றும் சொல்லாமை மட்டுமே, மோசடியாகாது. ஆனால் அவர் சொல்ல வேண்டியது கடமை என்கிற சூழ்நிலையிலும் அல்லது அவர் சொல்லாதிருப்பதே சொல்லுவதற்குச் சமம் மோசடியாகிவிடும்.''

மோசடிக்கான முக்கிய கூறுகள் பின்வருமாறு :

*(1)* நபர் ஒருவராலோ அவருடைய முகவராலோ எடுத்துரைப்பு அல்லது உறுதிவாக்கு அல்லது பயன்படத்தக்க மறைவடக்கம் (Active Cancealment) செய்யப்பட வேண்டும்.

*(2)* அது பொருண்மைபற்றியதாக இருத்தல் வேண்டுமேயன்றிக் கருத்து அல்லது எண்ணத்தைப் பற்றியதாக இருத்தல் கூடாது.

*(3)* அதன் பொய்ம்மையை அறிந்தும் அல்லது அதன் உண்மையில் நம்பிக்கையற்றிருந்தும் அல்லது கவலையின்றி அதனை உண்மையா பொய்ம்மையா என்பதுபற்றி எண்ணாமலும் சொல்லப்பட்ட எடுத்துரைப்பாக இருக்கவேண்டும்.

*(4)* அத்தகைய எடுத்துரைப்பு அடுத்தவரைத் தூண்டி ஒப்பந்தம் மேற்கொள்ளச் செய்வதற்காகவே ஏற்படுத்தப்பட்ட ஒன்றாக இருத்தல் வேண்டும்.

*(5)* அடுத்த நபர் அத்தகைய எடுத்துரைப்பினால் தவறாக ஈர்க்கப்பட்டு, அழிக்கப்பட்டு, ஈடுபட்டிருத்தல் வேண்டும்.

**Redgrave** *vs*. **Hard** *(1881)* **20. Ch. D.** வழக்கில் எதிர்வாதியினை வீடு ஒன்றுடன் சட்ட முகவர் (Solicitor) வியாபாரத்தினையும் வாங்குவதற்கான ஒப்பந்தத்தில் ஈடுபட வாதி தூண்டினார். ஆண்டொன்றிற்கு £ 200 மட்டுமே கிடைத்த வியாபாரம் பற்றி ஆண்டொன்றிற்கு £ 300 கிடைப்பதாகத் திரித்துக்காட்டி எடுத்

துரைத்திருந்தார். ''ஏற்றது ஆற்றுக'' (குறித்துரைத்ததை நிறை வேற்றுக) என்ற கொள்கையின்படி வழக்கு ஒன்று வாதியால் தொடரப்பட்டது. அதற்கு எதிர்வாதி எதிரிடை வாதமாக ஒப் பந்தத்தை முறிக்கக் கோரியும், வாதி செய்திட்ட ஏமாற்றலுக்கு இழப்பீடு கோரியும் வாதிட்டான். வழக்கில் வாதி ஏமாற்றிய தாகக் கொள்ள இடமில்லை என்றும் எதிர்வாதி, வாதியின் எடுத்துரைப்பை நம்பியதில் தவறில்லை என்றும் தீர்ப்பு வழங்கப் பட்டது. மாசற்ற திரித்துக் காட்டல், மோசடி இவற்றின் முக்கிய கூறுகளை ஒத்திட்டுப் பார்த்திடின், எடுத்துரைப்பைத் தருகின்ற மன நிலையைப் பொறுத்த கூற்றினல்தான் இரண்டும் வேறுபடு கின்றன.

உண்மை மறைக்கப்பட்டுச் சொல்லப்படுகின்றபோது, எடுத் துரைப்பானது பொய்யாகிறது. 17-வது பிரிவில் உண்மையை மறைக்கின்றவன், பொய்யாக எடுத்துரைப்பினுக்குச் சமமாக எண்ணப்படுகிறுன். இதையே வேறு சொற்களால் கூறுவதானல், பொய்ம்மைக் குறிப்பு (Suggestio falsi)க் கூறுகின்றவனும் உண் மையை மறைத்தல் (Supressio veri) குற்றம் புரிந்தவனும் ஒத்த நிலையில் வைத்துக் கருதப்படுகின்றனர். அதே போன்று, பயன் படத்தக்க மறைவடக்கம் (Active Cancealment) அல்லது வலிய தான மறைவடக்கம் (Agressive Cancealment) சில காலங்களில் மோசடியாகிவிடும்.

சான்ருக : மரச்சாமானை விற்க எண்ணுபவர், வாங்குபவர் கண்டுபிடிக்காமலிருக்கும் பொருட்டு அதிலுள்ள துளைகளை மக்கு வைத்து மறைத்து (இலப்பம் வைத்து அடைத்தல்) அதன்மீது கனமான அளவில் வண்ணம்பூசி ஏமாற்ற நினைப்பாரானல், விற்பவர் மோசடிக் குற்றத்துக்குள்ளாவார்.

கீழ்க்காணும் மனநிலையிலுள்ள ஒருவர் எடுத்துரைப்பு (Re- presentation) செய்யலாம்.

(1) நியாயமான, போதுமான காரணங்களுடன் தம்மால் உண்மையென்று நம்பப்படுகின்றதை எடுத்துரைத்தல்.

(2) தக்க காரணங்கள் இல்லாநிலையில் தம்மால் உண்மை யென்று நம்பப்படுகின்றதை எடுத்துரைத்தல்.

(3) எடுத்துரைப்பின் மெய்ம்மை அல்லது பொய்ம்மை பற்றிக் கவலையின்றி வெளிப்படுத்தல்.

(4) பொய்ம்மையானது என்று தெரிந்திருந்தும் மற்றவரை ஏமாற்றும் எண்ணமில்லாமல் எடுத்துரைத்தல்.

(5) பொய்ம்மையானது என்று அறிந்து, ஏமாற்றும் எண் ணத்துடன் எடுத்துரைத்து ஒன்றனைக் கூறுதல்.

4, 5-ம் வகைகளில் காணப்படுகின்ற எடுத்துரைத்தல்கள் ஐயந்திரிபுக்கிடமின்றி மோசடிக் குற்றத்துக்குள்ளாகும். 3-வது வகையில் காணப்படுகின்ற எடுத்துரைப்பு மோசடிக் குற்றத்துக் குள்ளாகும் நிலையது என்பதனை Derry vs. Peek (1889) 14. A C. 337 பிரபல வழக்கினின்றும் அறிகின்றோம். எதிர்வாதிகள் ஒரு டிராம்வே நிறுவனத்தின் இயர்க்குநர்கள். அவர்கள் வெளியிட்ட திட்ட அறிவிப்பில் (Prospectus) நிறுவனம், குதிரைகளுக்குப் பதிலாக ஆவிசக்தி(Steam Power)யினைப் பயன்படுத்தப் போவ தாகக் கண்டிருந்தது. இத்தகைய அறிவிப்பு வாதியினை அந் நிறு வனத்தில் பங்குகள் வாங்கத் தூண்டிற்று. ஆனால் ஆவிசக்தி யினைப் பயன்படுத்துகின்ற உரிமையானது தொழிற்கழகத்தின் (Board of Trade) அங்கீகரிப்புக்குட்டது. ஆனால் தொழிற்கழகம் அங்கீகரிப்பினை நிறுத்தி வைத்தது. அதனால் நிறுவனமும் மூடப் பட்டது. பொய்யான தகவல் தந்து ஏமாற்றியதாக வாதி, இயக்குநர்கள்மீது வழக்குத் தொடர்ந்தார். மேன்முறையீடு நீதி மன்றத்தில் (Court of Apeal) "உண்மையாக எண்ணப்பட்டிருப் பினும், அங்கீகாரம் கிடைக்கும் என்பதற்கான போதுமான ஆதாரங்கள் இல்லாத நிலையில் இயக்குநர்கள் வெளியிட்ட திட்ட அறிவிப்பு, சட்டப்படியான மோசடியாகும்," என்ற வாதியின் கருத்து ஏற்கப்பட்டது. ஆயினும் பிரபுக்கள் அவை, இக்கருத்தை ஏற்க மறுத்து அத்தகைய எடுத்துரைப்பை மோசடியானதாகக் கொள்ள இடமில்லை எனத் தீர்ப்பு நல்கியது. இவ்வழக்கில், ஏமாற்றிய குற்றத்திற்கு உள்ளாக்க, மோசடி மெய்ப்பிக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டது.

அறிந்திருந்து அல்லது அதன் உண்மையில் நம்பிக்கையற்று, அல்லது அதன் மெய்ம்மை அல்லது பொய்ம்மையில் கவலையில் லாது வெளியிடப்பட்ட அறிவிப்பானல்தான் மோசடி மெய்ப் பிக்கப்படும். எதிர்வாதியின் நோக்கம் (motive) எது என்பது தேவையற்றது. மோசஞ்செய்கின்ற எண்ணமில்லாத நிலையில் ஏமாற்றுகின்ற எண்ணமில்லை என்று எடுத்துக்காட்டிடத் தேவை யில்லை என்றும் தீர்ப்பாயிற்று. மேலும் சட்டப்படியான மோசடி என்பதானது, சட்டப்படியான வெப்பம் அல்லது சட்டப்படி படியான குளிர்ச்சி என்று சொன்னல் எப்படியோ அதுபோன்று பொருளற்ற சொல்லாகும் என்றும் தீர்ப்பு வழங்கினர், எனவே 2-வது வகையில் கூறப்பட்டுள்ள சட்டப்படியான மோசடி (legal fraud) அல்லது சட்டத்தில் மோசடி (fraud in law) என்ற சொற் களினல் மோசடி குற்றமாகக் கருதப்பட்டதும் இவ்வழக்கினல் மறுக்கப்பட்டதைக் காணலாம். இவ்வழக்கினல் இரண்டாவது வகை நபர்கள் மாசற்ற திரித்துக்காட்டல் வகையில் வைத்து

எண்ணப்படுவர். முதல் வகையினரும் மாசற்ற திரித்துக் காட்டலில் வைத்து எண்ணப்படுவர்.

மோசடியால் பழுதடைந்த ஒப்பந்தம் தவிர்தகு நிலையை (voidable) தாகும்.

### மோசடியும், திரித்துக்காட்டலும் (Fraud and Misrepresentation)

மாசற்ற திரித்துக்காட்டல், ஓரவஞ்சகமான திரித்துக் காட்டல் இரண்டிலும் கூறப்படுகின்ற மெய்ம்மைகள் தவறானவை யாகின்றன. இவற்றில் ஏற்பட்ட ஒப்பந்தங்கள் தள்ளிவைக்கப் படினும், அவற்றின் மாறுபாடுகளை அறிவது நல்லது.

1. தருகின்ற தகவலை உண்மையென்று நம்பியோ, தவறானது என்று அறியாமலோ செய்யப்படுகின்ற ஒன்று மாசற்ற திரித்துக் காட்டலாகும். தவறானது என்று அறிந்திருந்தோ உண்மை யானது என்று நம்பாத நிலையிலோ தருகின்ற தகவல் மோசடி யானதாகும்.

2. ஒப்பந்தத்தைப் பழுதடையச் செய்கின்றதோடு அல் லாமல், மோசடியானது, உரிமைத் தீங்குமாம் (tort) நேர்மை நெறியினல் (Equity) மாசற்ற திரித்துக் காட்டால், ஒப்பந்தத் தைப் பழுதடையச் செய்யினும் உரிமைத் தீங்காகாது.

3. மோசடியான திரித்துக்காட்டலில் இழப்பீட்டினைப் பெறலாம். மாசற்ற திரித்துக் காட்டலில் சில சூழ்நிலைகளில் ஈட் டுறுதி (Indemnity) மட்டுமே பெறமுடியும். இதனல் மாசற்ற திரித்துக்காட்டல் (Invalidating Misrepresentation) என்றும் மற்றதைத் தொடர்தகு திரித்துக்காட்டல் (Actionable Misre-presentation) என்றும் சொல்லப்படுகின்றன.

4. திரித்துக்காட்டலில், தவற்றின்பால் வழிநடந்தவர், சராசரி அறிவினலேயே உண்மையை எளிதில் கண்டுகொள்ளும் நிலையில் இருப்பதால், ஒப்பந்தத்தை தவிர்ப்பினின்றும் தடுக்கப் படுவர். ஓரவஞ்சகமான மௌனத்திலிருந்த நிலையில்லாமல், மோசடியில் இது நடைமுறைக்கு ஒவ்வாதது.

### தீர்வழிகள் (Remedies)

மோசடி அல்லது கருதியே திரித்துக் காட்டலில் (Wilful Misrepresentation), உரிமைத் தீங்கின்கீழ்த் தனி நடவடிக்கை எடுப்பதற்கும் பாதிக்கப்பட்டவர் இழப்பீடு பெறுவதற்கும் உரிமையினை அடைவர். மாசற்ற திரித்துக் காட்டலில், இழப்பீடு

பெறுகின்ற உரிமை பெற இயலாது. ஆனல் அதற்குக் கீழ்க்காணும் மூன்று நிலைகளில் விலக்களிக்கப்படுகிறது.

(அ) முகவர் அதிகார நற்புறுதி முறிவு (Breach of Warranty of Authority of an Agent) Collen *vs.* Wright (1857) E.&B. 647.

முகவர் ஒருவர் தம் முதலவரின் பிரதிநிதியாக இருந்து, அதிகாரம் ஒன்றினை, உண்மையில் தனக்கு அப்படிப்பட்ட அதிகாரம் உள்ளதாக எண்ணிச் செயல்பட்டதற்காக முகவர் இழப்பீட்டிற்குக் கடப்பாடுடையவராக்கப்பட்டார். அவர் செய்த குற்றம் மாசற்ற திரித்துக்காட்டல் எனினும், மேற்சொன்ன வாறு தீர்ப்பு வழங்கப்பட்டது.

(ஆ) திட்ட அறிக்கையில் தவறான தகவல் முதலியவை (Mis-Statement in Prospectus, etc)

1956-ம் ஆண்டு இந்திய பங்கமைப்பு நிறுவனங்கள் சட்டத்தின் 62-வது பிரிவின்கீழ் சில பத்திரங்கள், திட்ட அறிக்கை முதலியவற்றில் காணப்படும் மாசற்ற திரித்துக்காட்டல்களுக்காக பங்கமைப்பு நிறுவன இயக்குநர்கள் இழப்பீட்டிற்குக் கடப்பாடுடையவராக்கப்படுவர். இது Derry *vs.* Peek வழக்கின் முடிவினல், சட்ட மன்றம் ஏற்படுத்திய மாறுதலாகும்.

(இ) நம்பிக்கை உறவு (Confidential Relationship) கொண்டிருக்கும் இருவரிடையே ஒருவர், கவனமின்மை காரணமாகத் தரப்படுகின்ற தகவலினல் கடப்பாட்டிற்கு உள்ளாக்கப்படுவார்.

Nocton *vs.* Ashburton (1914) A.C. 932 என்ற வழக்கில் சட்ட முகவர் (Solicitor) வழக்காடி (Client) இருவரிடையேயும் இத்தகைய நம்பிக்கை உறவு உள்ளது என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

I மோசடி, மாசற்ற திரித்துக்காட்டலில் ஒப்பந்தம் தவிர்தகு நிலையதாகும். பாதிக்கப்பட்டவர் தெளிவான இசைவு (Free Consent) இல்லாத காரணம் காட்டி ஒப்பந்தத்தை முறிக்கலாம். மீட்டடைவிப்புக்கு (Restitution) வழிவகை இருந்தாலொழிய ஒப்பந்த இறுத்த (Rescission)த்திற்குத் தீர்வழி கிடையாது. மூன்றும் நபர்களின் உரிமைகள் குறுக்கிடுவதற்கு முன்பாக, ஒப்பந்த இறுத்தம் கோருகின்ற நபர் காலம் தாழ்த்தாமல் வழக்கு மன்றத்தினை உடனடியாக நாட வேண்டும். வஞ்சிக்கப்பட்ட நபரால் மோசடியினை எளிதில் கண்டுபிடிக்க முடியாதபோது, மூன்றும் நபர்களின் உரிமை குறிக்கிடாத வரையில் காலந்தாழ்த்தல் அவ்வளவாக எண்ணப்படுவதில்லை.

II இரண்டிலும் நேர்மை நெறியின்பால் தீர்வழி காண "ஏற்றது ஆற்றுக" (Specific Performance) (குறித்துரைத்ததை நிறைவேற்றுக) என்று வழக்குத் தொடரின், பாதிக்கப்பட்ட நபர் அதனை வெற்றிகரமாகத் தடுக்கலாம்.

III பாதிக்கப்பட்டவர், இரண்டிலும், ஒப்பந்த முறிவுக்கான இழப்பீடு செலுத்த தன்மீது கொடுக்கப்பட்ட வழக்கினை எதிர்க்கலாம்.

IV இரண்டிலும் ஒப்பந்தங்கள் தவிர்தகு நிலையன என்பதனால், பாதிக்கப்பட்டவர் விரும்பினால் ஒப்பந்தத்தை உறுதி செய்து மற்றவரைச் சட்டரீதியாக வற்புறுத்தலாம். ஆனால் ஒரு முறை உறுதி செய்த பின்னர், அவர் ஒப்பந்த இறுத்தம் கோர இயலாது என்பதனை இ. ஒ. சட்டத்தின் 19-வது பிரிவு தெளிவாக்குகிறது.

# 11. இசைவில் குறைபாடு—வலுக்கட்டாயமும் தகாநிலை வற்புறுத்தமும்

## (Coercion and Undue Influence)

வலுக்கட்டாயத்தினால் அல்லது தகாநிலை வற்புறுத்தலினால் மேற்கொண்ட ஒப்பந்தம், அத்தகைய நிலைக்குள்ளான நபரின் விருப்பத்திற்கிணங்க தவிர்தகு நிலையதாகும். இங்கிலாந்துச் சட்டத்தில் காணப்படும் உடற்கட்டாயம் அல்லது பயமுறுத்தல் இந்தியச் சட்டத்தில் காணப்படும் வலுக்கட்டாயத்துடன் ஒத்துள்ளது.

உடற்கட்டாயம் (Duress) ஒப்பந்தத்திற்குச் சம்மதிக்குமாறு செய்வதற்கு உடல்வருத்தம் விளைவித்தல் அல்லது சிறைப்படுத்துதல் அல்லது அவ்வாறு செய்வதாக அச்சுறுத்தல் என உடற் கட்டாயத்திற்கு வரைவுரை செய்யப்பட்டுள்ளது. இங்கிலாந்தில் தகாநிலை வற்புறுத்தல் என்பதன்கீழ் வளர்ந்துள்ள நேர்மை நெறியின் அதிகாரவரம்பினால் உடற்கட்டாயத்தினால் ஒப்பந்தம் செல்லுநிலையாகாதிருந்து வழக்கொழிந்தது. இந்தியச் சட்டத்திலுள்ள வலுக்கட்டாயமானது, உடற்கட்டாயத்தைவிடப் பரந்த பொருள் கொண்டதாகின்றது. இந்தியக் குற்றவியல் சட்டாரத்தின்கீழ்த் தவிர்க்கப்படுகின்ற எச்செயலைச் செய்யினும் வலுக்கட்டாயம் எனக் கருதப்படுகின்ற நிலையில், உடற்கட்டாயம் என்பதாவது, உடலுக்குச் செய்யப்படும் துன்பத்தையும் சிறையிடுதலையுமே குறிப்பிடுகிறது. அதுவே இரண்டினுக்குமுள்ள முக்கிய வேறுபாடாகும்.

**Ranganayakamma *vs.* Alwar Chetty (1889) 13 MAD. 214**

'க' என்பவரை மகவேற்பு (Adoption) செய்து கொள்ள 13 வயது இந்திய விதவை வலுக்கட்டாயப் படுத்தப்பட்டார். அவ்விதம் அவர் மகவேற்பு செய்தபின்னரே, அவர் கணவரின்

சவத்தை எடுத்துச்சென்று எரிக்க அன்னாரின் உறவினர் அனுமதித்தனர். வழக்கில் சவத்தினை எடுக்காமல், விதவையின் உணர்வுகளை அவமதிக்க எண்ணின செயலின் மூலம் வலுக் கட்டாயம் வெளிப்பட்டது ; அதனுல் விதவை உந்தப்பட்டு ஒப்பந்தம் மேற்கொண்டதால், அவ்வொப்பந்தம் தவிர்தகு நிலையதாகும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

**வலுக்கட்டாயம் :** ஓர் உடன்பாட்டில் ஒருவரைச் சேரும்படிச் செய்யும் கருத்துடன், இந்தியக் குற்றச் சட்டாரத்தில் விளக்கப் பட்டுள்ள செயல் எதையும் செய்தல், செய்யப்போவதாக அச்சுறுத்தல், மற்றவரது சொத்தினை இவருக்குப் பாதகம் விளையும் வகையில் சட்ட முரணுக நிறுத்திவைத்தல், நிறுத்திவைப்பதாக அச்சுறுத்தல் வலுக்கட்டாயமாகும். (இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 15-வது பிரிவு).

வலுக்கட்டாயம் செலுத்தப்படுகின்ற இடம் இந்தியக் குற்றச் சட்டாரம் செல்லாற்றில் உள்ள இடமாக இருத்தல் வேண்டும் என்னும் நியதி இல்லை.

உடற்கட்டாயத்திற்கும் வலுக்கட்டாயத்திற்கும் உள்ள வேறுபாட்டினைக் கீழ்வரும் அட்டவணையில் காணலாம்.

| (COERCION) வலுக்கட்டாயம் | DURESS உடற்கட்டாயம் |
|---|---|
| 1. யாருக்கு எதிராகவேனும் அல்லது முற்றிலும் புதியவருக்கு எதிராகவேனும் இதனைக் கடைப்பிடிக்கலாம். | 1. மறு ஒப்பந்தக்காரரின் அல்லது அவர் குடும்ப நபர்களின் உயிர், அல்லது உரிமைக்கெதிராகக் கடைப் பிடிக்கப்படுவது. |
| 2. பொருள்களைச் சட்டத்திற்குப் புறம்பான முறையில் நிறுத்தி வைத்தல் வலுக் கட்டாய மெனப்படும். | 2. பொருள்களைச் சட்டத்திற்குப் புறம்பான முறையில் நிறுத்துதல், உடற் கட்டாயம் ஆகாது. |
| 3. ஒப்பந்தத்தின் மூலம் பயன் அடைகின்றவர்தாம், வலுக் கட்டாயம் செய்ய வேண்டும் என்பதில்லை. எவரும் செய்யலாம். | 3. ஒப்பந்தக்காரரில் ஒருவர் அல்லது அவர் முகவரால் தான் உடற் கட்டாயம் செய்யப்படல் வேண்டும். |
| 4. உடனடியான கொடுமைக்குள்ளாக வேண்டியதில்லை. | 4. உடனடியான கொடுமை தரக்கூடியதாக அமைய வேண்டும். |
| 5. சாதாரண திடமனங் கொண்டவரைப் பாதிக்கக் கூடியதாக இருத்தல் வேண்டும் என்பதில்லை. | 5. சாதாரண திடமனங் கொண்டவரைப் பாதிக்கக் கூடியதாக இருந்தாலே போதுமானது. |

## தகாநிலை வற்புறுத்தம் (Undue Influence)

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 16 (1)-ம் பிரிவில் இதற்கான வரைவுரை காணப்படுகிறது.

ஓர் ஒப்பந்தம் செய்துகொண்ட தரப்பினர் இருவரில் ஒருவர், மற்றொருவரது சிந்தனைத் திறனை அடக்கி, அந்நிலையில் நேர்மையில்லாத வழியில் ஒரு நலனைத் தாம் அடைந்து கொண்டால், அவ்வொப்பந்தம் தகாநிலை வற்புறுத்தத்தால் எழுந்ததாகும். இதனையே கொள்நிலை மோசடி (Constructive Fraud) என்பர். ஒப்பந்தக்காரரில் ஒருவரிடம் மற்றவர் நேர்மையான முறையில் நடந்து கொள்ளாத எல்லா ஒப்பந்தங்களும் இத்தகைய தகாநிலை வற்புறுத்தம் உடையதாகக் கொள்ளப்படுகின்றன. பெற்றோர் அவர்தம் மக்கள் (Parent and Child), காப்பாளர்-காப்பாள் (Guardian and Ward), பொறுப்புரிமையர்-பயனுளி (Trustee and Beneficiary), மதகுகுரு-சீடர் (Spiritual Master and Disciple), வழக்கறிஞர்-வழக்காடி (Lawyer and Client), மருத்துவர்-நோயாளி (Doctor and Patient) ஆகியவரிடையே காணப்படுகின்ற உறவு முறைகளில் தகாநிலை வற்புறுத்தம் ஏற்படுகின்றன எனத் துணிபு (Presumption) கொள்ளலாம்.

Allcard vs. Skinner (1887) 36. Ch. D. 145. செல்வி ஆல்கார்டு (Allcard) என்னும் பெண் அறப்பணி மன்றம் (Sister Hood) ஒன்றில் சேர்ந்து எதிர்வாதியான ஸ்கின்னரின் (Skinner) கீழ்ச் சிலகாலம் அறநெறிக் கட்டுப்பாட்டில் இருந்து வந்தார். அது போது தம் சொத்துக்களில் பெரும்பகுதியினை அந்த அறவாலயத்திற்குக் கொடுத்துவிட்டார். அதனை விட்டு வெளியேறி ஆறு ஆண்டுகளுக்குப் பின்னர் தன் சொத்துக்களை மீட்டுக்கொள்ள வழக்குத் தொடர்ந்தார். இருவரிடையே இருந்த உறவு, தகாநிலை வற்புறுத்தம் பற்றிய துணிபினைக் கொள்ள வழியிருப்பினும், அத்தகைய உறவு நீங்கி ஆறு ஆண்டுகள்வரை ஒருவித நடவடிக்கையும் மேற்கொள்ளாத அவரது செய்கை அவர் கொடுத்த நன்கொடையினை உறுதி செய்வதாக உள்ளது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

Jean Mackenzie vs. Royal Bank of Canada (1934) P.C. 210 வழக்கில் கணவன் மனைவியிடையே தகாநிலை வற்புறுத்தம் எழக்கூடிய துணிபு இல்லை எனவும், பாதுகாக்கப்படுகின்ற நபருக்கு, ஒப்பந்தத்திற்குப் பின்னரன்றி முன்னதாகவே தனியான யோசனைகள் வழங்கப்பட்டன என மெய்ப்பித்து, அத்தகைய தகாநிலை-

வற்புறுத்தம்பற்றிய துணிபு இல்லை எனக் கூற வேண்டும் என்று தீர்ப்பாகியது.

**Palanivelu Mudaliar *vs.* Neelavathi Ammal (1937) I. M. L. 719 (P.C.)**

தமக்கை கணவரின் பாதுகாப்பில் இருந்த இரண்டு அனாதை சகோதரிகள் வயதடைந்தபின்னர், அவர் பெயருக்கு எழுதிக் கொடுத்த கடனுறுதிச் சீட்டுப்பற்றி வழக்கு எழுந்தது. வழக்கு இ. ஒ. சட்டத்தின் 16-வது பிரிவின்கீழ் அடங்கும் தகுதியுடையது என்றும், பெறுபவர் (Payee) ஒப்பந்தத்தின் நல்லெண்ணம் பற்றி மெய்ப்பிக்க வேண்டிய நிலையில் இருப்பதாகத் தீர்ப்பளிக்கப் பட்டது.

தகாநிலை வற்புறுத்தம் பற்றிய துணிபை வேறு சில சூழ்நிலைகளிலும் கொள்ள இடமுண்டு.

**Tungabai, Kumbhojkar *vs.* Yssh want Dinkar Jogand Anuther (1944) 2. M L J. 350. (P.C)**

வறிய நிலையினை அடைந்த கணவன் ஒருவன் தன் மனைவியின் சொத்துகளைப் பராமரித்து வந்தான். அவன் பெற்ற கடன்களுக்காக, அவன் விருப்பத்திற்கிணங்க கையெழுத்து மட்டுமே போடத் தெரிந்த கற்றறியா மனைவி தன் சொத்து முழுவதையும் கடனாளரிடம் அடைமானம் செய்துவிட்டாள். வழக்கில் மனைவி சுதந்திரமான முகவர் அல்லர் என்றும், தகாநிலை வற்புறுத்தத்தினால் எழக்கூடிய துணிபு பற்றிய முழு நிலைமைகளை உணர்ந்த கடனாளர், கடனாளியான கணவருடன் ஒத்தநிலையில் வைத்து எண்ணக்கூடியவராகவே காணப்படுவதனால், அடைமானத்தை வலியுறுத்த இயலாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

Bomze *vs.* Bomze 1931) I. C. H. 289—வழக்கில் திருமண ஒப்பந்தம் மேற்கொண்ட இருவரிடையே தகாநிலை வற்புறுத்தம் பற்றிய துணிபு காதலிக்குச் சாதகமாகவே தீர்மானிக்கப்பட்டது.

**Inche Noriah *vs.* Shaik Allie Bin Omar (1929) A.C. 127**

வழக்கில் நம்பக உறவுள்ள (Fiduciary Relationship) இருவரிடையே எழும் தகாநிலை வற்புறுத்தம் பற்றிய துணிபினை மறுக்க, வற்புறுத்தப்பட்ட நபருக்குத் தனியான சட்ட ஆலோசனைகள், ஒப்பந்தத்தின் முழு விபரம் அறிந்த ஒருவரால் வழங்கப்பட்டன என்று கூறி மெய்ப்பித்தல் வேண்டும். அறியமுடியாத ஒப்பந்த

மானது தகாநிலை வற்புறுத்தத்தினால் ஏற்பட்டிருப்பின், ஒப்பந்தத்தில் கண்டுள்ள வட்டி விகிதத்தினை வழக்கு மன்றம் குறைக்கலாம் என, 16-வது பிரிவு வகுத்துள்ளது.

19-வது A பிரிவில் தகாநிலை வற்புறுத்தத்தினால் பழுதடைந்த ஒப்பந்தம் தவிர்தகு நிலையாகும்போது, அதனைத் தவிர்க்க விழையும் நபருக்கு வழக்கு மன்றம் சில நியாயமான, அவசியமான கட்டுவரம்புகளை விதிக்கலாம் எனக் கூறப்பட்டுள்ளது.

குறித்தவகை மாற்றீட்டுச் சட்டத்தின் 35-வது பிரிவில் ஒப்பந்தத்தை எழுத்தில் விரும்பிய ஒப்பந்தக்காரர், ஒப்பந்தம் தவிர்தகு நிலையது அல்லது வாதியினால் முடிக்கவல்லது என்றுகின்ற நிலையில், அதனை முறித்துக்கொள்ள வழக்குத் தொடரவும் 38-வது பிரிவில் அத்தகைய நிலையில் நியாயவழியில் அவருக்கு இழப்பீடு செய்யப்படவும் வழிவகை செய்துள்ளது.

# 12. சட்டத்திற்குகந்த மறுபயனும், நோக்கமும்

## (Lawful Consideration and Objtect)

ஓர் ஒப்பந்தத்தைச் செல்லுநிலையாக்கக்கூடிய கூறுகளாகக் கீழ்வருவன உள்ளன:

(அ) ஒப்பந்தம் மேற்கொள்பவர்கள் அதற்கான தகுதி படைத்தவர்களாக இருத்தல் வேண்டும்.

(ஆ) ஒப்பந்தக்காரர்களிடையே தன்னிச்சையான இசைவு ஏற்படுதல் அவசியம்.

(இ) ஒப்பந்தத்திற்கான மறுபயனும், நோக்கமும் சட்டத்திற்குகந்ததாக அமைதல் முக்கியம்.

முற்கூறிய இருகூறுகள் பற்றி முன் அத்தியாயங்களில் விளக்கமாகக் கண்டோம். இனி மறுபயன், நோக்கம்பற்றி இவ்வத்தியாயத்தில் ஆராயமுற்படுவோம்.

இ. ஒ. சட்டத்தின் 10-வது பிரிவு, சட்டத்திற்குகந்த மறுபயனின் பொருட்டும், சட்டத்திற்குகந்த நோக்குள்ளதாகவும் உடன்பாடுகள் ஏற்படின் ஒப்பந்தங்களாகும் என்று சட்டம் இயற்றியுள்ளது.

சான்று :

(அ) 'அ' தன் வீட்டினை ரூபாய் 10,000-க்காக 'ஆ' வுக்கு விற்பனை செய்ய உடன்பாடு கொண்டான். இங்கே ரூபாய் 10,000 தர 'ஆ' தரும் உறுதியுரையானது வீடு விற்கும் 'அ' வின் உறுதியுரைக்கு மறுபயனும் 'அ' வீடு விற்க தரும் உறுதியுரை மற்றும் ரூபாய் 10,000 கொடுக்கும் 'ஆ' வின் உறுதியுரைக்கு மறுபயனும் ஆகிய இரண்டும், சட்டத்திற்குகந்த மறுபயன்களாகும்.

(ஆ) 'ஆ' வுக்கு 'இ' தரவேண்டிய பணத்திற்காக ஆறு மாத காலக்கெடு 'இ'-க்குத் தரும்படியும் அப்படி 'இ' தவறினல் தான் தருவதாக 'அ' உறுதியுரை 'ஆ' வுக்குச் செய்து 'ஆ' வும் இசைந்து கால கெடு தந்தான். இதில் ஒவ்வொருவரின் உறுதியுரைகளும் மற்றவரின் உறுதியுரைகளுக்கு மறுபயன்களாயின. அனைத்தும் சட்டத்திற்குகந்த மறுபயன்களாகும்.

(இ) 'ஆ' தந்த பணத்திற்காகப் பயணத்திலுள்ள தன் கப்பல் உடைந்துவிடின் அதற்கான மதிப்பை 'ஆ' வுக்குத் தருவதாக 'அ' உறுதியுரை அளித்தான். 'ஆ' வின் உறுதியுரை மறுபயனுயிற்று. இரண்டும் சட்டத்திற்குகந்த மறுபயன்களாயின.

(ஈ) 'ஆ' வின் குழந்தையைப் பராமரிக்க ஆண்டொன்றுக்கு 'அ' வுக்கு ரூபாய் 1000 தர 'ஆ' உறுதியுரை அளித்தார் 'அ' வும் குழந்தையைப் பராமரிக்க உறுதியுரை செய்தார். இருவருடைய உறுதியுரைகளும் மற்றவரின் உறுதியுரைகளுக்கு மறுபயன்களாயின. இவை சட்டத்திற்குகந்த மறுபயன்களாகும்.

இ. ஒ. சட்டத்தின் 23-வது பிரிவில், சட்டத்திற்குப் புறம்பான மறுபயன்கள் ஐந்தினைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது.

(அ) சட்டத்தினல் விலக்கப்பட்ட மறுபயன்

(ஆ) மறுபயன் அனுமதிக்கப்படின், சட்டத்தின் விதிகளைப் புறக்கணிக்கின்ற மறுபயன்.

(இ) மோசடியான அல்லது ஒரவஞ்சகமான மறுபயன்.

(ஈ) நபருக்கோ அல்லது அவருடைய பொருளுக்கோ உரிமைத் தீங்கினை (Injury) உட்கிடையாக்கும் அல்லது உட்படுத்தும் மறுபயன்

(உ) வழக்குமன்றம் கருதும் ஒழுக்கமுரணுன அல்லது பொதுக்கொள்கைக்கு எதிரான மறுபயன்கள்

மேற்சொன்ன ஐந்துவகையான மறுபயன்களும், நோக்கங்களும் அல்லாத பிற மறுபயன் அல்லது நோக்கம் கொண்ட உடன்பாடு, சட்டத்திற்குகந்ததாகக் கருதப்படுகிறது, மேற்சொன்ன ஐந்து வகைகளில் காணப்படும்மறுபயன் அல்லது நோக்கம் சட்டத்

திற்குப் புறம்பானதாகிறது. அத்தகைய மறுபயன் அல்லது நோக்கம் கொண்ட உடன்பாடு இல்லா நிலையது என்று 23-வது பிரிவு தெளிவாக்குகிறது.

சட்டத்திற்குப் புறம்பான உடன்பாடுகளை மூன்று பெரும் பிரிவுக்குள் அடக்கலாம். அவையாவன :

(i) சட்டத்திற்கெதிரான உடன்பாடு அல்லது இயற்றிய சட்டம் (Statute Law) அல்லது பொதுச்சட்டம் (Common law) இவற்றிற்கு மாறுபட்ட உடன்பாடு.

(ii) ஒழுக்கமுரண் (Immoral), அதாவது பொது ஒழுக்கத்திற்கு எதிரிடையானது. சான்றாகச் சட்டப்புறம்பான கலவி கொள்ள மேற்கொள்ளும் உடன்பாடுகள் (Agreements for illicit Cohabitation) அல்லது கணவன்-மனைவி பிரிந்திருக்கச் செய்கின்ற உடன்பாடுகள் (Separation between Husband and Wife).

(iii) பொதுக் கொள்கைக்கு எதிரிடையான (Opposed to Public Policy) அதாவது நாட்டு நடப்புக்கு ஏற்றதன்று, முரணானது என்று விலக்கப்பட்ட உடன்பாடுகள். சான்றுகளாக :

(i) பொதுப் பதவிகளில் அமர்த்த பணம் பெறுதலும் (Sale of Public Offices) செல்வாக்கினை ஊழலுக்குப் பயன்படுத்துதலும் (Use of Corrupt Influence),

(ii) குற்றமற்ற வழக்குத் தொடர்வினை வெளிப்படாமலிருக்க (Stifling of Prosecution) செய்கின்ற உடன்பாடுகள்,

(iii) நீதிமுறையினைத் தவறான தவறான வழிக்குப் பயன்படுத்திக் கொள்ளும் உடன்பாடுகள் (Ubuse of Legal Process),

(iv) பெற்றோரின் உரிமைகளைத் தடுத்து நிறுத்தச் செய்கின்ற உடன்பாடுகள்,

(v) திருமணத்தைத் தடுத்து நிறுத்த மேற்கொள்ளும் உடன்பாடுகள்,

(vi) வாணிகம் அல்லது தொழிலைத் தடுத்து நிறுத்த மேற்கொள்ளும் உடன்பாடுகள் இதன்பால் அடங்குகின்றன.

**சட்டத்திற்கெதிரான உடன்பாடுகள் (Illegal Agreements)**

முன்னர் வகைப்படுத்தியதினின்றும் சட்டத்திற்கெதிரான உடன்பாடு ஒவ்வொன்றும் சட்டத்திற்குப் புறம்பானது என்பது

தெரிகிறது. ஆனால் அதற்கு நேரடியாகச் சட்டத்திற்குப் புறம்பான உடன்பாடு ஒவ்வொன்றும் சட்டத்திற்கெதிரானவையாகா. இரண்டிற்குமுள்ள வேறுபாட்டினை அறிந்து கொள்வது நலம். சட்டத்திற்கெதிரான உடன்பாடானது ஒப்பந்தத்தை இல்லா நிலையதாக்குவதுடன் அதன் தொடர்பான மற்றைய தொடர்புகளையும்' இல்லாநிலையாக்கும். ஆனால் சட்டத்திற்குப் புறம்பான உடன்பாடானது, உடனடி ஒப்பந்தக்காரர்களிடை ஏற்பட்ட ஒப்பந்தத்தைத்தான் இல்லாநிலையாக்குகின்றதே தவிர தொடர்புடைய ஏனைய தொடர்புகளைப் பாதிப்பதில்லை.

பொது ஒழுக்கத்திற்கு முரணான, அல்லது குற்றங்கள் ஏற்படுத்துகின்ற செயல்கள் அனைத்தும் சட்டத்திற்கு எதிரானவையாகும். நேரடியாகவோ, மறைமுகமாகவோ சட்டத்திற்கு எதிராகச் செய்கின்ற அத்தகைய உடன்பாடுகளினால் ஏற்பட்ட ஒப்பந்தங்களை வழக்கு மன்றங்கள் சட்டப்படி வலியுறுத்தி மறுக்கும். பொது ஒழுக்கத்திற்கு முரண்படாத அல்லது குற்றமாக எண்ணப்படாத ஆனால் பொதுக் கொள்கையின் சில காரணங்களினால் சட்ட அங்கீகாரம் பெறாத ஒன்றனை வழக்கு மன்றமானது சட்டத்திற்குப் புறம்பானது என்று அறிவிக்குமேயொழிய, சட்டத்திற்கு எதிரானதன்றன்று என்பது கவனிக்கத்தக்கது,

**Velu Padayachi** *vs*. **Siva Sooriam I.L.R. 1950 MAD. 987. (F.B)**

பட்டைச் சாராய வியாபாரம் செய்ய ஒரு நபருக்கு உரிமை வழங்கப்பட்டது. அவருடன் மற்றவரும் கூட்டுச் சேர்ந்திருந்தார். அத்தகைய கூட்டானது, உரிமம் (Licence) பெறுவதற்கு முன்பே ஏற்பட்டிருப்பினும் ஆப்காரி சட்டத்தின் (Abkari Act) கீழுள்ள விதின்களின்படிஉரிமம் வழங்கப்பட்டிருப்பதைத் தவிர ஏனையவர் அதில் உரிமை பெற்று வியாபாரம் செய்வது விலக்கப்பட்டுள்ளதுடன் தண்டனைக்குரியதாகவும் காணப்படுகிறது. எனவே கூட்டாளி கணக்கு வழக்குகளைச் சரிபார்த்ததில் ;தனக்குச் சேர வேண்டிய பாக்கியினைப் பெற உரிமை இயல் வழக்குத் தொடர இயலாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**Srinivasa Rao** *vs*. **Rajarama Mohana Rao (1951) 2.M.L.J. 264**

1929-ம் ஆண்டு குழந்தைத் திருமணத் தடைச் சட்டத்திற்கு எதிரான முறையில் 'ஆ' தன் குழந்தைக்குத் திருமணம் செய்ய 'அ'விடமிருந்து பணம் பெற்றிருந்தார். அத்தகைய திருமணம் சட்ட நிலையற்றது—அன்று எனினும், 23-வது பிரிவுப்படி கடன் கொடுத்த நோக்கம், பொதுக் கொள்கைக்கு மாறான ஒன்று என்பதனால் சட்டத்திற்குப் புறம்பானது என்று தீர்மானிக்கப்

பட்டு 'ஆ'விடமிருந்து பணம் திரும்பப்பெற 'அ'வினால் முடியாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

1. சட்டத்தினுல் விலக்கப்பட்ட உடன்பாடுகள்

(1) அ, ஆ, இ மூவரும் மோசடியால் பெறும் பலனைப் பங்கிட்டுக் கொள்ள உடன்படுகின்றனர். நோக்கம் சட்டப் புறம்பானது என்பதனுல், இந்த உடன்பாடு இல்லாநிலையதாகும்.

(2) 'ஆ'வுக்கு, பொது அலுவலகம் ஒன்றில் வேலை வாய்ப்புத் தேடித்தர 'அ' உறுதியுரை அளித்தான். 'அ'வுக்கு ரூபாய் 1000/- தர 'ஆ' உறுதியுரை செய்தான். இம் மறுபயன் சட்டப்புறம்பானது என்பதால், இந்த உடன்பாடு இல்லாநிலையினை அடையும்.

(3) திருட்டுக் குற்றத்திற்காக 'ஆ'வின் மீது தொடரப்பட்ட வழக்கினைத் திரும்பப்பெற 'அ' உறுதியுரை செய்தான். 'ஆ'வும் திருட்டுப் பொருள்களைத் திருப்பித் தந்துவிட உறுதியுரை அளித்தான். இந்த நோக்கம் சட்டப்புறம்பானது ஆனதால், உடன்பாடும் இல்லாநிலை எய்தியது.

மறுபயனும் நோக்கமும் :

வாக்குறுதி அளிப்பவர் விரும்பியபடி வாக்குறுதி பெற்றவர் அல்லது மற்றொருவர் செய்யும் செயல், செயல் தவிர்ப்பு அல்லது அளிக்கும் உறுதியுரை மறுபயனுகும். நோக்கமானது உடன்பாடு கொண்ட எண்ணத்தைக் குறிப்பதாகும். சான்றுக : அடுத்த நாட்டின்மீது படைதொடுக்கப் போதுமான தளவாடங்கள் தர ஒப்பந்தமாகியது என்று கொண்டால், அதில் மறுபயன் என்பது பல உறுதியுரைகள் கொண்டதாகலாம். ஆனுல் நோக்கமானது 'படைதொடுத்தல்' என்ற ஒன்றே தான்.

இயற்றிய சட்டம் அல்லது பொதுச் சட்டத்தினுல், உடன்பாடு விலக்கப்படுவதானது, அத்தகைய உடன்பாடுகளைச் சட்டத்திற்குப் புறம்பானதாக, அல்லது சட்டத்திற்கு எதிரானதாகச் செய்திடத்தான் என்பது கண்கூடு.

விலக்கப்பட்ட உடன்பாடு சட்டத்திற்கு எதிரானதா அல்லது புறம்பானதா என்பதனைக் குறிப்பிட்ட சட்டத்தின் வரைமுறைகளின் கட்டுவாசகத்தைப் பொருத்தே அறிய இயலும்.

பகடைப் பணைய ஒப்பந்தங்கள் (Wagering Contracts)

தங்களுக்கு அக்கறை ஏதும் இல்லாததும், நிச்சயமில்லாததுமான நிகழ்வினைப் பொறுத்து ஒருவர் பணம் பெறுவதாகவும்,

மற்ருருவர் அதை இழப்பதாகவும் செய்து கொள்ளப்படும் உறுதியுரை, பகைடைப் பணயம் என்று கூறப்படும். இது சட்டச் செல்லாற்றல் இல்லாதது.

குறிப்பிட்ட நாளில் மழை பெய்யின் 'ஆ'வுக்கு ரூபாய் 10 தர 'அ' உறுதியுரை அளித்தும் அவ்விதம் பெய்யாவிடில் 'ஆ' ரூபாய் 10-ஐ 'ஆ'வுக்குத் தரவும் உறுதியுரை அளித்தான். இது பகடைப் பணயமாகும். தீர்மானிக்கப்பட்ட ஒன்றைப் பற்றி அறியாத இருவர் பகடைப் பணயம் வைக்கலாம். எவரெஸ்ட் சிகரத்தின் உயரம் பற்றி இருவர் மேற்கொள்ளும் ஒன்று இவ்வகையினைச் சேரும்.

இங்கிலாந்துச் சட்டம் இத்தகைய ஒப்பந்தங்களைச் செல்லா நிலையாக்கி, வழக்குரிமை இல்லாததாகவும் செய்துள்ளது. இவ் வொப்பந்தங்களில் செலுத்தப்பட்ட எத்தகைய பணத்தையும் திரும்பப் பெற இயலாது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 30-வது பிரிவு, பகடைப் பணய உடன்பாடுகளை இல்லாநிலையாக்கியுள்ளது.

பகடைப் பணயத்தில் வெற்றி பெற்றதாகவோ, தீர் மானிக்க இயலாத ஒன்றுபற்றிப் பகடைப் பணயத்தில் மேற் கொண்ட செயலுக்காகவோ, மற்றவரிடம் எந்தவிதமான விளை யாட்டு நடவடிக்கைகளிலும் ஈடுபட்டு அதன் முடிவுக்குக் கட்டுப் படச் செய்தும் ஒப்புவிக்கப்பட்டது பற்றியோ வழக்குத் தொடர இயலாது என்பதனை இப்பிரிவு அறிவிக்கிறது.

இவ்விதியில் ஒரு விலக்குமட்டும் கூறப்படுகிறது. குதிரைப் பந்தயத்தில் வெற்றி பெறுபவருக்கு அளிக்கப்படும். ரூபாய் 500/-க்கு மேல் மதிப்புள்ள தட்டு (Plate) பரிசுக்கு மட்டும், பகடைப் பணயத்தினின்றும் விலக்களிக்கப்பட்டுள்ளது.

எனவே, இந்தியாவில் பகடைப் பணயம் சட்டத்திற்கு எதி ரானதன்று; ஆனால் இல்லாநிலையது. எனவே, அதன் தொடர் பான மற்றைய உடன்பாடுகள் பாதிக்கப்படுவதில்லை.

Muthusamy Pillai vs. Veerasamy Pillai (1936) 70 M.L.J. 433.

வாதியும் எதிர்வாதியும் உடன்பட்டுச் சமமான அளவில் பணமுதலீடு செய்து குதிரைப் பந்தயம் ஆடினர். எதிர்வாதியின் பெயரில் கட்டிய பந்தயப் பணத்திற்கான வெற்றித் தொகையை எதிர்வாதி பெற்றுக்கொண்டு வாதிக்குச் சமபங்கு அளிக்க

மறுத்து விட்டார். வழக்கில் வாதி கொடுத்த பாதி பணத்தைப் பெற்று ஆதாயம் அடைந்த எதிர்வாதியிடமிருந்து 30-வது பிரிவின் கீழ் வாதி தனக்குச் சேரவேண்டிய பாதி தொகையினை உரிய வட்டி விகிதத்துடன் பெறத் தடை ஏதும் இல்லை எனத் தீர்ப்பாயிற்று.

**காப்பீடு ஒப்பந்தங்கள் (Insurance Contracts)**

வில்லியம் ஆன்சன் காப்பீடு ஒப்பந்தமும் பகடைப் பணையமே, ஆயினும் வழக்கு மன்றத்தில் சட்டப்படி வலியுறுத்தல் செய்யப் படக்கூடியதாகும் என்று கூறுகிறார். ஆனால் போர்டரும் ஏனையோரும் காப்பீடு ஒப்பந்தம், பகடைப் பணையத்தை ஒத்தது போல் தோன்றுகின்றதே தவிர, உண்மையில் அது ஒரு ஈட்டுறுதி ஒப்பந்தமே என்று தகுந்த காரணங்களுடன் விளக்கினார்கள்.

**வணிகப் பகடைப் பணையங்கள்**

வியாபாரம் நடைபெறும் இடங்களில் பொருள்களின் வாங்கிய விலை. விற்ற விலை, பங்குகளின் விலை மாற்றம் ஆகியவைபற்றி நடைபெறும் பகடைப் பணையங்கள் இல்லாநிலையதாகின்றன.

**Sukhdev Doss Ramprasad *vs*. Govin Doss ChaturBhuj Doss. 51 MAD. 96.**

எதிர்வாதி பெற்ற 100 நூல் கட்டுகளுக்கான ரூபாய் 62000/-க்கான வழக்கினை, வாதி தொடர்ந்தான். எதிர்வாதி, தானும் வாதியும் நூல் வியாபாரத்தின் விலைகள் வேறுபாட்டின் மீது பகடைப் பணையம் வைத்ததைத் தவிர நூல் கட்டுப் பெறவில்லை என வாதிட்டார். வாதி விற்ற நூற்கட்டுகளை எதிர்வாதி 'அ'வுக்கும், 'அ' அதனை 'ஆ'வுக்கும், 'ஆ' அதனை 'இ'க்கும் இவ்விதமாக இறுதியாக வாங்கியவர், மீண்டும் வாதிக்கு விற்க இவையனைத்தும் சாட்சியமாக வழக்கு மன்றத்தில் வைக்கப் பட்டன. வழக்கின் தன்மைகளைக் கண்ட வழக்கு மன்றம் பகடைப் பணையமாகவே அவ்வொப்பந்தத்தை ஏற்றுத் தீர்ப்பு வழங்கியது. இந்தியச் சட்டத்தில் விலை மாறுபாடு குறித்துச் செய்கின்ற பகடைப் பணையம் அனுமதிக்கப்படவில்லை. அவை உண்மையான வியாபார ஒப்பந்தமாயின் அனுமதிக்கப்படும்.

**தேஜ்மண்டி தொழின்முறை நிகழ்வுகள் (Tejmandi Transactions)**

'ஆ'விடமிருந்து ரூபாய் 100 பெறுமான வெள்ளியினை 'அ' வாங்குகிறான். அத்துடன் ரூபாய் 20-ஐ முனைமமாக(**Premium**)க்

கொடுக்கிறார். தீர்வு நாளன்று வெள்ளியின் கடைத்தெரு விலையோ ரூபாய் 150 ; அதனால் 'அ' தன் விலை வேறுபாட்டிலிருந்து தான் செலுத்திய முன்பணம் போக மிகுதிப் பணத்தை இலாபம் அடைகிறார். கடைத்தெருவின் விலையே ரூபாய் 50 ஆக மாறினால் 'அ' தன் முன்பணம் தொகையான ரூபாய் 20/-ஐ மட்டுமே இழக்கின்றார். இத்தகைய உடன்பாட்டினை தேஜ்மண்டி (Tejmandi) உடன்பாடு என்றழைக்கப்படுகிறது. வாய்தா (Vaida) உடன்பாடும் அதே நிலையில் வைத்தெண்ணப்படும். இத்தகைய உடன்பாடுகள் பகடைப்பணைய உடன்பாடுகளாகக் கொள்ளப்படுவதில்லை. இதேபோன்று பக்கா அடாஷியா, கச்சா அடாஷியா (Pucca Adatia), (Katcha Adatia) உடன்பாடுகளும் பகடைப் பணையங்களாகக் கருதப்படுவதில்லை என்று தீர்ப்புகளில் கூறப்பட்டுள்ளன.

2. அனுமதிக்கப்படின், சட்ட விதிமுறைகளுக்கு முரணாகும்

நிலவரி பாக்கிக்காக 'அ'வின் நிலம் ஏலம் கூறப்பட்டது. 'அ' ஏலம் கேட்கச் சட்டப்படி தடை செய்யப்பட்டுள்ளது. 'அ'வின் பொருட்டு 'ஆ' ஏலம் கேட்டு வாங்கிய விலையினை மீண்டும் 'அ' கொடுக்க உடன்பட்டார். அத்தகைய உடன்பாடு இல்லா நிலையதாகும். அனுமதிக்கப்படின் சட்டத்தினால் தடை செய்யப்பட்ட 'அ' ஏலம் கேட்கும் உரிமை பெறுவதானது, சட்ட விதிமுறைகளுக்கு முரணானது. இ.ஒ.சட்டத்தின் 23-வது பிரிவு (2)-ல் சட்ட விதிமுறைகளுக்கு முரணான ஒப்பந்தம் பற்றிய விளக்கம் காணப்படுகிறது.

3. ஏரவஞ்சகமான அல்லது மோசடியான உடன்பாடு (Fraudulent)

ஒப்பந்தக்காரர்கள் மோசடி செய்ய எண்ணியோ வேறுநபர் மீது மோசடி செய்யவோ ஒப்பந்தம் செய்வார்களானால், அந்த உடன்பாட்டின் நோக்கம் ஏரவஞ்சகமானது என்றழைக்கப்படும்.

மோசடியால் பெற்ற அல்லது பெறப்போகின்ற பலனை அ, ஆ தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்ளச் செய்கின்ற உடன்பாடு, மோசடியான உடன்பாடானதால் இல்லாநிலையதாகிறது.

4. நபரையோ அல்லது அவரது பொருளையோ உரிமைத் தீங்கினுக்கு உட்கிடையாக்கும் அல்லது உட்படுத்தும் உடன்பாடு

மற்றவரை நம்பச் செய்து ஏமாற்றும் பொருட்டுத் தூண்டச் செய்கின்ற ஏரவஞ்சகமாக, ஏமாற்றலாக பங்கமைப்பு நிறுவனம் ஒன்றன் பங்குகள் வாங்க இருவர் மேற்கொள்ளும் உடன்பாட்டினால், மற்றவர்கள் பங்குகள் பற்றிய தவறான எண்ணம்

கொண்டால் அத்தகைய உடன்பாட்டினை வலியுறுத்த எந்தவித மான வழக்கும் தொடர இயலாது.

5. வழக்குமன்றம் கருதுகின்ற ஒழுக்க முரண் அல்லது பொதுக் கொள்கைக்கு எதிரிடை

(1) 'ஆ'வின் முக்தார் (Mukhtar) ஆன 'அ' முன்னவர்பால் தனக்குள்ள செல்வாக்கினைப் பயன்படுத்தி 'இ'க்கு ஓர் உபகாரஞ் செய்து தருவதாக உறுதியுரை செய்தார். 'இ' அதற்கு மறு நன்றியாக ரூபாய் 1000/-ஐ 'அ'வுக்குத் தர உறுதியுரை அளித் தார். இது ஒழுக்க முரணானதால், இந்த உடன்பாடு இல்லா நிலையதாகிறது.

(2) 'ஆ'வின் வைப்பில் (Concubinage) தன் மகளைவிட 'அ' சம்மதிக்கிறார். அத்தகைய அவரது நடவடிக்கை இ.கு.சட்டத்தின் 23-வது பிரிவின்கீழ்த் தண்டனைக்குள்ளாகாவிடினும், ஒழுக்க முர ணானது என்பதால் உடன்பாடு இல்லாநிலையை எய்துகிறது.

ஒழுக்கமுரண் உடன்பாடுகள் (Immoral Agreements)

இதில் கூறப்படுபவை ஆண், பெண்பால் ஒழுக்க முரண் களாகும். நல்லொழுக்கத்திற்கு எதிரானதாக அல்லது சமுதாய ஒழுக்க முரண் உடன்படுத்துகின்ற அல்லது பரத்தைமை (Prostitution) தொடர்பான உடன்பாடுகள் சட்டத்தினால் விலக் கப்பட்டவையாகும். அத்தகைய ஒப்பந்தங்கள் இல்லாநிலையன வாகும், எனவே ஒழுக்க முரணான கட்டுவரம்புடன் கூடிய தாகவோ ஒழுக்க முரணான செயலுக்காகவோ மேற்கொள்ளு கின்ற உடன்பாடுகள் செல்லுநிலையாகா.

(அ) தெரிந்தே பரத்தைமையின் பொருட்டு வாடகைக்கு வீட்டை விட்ட ஒருவர், தன் வாடகையினைப் பெற வழக்குத் தொடர இயலாது.

(ஆ) பரத்தைமை விடுதி நடத்துகின்ற ஒருவர் பரத் தைமையில் மற்றவரை ஈர்ப்பதற்காக பரத்தைக்குக் கொடுத்த ஆபரணங்கள் உடைகள் முதலானவைகளை மீட்டுப்பெற வழக் கிட முடியாது.

Pearce *vs.* Brooks (1866) 1. Ex. 213

அலங்கார வண்டி ஒன்றினைத் தன் தொழிலுக்காக பரத்தை ஒருத்தி உரிமையாளரிடமிருந்து வாடகைக்குப் பெற்றிருந்தாள். வாடகையினைப் பெற வழக்குத் தொடர்ந்த உரிமையாளர், அவ்வழக்கில் தோல்வி அடைந்தார்.

## முன்னுள் புணர்ச்சி (Past Cohabitation)

முன்னுள் கள்ளப்புணர்ச்சியின் மறுபயனுக வாழ்க்கைப் பண மாகக் கொடுக்கச் செய்கின்ற உறுதியுரையானது, இங்கிலாந்து வழக்கு மன்றங்களில் தள்ளுபடியாயிற்று. ஒழுக்க முரண் காரணமாக அவற்றைத் தள்ளாமல், முன்னுல் மறுபயன், மறு பயனுகாது என்ற கொள்கையின் காரணமாகத் தள்ளப்பட்டது. இத்தகைய கோட்பாடு இந்தியச் சட்டத்தில் இல்லை. ஆயினும் ஒழுக்க முரணைக் கருத்தில் கொண்டு இத்தகைய வழக்குகள் தீர்க்கப்பட்டன.

## Namberumal *vs.* Veera Perumal, 59. M.L.J. 596

2(d)-வது பிரிவின்கீழ் முன்னுள் மறுபயன் மதிப்புள்ள மறுபயனுக எண்ணப்படுவதால், முன்னுள் புணர்ச்சியின் பொருட்டு உறுதியுரை செய்த மறுபயன் செல்லாநிலையது, சட்டவலியுறுத் தலுடன் கூடியது எனச் சென்னை உயர்நீதி மன்றம் தீர்ப்பு வழங் கியது. எனினும் அத்தகைய புணர்ச்சி பிறன் மனைவியுடன் இருப்பின், முன்னுளில் நடைபெற்ற ஒன்று ஆயினும் இந்தியக் குற்றச் சட்டாரத்தின்படி, பிறன்மனை நயத்தல் குற்றம் எனக் கொள்ளப்படுதலால் அத்தகைய உறுதியுரை செல்லுநிலையதன்று என்பதை அறிதல் வேண்டும்.

## பிரிவு உடன்பாடு (Agreement For Separation)

நல்லொழுக்கத்தினை வலியுறுத்திக் கணவனும், மனைவியும் என்றும் சேர்ந்து ஒத்து வாழவே சட்டம் வற்புறுத்துகிறது. எனவே இங்கிலாந்து, இந்தியச் சட்டங்கள் இரண்டுமே வருங் காலத்தில் பிரிவதற்காகச் செய்யப்படுகின்ற உடன்பாடுகளைக் கேடாகக் கருதுகின்றன. எனவே இருநாட்டிலும் அத்தகைய உடன்பாடு ஒழுக்க முரணுனது என்பதால் சட்டத்திற்கு எதி ரானதாகக் கருதப்படுகிறது. உடனடிபிரிவுக்கான உடன்பாடுகள் சட்டத்தால் வலியுறுத்தப்படக் கூடியவை. Lurie *vs.* Lurie வழக்கில் கணவன் மனைவியருடன் செய்து கொண்ட உடன் பாட்டில் பின்னுளில் பிரிவுக்காகச் செய்த ஒதுக்கீடு செல்லாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

## Thompson Lloyds Bank Ltd *vs.* George

உயில் இயற்றிய ஒருவர் தம் உயிலில் தன்மகள், (தான் வெறுத்த) அவளுடைய கணவரை விவாகரத்து செய்து திரும் பிய பின்னர் மீண்டும் அவள் திருமணம் செய்துகொள்ளா விட்டாலும் அல்லது விதவையாகி வந்திடினும், அவளுக்காக

வழங்கப்படுகிற ஆண்டுப்பணத்தை உயர்த்தி வழிவகை செய்திருந்தார். இத்தகைய ஒன்று மகளை, அவளுடைய கணவரிடமிருந்து பிரிக்கத் தூண்டுகின்ற ஒன்றாகக் காணப்படுவதால், செல்லாநிலையது என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

**பொதுக் கொள்கைக்கு மாறான உடன்பாடுகள் (Agreements Contrary to Public Policy)**

சட்டமுரண் அல்லது ஒழுக்கமுரண் இல்லாத வேறுசில உடன்பாடுகளையும், அவை பொதுக்கொள்கைக்கு மாறானவை எனக் கருதப்பட்டுச் சட்டப்படி இல்லாநிலையதாக்கப் பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது. பொதுநலனைப் பாதிக்கக்கூடிய செயல் எதனையும் ஒருவர் செய்யாவண்ணம் தடுக்க எண்ணியே, இத்தகைய கோட்பாடு கொள்ளப்படுகிறது.

பொதுக்கொள்கையினைக் கற்பனையான ஒன்று எனவும், முரட்டுக் குதிரை (Unruly Horse) யாக அதனை உருவாக்கி அதன் மீது பயணம் செய்வது கடினமானது; ஆபத்தானது எனவும் நம்ப முடியாத வழிகாட்டி (Untrust Worthy Guide) எனவும் அறுதியிட்டுக் கூறமுடியாத ஒன்று (Uncertain one) எனவும் பலர் விளக்கினர்.

Gherulal Parakh vs. Mahdeodas. AIR 1959 S.C. 781 வழக்கில் பொதுக்கொள்கையின் தத்துவம் விளக்கப்பட்டு, மேலும் அது சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் விரிவாக்கப்படலாம் எனினும், சமுதாயத்தின் நலனை நிலையதாக்கும் எண்ணத்தை மனத்தில் வைத்துக் கொண்டால், புதுத்தலைப்புகளைக் காணுமலிருப்பது நல்லது என உச்சநீதி மன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளது.

## பொதுக் கொள்கைக்கு மாறுபாடான ஒப்பந்தங்கள் பலவகைகளாக உள்ளன.

**பொதுப் பதவிகள், பட்டங்கள் முதலானவை விற்பதற்கான உடன்பாடுகள் (Agreements for the Sale of Public Offices and Titles)**
**Ledu vs. Hiralal, 43. CAL 115.**

மாவட்ட நசீர் ஆன 'ஆ' வுக்குக் குறிப்பிட்ட பணம் தன் மகனுக்கு வேலையளிக்கும் பொருட்டு 'அ' வினல் தரப்பட்டது. 'ஆ'வும் வேலை வாய்ப்பளிக்க உறுதியுரை செய்தார். 'அ' தான் தந்த பணத்திற்காக வழக்காடினர். பொதுக்கொள்கைக்கு முரணான ஒன்று எனக் கூறப்பட்டு வழக்குத் தள்ளுபடியாயிற்று. இதனையே ஆங்கிலத்தில் 'Service Brocage' என்பர்.

Ganesa Naicken vs. Arumuga Naicken. (1954) 2. M.L.J. 35

அரசினரால் தனிப்பட்ட நன்கொடையாக அளிக்கப்பட்ட நிலம் ஒன்றினை உரிமையாளர் தாசில்தாரின் சம்மதம் பெறுமல் வேறு யாருக்கும் ஒதுக்கமுடியாது என்று நன்கொடைப் பத்திரத்தில் கண்டிருந்தது. 'க'-ன் பெயரிரவலர் (Binamidar) தாம் 'த' அவர் அந்நிலத்தைப் பெற்றுர். எனவே 'க'வுக்கு ஒதுக்கீடு செய்ய 'த'வின் மீது வழக்குத் தொடரப்பட்டது. அரசினரின் பொதுக் கொள்கையினை மாறுபடச் செய்கின்ற நிலையிலும் பொதுக்கொள்கைக்கு மாறுன ஒன்றுகவும் 'க', 'த'வின் இடையே உடன்பாடு காணப்படுவதால் இல்லாநிலையதாகவும், சட்டத்தால் வலியுறுத்தப்பட முடியாததாகவும் உள்ளது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

நீதி முறையினைத் தவறுன வழிக்குப் பயன்படுத்திக் கொள்ளும் உடன்பாடுகள் (Agreements Tending to Abuse of Legal Process)

குற்ற வழக்கினை மறைக்க மேற்கொள்ளும் உடன்பாடு இல்லா நிலையதாகும்.

Bhawanipur Banking Corporation vs. Durgesh Nandini Dassi. I.L.R. (1942) I-CAL. I. (P.C.)

குற்ற வழக்கினை மறைக்க மேற்கொள்ளும் உடன்பாடு என்பதனை வாதமாக (Plea) செய்கின்ற எதிர்வாதி ஒப்பந்தம் அத்தகையது எனவும், அவ்வொப்பந்தத்தில் குற்றங்காட்டிய நபர், குற்றத்தினை வலியுறுத்தாதிருக்கும் பொருட்டு. அல்லது தொடர்ந்த வழக்கினை மேலும் தொடராமல் இருக்கும் பொருட்டு மறுபயன் பெற்று உடன்பட்டார் எனவும் மெய்ப்பிக்க வேண்டும் என்று இவ்வழக்கில் தீர்ப்பாகியது.

பங்குவிழை வழக்குதவி : (Champerty and Maintenance)

ஒரு வழக்கில் அல்லது நடவடிக்கையில் வெற்றி பெற்றுச் சம்பந்தப்பட்ட நிலம் அல்லது பொருள்களைப் பெறும்போது அவற்றில் ஒரு பகுதியைத் தாம் அடைய வேண்டுமென்ற கட்டுவரம்புடன், அவ்வழக்கை அல்லது நடவடிக்கையை வாதி அல்லது எதிர்வாதிக்காக மற்றெருவர் நடத்துதல் சட்ட முரணுன செயலாகும். இங்கிலாந்துச் சட்டத்தில் இரு உடன்பாடுகளும் சட்ட முரணுனவையாகவும், சட்டப்படி வலியுறுத்தப்பட இயலாதனவாகவும் உள்ளன. இந்தியாவில் சராசரி மனிதனுக்கு உரிமைகள் உண்மையாகவே இருப்பினும், நீதி முறையினை நாடுகின்ற நடவடிக்கைகள் கடினமானவையாகவும் எளிதில் அணுக இயலாதனவாகவும் உள்ளமையால், சட்டம் வேறுபாடடைந்துள்ளது.

**Raja Venkata Subhadrayamma Garu vs. Sree Pusapathi Venkata Pathi Raju. 48. MAD. 230 (P.C.)**

அச்சுறுத்திப் பறிப்பதாக இல்லாத நிலையிலும் உள்ளுணர்வுக்கு (மனசாட்சிக்கு) விரோதமில்லாத நிலையிலும் பங்கு விழை வழக்குதவி சட்டமுரணானதாகாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

**சட்ட நடவடிக்கையினைத் தடுத்து நிறுத்த மேற்கொள்ளும் உடன்பாடுகள் (Agreements in Restraint of Legal Proceedings)**

ஓர் ஒப்பந்தத்தின் உரிமைகளை வழக்கமான நடவடிக்கைகள் மேற்கொண்டு நிலைநாட்ட முடியாதவாறு தடுக்கும் பொருட்டு அல்லது அத்தகைய உரிமையினைக் குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் தான் நிலைநாட்டுமாறு செய்கின்ற ஒப்பந்தங்கள் அதுவரையில் இல்லாநிலை எய்தும். ஆனால் இருவரோ இருவருக்கு மேற்பட்டவரோ தங்களுக்குள் ஏற்படுகின்ற தகராறுகளை இசைவுத் தீர்வு முறைக்கு (Arbitration) விடவும் அச்சச்சரவில்-தீர்ப்பில் முடிவாகிற பணத்தை மட்டும் பெறவும் உடன்பாடு கொள்வதைச் சட்டம் தடுக்கவில்லை,

மேலும் இருவரிடையோ இருவருக்கு மேற்பட்ட நபர்களிடையோ முன்னர்த் தங்களிடையே ஏற்பட்ட சிக்கலுக்குத் தீர்வு காண இசைவுத் தீர்ப்பு முறைக்கு விடவோ-இசைவுத் தீர்ப்பு முறைக்கு விடச்செய்கின்ற சட்ட விதிகளைத் தற்காலிகமாகப் பாதிக்கும்படியான முறையில் உடன்பாடுகள் மேற்கொள்வதையோ சட்டம் தடை செய்யாது. இவ்விரண்டு விதி விலக்குகளும் இந்திய ஒப்பந்தச் சட்டத்தில் காணப்படுகின்றன.

**பெற்றோரது உரிமைகளைத் தடுத்து நிறுத்தும் உடன்பாடுகள் (Agreements in Restraint of Parental Rights)**

'இங்கிலாந்து, இந்தியா இரண்டிலும், குழந்தைகளைப் பாதுகாக்கும் வண்ணம் கல்வி, மதம் ஆகியவற்றில் பயிற்றுவிக்கும் பெற்றோர்களின் உரிமையினைப், பாதுகாப்பதில் அதிக கவனம் செலுத்துகின்றன. அன்னாரின் அத்தகைய உரிமைகளை அல்லது சட்டப்படியான காப்பாளர்களின் உரிமைகளை முற்றிலும் புதிய ஒருவருக்கு முழுமையாக மாற்றித்தர உடன்படும் எத்தகைய உடன்பாடும் பொதுக்கொள்கைக்கு முரணானதாக உள்ளதால், இல்லாநிலையது (void) என்று Giddu Narayanayya vs. Mrs Annie Besant, 38 MAD 807 (P.C.) வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

**Raja of Vijianagaram vs. Secretary of State 71. M.L.J. 873.**
காப்பாளர் முறை மன்ற(Court of Wards)த்தின் பராமரிப்

பிலும் கற்பிக்கும் உரிமையிலுமுள்ள இளவர்களை, அரசரிடம் நபர் என்கிற வகையில் அவர் மீதும் மற்றும் அவரது சொத்துகள் மீதும் தங்களுக்குள்ள உரிமையினால், இந்தியாவினின்றும் வெளியே அழைத்துச் சென்று அவர்களுக்கு இங்கிலாந்தில் கல்வி கற்பிக்க முயன்றபோது, சென்னை உயர்நீதி மன்றம் அத்தகைய செயல் அரசரின் எண்ணத்திற்கு, விருப்பத்திற்கு மாறான ஒன்று எனக் கருதி அனுமதி அளிக்க மறுத்தது.

**திருமணத்தைத் தடுத்து நிறுத்தும் உடன்பாடுகள் (Agreements in Restraint of Marriage)**

அன்பு, பாசம், வருங்கால நல்வாழ்வு அனைத்தையும் கருத்தில் கொண்டு அவரவர் தமக்கேற்ற வாழ்க்கைத் துணையினைத் தேர்ந் தெடுத்துக் கொள்ளும் உரிமையினைப் பெற்றுச் சிறந்த இல் வாழ்க்கையில் ஈடுபடவேண்டும் எனச் சட்டம் விழைகின்றது.

Lowe *vs*. Peers (1768) 98. E.R. 160

செல்வி 'ஆ' வினைத் தவிர வேறு யாரையும் மணப்பதில்லை என்றும், தவறினால் ரூபாய் 1000/- தர சம்மதித்தும் 'அ' உறுதியுரை அளித்தான். 'அ' வேறொரு நபரை மணந்தபோது 'ஆ' வழக்குத் தொடர்ந்தாள். வழக்கில் உடன்பாடானது, திருமணத்தைத் தடுத்து நிறுத்துகின்ற ஒன்றாக இருப்பதால், அது இல்லாநிலையது என்று தீர்ப்புக் கூறப்பட்டது.

இக்கொள்கையின் அடிப்படையிலே திருமணத்தரகு ஒப்பந் தங்களும் இல்லாநிலையாயின. திருமணத்தின் மறுபயனாக, மண மக்களில் யாரேனும் ஒருவரோ அவர்களுடைய பெற்றோரோ மூன்றாம் நபர்களோ குறிபிட்ட தொகை பெறின் அத்தகைய உடன்பாட்டினைத் திருமணத் தரகு ஒப்பந்தம் என்று கூறப்படும். வரதட்சணைக் கொள்கையும் பொதுக் கொள்கைக்கு முரணான ஒன்று என்பதனால்தான் எதிர்க்கப்படுகிறது.

Venkata Krishna *vs*. Venkatachalam, 32. MAD. 185

மகளைத் திருமணம் செய்துதர தந்தைக்கு மறுபயனாகப் பணம்தர உடன்பாடு கொள்ளப்பட்டது. அத்தகைய உடன் பாடு திருமணத்தரகு ஒப்பந்தமாகக் கருதப்பட்டு இல்லாநிலைய தாயிற்று, இத்தகைய வழக்குகளில் திருமணம் நிறைவேறிய பின்னர் ஒப்புக்கொள்ளப்பட்ட பணத்திற்காக வழக்காடினார், சட்டத்தின் துணைகொண்டு மணம்பெற இயலாது. முன்னர்ப் பணம் பெற்றுப் பின்னரே திருமணம் நடந்திருக்குமானால் கொடுத்த பணத்தை மீட்டுப் பெறவும் வழிவகை கிடையாது.

வரதட்சணைத் தடுப்புச்சட்டத்தின் கீழ்வரதட்சணைப் பெறுவது குற்றமாகக் கருதப்படுகிறது.

இ.ஒ. சட்டத்தின் 26-வது பிரிவில், ''இளவரல்லாத ஒருவரது திருமணத்தைத் தடுத்து நிறுத்தச் செய்கின்ற உடன்பாடு இல்லாநிலையது'' என்று கூறப்பட்டுள்ளது.

**வாணிகத்தைத் தடுத்து நிறுத்தும் உடன்பாடுகள் (Agreements in Restraint of Trade)**

இத்தகைய உடன்பாடு, ஒருவரைத் தம் தொழில் அல்லது வாணிகம் செய்வதினின்றும் தடுத்தி நிறுத்திக் கட்டுப்படுத்துவதாகும். ஒருவர் தொழில் வாணிகம் செய்கின்ற உரிமையைக் கட்டுப்படுத்துவது, அன்னாரின் வாழ்விற்கான வழிவகையைக் குறைப்பதாகவும் திறமையான பயிற்சி பெற்றவர்களின் பணி பொதுவாழ்வில் கிடைக்காமல் போகச் செய்வதாகவும், குறிப்பிட்டவர்களே தொழில் அல்லது வாணிகத்துறை முழுவதையும் ஆக்கிரமிக்கச் செய்வதாகவும் அமையும் என்பதாலும் பொருள்களின் விலையை உயர்த்த வசதிசெய்துவிடும் என்பதாலும் வழக்கு மன்றங்கள் அத்தகைய உடன்பாடுகளை அனுமதிப்பதில் முக்கியமாகக் கவனம் செலுத்தி வருகின்றன.

முதன் முதலில் இங்கிலாந்தில் அத்தகைய உடன்பாடுகள் இல்லாநிலையன என்றாகியது. பின்னர் அந்நிலைமையில் மாறுபாடு ஏற்பட்டது. சில சூழ்நிலைகளில் அத்தகைய தடுத்து நிறுத்தும் உடன்பாடுகள் பொதுக்கொள்கைக்கு உகந்ததா என்றும் நியாயமானதா என்றும் ஆராயப்பட்டது.

பொதுவாகக் கீழ்காணும் காரணங்களினால் தொழிலைத் தடுத்து நிறுத்தும் உடன்பாடுகள் ஏற்படலாயின :

(அ) தன்னிடம் வேலைசெய்கின்ற நபர் தொழில் நுணுக்கம் அறிந்த பின்னர் தனக்கெதிராக உள்ள தொழில் நிறுவனத்தில் சேர்ந்தோ, அவராகத் தனியான தொழில் நிறுவனம் ஒன்றினைத் தொடங்கித் தன்னிடம் பயின்ற நுணுக்கங்களைத் தனக்கெதிராகப் பயன்படுத்தாவண்ணம் தொழிலதிபர் பணியாளரிடம் செய்து கொள்ளும் ஒப்பந்தங்கள்.

(ஆ) வாணிகம் முழுவதையும் அதனுடைய நற்பெயருடன் விற்பவர் வாங்குபவருக்குப் போட்டியாக அதே தொழிலைப் புதிதாகத் துவக்காமலிருக்க விற்பவர் வாங்குபவரிடையே ஏற்படும் ஒப்பந்தங்கள்.

(இ) தொழிலதிபர்கள் அல்லது தயாரிப்பாளர்கள் தங்களிடையே தொழில் சம்பந்தமாகப் பொருள்களில் விற்பனைக்கான திட்ட வகைகள் தொடர்பான ஒப்பந்தங்கள்.

Nordenfelt *vs.* Maxim Nordenfelt Etc ; Co (1893) A.C. 535

துப்பாக்கி முதலான தளவாடங்கள் செய்யுந்தொழிலைச் சுவீடன் நாட்டான் ஒருவன் மாக்சிம் நார்டன்ஃபெல்ட் (Maxim Nordenfelt) என்னும் நிறுவனத்திற்குக் குறிப்பிட்ட தொகைக்கு விற்றான். ஒப்பந்தம் மேற்கொண்ட நிலையில், 55 ஆண்டுகளுக்கு அதேபோன்ற தொழிலை, வாங்கிய நிறுவனத்தின் சார்பாக அல்லாமல், தனியாக நடத்தாமல் இருக்கவும் வாங்கிய நிறுவனத்திற்குப் போட்டியாக வேறு எந்தவிதமான தொழிலையும் நடத்துவதில்லை எனவும் ஒப்பந்தமாயிற்று. இரண்டாவது உடன்பாட்டைச் செல்லுபடியாக்கமுடியாது என்பதை ஒத்துக்கொண்ட அந்நிறுவனமானது, முதல் உடன்பாட்டினை மீறாமல் இருக்கும்படி செய்ய உறுத்துக் கட்டளை (Injunction) வேண்டி, வழக்கு மன்றத்தை நாடியது. வழக்கில், தடுத்து நிறுத்திய உடன்பாடு, நியாயமானதா ? சிறந்த மறுபயன் கொண்டதா ? பொதுக் கொள்கைக்கு மாறானதாக இல்லாமலுள்ளதா ? உடன்பாடு கொண்ட நபருக்கன்றி மற்றவருக்குத் தொல்லை தராமல் உள்ளதா ? என்றெல்லாம் ஆராயப்பட்டு, குறிப்பிட்ட வழக்கிலுள்ள உடன்பாடு நியாயமானது, சட்டப்படி வலியுறுத்தப் படக் கூடியது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

Connors Bros Ltd *vs.* Bernard Conors A.I.R. (1941) P.C. 75

தற்காலத் தொழில் வளர்ச்சி, தொடர்பு கொள்ளும் வழி வகைகள் ஆகியவற்றின் பெருக்கத்தைக் கணக்கில் கொண்டு, பழைய கொள்கையினை மாற்றித் தடுத்து நிறுத்தும் உடன் பாடுகள் அண்மையிலுள்ள சுற்றுப்புறத்திற்கு அப்பாற்பட்டதாக இருக்கக் கூடாது என்று கொள்ளப்பட்டது.

**Palmolive Co** *vs.* **Freed Man** (1928) 1 Ch. 264. தயாரிப்பாளர் நிர்ணயித்த விலைக்கும் குறைவாகப் பொருள்களை விற்கக் கூடாது என்று செய்து கொள்கின்ற உடன்பாடு இல்லா நிலையதாகாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

Fitch *vs.* Dewes (1921) 2 A.C. 158

தொழிலதிபரிடம் வேலைக்கமர்ந்து அவரது தொழில் நுணுக்கங்கள், இரகசியங்கள் ஆகியவற்றை அறிந்துள்ள நபருடன் அத்தகைய தொழிலதிபர் அவருக்கெதிராகப் போட்டியாக அந்நபர்

தொழில் தொடங்கக் கூடாது என்று செய்து கொள்கின்ற உடன்பாடு செல்லுநிலையதாகும்.

General Bill Posting Co. *vs*. Atkinson 1909 A.C. 118 வழக்கில் தவருன காரணத்திஞல் வேலையினின்றும் நீக்கப்பட்ட தொழிலாளிக்கெதிராகத் தொழிலதிபர் மேற்சொன்ன வாதத்தைப் பயன்படுத்த முடியாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்கின் 27-வது பிரிவில்,

"சட்டப்படியான எத்தகைய தொழில், வாணிகம், வியாபாரம் முதலியவற்றையும் ஒருவர் புரிவதினின்று தடுத்து நிறுத்தும் எவ்விதமான உடன்பாடுகளும் அவ்வளவில் இல்லா நிலையனவாகின்றன" என்று கூறப்படுகின்றது. இதற்கும் சில விதிவிலக்குகள் காணப்படுகின்றன.

விலக்கு *(1)* தொழிலே வாங்குபவர், அல்லது அவரிடமிருந்து தொழிலேப் பெறும் நபர் அத்தொழில் நடத்துகின்றவகையில், விற்பவர் அதேபோன்ற தொழிலேக் குறிப்பிட்ட எல்லேக்குள் நடத்துவதில்லே என இருவரும் உடன்பாடு கொள்ளலாம். குறிப்பிட்ட எல்லே பற்றித் தீர்மானிக்க, வழக்கு மன்றம் முடிவு செய்யும்.

*(2)* கூட்டாண்மையிலுள்ள கூட்டாளிகள் சிலரோ அனேவருமோ அத்தகைய கூட்டாண்மையிலுள்ளவரை, அதஞல் நடத்தப்படுகின்ற தொழிலே நடத்துவதில்லே என்று தங்களுக்குள் செய்து கொள்ளும் உடன்பாடு செல்லத்தக்கது *(பி.* 11 *(2)* கூட்டாண்மைச் சட்டம்).

*(3)* கூட்டாண்மையினின்றும் விடுபட்ட கூட்டாளி அதஞல் நடத்தப்படும் தொழிலேக் குறிப்பிட்ட எல்லேக்குள், கால வரம்புக்குள் நடத்தக்கூடாது என்று விடுபட்ட கூட்டாளிக்கும் ஏனேயோருக்குமிடையே ஏற்படுகின்ற உடன்பாடு செல்லக்கூடியது *(பிரிவு 36 (2) கூட்டாண்மைச் சட்டம்)*.

*(4)* நிறுமம் (Firm) கலேக்கப்பட்ட நிலேயில் நியாயமான குறிப்பிட்ட எல்லேக்குள்ளாக நிறுமத்திஞல் நடத்தப்பட்ட தொழிலே நடத்தாமலிருக்க கூட்டாளிகளிடையே செய்து கொள்ளப் படுகின்ற உடன்பாடு சட்டத்தால் வலியுறுத்தப்படக் கூடியது *(பிரிவு 54. கூட்டாண்மைச் சட்டம்)*.

### தொழிற் சங்கங்கள் (Trade Uuions)

பதிவு செய்யப்பட்ட தொழிற் சங்கங்கள் மேற்கொள்ளும் உடன்பாட்டின் கோட்பாடுகளில் ஏதேனும் ஒன்று, தொழில் வளர்ச்சியினைத் தடுத்து நிறுத்தும் என்ற காரணத்தினுல் உடன் பாட்டினை இல்லா நிலையதாக்கவோ அல்லது தவிர்தகு நிலையதாக் கவோ முடியாதென்று தொழிற் சங்கச் சட்டத்தின் 19-வது பிரிவில் கூறப்பட்டுள்ளது.

### தொழில்கள் இணைந்து செயற்படல் (Trade Combinations)

**Fraser & Co vs. Bombay Ice Manufacturing Co. 29 Bom 107**

பனிக்கட்டியின் விலையினைக் குறைப்பதைத் தடுக்கும் பொருட்டு பனிக்கட்டித் தொழிலதிபர்கள் தம்மிடையே மேற் கொண்ட உடன்பாடு, இ. ஒ. சட்டத்தின் 27-வது பிரிவின்கீழ் இல்லாநிலையதாகாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

### தனி உரிமையினைத் தடுத்து நிறுத்தும் உடன்பாடு (Agreement in Restraint of Personal Freedom)

ஒவ்வொரு மனிதரும் கட்டுப்பாடற்ற தனிஉரிமை கொண்ட வராக இருத்தல் வேண்டும் என்றே பொதுக்கொள்கை வற்புறுத் துகிறது. இங்கிலாந்து, இந்தியச் சட்டம் இரண்டிலும் நியாய மற்ற முறையில் நபர் ஒருவரின் தனி உரிமையினைக் கட்டுப் படுத்தும் வகையில் செய்கின்ற எத்தகைய உடன்பாடும் இல்லா நிலையதாகும். வாங்கிய கடனுக்காகக் குறிப்பிட்ட சம்பளத்தில் கடனாளியும், அவருடைய மனைவியும் கடனளருக்கு வேலை செய்ய உடன்பாடு மேற்கொள்ளப்பட்டது. வாங்கிய கடனின் வட்டி கூட இத்தகைய முறையில் அடைபட வழிவகை இல்லாத நிலையில் அத்தகைய உடன்பாடு அடிமை நிலைக்கே கொண்டு செல்வதால், சென்னை உயர்நீதிமன்றம் இந்த உடன்பாட்டினை, இல்லாத நிலையாக்கிற்று Rebeard (1908) I. Ch 383 வழக்கில் கடற்படை, தரைப்படையில் சேர்ந்து பணி புரிவதினின்றும் தடுத்து நிறுத்தும் ஒப்பந்தமானது, பொதுக் கொள்கைக்கு முரணுன ஒன்று என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

### சட்டமுரண் பயன் (Effect of Illegality)

சட்ட முரணுன, சட்டப்புறம்பான உடன்பாடுகளை, இல்லா நிலையதாக்குகின்ற சட்டத்தின் நோக்கமென்னவெனில், மக்க ளிடையே இழிமுறைச் செயல்கள் எழாமல் தடுப்பதே ஆகும். "Exturpi Causa Non Oritur Actio" "இழிமுறைச் செயல்கள் எழாது வழக்குரிமை" என்பதனை விளக்க, மேற்கண்ட இலத்தீன்

மூதுரை எழுந்தது. நெறிகேடான அல்லது சட்ட முரணான வழக்கு மூலத்தை வைத்து வழக்காட இயலாது என்பதே இதன் விளக்கமாகும். இது குற்றமிழைத்த நபருக்குச் சட்டம் உதவி செய்யக் கூடாது என்ற நோக்கத்தைக் கொண்டது. அத்தகைய செயல்களினால் உடன்பாடு கொண்டோர், கொடுத்த பணம், தந்த பொருள்கள் எதனையும் சட்டத்தின் துணையினால் திருப்பிப் பெற இயலாது என்பது தெளிவு. ஆனால் இத்தகைய சட்ட முறிவினால் பொருள் அல்லது பணம் பெற்ற எதிர்வாதி தகாத செயல் செய்திருந்தும் பலன் அல்லது நலன் அடைய, சட்டம் வழி வருகின்றதல்லவா ? என்ற கேள்வி எழக்கூடும். சட்டம் அந்த ஒரு காரணத்தினால் சட்டமுரணான உடன்பாட்டின்மீது சட்டத்தால் வலியுறுத்தலோ, மாற்றீடு (Relife) கேட்கவோ அனுமதிக்கவில்லை. இத்தகைய வழக்குகளில் எதிர்வாதி பலன் அடையும் நிலையிலுள்ளதை "In Pari Delicto Potior Est Conditio Defandatis" என்ற மூதுரையின் மூலம் அறிகின்றோம். இருதரப்பினரும் ஒரே குற்ற நிலையில் இருக்கும்பொழுது, எதிர்வாதியின் நிலை சிறிது மேம்பட்டதாகக் காணப்படுகிறது.

'இ'யினைக் கொலை செய்ய 'ஆ'வுக்கு ரூபாய் 100/- தர 'அ' உறுதியுரை அளித்தார் எனில் 'ஆ' சட்ட வழியில் அப்பணத்தைப்பெற இயலாது. 'இ'யினைக் கொலை செய்ததாக 'அ' வழக்கு மன்றத்தில் ஒப்புக் கொள்வாரா ? கொலை நடைபெறுவதற்கு முன்பாக 'அ' ரூபாய் 100/-ஐ 'ஆ'வுக்குத் தந்து விட்டதாகக் கொண்டால் 'அ' அப்பணத்தை 'ஆ'விடமிருந்து கொலை நடந்த பின்னர் பெற முடியாது. 'அ' வழக்கு மன்றத்திற்குக் கொலை நடைபெறுமுன் வந்து அதனைத் தடுக்காததனால், ஒத்த நிலையில் உள்ளவராக வைத்து எண்ணப்படுகிறார்.

**மேற்சொன்ன கொள்கைக்கும் சில விலக்குகள் காணப்படுகின்றன :**

1. மாற்றீடு (Relief) பாத்தியதைக் கொண்டாடும் வாதி, வாதிடத் தேவையற்ற நிலையிலோ சட்ட முரணான நடவடிக்கையை நம்ப வேண்டாத நிலையிலோ இருந்திடின், அது ஒரு விலக்கு நிலையாகும்.

2. சட்ட முரணான செய்கை முழுமையாகவோ பகுதி அளவிலோ நிறைவேற்று முன்பாக அந்த விலக்கு அமையும்.

சான்றாக, முன் சொன்ன சான்றில், கொலை நடைபெறுமுன்பாக 'அ' தன்னுடைய கெட்ட எண்ணத்தினை விட்டுவிட்டதாக வழக்கு மன்றத்தில் சொல்லி உதவி கோரினால், காலம் கடக்காத நிலையானதாக இருப்பின் வழக்கு மன்றம் நிச்சயமாக அன்னா

ருக்குத் துணைபுரியும் கெட்ட மனிதர்கள் தங்கள் செயலுக்கு வருந்தி திருந்துவதையே சட்டம் விழைகிறது.

3. இருதரப்பினரும் ஒரே குற்ற நிலையில் இல்லாது வேறு பட்டிருக்கும்போது, அந்த விலக்கு அமைகிறது.

கடனாளரின் (Creditor) மோசடியினால், அல்லது மிகுந்த நெருக்கடியினால் தூண்டப்பட்டுக் கடனாளி ஓர்-ஒப்பந்தம் மேற் கொள்ளின் அவ்வொப்பந்தத்தினால் கடனாளி தான் தந்த பணத்தை மீட்டுப் பெறச் சட்டம் வழிவகை செய்கிறது என்று Atkinson vs. Denby (1861) 6 H & H 778 வழக்கில் தீர்ப்பாகியது.

**உட்கிடை, மேலமைந்தாகுஞ் சட்டமுரண் (Latent and Supervening Illegality)**

சில வழக்குகளில் சட்டமுரணானது சாட்சியங்களினால் தான் மெய்ப்பிக்கப்பட்டாக வேண்டியிருக்கும். அத்தகையவற்றை உட் கிடை சட்டமுரண் (Latent Illegality) என்று கூறப்படும். மற்றும் ஓர் உடன்பாடு செய்து கொள்ளும் நிலையில் இல்லாது. பின்னர் வந்து மேலமைந்து சட்ட முரணாவதும் உண்டு. இதனை மேலமைந்தாகுஞ் சட்டமுரண் (Supervening Illegality) என் றழைக்கப்படுகிறது. சான்றாக மதுவிலக்குச் சட்டம் செல்லாற் றலில் இல்லா ஓரிடத்திற்கு மதுவகைகள் அனுப்பிவைக்க இரு வியாபாரிகளிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்திற்குப் பின்னர் அவ்விடத்தில் மதுவிலக்குச் சட்டம் செல்லாற்றுக்கு வந்திடின் அத்தகைய உடன்பாடு மேலமைந்தாகுஞ் சட்டமுரண்பாற்படும். அத்தகைய சட்டம் செல்லாற்றுக்குப் பின்னர் உடன்பாடானது சட்டப்படி வலியுறுத்தப்படக் கூடியதன்று.

**சட்டமுரண் விலக்கக் கூடியதா ?**

ஓர் ஒப்பந்தத்தின் திட்டவரைகளில் சில சட்டநெறிபின்பாற் பட்டனவாகவும், வேறுசில சட்ட முரணானவையாகவும் இருப்பின் அவை இரண்டையும் தனித்துப் பிரித்துச் செயல் படுத்தக்கூடிய நிலையில் இருந்தால், வழக்கு மன்றம், சட்ட நெறியின்பாற் பட்டதைச் சட்ட வலியுறுத்தியும், சட்ட முரணானதைத் தள்ளியும் தீர்ப்பளிக்கும். சட்ட முரணானவற்றைச் சட்டநெறியினின்றும் பிரித்துச் செயல்படுத்த முடியாதவாறு அவை பின்னிக் கொண் டிருப்பின் அத்தகைய ஒப்பந்தச் சட்ட முரணானதாகத் தீர்ப் பளிக்கப்படும். இதே விதிதான், மறு பயனின் ஒரு பகுதி சட்ட முரணாய் இருக்கும்போது, கடைப்பிடிக்கப் படுகிறது.

இந்தியாவில் பின்வருமாறு சட்டம் வழிவகை செய்துள்ளது. ஒன்று அல்லது மேற்பட்ட நோக்கங்கள் கொண்ட ஒப்பந்தத்தின்

ஒரே மறு பயனின் ஒரு பகுதி சட்டத்திற்குப் புறம்பாயிருப்பினும் ஒரே நோக்கத்தினைக் கொண்ட ஒப்பந்தத்தின் மறு பயன்களில் ஏதேனும் ஒன்றன் ஒரு பகுதி சட்டத்திற்குப் புறம்பாயிருப்பினும், உடன்பாடு இல்லா நிலையதாகும் என்று இ. ஒ. சட்டத்தின் 24-வது பிரிவு கூறுகிறது.

**ஒன்றுக்கொன்றுன உறுதியுரைகள் (Reciprocal Promises)**

முதலில் சட்டநெறியான செயல்கள் சில செய்யவும், பின்னர் குறிப்பிட்ட சூழ்நிலையில் சட்டமுரணுன சில செயல்கள் புரியவும் ஒப்பந்தம் மேற்கொண்டால் முதலில் கூறப்பட்ட சட்ட நெறிச் செயல்களை ஒப்பந்தத்திற்குள்ளானதாகவும் இரண்டாவது பகுதியான சட்ட முரணுன செயல்களைக் கொண்ட உடன்பாட்டினை இல்லாநிலையானதாகவும் இ. ஒ. சட்டத்தின் 47-வது பிரிவில் கூறப்படுகிறது.

**மாற்று உறுதி உரைகள் (Alternate Promises)**

இவ்வுரைகளில் சட்டநெறியான ஒன்றைச் சட்ட வலியுறுத்தியும், சட்டமுரணுன ஒன்றை இல்லா நிலையாக்கியும் இ. ஒ. சட்டத்தின் 58-வது பிரிவு கூறுகிறது.

# 13. நிகழ்வுசார் ஒப்பந்தங்கள்
## (Contingent Contracts)

(அ) 'ஆ' வின் வீடு எரிக்கப்படுமானல், ரூ. 10,000 தருவதாக 'அ' ஒப்பந்தம் செய்து கொள்கின்ருன்.

(ஆ) 'ஆ' வின் ஊர்தி தீயினல் அழிக்கப்படுமானல் ரூபாய் 500 தருவதாக 'அ' உறுதி செய்கின்ருன். இவ்விரண்டு ஒப்பந்தங்கள் நிகழ்வுசார் ஒப்பந்தங்கள் (Contingent Contracts) என்று கூறப்படுகின்றன. முழுநிலை ஒப்பந்தத்தினின்றும் நிகழ்வுசார் ஒப்பந்தம் முற்றிலும் வேறுபட்டுக் காணப்படுகிறது. நிகழ்வுசார் ஒப்பந்தத்தினைக் கட்டுவரம்புடைய ஒப்பந்தம் (Conditional Contracts) என்றும் அழைக்கலாம். உறுதியான அல்லது அறுதியிட்டுச் சொல்ல இயலாத நிகழ்ச்சி ஏற்பட்ட பின்னரே ஒப்பந்தம் நிறைவேற்றப்படுமானல் நிகழ்வுசார் ஒப்பந்தம் என்று சொல்லப்படும். இதையே வேறுசொற்களில் கூறுவதனல் அத்தகைய ஒப்பந்த நிறைவேற்றம் செய்ய, வருங்கால நிகழ்ச்சியும் நிகழ்வுசார்ந்ததுமான ஒன்றனைப் பொருத்தே நடைபெறுகிறது.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 31-ம் பிரிவில், பின்வருமாறு நிகழ்வுசார் ஒப்பந்தத்திற்கான வரைவுரை கூறப்பட்டுள்ளது: "ஒப்பந்தத்தை ஒட்டிய ஒரு நிகழ்ச்சி நடைபெறுவதை அல்லது நடைபெருமலிருப்பதைப் பொறுத்து, ஏதாவது ஒன்றைச் செய்வது அல்லது செய்யாமலிருப்பது என்ற ஒப்பந்தம்", நிகழ்வுசார் ஒப்பந்தமாகும். ஒப்பந்த நிறைவேற்றம் அடைய ஒப்பந்தத்திற்குத் துணையான நிகழ்ச்சி ஒன்று நிகழ்தல் அவசியம். ஆயினும் அத்தகைய நிகச்சியானது ஒப்பந்தம் நிறைவேற்றவேண்டியஒன்றுக்கொன்ருன உறுதியுரைகளின் (Reciprocal Promises) ஒரு பகுதியாக இராது.

ஒப்பந்தம் நிறைவேற, ஒப்பந்தக்காரர் ஒருவர் செய்கின்ற உறுதியுரையானது, அதை நிறைவேற்றிய பின்னரே அடுத்தவர் தன் உறுதியுரையை நிறைவேற்ற வேண்டும் என்று கொள்கின்ற கட்டுவரம்பினின்றும் நிகழ்வுசார் ஒப்பந்தம் மாறுபட்ட தோன்ருகும். சான்ருக, 'ஆ'-க்கு 100 மூட்டை அரிசிதர 'அ' உடன்படுகிருர். அதற்கான விலையைப் பின்னர் தருவதாக 'ஆ' உடன்படுகிருர். 'ஆ' தன் உறுதியுரையினை நிறைவேற்ற வேண்டிய சட்டப்பிணைப்பு (Obligation) 'அ' தன் பங்கை ஆற்றிய பின்னரே ஏற்படும் என்ற கட்டுவரம்பின்பாற்பட்டது. இது நிகழ்வுசார் ஒப்பந்தமன்று. 'அ' தன் உறுதியுரையை நிறைவேற்ற வேண்டும் என்பது ஒரு துணை நிகழ்ச்சி (Collateral) அன்று. ஒப்பந்தத்

திலுள்ள ஒரு பகுதியான உறுதியுரையாகும். அத்தகைய ஒப்பந்தத்தின் ஒரு பகுதியை நிறைவேற்றிய பின்னரே 'ஆ' தன் பங்கை நிறைவேற்றவேண்டிய கடப்பாட்டிற்குள்ளாகிறார்.

மற்றொரு முக்கியமான வேறுபாட்டையும் அறிதல் வேண்டும். உறுதியுரை அளிப்பவரின் விருப்பத்திற்குட்பட்ட ஒரு செயல்தான் நிகழ்வுசார் நிகழ்ச்சியாகும். ஆனால் அந்நிகழ்ச்சியே உறுதியுரை அளிப்பவரின் விருப்பமாக இருத்தல் கூடாது. சான்றாக, தான் கொடுக்க எண்ணினால் 'ஆ'வுக்கு ரூபாய் 500 தருவதாக 'அ' உறுதியுரை செய்தான். இது நிகழ்வுசார் ஒப்பந்தமாகாது. ஏனெனில் அவனின் விருப்பத்தைப் பொறுத்துத் தான், கொடுப்பது நிகழ்கிறது. ஆனால் சென்னையை விட்டு, கல்கத்தாவிற்கு 'அ'சென்றால் 'ஆ'வுக்கு ரூபாய் 500 தருவதாக 'அ' சொன்னால், அது நிகழ்வுசார் ஒப்பந்தமாகிறது. ஏனெனில் கல்கத்தாவிற்குச் செல்வது 'அ'வின் விருப்பத்திற்குட்பட்டது. ஆனால் அதுவே அவன் விருப்பமாக இல்லை.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 32 முதல் 36-வது பிரிவுவரை நிகழ்வுசார் ஒப்பந்தத்தை விளக்குவனவாக உள்ளன.

(1) அறுதியிட்டுக் கூற இயலாத வருங்கால நிகழ்ச்சி (Uncertain Future Event) நடைபெறுமானால், ஏதேனும் ஒன்றைச் செய்யவோ செய்யாமலிருக்கவோ மேற்கொள்ளும் நிகழ்வுசார் ஒப்பந்தத்தை, அந்நிகழ்ச்சி நடைபெற்று முடிகின்ற வரையில் சட்ட ரீதியாக வலியுறுத்த முடியாது. அந்நிகழ்ச்சி நடைபெற முடியாது போனால் அத்தகைய ஒப்பந்தங்கள் இல்லாநிலையன வாகும் (பி. 32).

(அ) 'இ'-க்குப் பின்னர், தான் வாழ்ந்தால் 'ஆ'வின் குதிரையை வாங்குவதாக 'அ'. 'ஆ'வுடன் ஒப்பந்தம் செய்துகொண்டான். 'அ'வின் வாழ்நாளுக்குள்ளாக 'இ' இறக்கின்ற வரையில் அந்த ஒப்பந்தம் சட்டப்படியாக வலியுறுத்தப்படக் கூடியது அன்று.

(ஆ) ஏற்கனவே 'இ'-க்கு முனைவாக (Offer)க் கூறப்பட்ட குதிரையினை 'இ' வாங்க மறுத்தால் குறிப்பிட்ட விலைக்கு 'ஆ'வுக்கு விற்பதாக 'அ', 'ஆ'வுடன் ஒப்பந்தம் மேற்கொண்டான். 'இ' குதிரை வாங்க மறுக்கின்ற வரையிலும் ஒப்பந்தத்தை வலியுறுத்த இயலாது.

(இ) 'இ'யினை 'ஆ' திருமணம் செய்யும்போது குறிப்பிட்ட தொகை தருவதாக 'அ' ஒப்பந்தம் செய்கின்றான். 'ஆ'வை மணம் புரியாமலே 'இ' இறந்து விட்டார். இந்த ஒப்பந்தம் இல்லா நிலையதாகிறது (பி. 32)

(2) அறுதியிட்டுக் கூற இயலாத வருங்கால நிகழ்ச்சி நடைபெறுவிடினும், அத்தகைய நிகழ்ச்சி நடைபெற முடியாத நிலையினை அடைகின்ற ஏதேனும் ஒன்றைச் செய்யவோ செய்யாமலிருக்கவோ செய்கின்றபோது, நிகழ்வுசார்வு ஒப்பந்தத்தை வலியுறுத்த இயலும்; ஆனால் அத்தகைய நிலையினை அடையுமுன்பாக அன்று (பி. 33).

குறிப்பிட்ட கப்பல் திரும்பாவிடின் 'ஆ' வுக்குப் பணம் தருவதாக 'அ' உடன்படுகிறுன். கப்பல் மூழ்கிவிட்டது. கப்பல் மூழ்கிய நிலையில் ஒப்பந்தம் வலியுறுத்தப்படக் கூடியதாகும்.

(3) 'இ' யினை மணந்தால் 'ஆ' வுக்குப் பணம் தருவதாக 'அ' உடன்பாடு கொண்டாள். 'இ', 'ஈ'-ஐ மணம் புரிந்தாள். இப்பொழுது 'இ' யுடன் 'ஆ' மணம் புரிவதென்பது இயலாததொன்று என்று கருதப்பட வேண்டும். ஆயினும் 'ஈ' இறக்கலாம்; 'இ' யும் பின்னர் 'ஆ' வினை மணக்கலாம் என்ற வழிவுள்ளது (பி. 34). (பின்னர் 'ஈ' யின் விதவையான 'இ' யினை 'ஆ' மணந்தால் 'அ'வின் முன்னுள் சட்டப்பிணைப்பான பணம் தருவது, உயிர்ப்படையாது. அது 'இ' 'ஈ' யினை மணந்தபோதே முடிவுற்றது).

குறிப்பிட்ட காலவரம்புக்குள்ளாக, நபர் ஒருவரின் செயல் ஒன்றினுலோ வேறுசில நிகழ்வடைவுகளினுலோ (Contingencies) முடியாமல் போவதும், நபர் ஒருவரின் செயல் ஒன்றினுல் முடியாததாக்கப்படக் கூடியதுமான, நிகழ்வுசார் ஒப்பந்தத்தில் காணப்படுகின்ற வருங்கால நிகழ்ச்சியினை அறுதியிடாத காலத்தில், நபர் ஒருவர் செய்கின்ற செயலினுல், அந் நிகழ்ச்சி செய்ய முடியாத ஒன்ருகி விட்டதாகக் கருதப்படும் (பி. 34).

(4) குறிப்பிட்ட கப்பல் ஓர் ஆண்டுக்குள் திரும்பிவிடுமாகுல் 'ஆ' வுக்குப் பணம்தர 'அ' உறுதியுரை செய்தான். கப்பல் அந்த ஆண்டுக்குள் திரும்பிவிடுமானுல் ஒப்பந்தம் வலியுறுத்தப்படக் கூடியதாகும். அந்த ஆண்டுக்குள் கப்பல் எரிந்து விடுமேயானுல், ஒப்பந்தம் இல்லா நிலையதாகிறது.

ஒரு செயலைச் செய்யவோ, செய்யாதிருக்கவோ குறிப்பிட்ட அறுதியிட இயலாத நிகழ்ச்சி ஒன்று குறிப்பிட்ட காலவரம்புக்குள் நடைபெற மேற்கொள்ளுகின்ற நிகழ்வுசார் ஒப்பந்தமானது அந் நிகழ்ச்சி நிர்ணயிக்கப்பட்ட காலம் கடந்த பின்னர், அந் நிகழ்ச்சி நடைபெருவிடினும் நிர்ணயிக்கப்பட்ட காலத்திற்குள்ளாக அத்தகைய நிகழ்ச்சி நடைபெற முடியாத நிலையினை அடையினும், இல்லா நிலையினை எய்துகின்றது (பி. 31-1).

(5) குறிப்பிட்ட கப்பல் ஓராண்டுக்குள் திரும்பாவிடில் 'ஆ' வுக்குப் பணம் தருவதாக 'அ' உறுதியுரை செய்தான். கப்பல் ஓராண்டுக்குள் திரும்பாவிடினும், ஓராண்டுக்குள், எரிக்கப்பட்டு விடினும், ஒப்பந்தம் வலியுறுத்தப்படக் கூடியதாகும்.

ஒரு செயலைச் செய்யவோ செய்யாதிருக்கவோ குறிப்பிட்ட அறுதியிட இயலாத நிகழ்ச்சி ஒன்று குறிப்பிட்ட காலவரம்புக்குள்ளாக நடைபெருமலிருக்க மேற்கொள்கின்ற நிகழ்வுசார் ஒப்பந்தமானது, அந்நிகழ்ச்சி காலக்கெடுவின் முடிவில் நடைபெருமலிருந்தாலும், காலக்கெடு முடியுமுன்னர் அந்நிகழ்ச்சி நடைபெற முடியாத நிலையினை அடைந்தாலும், சட்டப்படி வலியுறுத்தப்படக் கூடியதாகும்.

(6) (அ) இரு இணைகோடுகள் ஓரிடத்தை உள்ளீடு செய்யுமானுல் 'ஆ' வுக்கு ரூபாய் 1000 தருவதாக 'அ' உடன்படுகின்றுன். இந்த உடன்பாடு இல்லா நிலையதாகும்.

(ஆ) 'அ' வின் மகன் 'இ' யினை, 'ஆ' மணம் புரிந்தால் ரூபாய் 1000'ஆ'வுக்குத் தருவதாக 'அ' உடன்பாடு கொண்டான். ஆனால் உடன்பாடு செய்தபோது 'இ'இறந்துவிட்டிருந்தாள், இந்த உடன்பாடு இல்லா நிலையதாகும் (Void). முடியாத ஒரு நிகழ்ச்சி நடைபெறுமானால் ஒரு செயலைச் செய்யவோ செய்யாதிருக்கவோ செய்கின்ற நிகழ்வுசார் ஒப்பந்தமானது, அத்தகைய நிகழ்ச்சி உடன்பாடு கொள்ளும் நேரத்தில் முடியாமற் போனது பற்றி ஒப்பந்தக்காரர்கள் அறிந்தோ அறியாமலோ இருப்பார்களேயானால், ஒப்பந்தம் இல்லாநிலையதாகும்.

## நிகழ்வுசார் பகடைப் பணைய ஒப்பந்தங்கள் (Contingent and Wager Contracts)

(1) ஒப்பந்தத்தை ஒட்டிய ஒருநிகழ்ச்சி நடைபெறுவதையோ நடைபெறுமலிருப்பதையோ பொறுத்து, ஏதாவது ஒன்றைச் செய்வது அல்லது செய்யாமலிருப்பது என்ற ஒப்பந்தம் நிகழ்வுசார் ஒப்பந்தமாகும் (பி. 31), பகடைப் பணைய ஒப்பந்தம் ஒரு நிகழ்வுசார் ஒப்பந்தமாகும். தங்களுக்கு அக்கறை ஏதுமில்லாததும் நிச்சயமில்லாததுமான நிகழ்வினைப் பொறுத்து ஒருவர் பணம் பெறுவதாகவும், மற்றொருவர் அதை இழப்பதாகவும் செய்து கொள்ளும் பரஸ்பர உறுதிவுரைகள் கொண்டது, பகடைப் பணைய ஒப்பந்தமாகும். நிகழ்வுசார் ஒப்பந்தங்கள் ஒவ்வொன்றிலும் பரஸ்பர உறுதியுரைகள் இருக்கவேண்டும் என்று நியதி இல்லை.

(2) அனைத்து பகடைப் பணைய ஒப்பந்தங்களும் நிகழ்வுசார் ஒப்பந்தங்களாகும். ஆனால் அனைத்து நிகழ்வுசார் ஒப்பந்தங்களும் பகடைப் பணையம் கொண்டதாக இருப்பதில்லை.

(3) பகடைப் பணையத்தில் பணம் பெறுவதோ இருப்பதோ தவிர, நிகழ்ச்சி நடைபெறுவதில் ஒப்பந்தக்காரர்கள் எவ்விதமான அக்கறையும் கொள்வதில்லை. ஆனால் நிகழ்வுசார் ஒப்பந்தத்தின் இரு தரப்பினரும் நிகழ்ச்சியினில் அக்கறை கொண்டுள்ளார்கள்.

(4) பகடைப் பணையத்தில், வருங்கால நிகழ்ச்சி ஒன்றுதான் ஒப்பந்தத்தை நிர்ணயிக்கின்ற நிலையில் உள்ளது. நிகழ்வுசார் ஒப்பந்தத்தில், அத்தகைய நிகழ்ச்சி ஒப்பந்தத்தை ஒட்டியுள்ள ஒரு துணை நோக்கமாக உள்ளது.

(5) பகடைப் பணைய ஒப்பந்தம் இல்லா நிலையதாகும் (Void) (பி. 30). ஆனால் நிகழ்வுசார் ஒப்பந்தம் அத்தகையதன்று (பி. 32).

## பொருள் மயக்க ஒப்பந்தம் (Ambiguous Contract)

ஓர் ஒப்பந்தத்தின் திட்டவரைகள் பொருள் மயக்கம் (Ambiguity) கொண்டதாக இருப்பின், அது பொருள் மயக்க ஒப்பந்தமாகும்.

# 14. ஒப்பந்த நிறைவேற்றம்

## (Performance of Contracts)

சாதாரணமாக ஓர் ஒப்பந்தத்தில் இருதரப்பினரும் அவரவர் சட்டப் பொறுப்பு (கடப்பாடு) நிறைவேற்ற வேண்டிய நிலையில் உள்ளனர். அத்தகைய நிறைவேற்றம் முழுமையானதாகவும் சரியானதாகவும் இருக்கவேண்டும். இந்திய ஒப்பந்தச் சட்ட விதிகளினுலோ வேறு சட்டத்தினுலோ தவிர்க்கப்பட்ட அல்லது பொறுத்தருளப்பட்ட நிறைவேற்றமாயிருந்தாலொழிய, ஒப்பந்தக்காரர்கள் தத்தம் உறுதி உரைகளை நிறைவேற்றவோ நிறைவேற்ற வேண்டி முனைவு (Ofeer) புரியவோ வேண்டும் என்று 37-வது பிரிவு கூறுகிறது. ஒப்பந்தத்தில் மாறுபட்ட எண்ணம் கண்டிருந்தாலொழிய, ஒருவரின் உறுதியுரைகள் அவர் இறந்த பின், அவரின் பிரதிநிதியைக் கட்டுப்படுத்துவனவாகும் (பி. 37). ஆனுல் தனித் தகுதி, திறமை பற்றிய ஒப்பந்தமாயின் உறுதியுரை அளிப்பவர் இறப்புடன் ஒப்பந்த உறவும் முடிவாகும் (பி. 37). குறிப்பிட்ட விலைக்கு, குறிப்பிட்ட நாளுக்கு முன்பாக, 'ஆ'வுக்கு ஓவியம் தீட்டித்தர 'அ' உறுதியுரை அளித்தார். குறிப்பிட்ட நாளுக்கு முன்பாக 'அ' இறந்து விட்டார். 'அ', 'ஆ'வின் பிரதிநிதிகளைச் சட்ட வலியுறுத்தல் செய்ய இயலாது. ஆள்நிலை வழக்கு ஆளுடன் முடியும் (Actio Personalis Moritur cum Persona) என்ற கொள்கை இதனுல் எழுந்ததாகும். ஒப்பந்தக்காரர்களையே ஒப்பந்தம் பாதிக்கும் என்பதும், ஒப்பந்தம் மேற்கொள்ளாத எந்த நபரும் இத்தகைய ஒப்பந்தத்தில் எவ்வித உரிமையும் பெற இயலாது என்பதும் பொது நியதியாகும். இதனையே ஒப்பந்தச் சார்புறவு (Privity of Contract) என்று சொல்லப்படுகிறது. ஓர் ஒப்பந்தக்காரர்களிடையேயுள்ள உறவு, இந்த உறவின் அடிப்படையில் தான் ஒருவர் மீது மற்றவர் ஒப்பந்த வழக்குத் தொடர முடியும். ஆனுல் இதற்கு விலக்காக, பொறுப்புரிமைப் பயனுளி (Cestui Quer trust) காணப்படுகிறுர்.

யாருடைய நன்மைக்காகப் பொறுப்பமைப்பு ஏற்படுத்தப்படு கிறதோ அவர் பொறுப்புரிமைப் பயனுளி என்றழைக்கப்படு கிறார். அவரையே பயனுளி (Beneficiary) என்றும் கூறப்படு கிறது.

Khwaja Muhammadkan vs. Husaini begum 32. All 410 (P.C), Sundararaja vs. Lakshmi Ammal 38. MAD. 788 முன்னர் கண்ட இவ்விரண்டு வழக்குகளிலும் ஒப்பந்தத்திற்கு முற்றிலும் புதியவர் வழக்குரிமை பெற வழியுண்டு என்பதைக் கண்டுள் ளோம். வேறு சில விலக்குகளின் கீழும், அத்தகையவர் வழக் குரிமை பெறுகின்றனர். சில சூழ்நிலைகளில் சட்டநெறியால் (Operation of Law) அல்லது நபர்கள் செயலினால் மீளா உரிமை மாற்று (Assignment) நடைபெற்று, அடுத்தவர்கள் வழக்குரிமை பெற வழிவகை ஏற்படலாம்.

#### சட்டநெறியில் உரிமை மாற்றம்

ஒரு நிலத்திலுள்ள பாத்தியதையைக் குத்தகை எடுத்தோ வாங்கியோ சட்டநெறியில் உரிமை மாற்று பெறலாம். நொடிப்பு நிலை (Bankruptcy) ஏற்படுவதனாலும் இத்தகைய உரிமை மாற்று ஏற்படும்.

#### ஒப்பந்தக்காரர்கள் செயல்

ஒப்பந்தக்காரரில் ஒருவரின் இசைவின்றி, ஒப்பந்தத்தின் பொறுப்புச் சுமை அல்லது பொறுப்புறுதியை உரிமை மாற்று செய்ய அடுத்த நபரால் முடியாது. உறுதியுரை அளிப்பவர், தன் பொறுப்புறுதிகளை உரிமை மாற்று செய்ய இயலாது (பி. 40). தனித் தகுதிகள் உடைய சட்டப் பிணைப்புகள் கொண்ட ஒப்பந் தங்களையும் உரிமை மாற்று செய்ய இயலாது. பொதுவாக நோக்கினால் ஓர் ஒப்பந்தத்தின் பொறுப்புச் சுமையை உரிமை மாற்றம் செய்ய இயலாதே அன்றி, அவ்வொப்பந்தப் பயனை (Benefit) உரிமை மாற்றம் செய்யலாம்.: கடப்பாட்டினையும் உரிமை வாய்ந்தவரின் இசைவுடன் உரிமை மாற்றம் செய்ய லாம். கடனுளி ஒருவர் தன் கடப்பாட்டினை மற்றவருக்கு உரிமை மாற்றம் செய்து கடனுளரிடமிருந்து விடுபட முடியாது. அத்தகைய உரிமை மாற்றத்திற்கு மூவரின் இசைவும் தேவை.

#### ஒப்பந்தப் பயன் உரிமை மாற்றம்

ஒப்பந்தத்தினால் ஒப்பந்தக்காரரின் கடப்பாடானது ஆளுக் குரியதாகவோ (Personal) ஆளைக்குறிக்காத (Inpersonal) ஒன் றாகவோ இருக்கலாம்.

ஆளுக்குரியது : ஆளுக்குரிய கடப்பாடாக இருப்பின் ஏற்ற உரிமை, உரிமை மாற்றம் செய்யக் கூடியதன்று. ஏனெனில் அத்தகைய உரிமை மாற்றம் ஒப்பந்தத்தில் மேற்கொண்ட கடப்பாட்டின் தன்மையையே மாற்றி விடும். திருமண ஒப்பந்தம் உரிமை மாற்றம் செய்யப்படக்கூடிய தன்று.

### ஆளைக்குறித்த உரிமை மாற்றம்

கடப்பாடானது ஆளைக் குறிப்பிடாமல் இருப்பின் ஏற்ற உரிமை, உரிமை மாற்றம் செய்யக் கூடியதாக இருக்கும். கடன், பண சம்பந்தமான எத்தகைய ஒப்பந்தமும் ஆளைக் குறிக்காத ஒன்றாக இருப்பதனால் ஏற்ற உரிமைகளும் உரிமை மாற்றம் செய்யக் கூடியவைகளாக உள்ளன.

### நிறைவேற்ற அளிப்பு முனைவு (Tender of Performance)

ஒரு தரப்பினரால் நிறைவேற்றத்திற்கான முனைவு (Offer) வெளிப்பட்டு, மறுதரப்பினர் அதற்கு இசைவு தெரிவிக்காத நிலையில் முன்னவரின் கடப்பாடு அழிகிறது என்று இ. ஒ. சட்டத்தின் 38-வது பிரிவு கூறுகிறது. குறிப்பிட்ட நாளில் 10 கட்டு பருத்தி 'ஆ'வுக்குக் கொடுக்க 'அ' கட்டுப்பட்டு, 'ஆ' ரூபாய் 1000/-ஐ 'அ'வுக்குத் தரவேண்டுமானால், குறித்த நாளில், குறித்த இடத்தில் 10 கட்டு பருத்தியினைக் கொடுத்து விட்டால், அவன் நிறைவேற்ற அளிப்பு முனைவு செய்ததாகக் கூறப்படுகிறது. அத்தகைய நிறைவேற்றம் ஏற்கப்படாவிடின், 'அ' தன் பங்கினைச் செய்து விட்டதாகத் தீர்மானிக்கப்பட்டு இழப்பீட்டுக்கு 'அ' கடப்பாடுடையவராக்கப்படுகிறார். அளிப்பு முனைவினை முயற்சித்த நிறைவேற்றம் என்றும் கூறலாம். இந்தியாவிலும் சட்டம் இதே போன்று காணப்படுகிறது. இ. ஒ. சட்டத்தின் 33-வது பிரிவில் செல்லத்தக்க அளிப்பு முனைவுக்கான மூலக்கூறுகள் கீழ்க் கண்டவாறு உள்ளன:

(1) கட்டுவரம்பற்றதாக இருத்தல் வேண்டும்.

(2) சரியான காலத்திலும், இடத்திலும் செய்யப்பட்டதாகவும், தன் பங்கினை முழுமையாக உடனுக்குடன் செய்து முடிக்கக் கூடியவராகவும், விருப்பமுடையவராகவும் முனைவாளர் (Cfferor) இருப்பதை, மற்றவர் தெரியக் கூடிய சூழ்நிலையுள்ளதாகவும் இருத்தல் வேண்டும்.

(3) அளிப்பு முனைவு, பொருள்கள் கொடுப்பது பற்றியதாக இருப்பின், உறுதியுரை செய்தவர். தன் உறுதியுரையினால் பொருள் தர கட்டுப்பட்டுள்ள வழியே பொருள்முனைவு செய்யப்பட்டது

என்பதை அறியக் கூடிய வாய்ப்பு, உறுதியுரை ஏற்பவருக்கு (Promisee) இருத்தல் வேண்டும்.

(4) உறுதியுரை ஏற்பவர்கள் பலராயினும் அவர்களில் ஒருவரிடம் செல்கின்ற அளிப்புமுனைவு, அனைத்து நபர்களிடமும் செய்வதானல் ஏற்படும் பயனை நல்கும்.

(5) முழு சட்டப்பிணைப்புக்கானதாக முனைவு (Offer) இருத்தல் வேண்டும். உறுதியுரை செய்பவர், தன் பங்கினை நிறைவேற்றத் தேவையான, நியாயமான வசதிகளை, உறுதியுரை ஏற்பவர் மறுத்தாலும் அலட்சியப் படுத்தினலும் உறுதியுரை செய்பவர் அவர் பங்கினை நிறைவேற்றுவதினின்றும் பொறுத்தருளப்படுகிறார் (பி. 67).

**இணைந்து உறுதியுரை அளிப்பவர்களும், இணைந்து உறுதியுரை ஏற்பவர்களும் (Joint Promisors and joint Promisees)**

இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்ட நபர்கள் செய்கின்ற உறுதியுரைகள் இருவகைப்படும் — இணைந்த உறுதியுரை (Joint Promise) அல்லது இணைந்ததும், தனித்தனியானதுமான உறுதியுரை (Joint and Several Promise) ஆகும்.

**இரண்டிற்குமுள்ள வேறுபாட்டினை உய்த்துணருதல் அவசியம்**

(அ) ஒரே பணப் பிணைமுறி (Money Bond) மீது 'எ' யிடமிருந்து ரூ. 3000/-ஐ அ. ஆ, இ, ஆகிய மூவரும் வாங்கினர். இதில் கடப்பாடு (Liability) இணைந்துள்ளது. மொத்தப் பணத்திற்காக மூவர் மீது தீர்ப்பாணை (Decree) பெற்றிடினும் ஒரு நபரிடமிருந்து ரூ. 1000/-க்கு மேலாக 'எ' பெற முடியாது. ஆனல் அ, ஆ, இ ஆகிய மூவரும் தங்களின் இணைந்த உறுதியுரையுடன் கூட, தாங்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாக முழுப் பணத்திற்கும் கடப்பாடுடையவர்களாக உடன்பட்டிருப்பின், அதனை இணைந்ததும். தனித்தனியானதுமான கடப்பாடு (Joint and Several Liability) என்று கூறப்படும். அந்நிலையில் 'எ' தன் முழுப்பணத்தையும் அவர்களில் யாரேனும் ஒருவரிடமிருந்தோ, சிலரிடமிருந்தோ, பெறமுடியும்- ஆனல் தன் பங்குக்கு மேலாகச் செலுத்தியவரோ, செலுத்தியவர்களோ மற்றவரிடமிருந்து விகிதப் பொறுப்பு (Contribution) பெறுவதற்கான வழி ஏற்படும்.

(ஆ) இணைந்த கடப்பாட்டில் மற்றவரின் இசைவின்றி, யாரேனும் ஒரு உறுதியுரை செய்தவரை விடுவிப்புச் செய்யினும் ஏனைய உறுதியுரை செய்தவர்களும் விடுவிக்கப்படுவர். ஆனல் இணைந்ததும், தனித்தனியானதுமான கடப்பாட்டில் அவ்விதம் விடுவிக்கப்படுவதில்லை (பி. 44).

(இ) இணைந்த உறுதியுரையில், உறுதியுரை செய்தவர்களுள் யாரேனும் ஒருவர் இறந்துவிடின், ஏனையவர்கள் மீது கடப்பாடு சுமத்தப்படும்.

முன்னர் கூறிய சான்றில் 'அ' இறந்துபடின் அவரின் கடப்பாடு 'ஆ', 'இ' யினையும், 'ஆ' வும் இறந்துபடின், முழுமையும் 'இ' மீதும், 'இ' யும் இறந்துபடின் 'இ' யின் பிரதிநிதியின் மீது கடப்பாடு சேரும். ஆனால் இணைந்ததும், தனித்தனியானதுமான கடப்பாட்டில் 'அ' வின் இறப்புக்குப் பின்னர், 'அ' வின் பிரதிநிதிகள், 'ஆ', 'இ' மூவகையினரும் இணைந்தும், தனித்தனியாகவும் கடப்பாட்டிற்குள்ளாக்கப்படுவர். அதேபோன்று, 'ஆ' வும் இறந்துபடின், 'அ', 'ஆ' பிரதிநிதிகளுடன் 'இ' இணைந்தும், தனித்தனியாகவும் கடப்பாட்டிற்குள்ளாவார். 'இ' யும் இறந்துவிட்டால் மூவரின் பிரதிநிதிகளும் இணைந்தும், தனித்தனியாகவும் கடப்பாட்டிற்குள்ளாவார் (பி. 42).

இந்தியாவில் இ. ஒ. சட்டத்தின் 43-வது பிரிவில் இணைந்த கடப்பாட்டிற்குள்ளானவரிடையே கடப்பாடானது எவ்விதம் உண்டாகிறது என்பது விளக்கப்பட்டுள்ளது.

"மாறான திட்டவட்டமான உடன்பாடு காணாதவரையில் இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்டோர் செய்கின்ற உறுதியுரையின் மீது உறுதியுரை ஏற்றவர் முழு உறுதியுரையினையும் நிறைவேற்ற வேண்டும் என்று உறுதியுரை அளித்தவர்களில் யாரேனும் (ஒருவர் அல்லது மேற்பட்டவர்) கட்டாயப் படுத்தலாம்."

"மாறான எண்ணம் ஒப்பந்தத்தில் இல்லாதபோது, இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்ட இணைந்து உறுதியுரை அளித்தவர்களில் ஒருவர், மற்ற இணைந்த உறுதியுரை அளித்தவரை உறுதியுரையினை நிறைவேற்ற தன்னுடன் மற்றவரும் விகிதப் பொறுப்பு ஏற்கக் கட்டாயப்படுத்தலாம்".

"இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட இணைந்த உறுதியுரை அளிப்பவர்களில் யாரேனும் அத்தகைய விகிதப்பொறுப்பு ஏற்பதில் தவறினால் (Dufault) அதனால் ஏற்படும் இழப்பீட்டை தங்களுக்குள்ளாகச் சரிவிகித அளவில் மிகுதியுள்ள இணைந்த உறுதியுரை செய்தவர்கள் ஏற்க வேண்டும்". எனவே இந்தியச் சட்டத்தில் மாறான எண்ணம் பற்றி ஒப்பந்தத்தில் திட்டவட்டமாகக் குறிப்பிடப்படாத வரையில், இந்த உறுதியுரையானது இணைந்ததும், தனித்தனியானதுமான உறுதியுரையாகிறது என்பது தெளிவு. இணைந்த உறுதியுரை செய்பவர்களிடையே எழுகின்ற

விகிதப் பொறுப்புரிமை பற்றியும் தெளிவாக இந்தியச்சட்டம் வரைவுரைத்துள்ளது.

Jainarain Ram *vs*. Surajmull Sagarmull 1949 F. L. J. 216 (F.C.)

வழக்கில் இணைந்த உறுதியுரை செய்தவர்களில் ஒருவர் அல்லது சிலர் மீது வழக்குத் தொடர உறுதியுரை ஏற்றவருக்கு உரிமை உண்டு என்று தீர்வு காணப்பட்டது.

## நிறைவேற்றம் நிகழும் காலம், இடம், முறை (Time, Place, And Manner of Performance)

நிறைவேற்றத்திற்கான காலம் குறிப்பிடப்பட்டிருப்பின், உறுதியுரை ஏற்றவரின் விண்ணப்பம் இல்லாமலே உறுதியுரையினை நிறைவேற்றுவதாக உறுதியுரை செய்தவர், உறுதியுரை நிறைவேற்றித் தீர வேண்டிய இடத்தில் நடைமுறையிலுள்ள வழக்கமான அலுவல் நேரங்களில் குறிப்பிட்ட நாளில் உறுதியுரையினை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடுடையவராக உள்ளார் (பி. 47).

ஆனால் ஒப்பந்தத்தில் காலக்கெடு குறிப்பிடப்படாத போது, உறுதியுரை ஏற்றவரின் விண்ணப்பமின்றி உறுதியுரையினை நிறைவேற்ற உறுதி பூண்டவர் நியாய வரம்புக்குட்பட்ட காலக் கெடுவினில் உறுதியுரையினை நிறைவேற்ற வேண்டும் (பி, 46). நியாய வரம்புக்குட்பட்ட காலம் என்பது தனித்தனி வழக்கின் பொருண்மை (Fact)யைப் பொருத்து மாறும் தன்மையதாகும். உறுதியுரை ஏற்பவர் நிர்ணயிக்கின்ற அல்லது ஒப்புகின்ற முறையிலோ காலக் கெடுவினுள்ளாகவோ உறுதியுரையினை நிறைவேற்றலாம் (பி. 50).

## நிறைவேற்றம் நிகழும் இடம்

ஒப்பந்தம் நிறைவேற்றப்பட வேண்டிய இடம் குறிப்பிடப் பட்டிருந்தால், உறுதியுரை செய்தவர் அக்குறிப்பிட்ட இடத்திலேயெ ஒப்பந்தம் நிறைவேற்றப்பட வேண்டும். இடம் குறிப்பிடப்படாமலிருப்பின், ஒப்பந்தக்காரர்கள் விருப்பத்திற்கிணங்க நிறைவேற்றலாம். அத்தகைய விருப்பம் வழக்கின் தன்மைகளினின்றும் கண்டறியலாம். ஆனால் 49-வது பிரிவில் உறுதியுரை ஏற்பவர் விண்ணப்பமின்றி உறுதியுரை செய்தவர் நிறைவேற்ற வேண்டிய இடம் குறிப்பிடப்படாமல் இருப்பின், அத்தகைய இடம் பற்றிக் குறிப்பிடச் சொல்லி, அவ்விடத்தில் அதை நிறைவேற்ற வேண்டிய கடமை (Duty) உறுதியுரை செய்தவருடையதாகும்.

### நிறைவேற்றும் முறை (Manner of Performance)

உறுதியுரை ஏற்பவர் நிர்ணயிக்கின்ற அல்லது ஒப்புகின்ற முறையில் அல்லது காலத்தில் உறுதியுரையினை நிறைவேற்றலாம் என்று 50-வது பிரிவில் கூறப்பட்டுள்ளது.

பணத்திற்குப் பதிலாகப் பொருள் பெற்றுக் கொள்ள உறுதியுரை ஏற்பவர் இசைந்தால், பொருள் கொண்டு தருவது சரியான நிறைவேற்றமாக எண்ணப்படுகிறத.

### ஒன்றுக்கொன்றுன உறுதியுரைகள் நிறைவேற்றம் (Performances of Reciprocal Promises)

இருதரப்பினரின் உறுதியுரைகளும் நிறைவேற்ருத நிலையில் இருதலை ஒப்பந்தங்களில் (Bilateral Contracts) தம்தம் பங்கினை ஒப்பந்தக்காரர் எப்போது நிறைவேற்ற வேண்டும் என்பது ஒரு கேள்வியாக எழுகிறது. பரஸ்பர அல்லது ஒன்றுக்கொன்றுன உறுதிகள் 3 வகையாகப் பிரிக்கப்படலாம். (1) பரஸ்பரமானதும், சார்ந்துள்ளதுமான உறுதியுரைகள் (Mutual and Dependent), (2) பரஸ்பரமானதும் தனித்துமுள்ள உறுதியுரைகள் (Mutual and Independent) (3) பரஸ்பரமானதும் சேர்ந்து செயல்படுவதுமான உறுதியுரைகள், (Mutual and Concurrent).

ஒன்றுக்கொன்றுன உறுதியுரைகள் எம்முறையில் எவ் வரிசையில் நடைபெற வேண்டும் என்று ஒப்பந்தத்தில் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டுள்ளதோ, அவ் வரிசையிலேயே அவைகள் நிறைவேற்றப்பட வேண்டும். ஒப்பந்தத்தில் அத்தகைய நிர்ணயம் செய்யப்படாவிடின் ஒப்பந்தத்தின் தன்மையைப் பொறுத்து வரிசைப்படி நிறைவேற்றப்படல் வேண்டும் (பி. 52). இப் பிரிவில்பரஸ்பரமானதும் தன்னிச்சையானதுமான உறுதியுரைகள் (Mutual Independent Promises) விளக்கப்பட்டுள்ளன.

சனவரி முதல் தேதி 'ஆ'வுக்குக் குதிரையினைக் கொண்டு தர 'அ' உறுதியுரை அளித்தார். அதன் விலையினைப் பிப்ரவரி முதல் தேதி தருவதாக 'ஆ' உறுதியுரை அளித்தார். இரண்டு உறுதியுரைகளும் பரஸ்பரமானதும், தன்னிச்சையானதுமான உறுதியுரைகளாகும். குதிரையினைக் கொண்டு தராவிடினும் 'அ' தனக்குச் சேரவேண்டிய பணத்தினைக் கோர முடியும். ஆனுல் 'அ'வின் பங்கைச் செய்யாத காரணத்திஞல் அதற்கான இழப்பீடு செலுத்த 'அ'வின் மீது வழக்குத் தொடருகின்ற தீர்வுவழி (Remedy) 'ஆ'வுக்கு உண்டு- ஒன்றுக்கொன்றுன உறுதியுரை

கள் கொண்ட ஒப்பந்தம் ஒன்றில் ஒன்றுக்கொன்றுன உறுதியுரை நிறைவேற்றுமுன்னதாக நிறைவேற்ற முடியாத உறுதியுரை கொண்டதாக அல்லது அவ்வுறுதியுரையின் நிறைவேற்றம் முன்னதாக கோரமுடியாததுமாக இருப்பினும், ஒன்றுக்கொன்றுன உறுதியுரை அளித்தவர் தன் பங்கினை நிறைவேற்றத் தவறியபோதும், அத்தகைய ஒன்றுக்கொன்றுன உறுதியுரையாளர், மற்றவரின் ஒன்றுக்கொன்றுன உறுதியுரையினை நிறைவேற்றக் கோர இயலாது. மேலும் அத்தகைய எதிர் உறுதியுரையாளருக்கு இத்தகைய ஒப்பந்த உறுதியுரை நிறைவேற்றம் நடைபெருததனுல், ஏற்பட்ட இழப்பீட்டினையும் நிறையீடு (Compensation) செய்தல் வேண்டும் (பி. 54).

இப் பிரிவில் பரஸ்பரமானதும், சார்ந்துள்ளதுமான உறுதியுரைகள் பற்றி விளக்கம் காணப்படுகின்றன. குறிப்பிட்ட விலைக்கு வீடு கட்டித்தர 'ஆ'வுடன் 'அ' உடன்பட்டான். தேவையான மரச் சாமான்கள் தருவதாக 'ஆ' உறுதியுரை அளித்தான். 'ஆ' மரச் சாமான்கள் தரவில்லை; வேலையும் நடைபெற முடியவில்லை. 'அ' வேலையை முடித்துத் தர வேண்டியதில்லை. இத்தகைய ஒப்பந்தத்தினுல் 'அ' அடைந்த இழப்பீட்டினை 'அ'வின் உறுதியுரை, 'ஆ'வின் உறுதியுரையினைச் சார்ந்திருந்ததனுல் 'ஆ' நிறையீடு (Compensation) செய்ய கடமைப்பட்டுள்ளார்.

பிரிவு " 51-ல் ஒன்றுக்கொன்றுன உறுதியுரைகள் கொண்ட ஒப்பந்தம் ஒன்றில் உறுதியுரைகள் ஒரே சமயத்தில் நிறைவேற்றப்படவேண்டியவைகளாக இருப்பின், உறுதியுரை ஏற்றவர் தன் ஒன்றுக்கொன்றுன உறுதியுரையினை நிறைவேற்றத் தயாராகவும், விருப்பமாகவும் இருந்தாலல்லாமல் உறுதியுரை அளித்தவர் தன் உறுதியுரையை நிறைவேற்ற வேண்டியதில்லை" என்று கூறப்பட்டுள்ளது. இப் பிரிவு, பரஸ்பரமானதும், சேர்ந்து செயல்படுவதுமான (Mutual and Concurrent Promises) உறுதியுரைகள் பற்றி விளக்கம் தருகிறது. 'அ' பொருள் கொண்டு தருகின்ற பொழுது 'ஆ' விலையினைத் தருவதாக உடன்பாடு மேற்கொண்டான். இதில் ஒவ்வொருவர் உறுதியுரையும் ஒரே நேரத்தில் நிகழ வேண்டியவைகளாக உள்ளன. 'ஆ' பணம் தரத் தயாராகவும் விருப்பமாகவும் இல்லையெனில் 'அ' பொருள் கொண்டு தர வேண்டியதில்லை. அதே போன்று 'அ' பொருள் கொண்டு தரத் தயாராகவும் விருப்பமாகவும் இல்லாதபோது 'ஆ'வும் பணம் தரவேண்டியதில்லை.

### ஒப்பந்தம் நிறைவேற்ற வேண்டிய நிகழ்வினைத் தடுக்கும் நபரின் கடப்பாடு (Liability of Party Preventing Event on which Contract is to Take Effect)

ஒன்றுக்கொன்றுான உறுதியுரைகள் கொண்ட ஒப்பந்தம் ஒன்றில் ஒப்பந்தக்காரரில் ஒருவர், மற்றவர் தன் உறுதியுரையினை நிறைவேற்ற முற்படாமல் தடுப்பின், தடுக்கப்பட்டவரின் விருப்பத்திற்கிணங்க அவ்வொப்பந்தம் தவிர்தகு நிலையாகும். ஒப்பந்தம் நிறைவேறாததனால் தடுக்கப்பட்டவர் அடைந்த எத்தகைய இழப்பீட்டினையும் தடுத்தவர் நிறையீடு (Compensation) செய்யக் கோரும் உரிமையினைத் தடுக்கப்பட்டவர் அடைகின்றார் (பி. 53).

இ. ஒ. சட்டத்தின் 55-வது பிரிவு குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் ஒப்பந்தம் நிறைவேறத் தவறுவதினால் உண்டாகும் பலாபலன்களைப் பற்றி ஆராய்கிறது. ஒப்பந்தத்தில் காலக்கெடுவினை ஒரு முக்கியமான, கடுமையான கட்டுவரம்பாகச் சட்டம் கொள்வதில்லை. அக்கால கெடுவுக்குள் ஒப்பந்தக்காரரில் ஒருவர், அவரின் பங்கை நிறைவேற்றத் தவறினார் என்ற காரணம் காட்டி மற்றவர் ஒப்பந்த முறிவு ஏற்படுத்துவதையும் அனுமதிப்பதில்லை. ஆனால் காலக்கெடுதான் ஒப்பந்தத்தின் முக்கிய கூறு என்பதைச் சட்டம் கூர்ந்து கவனிக்கிறது. வணிக ஒப்பந்தங்களில் காலக்கெடுவே ஒப்பந்தத்தை நிர்ணயிக்கின்ற முக்கிய கூறாக உள்ளது. காலக்கெடுக் கூறு முக்கியமானதா இல்லையா என்பது ஒப்பந்தக்காரர்களின் விருப்பத்தை, எண்ணத்தைப் பொறுத்தது. காலக்கெடு மூலக் கூறாக உள்ள ஒப்பந்தத்தில் உறுதியுரை ஏற்பவரின் விருப்பத்திற்கிணங்க ஒப்பந்தம் தவிர்தகு நிலையினை எய்துகிறது. ஆனால் காலக்கெடு முக்கிய கூறாக இல்லாத ஒப்பந்தங்களில், ஒப்பந்தம் குறிப்பிட்ட காலக் கெடுவினில் நிறைவேறாத நிலையில் தவிர்தகு ஒப்பந்தமாக மாறாது எனினும், உறுதியுரை ஏற்பவர் காலத் தாமதத்தினால் அடைந்த இழப்பீட்டினை நிறையீடு (Compensation) செய்து கொள்ளும் உரிமையினைப் பெறுவார்.

### செலுத்தம் செல் ஒதுக்கல் (Appropriation of Payments)

கடன் வாங்கியவரின் விருப்பப்படி, குறித்த ஒரு கடனுக்கோ முதலுக்கோ, வட்டிக்கோ வரவுவைத்தால்,—கடன் வாங்கியவர் ஒன்றும் கூறாதவிடத்துக் கடன் கொடுத்தவர் தம் விருப்பப்படி வரவு வைத்தல்—இரண்டு நிலைகளும் சேர்ந்து செல் ஒதுக்கல் எனப்படும். கடன் வாங்கியவர் ஒன்றும் கூறாத நிலையில், கடனாளரும் செலுத்தம் செல் ஒதுக்கல் செய்யாத நிலையில்தான் சட்டம் குறுக்கிடுகிறது. அதற்கான கொள்

கைகள் (Layton's Case (1816) 1 M. E. R. 572 வழக்கின் தீர்ப்பினின்றும் பெறப்பட்டு விதிகளாக 59 முதல் 61-வது பிரிவு வரை வகுக்கப்பட்டுக் காணப்படுகின்றன.

ஒன்றுக்கு மேற்பட்ட கடன்களை ஒரே கடனாளரிடம் கடனாளி கொண்டிருக்கின்ற நிலையில், முழுக்கடன்களையும் தீர்க்க முடியாத அளவில் சிறிது பணம் கடனாளருக்குத்தரின் :

(i) கடனாளரிடமுள்ள எந்த ஒரு கடனுக்காகவும் அத்தகைய பணத்தினைச் செல் ஒதுக்கல் செய்ய திட்டவட்டமாகவோ ஊக்கமுறையினாலோ (Implication) கடனாளி சொல்லலாம் (பி. 59).

(ii) பணம் செலுத்தும்போது கடனாளி திட்டவட்டமாகவோ, ஊகத்தினாலோ செல் ஒதுக்கல் பற்றி ஒன்றும் கூறாவிடின், கடனாளர் கடைசி நேரத்திலும் கடனாளியின் எந்த ஒருவிதமான கடனுக்காகவும், காலங்கடந்த கடன்களுக்காகவும் மெய்ப்பிக்கப்பட்டாலன்றி வலியுறுத்தப்பட முடியாத நிலையிலுள்ள கடன்களுக்காகவும் செல் ஒதுக்கல் செய்யலாம். ஆனால் சட்ட முரணான கடனுக்குச் செல் ஒதுக்கல் செய்யக் கூடாது (பி. 60).

(iii) கடனாளர், கடனாளி இருவரும் செல் ஒதுக்கீடு செய்யாத நிலையில் காலக் கிரமப்படி (காலங்கடந்த கடன்களாயினும்) கடன்கள் ஒவ்வொன்றினுக்கும் வரிசையாக செல் ஒதுக்கல் செய்தலை வழக்குமன்றம் முடிவு செய்யும். கடன்கள் அனைத்தும் ஒரே காலத்தினதாயிருப்பின், விகிதாச்சாரத்தில் செல் ஒதுக்கல் செய்யப்படும் (பி. 61).

**நிறைவேற்ற வேண்டாத ஒப்பந்தங்கள்**

பழைய உடன்பாட்டிற்குப் பதிலாக ஒப்பந்தக்காரர்கள் புதிய உடன்பாடு கொண்டாலோ ஒப்பந்தக்காரர்கள் ஒப்பந்த முறிவுக்கு உடன்பட்டாலோ, மூல ஒப்பந்தத்தை மாற்ற உடன்பட்டாலோ, உறுதியுரை ஏற்பவர் ஒப்பந்தம் நிறைவேற வேண்டியதில்லை என்று தள்ளுபடி செய்வதனாலோ, விடுவிப்பதனாலோ, உறுதியுரை ஏற்பவர் காலக்கெடுவை நீட்டிப்பதாலோ, நிறைவேற்றத்திற்குப் பதிலாக வேறொன்றால் உளநிறைவு கொள்வதனாலோ, மூல ஒப்பந்தத்தினின்றும் ஒப்பந்தக்காரர்கள் விடுபடுவார்கள். பிரிவு 62, "ஒப்பந்தக்காரர்கள் உடன்பட்டுப் பழைய ஒப்பந்தத்திற்குப் பதிலாகப் புதிய உடன்பாடு கொண்டாலோ ஒப்பந்த முறிவு

கொண்டாலோ ஒப்பந்த மாறுதல் செய்தாலோ, மூல ஒப்பந்தம் நிறைவேற்றப்பட வேண்டியதில்லை'' என்று கூறுகிறது.

## புத்தீடு (Novation)

பழைய ஒப்பந்தத்திற்குப் பதிலாக அவ்வொப்பந்தத்தின் சார்பினரோ புதிய ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொள்ளல், புத்தீடு எனப்படும். சான்று : 'ஆ' வுக்குப் பணம் தர 'அ' ஒப்பந்தம் செய்தான். பின்னர் அ, ஆ, இ ஆகிய மூவரிடையேயும் 'அ' வுக்குப் பதிலாக 'இ' யைக் கடனாளியாக 'ஆ' ஏற்றுக் கொள்ள உடன்பாடாயிற்று. 'அ' வின் பழைய கடன் முடிந்து 'இ' யின் புதிய கடனுக்கு 'ஆ' வுடன் ஒப்பந்தமாகியது.

## இறுத்தம் (Rescission)

ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டவர்கள் அல்லது அவர்களில் ஒருவர் அதை இறுத்து விடுதல், ஒப்பந்த இறுத்தம் என்றழைக்கப்படும். புத்தீடு (Novation); இறுத்தம் (Rescission); திருத்தம் (Alteration) இவற்றின் தன்மைகளைக் கொண்டுதான் இ. ஒ, சட்டத்தின் 62-வது பிரிவு காணப்படுகிறது.

பிரிவு 63-ல் தனக்களிக்கப்பட்ட உறுதியுரையை முழுமையாகவோ அதன் ஒரு பகுதியையோ நிறைவேற்றுவதினின்றும் உறுதியுரை விடுப்பித்தோ தள்ளுதல் செய்தோ நிறைவேற்ற வேண்டிய காலக் கெடுவினை நீடிக்கச் செய்தோ தனக்குச் சரியென்று தோன்றியதன் உள நிறைவை அடையத்தக்க ஏதேனும் ஒன்றை அத்தகைய நிறைவேற்றத்திற்குப் பதிலாக ஏற்றும் உறுதியுரை ஏற்பவர் ஒப்பந்தத்திற்கு முடிவு கட்டலாம் எனக் கூறப்பட்டுள்ளது.

**Lallubhai Patel vs. Lalbhai Trikamlal Mills** (1958. S.C. J. 866) வழக்கில் காலக்கெடு நீடிக்கின்ற செயலானது உறுதியுரை ஏற்பவரின் நன்மையைக் கருத்தில் கொண்டு அவராகச் செய்து கொள்வதாக இருத்தல் கூடாது என்றும், அது பற்றி வழக்குகளின் தன்மையினின்றும் முடிவு மேற்கொள்ளுதல் அவசியம் என்றும் தீர்ப்பு நல்கப்பட்டது. அத்தகைய கால நீடிப்புக்கு இருதரப்பினரும் ஒப்பவேண்டும் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது.

## Kapurchand vs. Himayatalikhan (A. I. R. 1963 S.C. 250)

நிசாமின் மூத்த மகனும், பீராரின் அரச குமாரனுமான இமாயத் அலிகான் பம்பாய் நிறுவனம் ஒன்றில் கடனுறுதிச் சீட்டுகள் கொடுத்து நகைகள் பெற்றார். ஐதராபாத், இராணு

வத்தினிடம் ஒப்படைக்கப்பட்டபோது அரசகுமாரர் கடன் தீர்வுக்குழு அரசகுமாரர் பட்ட கடனை 27 இலட்சத்திற்கு 20 இலட்சம் அனுமதித்தது. முதலில் வாதி சில மறுப்புகள் தெரிவித்திருப்பினும் பின்னர் முழுச் சம்மதத்துடன் அனுமதிக்கப் பட்ட பணத்தை இரு தவணைகளில் பெற்றுக் கொண்டார். இவ் வழக்கு முழுமையும் 63-வது பிரிவுன்கீழ் வந்ததாகக் கொள்ளப் பட்டது.

ஒப்பந்த நிறைவேற்றத்திற்குப் பதிலாக உறுதியுரை ஏற் பவரின் உளநிறைவுக்குத் தக்க ஏதேனும் ஒன்றைப் பெற்று, ஒப் பந்தத்தினின்றும் உறுதியுரை செய்தவரை விடுவிக்கலாம் என் றுள்ளதல்லவா? இதனையே வழக்கில் கொண்டு, கடனுளர்கள் 27 இலட்சத்திற்குப் பதிலாக 20 இலட்சம் பெற்றுக் கொள்ள ஒப்பினர்.

# 15. ஒப்பந்த விடுவிப்பு

## (Discharge of Contract)

சட்டத்தினுல் தவிர்க்கப்பட்டாலொழிய ஒப்பந்த நிறைவேற்றத்தினை ஒப்பந்தக்காரர்கள் நிறைவேற்றவோ, நிறைவேற்றுவதாக முனைவு செய்யவோ கடமைக்குட்பட்டவர்கள் எனக் கண்டறிந்தோம். ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டதும் அல்லது செல்லு நிலையதான அளிப்பு முனைவு (Valid Tender) அளிக்கப் படினும் ஒப்பந்தம் விடுவிக்கப்படுகிறது. நிறைவேற்றம் நடைபெறுமல் ஒப்பந்த மீறுகை நடைபெறின். பாதிக்கப்பட்ட நபர் "ஏற்றது ஆற்றுக" (குறித்துரைத்ததை நிறைவேற்றுக) என்ற கொள்கை வழியோ, இழப்பீடு கோரியோ தீர்வு வழி தொடர் பாத்தியதைப் பெறினும் ஒப்பந்தம் விடுவிப்பாகிறது, ஒப்பந்தக் காரர்களின் கட்டுப்பாட்டினுள் அடங்காது நடைபெறுகின்ற சில எதிர்பாராத நிகழ்ச்சிகளிலும் ஒப்பந்தம் விடுவிப்பு பெறுதலுண்டு. கீழ்க்காணும் காரணங்களால் ஒப்பந்தம் விடுவிப்படையும் :

(i) நிறைவேற்றம் அல்லது அளிப்பு முனைவு (பி. 37 & 38)

(ii) புத்தீடு (Novation) (பி. 62)

(iii) பொறுப்பு நீக்கம் அல்லது விடுவிப்பு (Release or Waiver) (பி. 63).

(iv) மீறுகை (பி. 39 & 55) (Breach)

(v) நிறைவேற்ற முடியாமை (பி. 56) (Impossibility of Performance) இவற்றில் முதல் மூன்று குறித்து முன்னரே கண்டிருக்கின்றோம்.

ஒப்பந்த மீறுகை : இது பல வழிகளில் நடைபெறலாம். ஒப்பந்தமொன்றை நிறைவேற்ற வேண்டியிருந்து ஒப்பந்தக்காரரில்

ஒருவர் தன் பகுதியினைக் கால கெடுவினில் நிறைவேற்ருவிடில் அத்தகையவர் ஒப்பந்த மீறுகைக்குக் கடப்பாட்டிற்குள்ளாக்கப் படுவார்.

**Jaggo Bai** *vs*. **Harihar Prasad A I R. 1947 (P.C.) 173.** விற்பனைக்கான ஒப்பந்தம் ஒன்றில் கொடுக்க வேண்டிய தொகைக்கு அதிகமாக கொடுத்தால் தான், விற்பனை ஒப்பா வணத்தை நிறைவேற்றித் தரமுடியுமென்று விற்பவர், வாங்கு பவரிடம் கூறினர். அத்தகைய முனைவினை ஏற்க, வாங்குபவர் மறுத்தார். விற்பவர்தான் ஒப்பந்தத்தை முறித்தார் என்றும் வாங்குபவர் அல்ல என்றும் அதனல் ஏற்றது ஆற்றுக (குறித் துரைத்ததை நிறைவேற்றுக) என்ற வாங்குபவரின் கோரிக்கை யினை கைவிட்ட அந்த நாளிலிருந்து அவரின் மறுபயனை வட்டி யுடன் பெற உரிமை பெறுகிருர் என்றும் அந்த தீர்ப்பு வழங்கப் பட்டது.

பின்னர் உறுதியுரை செய்தவர் தம்முடைய உறுதியுரையினை நிறைவேற்ற முன்வரின், உறுதியுரை ஏற்பவர் அதனை ஏற்பதா அல்லது உறுதியுரை செய்தவரை ஒப்பந்த மீறுகைக்காகக் கடப் பாட்டிற்குள்ளாக்கப்படுவதா என்பது ஆராயப்பட வேண்டிய ஒன்ருகும். அத்தகைய ஒப்பந்தத்தில் காலக்கெடு முக்கிய கூருக உள்ளதா இல்லையா என்பதனைப் பொறுத்தே வழக்கு நிலை மாறும்.

இங்கிலாந்தில், தனியாக வரையறுக்கப்பட்டிருந்தாலொழிய காலக் கெடு ஒப்பந்தத்தில் மூலக்கூருக கருதப்படாமல், வாதி தன் பங்கினைக் குறிப்பிட்ட கால கெடுவிற்குள் செய்யாவிடினும் குறித்துரைத்ததை நிறைவேற்றச் செய்ய தீர்ப்பாணை வழங்கப் படும். இதற்கு ஒரு விலக்கு உண்டு. வணிக ஒப்பந்தங்களில் காலக் கெடு முக்கிய கூருக ஒப்பந்தத்தில் கொள்ளப்படுகின்றன.

**Rickards (Charles Ltd)** *vs*. **Openheim (1950) I.K.B. 616 C.A.** இந்த வழக்கில், காலச் கெடுவினை மூலக் கூருக முதலில் கொள்ளுதல் ஒப்பந்தமாயினும் அல்லது அத்தகைய காலக்கெடு வினைத் தள்ளுபடி செய்யப்பட்ட ஒப்பந்தத்திலும் நியாயவரம்பை மீறி, கால தாமதம் ஆனபோது ஒப்பந்தத்தின் செய்யத்தக்க செய்யாமையில் இல்லாத மறுதரப்பினர் காலக் கெடு ஒன்றினைக் குறிப்பிட்டு அதற்குள்ளாக மற்றவர் தன் பங்கைச் செய்யா விடின், தான் சட்டப்படி வலியுறுத்தப் போவதாகவோ ஒப்பந் தத்தைக் கைவிட்டு விடுவதாகவோ தெரிவித்து அறிவிப்பு ஒன் றைக் கொடுப்பதன் மூலம், காலக் கெடுவினை ஒப்பந்தத்தின் கூருகச் செய்யலாம் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

இ. ஒ. சட்டத்தின் 55-வது பிரிவில் இதுபற்றிய விளக்கம் காணப்படுகிறது. ஒப்பந்தக்காரர்கள் மேற்கொள்ளுகின்ற ஒப் பந்தம் காலத்தை மூலக் கூறுகக் கொண்டு விளங்க வேண்டும் என எண்ணிஞல் குறிப்பிட்ட காலத்தில் அல்லது அதற்கு முன் பாக ஒரு செயலே செய்வதாகவோ அல்லது குறிப்பிட்ட காலங் களில் அல்லது அக்காலங்களுக்கு முன்பாகச் சில செயல்களேச் செய்வதாகவோ ஒருவர் உறுதியுரை செய்து ஒப்பந்தம் மேற் கொண்டு அவ்விதம் குறிப்பிட்ட காலத்தில் அல்லது அதற்கு முன்பாக அவ்வொப்பந்தத்தை நிறைவேற்றத் தவறின், அத் தகைய ஒப்பந்தம் முழுவதுமோ அல்லது நிறைவேற்றப்படாமல் இருக்கின்ற ஒப்பந்தத்தின் பகுதியோ உறுதியுரை ஏற்பவரின் விருப்பத்திற்கிணங்க, அத்தகைய ஒப்பந்தம் தவிர்தகு ஒப்பந்த மாகி விடும்.

ஒப்பந்தத்தில் காலம் மூலக் கூறுக அமைய வேண்டும் என்பது ஒப்பந்தக்காரர்களின் எண்ணமாக இல்லேயெனில், உறுதியுரை யினேக் குறிப்பிட்ட காலத்தில் அதற்கு முன்பாக நிறைவேற்றத் தவறின் ஒப்பந்தம் தவிர்தகு நிலேயினே அடைவதில்லே; ஆனல் அத்தகைய நிறைவேற்றத் தவறிவிடலால் அடைந்த இழப்பினே உறுதியுரை செய்தவரிடமிருந்து நிறையீடு செய்யப் பெறுகின்ற உரிமையினே உறுதியுரை ஏற்பவர் பெறுகின்றுர்.

உறுதியுரை செய்தவர் தம் உறுதியுரையினே உடன்பட்ட கால அளவுக்குள் நிறைவேற்றத் தவறியதால், தவிர்தகு நிலேயினே எய்திய ஒப்பந்தத்தில் உடன்பட்ட கால அளவு அல்லாமல் மாறு பட்ட காலத்தில் உறுதியுரையினே நிறைவேற்ற உறுதியுரை ஏற் பவர் இசையின் உடன்பட்ட குறிப்பிட்ட கால அளவினில் உறுதி யுரை நிறைவேற்றப்படாததஞல் அவருக்கு ஏற்பட்ட இழப்பினே நிறையீடு செய்யக் கோர முடியாது. ஆயினும் அத்தகைய ஏற் பின்போது உறுதியுரை செய்பவருக்கு அவ்விதம் தான் செய்ய எண்ணியுள்ள தன் எண்ணத்தினே அறிவிக்கை மூலம் தெரிவித் திருப்பின் இழப்பினே நிறையீடு செய்யக் கோர முடியும். இந்திய சட்டத்திற்கும் இங்கிலாந்துச் சட்டத்திற்குமுள்ள வேறுபாடு இதில் காணப்படுகிறது. உறுதியுரை ஏற்பவர் எந்தவிதமான அறிவிப்பும் தர வேண்டியதில்லே. காலந்தாழ்த்திய உறுதியுரை நிறைவேற் றத்தை ஏற்பினும் உறுதியுரை ஏற்பவர் இழப்பினே நிறையீடு செய்யக் கோரலாம்.

Balasundaramudr *vs*. Muthu Venkatachalamudr (1954) M.L.J. 141. விற்பனேப் பூர்த்தியானதாக எண்ணிக்கொண்டு மீட்டு மாற்றளிப்புக்கான (Reconyance) உடன்பாடு கொள்ளப்

பட்ட ஓர் உடன்பாட்டில் காலத்தை முக்கிய கூருக எண்ணி உடன்பட்டனர். அத்தகைய மீட்டு மாற்றளிப்புக்குரியவர் குறிப்பிட்ட காலக் கெடு கடந்திட அனுமதித்து விட்டார். உடன் பாட்டின்கீழ் அவர் "ஏற்றது ஆற்றுக" (குறித்துரைத்ததை நிறைவேற்றுக) என மற்றவரைக் கோரும் எவ்விதமான உரிமைகளுக்கும் பாத்தியதைக் கொள்ள இயலாது எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

ஒப்பந்த நிறைவேற்றம் நிகழுகின்ற காலே ஒப்பந்த மீறுகை கட்டுவரம்புகள் அல்லது நம்புறுதிகளேத் திட்டவரைகளாகக் கொண்ட ஒப்பந்தங்கள் பற்றி முன்னர் ஆராய்ந்துள்ளோம்.

Behn *vs*. Burness (1863) 122 E.R. 281.

கட்டுவரம்பை முக்கிய திட்டவரையாகக் கொண்ட ஒப்பந்தம் ஒன்றில் கட்டுவரம்பை நிறைவேற்ற வேண்டிய நபர் கட்டுவரம்பை நிறைவேற்றத் தவறினுல் மற்றவர் தன் பங்கினே நிறைவேற்ற வேண்டியதில்லே. ஒப்பந்தத்தினுல் உண்டான கடப்பாடுகளே அவரால் நிராகரிக்க முடியும்.

Bettini *vs*. Gye (1876) 1 Q.B.D. 183.

நம்புறுதியினே முக்கிய திட்டவரையாகக் கொண்ட ஒப்பந்தம் ஒன்றில் நம்புறுதியினே நிறைவேற்ற வேண்டிய நபர் அந்த நம்புறுதியை நிறைவேற்றத் தவறிடின், மற்றவர் ஒப்பந்தத்தை ஒரேயடியாக நிராகரிக்க விடுவதில்லே. ஆனுல் மீறுகைக்கு கடப்பாடுடையவராக இருந்த நபரிடமிருந்து இழப்பீடு கோரும் உரிமைகளே மட்டும் பெறுகிமுர்.

Plastic Moda Societa *vs*. Davidson (1953) 8. Llyods RED 527 C.A. கட்டுவரம்பை நிறைவேற்றத் தவறினுர் எனினும் செய்தக்கது செய்யாமைச் செய்த நபர் ஒப்பந்தம் முடிவுற்றதாகக் கொள்ளக் கூடாது எனக் கருதத் தக்கவாறு எண்ணச் செய்த பின்னர், மற்றவர் கட்டுவரம்பு மீறுகையின் காரணமாக ஒப்பந்தத்தை தவிர்க்க விரும்பிடின் அன்னுரின் நடத்தையினுல் ஒப்பந்தத்தை தவிர்ப்பதினின்றும் தடுக்கப்படாமல் இருப்பின் செய்தக்க செய்யாமை செய்த நபருக்கு அவர் செய்யாமைக்குத் தீர்வழி காண அறிவிப்புக் கொடுப்பதன் மூலமாக, நியாயமான சந்தர்ப்பம் தருதல் வேண்டும் என இந்த வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

Freeth *vs*. Burr (1874) L.R. 9 C.P. 208

தவணேமுறையில் பொருள்களேக் கொண்டு வந்து தரும் நிறைவேற்றத்தில் ஒரு தவணேயைக் கொண்டு வந்து தருவதில் தவறி

விடுவதன் மூலம் ஒப்பந்தத்தின் அடிப்படைக்கே சென்று, கொண்டுவந்து தருவதில் தவறிவிடுகின்ற நபரின் நிறைவேற்ற எண்ணத்தைத் தெரியப்படுத்தினால் அடுத்தவர் ஒப்பந்தத்தில் தன் கடப்பாட்டினின்றும் விடுவிக்கப்படுகிறார் என்பதோடு அவர் ஒப்பந்தத்தை நிராகரிக்கவும் செய்ய முடியும் என தீர்ப்புக்கூறப்பட்டது. அத்தகைய நிறைவேற்றாமை ஒப்பந்தத்தின் அடிப்படையினைத் தொடாதபோது அடுத்தவர் இழப்பீடு பெற முடியுமே தவிர ஒப்பந்தத்தை நிராகரிக்க முடியாதென்று Mersey Steel and Iron Coy vs. Naylor (1884) 9 A.C. 434 வழக்கில் தீர்ப்பாகியது. புரிவுரையின் தெரிவிப்பு அல்லது மறித்தழிப்பு போன்ற தவிர்தகு ஒப்பந்தமும், அதன் இறுத்தம் தெரிவிக்கப்படுவதோ, அழிக்கப்படுதலோ செய்யப்படும் (பி. 66).

**எதிர்பார்த்த மீறுகை அல்லது நிறைவேற்ற நாளுக்கு முன்னர் ஒப்பந்த மீறுகை (Anticipatory Breach or Breach of Contract Before the Date of Performance).**

நபரொருவர் அடுத்தடுத்த உறுதியுரை செய்யின் உரிய நாளில் நிறைவேற்ற வேண்டும் என்பதல்லாமல் அவ்வுரிய நாள்வரை ஒப்பந்தத்தினைப் பயனுள்ளதாகவும், நிலைக்கத்தக்கதாகவும் இருக்கச் செய்தல் வேண்டும். நிறைவேற்ற நாளுக்கு முன்பாக ஒப்பந்தக்காரரில் ஒருவரான 'அ' ஒப்பந்தத்தினை நிராகரிக்கவோ ஒப்பந்தத்தின் கீழுள்ள தன் கடப்பாட்டை உதறி விடவோ செய்திடின் மற்ற ஒப்பந்தக்காரரான 'அ' அதனை ஏற்று ஒப்பந்தத்தினை முடிக்க உரிமையுள்ளவராகிறார். அவ்விதம் மறுத்தலை ஏற்ற பின்னர் தன் பங்கினை நிறைவேற்ற வேண்டி தயாராகவும், கடப்பாட்டினின்றும் விடுவிக்கப்படுகிறார். நிறைவேற்றும் நாள் வரை காத்திராமல் எதிர்பார்க்கின்ற இழப்பீட்டிற்காக உடனடியாக உரிமை இயல் வழக்குத் தொடரலாம். மேலும் தன் இழப்பீடுகளைக் குறைக்க 'ஆ' முயலவேண்டும். இழப்பீட்டினை அதிகரிக்கச் செய்து அதிக அளவு இழப்பீடு பெற முயலக்கூடாது. 'ஆ' அப்படி இழப்பீட்டினைக் குறைக்க முயலாவிடினும், வழக்கு மன்றம் சூழ் நிலைக்கேற்ப குறைக்கப் படக்கூடிய இழப்பீட்டிற்கே உத்தரவு வழங்கும். எதிர்பார்த்த மீறுகை ஒப்பந்தத்திற்கான விதியாக இது கொள்ளப்படுகிறது. இக்கருத்தைத் தழுவிய முக்கிய வழக்காக Hoester vs. De la tour (1853) E. R. 922. வழக்கு கொள்ளப்பிட்ட நாளிலிருந்து, வெளி நாட்டு பயணத்திற்காக மூன்று மாதங்களுக்கு 'ஆ'வின் சேவையினைப் பெற 'அ' ஒப்பந்தம் மேற்கொண்டான். குறித்த நாளுக்கு முன்பாகவே 'ஆ'வின் சேவையை வேண்டாமென்று மறுத்து 'ஆ'வுக்கு 'அ' கடிதம் எழுதினான். வழக்கில் 'ஆ' சேவையில் சேரவேண்டி, தேவையான

வற்றைத் தயாரித்துக் கொள்ள வேண்டியதில்லை எனவும், நிறைவேற்ற வேண்டிய நாள் வரும் வரை காத்திராமல், 'அ' ஒப்பந்தந்தத்தை நிராகரித்த உடனே உரிமை இயல் வழக்கு தொடர்ந்திருக்கலாம் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**Frost** *vs*. **Knight** (1872) 7. Ex 111. வழக்கில் இத்தகைய விதி நிகழ்வுசார் ஒப்பந்தங்களுக்கும் பொருந்தும் எனத் தீர்ப்பாயிற்று. ஆனல் மேற்சொன்ன சான்றில், 'ஆ' ஒப்பந்த நிராகரிப்பை ஏற்காமல் ஒப்பந்தத்தை உயிருள்ளதாக வைத்திருப்பின், அவரது அச்செயலினுல் ஒப்பந்தத்தை நிராகரித்த நபருக்கும், தனக்கும் பயன்படத்தக்க முறையில் செயல்படுத்த வழி செய்கிருர். இதனுல் தான் நிராகரித்திருப்பினும், நிறைவேற்ற வேண்டிய நேரத்தில் தன்னைக் கடப்பாட்டிலிருந்து விடுவித்துக் கொள்ள சூழ்நிலைகளைச் சாதகமாக்கிக் கொள்ள, ஒப்பந்தத்தை நிராகரித்தவரால் முடியும்,

Avery *vs*. Bowden (1856). 116·E·R. 1122

குறித்த நாளில் ஓடேசாவில் 'ஆ'வின் கப்பலில் சரக்கேற்ற 'அ' உடன்பட்டான். கப்பல் குறித்த நாளுக்கு முன்பாகவே வந்து சேர்ந்தது. கப்பல் தலைவரிடம் தான் கப்பலுக்குச் சரக்குத் தர இயலாது என்று கூறி 'அ' ஒப்பந்தத்தை நிராகரித்தான். கப்பல் தலைவர் 'அ'வின் நிராகரிப்பை ஏற்காமல் சரக்குக் கோரி, இறுதி நாள் வரை உரிமை பேசிக் கொண்டிருந்தார். இதற்குள்ளாகப் போர் மூண்டது. வழக்கில், 'அ' வின் நிராகரிப்பைக் கப்பல் தலைவன் ஏற்காமல் இருந்ததால் ஒப்பந்தம் அழியாமல், இருவருக்கும் நன்மை பயக்கும் விதத்தில் இருந்தமையால் போரினுல் ஏற்பட்ட ஒப்பந்த விடுப்பு என்ற ஆதாயத்தினை 'அ' பெற உரிமை உண்டு என்றும், 'அ' எந்த விதமான இழப்பீட்டுக்கும் கடப்பாடுடையவராகார் என்றும் தீர்ப்பாயிற்று.

**Braithwaite** *vs*. **Foreign Hard wood Co.** (1905) 2. K.B. 543 ஒப்பந்த நிராகரிப்பை மற்ற நபர் ஏற்றபின் அத்தகைய நிராகரிப்பு இல்லையாயின் ஒப்பந்தத்தை நிறைவேற்றும் நிலையில் அவர் இல்லாமல் இருந்தார் என்று ஒப்பந்தத்தை நிராகரித்த நபர் வாதிட முடியாது என்று இந்த வழக்கில் தீர்வு காணப்பட்டது. இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 39-வது பிரிவில் :

"ஒப்பந்தக்காரரில் ஒருவர், தன் உறுதியுரையினை முழுமையாக நிறைவேற்ற மறுத்தாலும் அல்லது நிறைவேற்ற முடியாமல் செய்து கொண்டாலும் உறுதியுரை ஏற்பவர், சொற்களாலோ அல்லது நடத்தையினுலோ ஒப்பந்தத் தொடர்ச்சிக்குத் தன்

குறிப்பிசைவினை (Acquiescence)த் தெரிவிக்காத நிலையில், அவர் ஒப்பந்தத்தினை முடிவு பெறச் செய்யலாம்" என்று கூறப்பட்டுள்ளது.

நிறைவேற்றப்பட வேண்டிய ஒப்பந்தங்களுக்குத்தான் (Executory Contracts) இவ்விதி பொருந்துகிறது.

Kumaraswami Chettiar *vs*. Kuruppaswami Moopanar I.L.R. 1953. MAD. 488.

ஒப்பந்தம் நிறைவேற்ற வேண்டிய காலத்தை அடைந்ததும் 39-வது பிரிவு பயன் பெறுது என்பதால் அங்கே ஒப்பந்த மீறுகை நடைபெற்றதாகக் கொண்டு வழக்கு முடிவுற்றது.

இ. ஒ. சட்டத்தின் 75-வது பிரிவில் :

"ஒப்பந்தம் ஒன்றினை உரிமை வழியில் ரத்து (Rescinds) செய்யும் நபர், ஒப்பந்தம் நிறைவேருததால் அடைந்த இழப்புக்கு முறையீடு (Compensation) பெறும் தகுதி அடைகிஒர்" என்று கூறப்பட்டுள்ளது.

நிறைவேற்ற முடியாமை (Impossiblity of Performance)

ஒப்பந்தத்தில், அதனை நிறைவேற்ற முடியாமையானது வெளிப்படையாகவோ, ஒப்பந்தம் ஏற்பட்டபொழுது அத்தகைய நிறைவேற்ற முடியாமை இருந்தும் ஒப்பந்தக்காரர் அறிய முடியாதவாறு இருக்கவோ, ஒப்பந்தம் ஏற்பட்ட பின்னர் நிறைவேற்ற முடியாமை ஏற்படுவதாகவோ இருக்கலாம். ஒப்பந்தம் ஏற்பட்ட பின்னர் நிறைவேற்ற முடியாமை ஏற்படுவதன் விளைவுகள் குறித்து, ஆராய முற்படுவோம்.

எந்த ஒரு உறுதியுரைக்குப் பதிலாகவும் நிறைவேற்ற முடியாத ஒரு உறுதியுரை சிறந்த, உண்மையான மறுபயனுக முடியாது ஆகலான், முடியாத செயல் பற்றி மேற்கொள்ளும் உடன்பாடு இல்லாநிலையது (பி. 56) ஆகும். ஒப்பந்தத்தின் கருப்பொருள் (Subject Matter) ஒப்பந்தம் ஏற்பட்டபொழுது இல்லாமல் இருந்தால், ஆனுல் அதன் இல்லாமை குறித்து ஒப்பந்தக்காரர்கள் அறியாமலிருந்திருந்தால், அத்தகைய உடன்பாடு முடியாமையாகி பரஸ்பரத் தவறு (Mutual mistake) காரணமாக இல்லா நிலையினதாகும் (பி. 20).

Paradine *vs*. Jane (1647) Aleyn. 26 ஒப்பந்தம் ஏற்பட்ட பின்னர், முடியாமை ஏற்படின், அச் செயலே உறுதியுரை செய்தவர் அதை நிறைவேற்றம் செய்வதினின்றும் பொருத்துக்

கொண்டு விடாது. சட்ட வரம்புக்கு உட்பட்ட ஒரு செயலைச் செய்ய உருதி செய்கின்ற ஒப்பந்தம் உள்ளபொழுது எதிர்பாராத நிலையில் நிறைவேற்றம் தொல்லை தரக்கூடியதாக மாறிடினும் அல்லது எதிர்பாராத நிகழ்ச்சிகளினுல் நிறைவேற்ற முடியாத நிலையினை எய்திடினும், ஒப்பந்தக்காரர் ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டும் அல்லது செய்யாமைக்கு இழப்பீடு செலுத்துதல்தான் வேண்டும், என்று மேற்படி வழக்கில் தீர்மானிக்கப்பட்டது. இவ் விதி உறுதி படுத்தக் கூடியதும், முழுமையானதுமான உறுதியுரை உள்ள ஒப்பந்தத்தினைத் தான் கட்டுப்படுத்தும். இது வெளிப் படையான அல்லது உட்கிடையான கட்டுவரம்புகளுக்கு உட் படாது. ஆனுல் ஒப்பந்தத்தில் சில நிகழ்வு சார்புகளில் (Contingencies) மேலும் உள்ள கடப்பாடுகளினின்றும் ஒருவரையோ, இரு வரையோ விடுவிக்க ஒப்பந்தக்காரர்களிடையே எழுத்து மூலம் ஒப்பந்தம் ஏற்பட்டிருப்பின், அதற்கு இவ்விதி பொருந்தாது. (பி. 32).

**உழ்கிடை கட்டுவரம்புக் கொள்கை (Doctrine of Implied Term)**

உறுதியுரைகள் தொடர்ந்து நிறைவேற்றக் கூடியதாயிருப்பின் ஒப்பந்தம் நிறைவேற்றப்படல் வேண்டும். ஒப்பந்தக்காரர் உறுதி யுரைகள் தொடர்ந்து நிறைவேற்றக்கூடியதாயிருந்தால் தான் ஒப் பந்தம் நிறைவேற்றப்பட வேண்டும், என்ற கட்டுவரம்பினை உள் ளடக்கி ஒப்பந்தங்களை உண்டாக்கலாம். அவ்விதம் அறுதியிட்டு கட்டுவரம்பு கொள்ளாத நிலையில் அத்தகைய ஒப்பந்தங்களில் வழக்கு மன்றம், கட்டுவரம்பு இருப்பதாக விளக்கம் கொண்டு, அக் கட்டுவரம்பின் மீதுள்ள கடப்பாட்டை நிறைவேற்ருத உறுதி யுரை அளித்தவை வழக்கு மன்றம் பொறுத்துக் கொள்ளும். இக்கொள்கையினை, கட்டுவரம்பு உட்கிடைக் கொள்கை அல்லது உட்கிடை கட்டுவரம்புக் கொள்கை என்பர்.

Tamplin *vs*. Anglo Mexican Coy's Case (1916) 2. A. C. 397 வழக்கில் லோர்பன் பிரபு "மாறுபட்ட காலத்தில், ஒப்பந்தக்காரர்களை வைத்து எண்ணிடின் அவர்கள் அத்தகைய கட்டுவரம்பற்ற நிலையில் ஒப்பந்தத்தை மேற்கொட்டிருப்பார் களா, என்று கணக்கிட்டு அந்நிலையில் ஒப்பந்தத்தினின்றும் விடுவிப்பு கொண்டிருப்பார்கள் என்று கருத்தில் கொண்டு, இதனையே நிறைவேற்ற முடியாமைச் சட்டத்தின் தத்துவ மாகக் கொள்ளவேண்டும் எனக் கூறியுள்ளார். உட்கிடை கட்டுவரம்புக் கொள்கை"ச் சட்டத்தின் ஒரு அரசுறுத்து விதி (Positive Rule) எனவும், சூழ்நிலைக் கேற்ப வழக்குமன்ற ஒப்பந் தக் கட்டுவரம்பை ஏற்கவும் பெய்கின்ற ஒன்று என்ற கருத்தும் இங்கிலாந்தில் நிலவுகிறது.

இவ்விரண்டு வேறுபட்ட கொள்கைக்கு அப்பாற்பட்டு பின் வருவனவற்றில் ஓர் உறுதியுரையானது முழுமையான திட்ட வரைகள் கொண்டிருப்பினும், ஒப்பந்தத்தின் தன்மை அல்லது சுற்றுச் சூழ்நிலைகளை ஒட்டி, உட்கிடைக் கட்டுவரம்பு (Implied Condition)க்குள்ளாகும் என வழக்கு மன்றங்கள் முடிவு கொண்டன.

(அ) ஒப்பந்தக் கருப்பொருள் அழிவு (Destruction Subject Matter).

(ஆ) ஒப்பந்தக்காரர்கள் இறந்துபடுதல், அல்லது செய்ய இயலாத நிலையினை அடைதல் (Death or Disablement of Parties)

(இ) பின்னர் சட்டமுரணுகும் ஒப்பந்தம் (Contract Becoming Subsequently Iliegal).

(ஈ) போர் தொடக்க அறிவிப்பு (Declaration of War).

(உ) குறிப்பிட்ட நிலையுடைய பொருள்களின் இல்லாத நிலை அல்லது ஏற்படாத நிலை (Non Existance or Non occurrence of Things).

(ஊ) நிலைகுலைவு (Frustration)

**ஒப்பந்தக் கருப் பொருள் அழிவு**

உறுதியுரை செய்தவரின் செய்தக்க செய்யாமை (Fault) இல்லாபோது, ஒப்பந்தத்தின் கருப் பொருள் அழியுமானல், அவர் தன் உறுதியுரையை நிறைவேற்றுவதினின்றும் தவிர்க்கப்படுவது நியாயமானது. அத்தகைய கட்டுவரம்பானது, ஒப்பந்தத்தில் உட்கிடையாக உள்ளது.

Taylor *vs*. Caldwell (1863) 122 E. R. 299

குறித்த நாட்களில், இசை அரங்கு ஒன்றனை வாடகைக்கு விட உடன்பாடாயிற்று. குறித்த நாட்களுக்கு முன்பாக அரங்கு தீப்பற்றி எரிந்து நாசமாயிற்று. வழக்கில் அரங்கின் உரிமையாளர் உறுதியுரை நிறைவேற்றும் தன் கடப்பாட்டினின்றும் தவிர்க்கப் படுகின்றூர் எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது. தீர்ப்பில், ஒப்பந்தத்தின் போது ஒப்பந்தக்காரர்கள் அரங்கு தொடர்ந்து நல்ல நிலையில் இருக்கும் என்று எண்ணி ஒப்பந்தம் மேற்கொண்டிருக்கிறூர்கள். எனவே உட்கிடையான கட்டுவரம்பாக இதனை மேற்கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டது.

V. L. Narasu vs. P. S. V. Iyer I. L R. 1953 MAD. 381

குறிப்பிட்ட கால அளவுக்குப் படம் ஒன்றினை அரங்கினில் காண்பித்து, அதனால் வரும் பலனைத் தயாரிப்பாளரும், அரங் குரிமையாளரும் பங்கிட்டுக் கொள்வது என்று ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அரசு அலுவலர்களால் குறிப்பிடப்பட்ட காப் பின்மை (Unsafe) இன்னபிற குறைகள் (Defective) காரணமாக அரங்கு இடிக்கப்பட்டு விட்டது. இக்காரணங்களை, அதனை வாங்கிய பொழுது உரிமையாளர் அறிந்திருக்கவில்லை. இடி-பாடினால் காட்சி தடைப்பட்டது. தீர்ப்பில் அரங்கின் தொடர் நிலைப்பு (Continued Existence) ஒப்பந்தத்தின் அடிப்படை நோக் கமாகும், எனவே அவ்வடிப்படை முறிந்து விட்டது என்று கூறப்பட்டது. நீண்ட கால இடைவெளிக்குப் பின்னர் அரங்கு நிர்மாணிக்கப்பட்ட நிலையில், தன் படக் காட்சியினைத் திரும்ப வெளியிட வேண்டும் என்று தயாரிப்பாளர் உரிமை கொண்டாட முடியாது. கொள் அளவிலும், (Accommodation) பொருளீட்டும் தகுதியிலும் (Earning capacity) புதுபிக்கப்பட்ட அரங்கு முற்றிலும் வேறுபட்டுள்ளது. படக்கவர்ச்சி, நிலையற்றதாகவும், அற்பாயுள் கொண்டதாகவும் இருப்பதால், முன்பு கவர்ந்த அவ்வளவு கூட்டத்தினைத் தற்சமயம் அந்தப்படம் கவராது. மேலும் தன்னிசையான முறிவோ, கவனமின்மையோ தான் ஒப்பந்த முறிவுக்குக் காரணம் என்று மெய்பிக்கப் படவில்லை. எனவே அரங்கின் உரிமையாளரிடமிருந்து படத்தயாரிப்பாளர் எத்தகைய இழப்பீட்டினையும் பெறத் தகுதி அடைய முடியாது என்று தீர்ப்பாகியது.

**ஒப்பந்தக்காரர்கள் இறந்து படுதலும், செய்ய இயலா நிலையினை அடைதலும்**

தானாக (Personally) நிறைவேற்ற வேண்டிய ஒப்பந்தம் ஒன்றனை உறுதியுரை செய்பவர் இறந்து படுவதனாலோ, நிறை வேற்ற முடியாத அளவில் உடல் நலன் கெடுவதனாலோ, நிறை வேற்றம் செய்வதினின்றும் அவர் விடுவிப்பு செய்யப்படுவது நியாயமானதாகும். ஏனெனில் இறந்துபடுதல் அல்லது உடல் நலக்குறைவு ஏற்படுதல் வன்பேராற்றல் (Vis major) அல்லது கடவுளின் செயலாகும். அவற்றின் மீது அவருக்கு அதிகாரம் ஏது ?

Paradine vs. Jane வழக்கில், மனிதன் ஒன்றை செய்ய வேண்டும் அல்லது செத்து மடிய வேண்டும் என்பதாகக் கொள்ளப்பட்ட ஒப்பந்தம் நிறைவேற்றப்படாமையை மன்னிக்க முடியாது என்று கூறப்பட்டது. பின்னரே இதற்கு விலக்களிக்

கப்பட்டது என்பதனை Robinson *vs*. Davison (1871) 40 L. J. Ex. 172 வழக்கில் காணலாம். பியானோ (Piano) வாசிப்பவர், உடல் நலக்குறைவினால் ஒத்துக் கொண்ட நிகழ்ச்சியில், இசைக்க வரவில்லை. ஒப்பந்தம் மேற் கொண்டவர்கள் நல்ல உடல் நிலையில் இருந்து இசைக்க வேண்டும் என்ற கட்டுவரம்பைக் கொண்டிருந்தோ, அல்லது கொண்டிக்க வேண்டும் என்றோ கருதப்பட்டோ, பியானோ இசைப்பவர் இழப்பீட்டுக்கு கடப்பாடுடையவரன்று எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**சட்ட முரணான ஒப்பந்தம்**

ஒப்பந்தத்திற்குப் பின்னர் இயற்றிய சட்டத்தினால், ஒப்பந்தம் சட்டத்தினால் தவிர்க்கப்படவேண்டிய நிலையில் ஒப்பந்தக்காரர்கள் தாம் நிறைவேற்றும் கடப்பாட்டினின்றும் விடுவிக்கப்படுகிறார்கள்.

Baily *vs*. Decrespigny (1869) 4. Q. B. 180 'ஆ' விடமிருந்து நிலத்திட்டு (Plot of Land) ஒன்றை வாங்கிய பொழுது அதில் கட்டடம் கட்டுவதில்லை என 'அ' ஒப்பந்தம் மேற் கொண்டான். பின்னர் பாராளுமன்றத்தில் நிறைவேற்றிய சட்டத்தினால் அப்பகுதி புகைவண்டி நிறுவனத்தால் எடுத்துக் கொள்ளப்பட்டு, கட்டடங்கள் எழுப்பப்பட்டன. 'அ' வுக்கு எதிராக 'ஆ' வினால் தொடரப்பட்ட உரிமை இயல் வழக்கில், பின்னர் நிறைவேறிய சட்டத்தினால் உடன்பாட்டு இசைவு, நிறைவேற்ற முடியாமையானதால் கடப்பாட்டிலிருந்து 'அ' விடுவிப்புச் செய்யப்பட்டதாகத் தீர்ப்பாகியது.

**போர் அறிவிப்பு**

முன்னரே கூறியபடி, போர் அறிவிப்பு வெளியானவுடன் ஒரு நாட்டின் குடிமக்கள், பகை நாட்டின் குடிமக்களுடன் ஒப்பந்தம் மேற்கொள்ளக் கூடாது. போர் அறிவிப்பிற்கு முன்னதாக ஒப்பந்தம் மேற்கொண்டிருந்தால், குறைந்தகால அளவிலேயே போர் நடைபெறின், நிறைவேற்றத்தினைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படும். நீண்ட காலப் போரானால் இயலாமை காரணத்தினால் ஒப்பந்தக்காரர்கள் ஒப்பந்தத்தினின்றும் விடுவிக்கப்படுவர்.

Metropolitan Water Board *vs*. Dick, Kerr & Co Ltd. (1918) A. C. 119.

ஆறு ஆண்டுகளில் நீர்த்தேக்கம் ஒன்றை அமைக்க 1914-ல் ஒப்பந்தமாகியது. உலகப் போரினால் 1916-ல் வேலை தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. இழப்பீட்டுக்கான உரிமை இயல் வழக்குத் தொடரப்பட்டபோது. போர்க் காலத்தில் வேலை நிறுத்திவைக்கப்பட்டிருந்ததால் ஒப்பந்தம் வெகுவாக மாறிவிட்டதால் நிறைவேற்

றத்தினைக் கட்டாயப் படுத்துவதனால் முற்றிலும் புதிய ஒப்பந்தம் நிறைவேற்றச் சொல்வதற்குச் சமமாகும் என விளக்கப்பட்டது. எனவே ஒப்பந்த நிறைவேற்றம் இயலாமையினால் எதிர்வாதி இழப்பீட்டிற்குக் கடப்பாடுடையவராக ஆக்கப்பட மாட்டார் எனத் தீர்ப்பளிக்கப் பட்டது.

**குறிப்பிட்ட நிலையுடைய பொருள்களின் இல்லாத நிலை அல்லது ஏற்படாத நிலை**

Krell *vs*. Henry (1903) 2. K. B. 740 இப்பிரபல வழக்கு இது பற்றி விளக்குகிறது. முடி சூடல் விழா வழக்குகளில் (Coronation Cases) இது பிரபலமானது.

1902-ல் அரசரின் முடி சூட்டல் ஊர்வலம் காண தளம் (Plot) ஒன்று வாடகைக்கு ஒப்பந்தம் செய்யப்பட்டது. அரசரின் உடல் நலக் குறைவினால் ஊர்வலம் கைவிடப் பட்டது. வாடகையினைத் திருப்பித் தரக் கோரி உரிமை இயல் வழக்குத் தொடரப்பட்டது. நிறைவேற்ற இயலாமையினால் வாடகையினைத் திருப்பித் தர வேண்டியதில்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டது. Taylor *vs*. Caldwell வழக்கில் கூறப்பட்ட விதி இதில் பொருந்துவதைக் காணலாம்.

ஒப்பந்த நிலை குலைவு (Doctrine of Frustration)

ஒப்பந்தப் பொருள் அல்லது ஒப்பந்தத்தின் அடிப்படை அழிந்து போவதால் எதிர்பாராத விதமாக ஒப்பந்த முறிதல் அல்லது தடைப்படுதல் காரணமான நிலையில் ஒப்பந்தம் நிறைவேற்றாமை பொறுத்துக் கொள்ளப்படும். இருவகையான நிலைகளில் இக் கொள்கை பின்பற்றப்படுகிறது :

(i) Taylor *vs*. Caldwell வழக்கில் ஒப்பந்த நிறைவேற்றம், கூடிய நிகழ்ச்சி ஒன்றினால் இயலாமை ஆயிற்று.

(ii) Jackson *vs*. Union Horine Insurence Co (1874) L. R. 10. C. P. 125 மேலமைந்ததாகும் நிகழ்ச்சி (Supervening Event) அல்லது நிகழ்ச்சிகள் உறுதியுரை நிறைவேற்றப்பட முடியாமல் இருக்கத்தக்க சூழ்நிலைகள் மாற்றப்பட்டு. இரு தரப்பினரின் நோக்கத்தையும் நிலை குலைவு செய்யின், நிறைவேற்ற இயலாமையாக இல்லா விடினும். உறுதியுரை செய்தவரைக் கடப்பாட்டிற்குள்ளாக்கப் பார்ப்பதானது, அவர் முதலில் செய்த உறுதியுரையினின்றும் வேறுபட்ட எண்ணுக்குக் கடப்பாடுடையவராக்குவது போலாகும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

Tamplin *vs*. Anglo Mexican Co (1916) 2. A. C. at P. 404. Constantine. S. S. Line *vs*. Imperial Corporation (1942) A. C. at P. 168.

வழக்குகளில் கூறப்பட்டவை கவனிக்கத்தக்கன. முதல் இரண்டாம் உலகப் போர்களின் போது ஏற்பட்ட வாணிகச் சீர் குலேவு, வழக்கு மன்றத்தின் முன்பாக அநேக நிலே குலேவு வழக்கு களேக் கொணர்ந்தது. இப்பொழுது நிலேக்குலேவு வழக்குகளில் இயலாமை வழக்குகளுடன் எண்ணு வாணிக நிலே குலேவு (Frustration of Adventure) வழக்குகளும் உள்ளடங்குகின்றன.

Bank Line *vs*. Capel (1919) A. C. 435. இவ் வழக்கில் லார்ட் சம்னர் (Lord Sumner) பின்வருமாறு குறிப்பிட்டார் :

கோரிக்கையின் மீது அல்லது போர் நிலேகளிஞல் காலதாமதம் ஏற்பட்ட வழக்குகளில் காலதாமதம் நிலே குலேவு ஏற்படுத்திற்ரு இல்லேயா என்பதை வழக்கு விசாரணேயின்போது கண்டறிய வேண்டும். ஏனெனில் தாமதத்திற்கான காரணமும் வாய்ப்புகள் பற்றியும் அறிந்திருந்தால், ஒப்பந்தக்காரர்களே இது பற்றித் தீர்மானிக்க இயலும். ஒப்பந்தம் எந்தச் சூழ்நிலேகளில் முறியடிக் கப் படுகிறது என்பதனே ஆராய, லார்ட் டியூனிடின் (Lord Dunedin) Metropolitan Water Board *vs*. Dick Kerr & Co.-ல் பயன் படுத்திய சோதனேயே சாலச் சிறந்தது. "தோன்றிய நிகழ்ச்சி யினுல் தடங்கல் செய்யப்படுவதற்கு முன்பிருந்த ஒப்பந்தத்தின் வேலே அல்லது சேவையின் தன்மை அழிக்கப்பட்டுள்ளதா", என்று கண்டறிய வேண்டும் என்கிருர்.

ஒப்பந்த நிலே குலேவுக் கொள்கைக்கும் பரஸ்பர தவற்றினுக் கும் (Mutual Mistake) உள்ள தொடர்பினே குறிப்பிடாமலும் ஆராய்வோம். இரண்டிலும் ஒப்பந்தக்காரர்களால் அது பற்றி முன்னரே அறிந்திருப்பின் ஒப்பந்தக்காரர்களால் குறிப்பிடப்பட் டிருக்கும் என்று கருதிச் சட்டத்திஞல் உள்ளதாக, எண்ணப்படுவ தான, ஒரு கட்டுவரம்பைச் சட்டம் உட்கிடையாகக் கருதுகிறது. ஆனுல் தவறுகளில் உட்கிடை கட்டுவரம்பு இருக்கின்ற சில பொருண்மைகள் (Facts) இருப்பது பற்றியதாகவும், நிலே குலேவி னில், வருங்கால பொருண்மைகள் பற்றியதாயுமுள்ளன. இரண் டிலும் முன்னிலேயில் இருந்த ஒப்பந்தக் கருப்பொருளினே அழிக்கும் தன்மையதாகப் புதிய பொருண்மை நிலே உள்ளதா என்பதைப் பற்றிக் காணவேண்டும்.

ஒப்பந்த நிலை குலைவுக்கான எல்லைகள் பற்றி இனி காணலாம்.

(i) Tamplin N. S. S. Co *vs*. Anglo mexican Co (1915) 2 I. C. 397 Constantine S. S. Lines Case. Bell *vs*. Lever Bros (1932) A. C. 161 — இவ் வழக்குகளினின்றும், நிலை குலைவுக் கொள்கை, ஒப்பந்தக்காரர்கள் ஊகிக்கின்ற எண்ணத்தின் அடிப்படையில் எழுகின்ற ஒன்றுதலால், ஒப்பந்தத்தின் திட்டக் கூறுகளைப் பாதிக்கும் வகையான கட்டுவரம்பு எதனையும் உட்கிடையாகக் கொள்ளக் கூடாது எனக் கண்டறியலாம்.

(ii) Twentshe Overseas Trading Ltd. *vs*. Oganda Sugar Factory Ltd. (1945) 1. MLJ (P. C.) — இவ் வழக்கில், ஒப்பந்தக்காரர்கள் இருவர் மனத்திலும் ஒப்பந்த மூலக் கூற்றில் ஒன்று தோல்வியுற்றதாகத் தோன்றினல் தான், நிலை குலைவை மட்டும் காரணமாக்கி ஒப்பந்தம் முடிக்கப் பெறலாம் எனக் கூறப்பட்டது.

(iii) Marine Na ional Fish Ltd. *vs*. Ocean Trawlear Ltd. 1935 A. C. 524 (P. C.). வழக்கில் நிலை குலைவுண்டாக்கிய நிகழ்வு, வேண்டுமென்று செய்த செயலாகவோ அல்லது ஒப்பந்தக்காரர் ஒருவரால் தேர்ந்தெடுக்கப் பட்டதாகவோ இருப்பின், ஒப்பந்த நிலை குலைவுக்குக் கொள்கைப் பயன்படாது என்று விளக்கப் பட்டது.

போர் ஏற்படுதலினுல் ஒப்பந்தக்காரர்களின் ஒருவர் உள் நாட்டிலும் மற்றவர் பகை நாட்டிலும் இருப்பின்) நிறைவேற்றும் கடப்பாடுகள், சட்டம் இயக்குகின்ற முறை மாறுபடுவதனுல் விட்டொழிக்க (Abrogate)ப் படுகின்றனர் என்று தெரிந்து கொண்டுள்ளோம். போர் ஏற்படுகின்ற நிகழ்ச்சினுல் ஒப்பந்த நிலை குலைவேற்படும்,

Fibrosa Spolka Akeyina *vs*. Fair Bron Lawson Combe Barbour Ltd. (1943) A. C. 32 (Fibrosa's Case)—விலையில் ஒரு பகுதி பணத்தை முன் பணமாகப் பெற்றுக் கொண்டு 'அ' வுக்குப் பொறி வகை (Machinary) தயாரித்துக் கொடுக்க 'அ' ஒப்பந்தம் செய்தான். முனைவினை ஏற்று £ 1000/- ஐ 'அ' வும் தந்து விட்டான். போர் தொடங்கியதால், 'அ' வினுல் ஒப்பந்த நிறைவேற்றம் செய்ய இயலாமையாயிற்று. எனவே ஒப்பந்தத்திற்கு நிலை குலைவு ஏற்பட்டது. (Handler *vs*. Webster) மீறி, மறுபயன் முழுமையாகத் தோல்வியடைந்தது என்பதை மூலமாகக் கொண்டு 'அ', £ 1000/- ஐ திரும்பப்பெறுவதற்குத் தகுதி அடைகிருர் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. 'அ' வின் உரிமையானது ஒப்பந்தப் போல்வு (Quasi Contract) அடிப்படையில் அமைந்துள்ளதே தவிர

Chandler *vs*. Webster வழக்கில், Collin S. M. R. தவருகக் கருதியதுபோல் ஒப்பந்தமாகாது என்றும் கூறப்பட்டது. மேலும் Fibrosa-வின் வழக்கில் விஸ்கவுண்ட் சிம்சன் (Viscount Simpson) என்பவர் ஒப்பந்தக்காரர்களின் செய்தக்க செய்யாமையினுல் ஏற்பட்டதன்று எனினும் நிறைவேற்றத்தினை எல்லையற்ற இயலாமையினதாக்கிடக் கூடிய நிகழ்ச்சியினுலும், போரின் காரணமாகக் கூடிய சட்ட முரணுன நிகழ்ச்சியினுலும், நிலை குலைவு அடைந்து மேற்கொண்டு ஒப்பந்தம் நிறைவேற்ற முடியாது போயிற்று எனவும், இரு காரணங்களும் ஒன்றிற்கொன்று முற்றிலும் வேருனவை எனவும் தீர்ப்பில் விளக்கினுர்.

**நிலை குலைவு விளைவுகள்**

(Hirji Mulji *vs*. Cheong Yue S. S. Co (1926) A. C. 497 வழக்கில் ஒப்பந்தக்காரர்களில் ஒருவர் அல்லது மற்றவரின் விருப்பத்தைப் பொறுத்து, நிலை குலைவு ஒப்பந்தம், தவிர்தகு ஒப்பந்தமாவதில்லை; ஆனுல் தானுக (Automatically) உடனடியாக ஒப்பந்தம் முடிக்கப் பெறும் என்று விளக்கப்பட்டது.

(2) Chandler *vs*. Webster (1904) I K B 493 — ஒப்பந்த நிலை குலைவானது உண்டாக்கிய நிகழ்ச்சிக்குப் பின்னர் ஒப்பந்தக்காரர்களின் நிறைவேற்றும் கடப்பாடு பற்றிய உரிமைகள், முன்னமே செலுத்தப்பட பணம் அல்லது அத்தகைய ஒப்பந்தத்தினுல் குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கு முன்னமே ஏற்பட்ட உரிமைகள் முதலானவை பற்றி வழக்கு மன்றங்கள் நிறைவான முடிவுகள் மேற்கொள்ளவில்லை.

ஒப்பந்தத்தினைத் தொடக்க முதலே இல்லா நிலையதாக்க அல்ல, ஆனுல் நிலை குலைவு பயன், வருங்கால நிறைவேற்றத்தினின்றும், ஒப்பந்தக்காரர்களை விடுவிப்புச் செய்யவே என்பதனுல், இழப்பினை ஏற்படும் இடத்திலேயே விடுதல் வேண்டும் என்றும், நிகழ்ச்சிக்கு முன்னர் செலுத்தப்பட்ட பணத்தினைத் திரும்பப் பெற இயலாதென்றும் வழக்கில் தீர்மானிக்கப்பட்டது. பைஃப்ரோசா (Fibrosa) வழக்கில் பிரபுக்கள் அவை இத்தீர்ப்பினை ஏற்காமல் அந் நிலையில் அதனை ஒப்பந்தமாகக் கொள்ளாது ஒப்பந்தப் போல்வாகக் கருத வேண்டும் எனத் தீர்ப்பளித்ததை நினைவு கூர்தல் நல்லது. சைமன் (Simon) பிரபு நிறைவேற்றம் தோல்வி அடையுமானுல் பணம் கொடுத்தற்கான தூண்டுதல் முடிவுறவில்லை, என விளக்கினுர். ஒப்பந்தத் தோல்வியினுல் முன்னர்ப் பணம் பெற்றவர் அதனைச் செலவழித்திருப்பினும் அல்லது மதிப்பற்ற பொருள்கள் ஒருவரிடம் தங்கிவிட்ட நிலையிலும் அவற்றிற்கான தீர்வினைப் பற்றி ஒரு விளக்கமும் அத்தீர்ப்பில் காணப்படவில்லை.

இவற்றிற்கான தீர்வினை 1943-ம் ஆண்டு சட்ட (நிலை குலைவு ஒப்பந்தங்கள்) சீர்திருத்தச் செயலில் (Law Reform Frustrated Contracts Act) காணமுடிகிறது. நிலை குலைவு ஒப்பந்தங்களில் விடுவிப்புக்கு முன்னர் ஒப்பந்தம் காரணமாக நபர் ஒருவருக்குத் தந்த அல்லது தரப்பட வேண்டிய பணம் பற்றிய விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. கொடுக்கப்பட்ட பணத்தைக் கொடுத்தவர் உபயோகிக்கப் பெற்ற பணமாகக் கருதி திருப்பிப் பெற முடியும். தர வேண்டிய பணத்தைத் தராமல் இருக்கலாம். விடுவிப்புக்கு முன்னர் அங்ஙனம் பெறப்பட்ட, அல்லது பெற வேண்டிய பணத்தை ஒப்பந்த நிறைவேற்றலுக்காகச் செலவழித்திருப்பின், செலவழிக்கப்பட்ட செலவினங்களுக்கு மிகாமல், நியாயமானது என்று கருதினால் செலவழித்தவரை அவ்விதம் செலவழித்ததற்கான பணத்தை முழுமையாகவோ பகுதியாகவோ தக்க வைத்துக் கொள்ளவோ திரும்பப்பெறவோ வழக்கு மன்றம் அனுமதிக்கும்.

மேலும், விடுவிப்புக்கு முன்னர், ஒப்பந்தத்தின் காரணமாக ஒப்பந்தக்காரருள் ஒருவர், மற்றவரிடம் இருந்து பணத்தைத் தவிர வேறு மதிப்புள்ள பயன் பெற்றிருப்பின், பயனின் மதிப்பினுக்கு மிகாமல், மற்றவர் திரும்பப் பெற வழக்கு மன்றம் நியாயம் எனக் கருதினால் வழிவகை செய்யும்.

இச் சட்டம், எதிரிடையான உடன்பாடு கொண்டிருப்பின் பயன் தராது. கடற்பயண ஒப்பந்தக் குழு அடிப்படையில் பயணச் சீட்டுக்கான முன் பணம் தந்திருப்பின் இச் சட்டம் செல்லுபடியாகாது. கடற் பயணம் முற்றுப்பெறாமல் நிலை குலைவு அடையினும் வழமைப் (Custom) படி, அவ்விதம் செலுத்தப்பட்ட பணத்தைத் திரும்பப் பெற இயலாது.

இ. ஒ. சட்டத்தின் 56-வது பிரிவு நிலைகுலைவு பற்றிய சட்ட விளக்கம் தருகிறது. "இயலாமையான செயல் புரிவதாக மேற்கொள்ளும் உடன்பாடு இல்லா நிலையதாகும். ஒப்பந்தத்திற்குப் பின்னர் ஒரு செயல் இயலாமையின் அல்லது உறுதியுரை செய்பவரால் தடுக்க இயலாத நிகழ்ச்சி ஒன்றன் காரணமாக அச்செயல் சட்டப் புறம்பானதாயின், அத்தகைய செயலைப் புரிவதாக மேற்கொள்ளும் உடன்பாடு, அச்செயல் இயலாமை ஆனவுடன் அல்லது சட்டப் புறம்பானவுடன், இல்லா நிலையதாக நிற்கிறது.

உறுதியுரை செய்பவர் தெரிந்தோ அல்லது நியாயமான அறிவினால் தெரிந்து கொண்டிருக்கக் கூடியதும், உறுதியுரை ஏற்பவர் அறிந்து கொள்ள முடியாததுமான, இயலாமை

அல்லது சட்டப்புறம்பான தன்மையுடன் கூடிய செயல் ஒன்றனைச் செய்ய உறுதியுரை செய்பவர் உறுதியுரை செய்யின், அவ்வுறுதி யுரையினை நிறைவேற்றாத காரணத்தினால் உறுதியுரை ஏற்பவர் அடைந்த இழப்பினை உறுதியுரை செய்தவர் நிறையீடு (Compensation) செய்தல் வேண்டும்.

இங்கிலாந்துச் சட்டத்தினின்றும் இந்தியச் சட்டம் பெரிதும் வேறுபடுவதைக் காணலாம். இந்தியச் சட்டம் அரசுறுத்தும் விதிகளில் (Positive Rules) கூறியுள்ளதை, இங்கிலாந்து தீர்ப் புகள், ஒப்பந்தக்காரர்களின் எண்ணத்தைப் பொறுத்து நிர்ண யிக்கின்றவைகளாகக் கொண்டன.

Satya Brata Ghose vs. Mugneeram Bangur & Co (1954) S. C. J. 120-உச்ச நீதிமன்ற வழக்கு நம் நாட்டில் நிலைகுலைவுக் கான சட்டவிதிகளை விளக்கிற்று. 1940-ம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 5-ம் நாள் 'எம்' நிறுவனமானது 'பா' வுடன் ஓர் ஒப்பந்தம் மேற்கொண்டனர். தங்களிடமுள்ள நிலத்தின் ஒரு பகுதியினை 'பா' வின் ஆணைக்கிணங்க 'ச' வுக்கு உரிமை மாற்றஞ் செய் திடவும், அப்பகுதிக்கு வேண்டிய சாலைகளையும், கால்வாய் களையும் அமைத்துத் தரவும் ஒப்பந்தம் மேற்கொண்டனர். 'பா' ஒப்பந்த நாளில் முன் பணமாக ஒரு சிறிய தொகையினையும், வசதிகள் அமைத்துத் தந்த ஒரு மாதக் காலத்திற்குள்ளாக பதிவு நாளன்று விலையின் மூன்றில் ஒரு பங்கைச் செலுத்தியும், மிகு தியினை ஆறு ஆண்டுகளில் ஆண்டொன்றுக்கு 6% வட்டியுடன் செலுத்துவதாகவும் உறுதியுரை செய்தான். ஒப்பந்தம் மேற் கொண்ட சின்னாட்களில் 'எம்' நிறுவனம் நிலத்தின் ஒரு பகுதியினை அரசினர் இராணுவத் தேவைக்கான அதிகாரத்துடன் எடுத்துக் கொண்டனர் (Requisitioned). இதனால் சாலை, கால்வாய் அமைப்பது, தடைப்பட்டது.

நிலைகுலைவினால் உடன்பாடு விடுவிப்பு அடைந்ததா என்பது தான் தீர்ப்பில் ஆராயப்பட வேண்டியிருந்தது. அரசினர் மேற் கொண்ட நடவடிக்கையினால் ஒப்பந்தந்தை அழிக்கின்ற அளவுக் கான தடை ஏற்படவில்லை என்பது வழக்கின் தன்மைகளை அறிந்ததிலிருந்து தெரிய வருகின்றது என்றும் ஒப்பந்தத்தின் கடப்பாடுகளினின்றும் ஒப்பந்தக்காரர்கள் விடுவிப்புசெய்து கொள்ளமுடியாது என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது. (வழக்கின் முழுவிவரம் தீர்ப்புவிவரம் முதலானவை படித்தறிதல் நல்லது) இங்கிலாந்து, இந்தியச் சட்டங்களுக் கிடையே காணப்படும் வேறுபாடுகளை இத்தீர்ப்பினின்றும் அறியமுடிகிறது.

# 16. ஒப்பந்தப் போல்வு

## (Quasi—Contracts)

ஒப்பந்தத்தில் ஏற்படுத்தப்பட்ட சட்டப்பிணைப்புகள் அல்லது உறவுமுறைகளை ஒத்தவைகள் உட்கிடை ஒப்பந்தங்கள் அல்லது ஒப்பந்தப் போல்வுகள் அல்லது கொள்நிலை ஒப்பந்தங்கள் (**Constructive Contracts**) என்றழைக்கப் படுகின்றன. வழக்கறிஞர்கள், நீதிபதிகளால் நேர்மை நெறியின் அடிப்படையில் கருதப்பட்டு தோற்றுவிக்கப் பட்டவைகளே ஒப்பந்தப் போல்வாகின்றன.

இவை உரிமைத் தீங்குகளாகவோ ஒப்பந்தத் தன்மைகளாகவோ, கொள்ளப்பட இயலாவிடினும் வழக்கு மன்றங்களில் சட்டப்படி வலியுறுத்தப்படக் கூடியவைகளாக அங்கீரிக்கப் பட்டன. எனவே அவை ஒப்பந்தப் போல்வுகள் என அழைக்கப்பட்டன.

அடுத்தவரின் செலவில் மற்றவர் தன்னை வளர்த்துக் கொள்ள அனுமதிக்கக் கூடாது என்பதே ஒப்பந்தப் போல்வின் தத்துவமாகும். இத்தகைய ஒப்பந்தப் போல்வின் அடிப்படையில் கோருகின்ற பாத்தியதை பணமே யாகும்.

ஒப்பந்தப் போல்விற்கான வரைவுரை எவ்விடத்திலும், இந்திய ஒப்பந்தச் சட்டத்திலும் காணப்படவில்லை. கருத்தொருமித்து செய்து கொண்ட ஒப்பந்த மன்றெனினும், ஒப்பந்தம் போன்றே ஒரு பொறுப்பைத் தோற்றுவிக்கும் செயல் அல்லது நிகழ்ச்சி, ஒப்பந்தப் போல்வாகிறது.

தன் வாடிக்கையாளரான 'ஆ'வுக்கு வணிகர் 'அ' பொருள்கள் கொண்டு தருகிறார். 'ஆ' அதனைப் பெற்றுப் பயன்படுத்துகிறார். எழுத்து மூலமாகவோ வாய்மொழியாகவோ உறுதியளிக்காவிடினும் 'ஆ' தன் நடத்தையினின்றும் ஊகிக்கப்படுகிற அவருடைய உறுதியுரையின் மீது பணம் தர வேண்டிய சட்டப் பிணைப்

புக்கு 'ஆ' உள்ளாகிருர். இதனை நடத்தைக் குறிப்பு ஒப்பந்தம் (Tacit Contract) என்று கூறுவர். இச் சான்றில் 'இ' யினை 'ஆ' எனத் தவருக எண்ணி அவரிடம் 'அ' வின் வேலைக்காரன் பொருள் களைத் தந்திடின், 'அ' வுக்குப் பொருள்களின் மதிப்பினை நிறையீடு செய்ய 'இ' கட்டுப்படுகின்ருன். இதில் 'இ' யின் உறுதியுரைக் கான அடையாளம் கூட இல்லை. இத்தகையது ஒப்பந்தப் போல்வு அல்லது உட்கிடை ஒப்பந்தமாகிறது. ஒப்பந்தப் போல்வுச் சட் டம் சின்னாட்களுக்கு முன்னர்தான் தோன்றிற்று எனினும் மேலும் வளர்ச்சியடையக் கூடியதாகும்.

ஒப்பந்தப் போல்வு கொண்டவைகளாகக் கீழ்க் குறிப்பிடு பவை உள்ளன: (அ) வாங்கிய, வைத்துள்ள பணத்திற்கான நடவடிக்கை. (ஆ) பணித்தகு தொகை (Quantum meruity), (இ) காட்டிய கணக்கு (Account Stated), (ஈ) ஒப்பந்தத் தகுதி யில்லாதவருக்குக் கொண்டுதந்த இன்றியமையாதவைகள், (உ) பொருள் கண்டவரின் கடப்பாடு (Oblication of Finder of Goods).

## 1. வாங்கிய, வைத்துள்ள பணத்திற்கான நடவடிக்கை

(அ) எதிர்வாதிக்கு வாதி செலுத்தியப் பணம்: வாதி பணத் தைத் திரும்பப் பெறுகின்ற சூழ்நிலைகளாவன: (1) தவறுதலாகப் பணம் செலுத்தியிருப்பின், (ii) ஒப்பந்தத்தின்மீது எதிர்வாதிக்குப் பணம் தரப்பட்டு, மறுபயன் தோல்வியடைந்திருப்பின், (iii) வலுக்கட்டாயம், மோசடி அல்லது இதர தகாத வழிகளில் வாதியிடமிருந்து எதிர்வாதி பணம் பெற்றிருப்பின்;

எதிர்வாதி அவ்வாறு பெற்ற பணத்தை அல்லது அடைந்த பயனைத் திருப்பித்தர அவரைக் கட்டாயப்படுத்துதல் நியாயமான தாகும் இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 64, 65, 72-வது பிரிவு களில் இதைப்பற்றி வலியுறுத்தப்பட்டுள்ளது. இ. ஒ சட்டத்தின் 72-வது பிரிவில் ''நபர் ஒருவர் தான்பெற்ற அல்லது தவறுதலாகத் தன்னிடம் அளிக்கப்பட்ட அல்லது வலுக்கட்டாயத்தினுல் பெற்ற பணத்தை மீட்டுச் செலுத்தவோ திருப்பி அளிக்கவோ செய்ய வேண்டும்'' என்று வலியுறுத்தப்பட்டது. சட்டத்தினைத் தவ ருகப் புரிந்த நிலையில் ஒருவர் மற்றவருக்குக் கொடுத்தப் பணத் தைப் பெற்றவர் திருப்பி அளிக்க வேண்டும்.

ஒப்பந்தச் சட்டத்தின் 65-வது பிரிவில் உறுதியுரை செய்த வரோ, ஏற்றவரோ, இல்லா நிலையதான ஒப்பந்தத்தின் அடிப் படையில் பயன்பெற்றிருப்பின், யாரிடமிருந்து பயன் பெற் றனரோ அன்னருக்கு நிறை ஈடு செய்ய வேண்டும் என்று கூறப்

பட்டிருப்பதைக் கண்டிருக்கிறோம். பி. 64-ல் தவிர்தகு ஒப்பந்தத்தை நிராகரித்தவர் அவ்வொப்பந்தத்தின் கீழ் அடுத்தவரிடமிருந்து பயன் பெற்றிருப்பின் அன்னாருக்குப் பயன் பெற்ற அளவிற்குத் திருப்புதல் வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**Muralidhar Chatterjee** *vs.* **International Film Co Ltd (1943) M L.J. 369 (P.C.)**

தவறுதலாக ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டவரின் செய்கையினால், 38-வது பிரிவின்கீழ், அடுத்தவர், ஒப்பந்தத்தை முடித்திடத் தேர்ந்திருப்பின், அன்னார் 64-வது பிரிவுப்படி ஒப்பந்தத்தினால் அடைந்த பயனைத் திருப்பக் கட்டுப்பட்டவராவார். ஆனால் செய்தக்க செய்யாமைச் செய்த நபரின் மீறுகையினால் அன்னார் இழப்பீடு பெரும்பாத்தியதையை அடைகிறார் என்றும் வழக்கில் கொள்ளப்பட்டது.

**Rajamohan Manucha & Others** *vs.* **Manzoor Ahmadkhan and Others ((1943) 1. M.L.J. 508 (P.C.)**

அடைமானத்தின் மீதான உரிமை இயல் வழக்கில், உ. ந. சட்டத்தின் பகுதி 11, பின் இணைவு III-க்கு மீறிய ஒன்றாக இருந்ததனால் அடைமானம் செல்லா நிலையது (Invalid), அடைமானம் பெற்றவர் நிறையீடு பெறும் பாத்தியதைக்குத் தகுதியானவர் என்று தீர்ப்புக் கூறப்பட்டுள்ளது.

**(ஆ) எதிர்வாதியின் உபயோகத்திற்கென வாதியிடம் கொடுக்கப்பட்ட பணம்:** 'ஆ' செலுத்த வேண்டிய பணத்தினை 'ஆ'வின் உட்கிடைக் கோரிக்கையின்மீது 'அ' பணம் செலுத்தினார். சான்று: நிலக் குத்தகையாளர் ஒருவர் தன்னிடமுள்ள நிலம், தீர்ப்பாணைப் படி நிறைவேற்றம் (Execution) அடைவதனைத் தடுக்க அன்னாரின் நில உரிமையாளர் 'ஆ' செலுத்த வேண்டிய வரிகளை 'அ' செலுத்தியிருப்பின்; அல்லது 'ஆ'வின் கடன் நிறைவேற்றத்திற்காக 'அ'வின் சொத்துக்களைச் சட்டப்படியாக எடுத்துக் கொண்டிருப்பின்; அனைத்திலும் பயனடைந்த 'ஆ' அடைந்த பயனளவு பணத்தைத் திருப்பிச் செலுத்தும் கடப்பாட்டுக்குள்ளாகிறார். இங்கிலாந்தை விட இந்தியாவில் கடப்பாட்டிற்கான வழிவகை விரிவாக உள்ளது. இ. ஒ. சட்டத்தின் 69, 70-வது பிரிவுகள் இதற்கான விளக்கம் தருகின்றன. "அடுத்தவர் சட்டப்படி செலுத்தக் கடமைப்பட்ட பணத்தினை, அத்தகைய செலுத்தலில் அக்கரையுள்ள நபர், அதன் காரணமாக செலுத்திடின் அடுத்தவரால் திருப்பிச் சரி செய்யப்படும் தகுதி அடைகிறார்." (பி. 69) இவ்விதியினைச் செல்லாற்ற சில நிருபணங்கள் தேவைப்படுகின்றன.

(i) தன் சொந்த நலனுக்காக, நல்லெண்ணத்தில் செலுத்தப்பட்ட பணம் (Subramania Iyer *vs*. Rangappa, 33. MAD. 232.

பணம் செலுத்துகின்றவர், அத்தகைய செலுத்தலில் அக்கறை கொண்டுள்ளவராயிருத்தல் வேண்டும். 'ஆ' விடமிருந்து நல்லெண்ணத்தில் 'அ' வாங்கிய சொத்தின்மீது, 'ஆ'வின் கடனுக்காக வாங்கப்பட்ட தீர்ப்பாணை நிறைவேற்றத்தினைத் தடுக்க 'அ'வினால் செலுத்தப்பட்ட பணத்தை 'ஆ'விடமிருந்து திரும்பப் பெறலாம் என தீர்ப்புக் கூறப்பட்டது.

(ii) Ran Tuhul Sinh *vs*. Biseswaralal (1875) 2. I.A. 131 (P.C.)

செலுத்துதல் தன்னிச்சையான செலுத்தலாக இருக்கக் கூடாது. மீண்டும் திருப்பிச் செலுத்தக் கூடிய வெளிப்படையான அல்லது உட்கிடையான சட்டப்பிணைப்பைக் கொண்டதாக இருக்க வேண்டும். சட்ட ரீதியான அல்லது நிர்ப்பந்தத்திற்குள்ளான செலுத்தலாக இருக்க வேண்டும் என இவ்வழக்கில் தீர்ப்பாயிற்று.

(iii) மூன்றும் நபருக்கு செலுத்துதல் ஆகியிருக்க வேண்டும்.

(iv) ஆள் எதிரானதோ (Personal) அல்லது அவருடைய நிலத்தைச் சார்ந்ததோ எதுவாயினும், சட்டத்திற்குட்பட்டு செலுத்தக் கூடிய செலுத்தலாக அது இருத்தல் வேண்டும்.

சென்னை உயர்நீதி மன்றம், Jagapathi Raju *vs*. Sadrusannamm Arad. 39 MAD. 795 வழக்கிலும், கல்கத்தா உயர்நீதி மன்றம், Manindra *vs*. Jamahir 32, CAL. 643; Birajkrishna *vs*. Purna Chandra, I L.R (1939) 2. CAL. 226-வழக்குகளிலும் விகிதப் பொறுப்பு (Contribution) உள்ள உரிமை இயல் வழக்குகளில் பி. 69-ஐ செல்லாற்ற இயலாது எனத்தீர்ப்பு நல்கின.

இ. ஒ. சட்டத்தின் 70-வது பிரிவு,

"நன்கொடையாகக் கருதாமல் நபரொருவர் சட்ட நெறியில் அடுத்தவருக்கு ஒரு செயல் செய்யினும் அல்லது ஏதேனும் ஒன்றைக் கொண்டு தரினும், அங்ஙனம் பெற்ற பயனை அனுபவித்தவர் அச்செயலுக்காக முன்னவருக்கு நிறையீடு செய்யவோ திருப்பிக் கொடுக்கவோ கட்டுப்பட்டவராவார்" என்று கூறுகிறது.

70-வது பிரிவை அமுல் நடத்தச் சில கட்டுவரம்புகள் நிறைவேற்றப்படல் வேண்டும். (1) சட்ட நெறியாக அந்தச் செயல்

செய்யப்பட்டிருக்க வேண்டும். (2) நன்கொடைச் செயலாக எண்ணாதவரால் அது செய்யப்பட்டிருக்க வேண்டும். (3) யாருக்காக அச் செயல் செய்யப்பட்டதோ அவர் அதன் பயனை நுகர்ந்திருத்தல் வேண்டும்.

Sri Ramaraja *vs*. Secretary of State (1942) 2 M.L.J 800 (F.B.) சுரோத்திரயம்தாரர் ஒருவருடன் அரசும் (Government) சேர்ந்து உரிமை கொண்ட ஏரியினை, அரசு பழுது பார்த்து, விகிதப் பொறுப்புக்கு உரிமை இயல் வழக்குத் தொடரப் பட்டதில் அரசு பழுது பார்த்ததில், சட்ட நெறியாக நடந்து கொண்டது என்பதனாலும் அச் செயலினை நன்கொடையாகக் கருதி அரசு செய்யவில்லை என்பதனாலும், சுரோத்திரியம்தார் விகித பொறுப்பு செலுத்த இ. ஒ. சட்டத்தின் 70-வது பிரிவின்கீழ் கடப்பாட்டிற்குள்ளாக்கப்படுகிறார் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இங்கிலாந்து சட்டத்தில் அவர் கடப்பாட்டிற்குள்ளாக்கப்பட மாட்டார். ஆயினும் இந்தியச் சட்டத்தின் 70-வது பிரிவு இங்கிலாந்துச் சட்டத்தைவிட விரிவான வழிவகைகள் கொண்டது என்றும் தீர்ப்பில் விளக்கிக் கூறப்பட்டது.

வாதியின் கணக்கில் மூன்றும் நபர்களிடமிருந்து எதிர்வாதி பெற்ற பணம் முதலரால் (Principal) அதிகாரமளிக்கப்படாத போது, முகவர் (Agent) ஒருவர் இரகசிய தரகராகவோ (Secret Commission) அல்லது முகவர் நிலையைத் தவறாகப் பயன்படுத்தி மோசடியாகவோ பெறும் பணத்தினை, "முகவருக்குக் செலுத்தும் பணம் முதலவரின் உபயோகத்திற்கே" என்ற அடிப்படையில், முதலவருக்கு அவ்விதம் பெற்ற பணத்தை ஈடு செய்ய முகவர் கட்டுப்பட்டவர்.

**பணித்தகு தொகை (Quantum Meruit)**

புரிந்த பணிக்கு அல்லது செய்த வேலைக்கு ஒப்பந்தப்படி தொகை நிர்ணயிக்கப்படாவிடினும், கொடுக்க வேண்டிய நியாயமான தொகையினைப் பணித்தகு தொகை என்பர்.

Cutter *vs*. Powell (1795) 6. T. R. 32) - வழக்கில் தன் பங்கில் ஒரு பகுதியினை நபரொருவர் நிறைவேற்றிருப்பின், மேலும் அடுத்தவர் செய்தக்க செய்யாமையால் மிகுதிப் பகுதியினை நிறைவேற்ற முடியாமல் தடுக்கப்பட்டிருப்பின், அன்னவர் பணித்தகு தொகையினைப் பெறலாம் எனத் தீர்ப்பாயிற்று. தனியார் ஒருவரின் செயல் பகுதி நிறைவேற்றத்தில் பணித்தகு தொகை பற்றியும், பொருள்கள் பகுதி கொண்டு தருதலில் பணித்தகு பொருள் (Quantum Valebant) பற்றியும் காணலாம்.

Craven Ellis *vs*. Cannon Ltd. (1936) 2 K.B. 403 வழக்கில் வாதி, நிறுவனம் ஒன்றில் நிறுவனத்தின் முத்திரையின் கீழ் செய்யப்பட்ட ஒப்பந்தம் மூலமாக நிருவாக இயக்குநராக (Managing Director) சம்பளத்திற்கு அமர்த்தப்பட்டார். செயல் முறை விதிகளில், ஒவ்வொரு இயக்குநரும் அமர்த்தப் பட்ட நாளிலிருந்து இரண்டு மாதத்திற்குள்ளாக வரையுடைய பங்குகள் (Qualification Shares) சில பெற வேண்டும் என்று கண்டுள்ளது. இதனை வாதியும் ஏனைய இயக்குநர்களும் செயல் படுத்தவில்லை. இயக்குநரின் செல்லுநிலையில்லாத தீர்மானம் ஒன்றினால் உடன்பாட்டில், நிறுவனத்தின் முத்திரை வைக்கப் பட்டது. உடன்பாட்டின்படி நடந்த வாதி, நிறுவனத்திற்குச் சேவைகள் புரிந்தார். உறுதியுரை செய்யப்பட்ட சம்பளத்தினைக் கோரி அவர் வழக்குத் தொடர்ந்தார். வழக்கில் சேவை புரிந் தமைக்காக நியாயமான சம்பளமாக ''பணித்தகு தொகை'' யினைப் பெறமட்டுமே அவர் தகுதி பெறுகிறார் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. பணித்தகு தொகை அல்லது பொருள்தகு தொகைகளுக்கான நடவடிக்கை பற்றி இ. ஒ. சட்டத்தின் 70-வது பிரிவில் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

''நன்கொடையாகக் கருதாமல், நபரொருவர் சட்ட நெறியில் அடுத்தவருக்கு ஒரு செயல் செய்யினும் அல்லது ஏதேனும் ஒன்றைக் கொண்டு தரினும், அங்ஙனம் பெற்ற பயனை அனுபவித்தவர் அச் செயலுக்காக முன்னவருக்கு நிறை யீடு செய்யவோ, திருப்பிக் கொடுக்கவோ கட்டுப்பட்டவராவார்' (பி. 70).

### (iii) காட்டிய கணக்கு (Account State)

இங்கிலாந்து சட்டத்தில் அறிமுகமான இதன் நடவடிக் கையில் ஒப்புக் கொள்ளப்பட்ட கடமையினால் ஏற்படும் சட்டப் பிணைப்பினைக் காணலாம். அதிலிருந்தும் செலுத்தப் படவேண்டும் என்பதை தலைச்சட்டம் உட்கிடையாகக் கொண்டு குறிக்கின்றது. இதனைக் **''காட்டிய கணக்கு''** என்று சொல்லுவர். ஒருவர் மற் றொருவருக்குக் கொடுக்க வேண்டியுள்ளதாகத் தான் காட்டி யுள்ள கணக்கைக் கொண்டு, அத்தொகையைக் கொடுக்கும் பொறுப்பு ஊகிக்கப்படுகிறது. பற்று வரவுக் கணக்கின் இறுதித் தொகை (Balance) யினைக் காணின் அதனின் வழி வகைகளை ஆராயாது, அதன் அடிப்படையில் நடவடிக்கையை மேற் கொள்ளலாம்.

### (iv) ஒப்பந்தத் தகுதியில்லாதவர்களுக்குக் கொண்டு தரப்படும் இன்றியமையாதவைகள் (Necessaries)

இளவர் அல்லது பித்துநிலையர் அல்லது அவரின் நிழலிலிருப்போர் முதலானவர்களுக்கு வாழ்வின் இன்றியமையாத் தேவைகள் கொண்டு தரப்பட்டிருந்தால் அவர்கள் செல்வத்தின் மீது சட்டப்பிணைப்பு உருவாகி அவ்வாறு கொண்டு தரப்பட்ட வணிகருக்கு நிறையீடு செய்யும் கடமை உண்டாகிறது. இ. ஒ. சட்டத்தின் 68-வது பிரிவில் இதுபற்றிக் கண்டுள்ளோம்.

### (v) பொருள் கண்டெடுத்தோரின் சட்டப் பிணைப்பு

அடுத்தவரால், தெருவில் அல்லது பொது இடங்களில் எதிர்பாராத விளைவினாலோ, அல்லது கவனக் குறைவினாலோ விடப்பட்ட பொருள்களின் மீது கவனம் கொள்ள மற்றவர் கட்டுப்பட்டவரல்லர். ஆனால் அவற்றை எடுத்து மற்றவர் தன் பாதுகாப்பில் வைத்துக் கொண்டால், அவர் ஒப்படைவு பெறுபவர் (Bailee) நிலையில் இருந்து அவற்றில் கவனம் செலுத்தி முன்பிருந்த அதே நன்னிலையில் அவற்றைத் திருப்பி ஒப்படைவு செய்யக் கட்டுப்பட்டவராவார்.

இத்தகைய கட்டப் பிணைப்பான, ஒப்பந்த போல்வின் அடிப்படையில் காணப்படுகின்றது

இ. ஒ. சட்டத்தின் 71-வது பிரிவில்,

"அடுத்தவருக்குச் சொந்தமான பொருள்களைக் கண்டெடுத்து, தன் பொறுப்பில் கொண்ட நபர் ஒருவர், ஒப்படைவு பெறுபவரின் (Bailee) பொறுப்புக்குச் சமமான பொறுப்புக்குள்ளாவார்" என்று கூறப்பட்டுள்ளது. 'வ' என்பவரின் கடையின் தரையில் கண்ட வைரத்தினை எடுத்த 'மு', அதனை 'வ'விடம் கொடுத்துச் சொந்தக்காரர் வரும்வரையில் வைத்திருக்கச் சொன்னார். செய்தித் தாள்களில் பரவலான விளம்பரம் தந்தும், அதனைக் கோரி எவரும் வரவில்லை. சில வாரங்கள் கடந்த பின்னர், 'வ'விடம் விளம்பரச் செலவு, ஈட்டுறுதி, பிணைமுறி (Indemnity Bond) முதலானவை தந்து வைரத்தைத் திருப்பித் தந்திட 'மு' கோரினார். 'வ' இதனை ஏற்க மறுத்தார். இழப்பீட்டிற்கான கடப்பாட்டில் 'வ' உள்ளார். உண்மையான சொந்தக்காரர் தவிர மற்றனைவருக்கும் எதிராகப் பொருளைத் தக்க வைத்துக் கொள்ள 'மு' ஒருவர்தான் தகுதி உடையவர். எனவே 'வ' வைரத்தினை 'மு'விடம் கொண்டு தருதல் வேண்டும்.

# 17. ஒப்பந்த மீறுகைக்கான தீர்வழிகள்

## (Remedies for Breach of Contract)

ஒப்பந்த ஏற்பாடு, நிறைவேற்றம், மீறுகை முதலானவற்றைக் கண்ட பின்னர் இறுதியாக மீறுகைக்கான இழப்பீடுகள், அவற்றைத் தீர்மானிக்கும் விதிகள் பற்றிய சட்ட விளக்கத்தைக் காண முற்படுவோம். இவற்றிற்கான விளக்கம் இ. ஒ. சட்டத்தின் 73 முதல் 75 வரையான பிரிவுகளில் கூறப்பட்டுள்ளது. ஒப்பந்த மீறுகை வழக்குகளில் தீர் வழிகள் இருவகையாகப் பெறப் படுகின்றன. அவை இயற்றுச் சட்டத் தீர் வழி (Common Law Remedy) அஃதாவது இழப்பீடு அல்லது தீங்கீடு என்றும், நேர்மை நெறி தீர்வழி (Equitable Remedy) அதாவது ஒப்பந்தங்கள் " ஏற்றது ஆற்றுக " (குறித்துரைத்தவாறு நிறைவேற்றுக) (Specific Performance), உறுத்துக் கட்டளை (Injunction), திருத்தமைப்பு (Rectification), நீக்கம் (Cancellation) முதலானவை செய்தலாகும்.

நேர்மை நெறி தீர் வழிகள் குறித்த சட்டம் பற்றி ஆராய முற்படுவதற்கு முன்பாக, இயற்றுச் சட்டத் தீர் வழியால் பெறப் படும் இழப்பீடு பற்றிச் சிறிது காணலாம்.

**Sunley** *vs*. **Cunard White Star Ltd (1940) I K.B. 740** வழக்கில் இழப்பீட்டுக்கான தத்துவம் விளக்கப்பட்டுள்ளது. ஒப்பந்த மீறுகையினுல் ஒப்பந்தக்காரருள் ஒருவர் இழப்பு ஏதேனும் அடைந்திருப்பின் பணத்தால் முடிந்தவரை, ஒப்பந்தம் நிறைவேற்றப் பட்டதாகக் கொண்டு இழப்பீடுகளைப் பொறுத்த வரை அவர் அச் சூழ்நிலையில் வைக்கப்படுகிருர் என விளக்கப் பட்டது, ஒப்பந்த மீறுகையினுல் இழப்புக்குள்ளானவருக்கு உரிய இழப்பீடு தீர் வழியினைப் பணமாகவே தீர்பானிக்கப்படுகிறது. ஒப்பந்த மீறுகையில், பணமே போதுமான தீர் வழியாகாது எனினும் எல்லாவகை வழக்குகளிலும் " ஏற்றது ஆற்றுவது ",

(குறித்துரைத்தவாறு நிறைவேற்றுவது) செயல்படுத்த இயலாத போதும் பல திட்ட எல்லைக்குட்பட்ட நிலைகளிலும் எல்லா வழக்குகளிலும் எளிதில் காணக்கூடிய தீர்வழியான பணத்திற்கு மாறான இழப்பீடு தீர் வழியினை வழக்கு மன்றங்களினால் காண இயலவில்லை. எதிர்வாதிக்கு அவ்வுறுதியுரையினை நிறைவேற்ற ஆகும் செலவினைக் கணக்கில் கொள்ளாது, ஒப்பந்தத்தினை நிறை வேற்ற வாதிக்காகும் மதிப்பளவினையே இழப்பீட்டுக்கான அள வாகக் கருதப்படும் என்பதனைக் கவனத்தில் கொள்ளவேண்டும். இழப்பீடுகள் பொதுவாக நான்கு வகைப்படுகின்றன.

அவை (1) பொதுமுறை (General) அல்லது சாதாரண (இயல் வகை) அல்லது சரிநிகர் (Ordinary) அல்லது போது மான (Substantial) இழப்பீடுகள்.

(2) தனிமுறை (Special) இழப்பீடுகள்.

(3) பழிக் கொள்ளுகின்ற (Vindictive) அல்லது தண்டிக் கின்ற (Punitive) அல்லது எச்சரிக்கை (Exemplary) இழப்பீடுகள்.

(4) பெயரளவு இழப்பீடு (Nominal Damages).

**(1) சாதாரண (இயல்வகை) அல்லது சரிநிகர் இழப்பீடுகள்**

இவை, ஒப்பந்த மீறுகையை அடுத்து உடனடியாக ஏற்படு கின்ற விளைவுகளுக்கு அளிக்கப்படுகின்றன. இது, தனிமுறை இழப்பீடுகளினின்றும் மாறுபட்டது. உண்மையிலேயே வாதிக்கு ஏற்பட்ட இழப்பிற்குச் சாதாரணமாக அல்லது இயல்வகை யாகவே அல்லது சரிநிகராக ஈடு செய்யும் வகையில் அளிக்கப் படும் இழப்பீடாகும்.

Jaya Raghavan *vs.* The Leo Films (1948) 1. M.L.J. 209. படத் தயாரிப்புக்காக வாதிக்குத் தவணை முறைகளில் பணம் தர, எதிர்வாதி ஒப்பந்தம் கொண்டார். ஆனால் அதைச் செய்யத் தவறினர். வாதி, வட்டிக்குப் பணம் பெற வேண்டி இருந்தது. ஒப்பந்த மீறுகைக்கு வழக்குத் தொடரப்பட்டது. தவணை முறைகளில் காலத்தில் பணம் கொடுக்காமல் ஒப்பந்த மீறுகை செய்ததனால் அடைந்த இழப்பீடளவே, நிறையீடு செய்யப்பட வேண்டுமே தவிர, மறைமுகமாக ஏற்பட்ட அனைத்து, துர திர்ஷ்டங்களுக்கும் இழப்பீடு பெற, வாதி தகுதி பெறவில்லை என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

பொருள் கொண்டு தருதலில் ஒப்பந்த மீறுகை ஏற்படின், ஒப்பந்த விலைக்கும் கடைத்தெருவின் விலைக்குமுள்ள வேறுபாட்டின் அளவையே இழப்பீடாக பெறமுடியும். வருங்காலத்தில் குறிப் பிடப்படுகிற நாளில் மூட்டை ஒன்றுக்கு ரூபாய் 100 என 100 மூட்டை அரிசி கொண்டு தர 'அ' ஒப்பந்தம் மேற்கொண்டு குறித்த நாளில் மூட்டை ஒன்று ரூபாய் 101 விற்பதைக் கண்ட 'அ' கொண்டு தர மறுத்தார். இழப்பீட்டின் அளவு, இரண்டு விலைக்குமுள்ள வேறுபாடான ரூபாய் 100 ஆகும். பொருளின் தரம் எளிதில் கிடைக்காத ஒன்றாயின் 'ஏற்றது ஆற்ற' (குறித் துரைத்தவாறு நிறைவேற்றி)ச் செய்ய வழக்குமன்றம் உத்தர விடும்; ஏனையவற்றில் இழப்பீட்டுக்குத் தீர்ப்பளிக்கும். எதிர் வாதியின் செயலால் இயல்பான அல்லது நிகழக் கூடிய விளைவிற்குத் தக்க ஈடும் இதன்பால் அடங்கும்.

### தனி முறை இழப்பீடு

பலன் அடைந்த வழக்குகளில் தனி முறை இழப்பீடுகள் கோரப்படுகின்றன. அதுபோது பொருள் விற்பனைக்கான ஒப் பந்தம் ஒன்றனை எண்ணி வாங்கியவர் அதிக விலையில் மறு விற் பனைக்கான ஒப்பந்தம் மேற்கொள்ளும்போது, இத்தகைய தனி முறை இழப்பீடு கோரிக்கை ஏற்படும். இயற்கை விளைவுகளினால் இழப்பு ஏற்படாமல், வழக்கத்திற்கு மாறான அல்லது அசாதாரண சூழ்நிலைகளின் காரணமாக ஏற்படும் இழப்பாக இது கருதப்படு கிறது. வழக்கில் மெய்ப்பிக்கப்படும் தனி சூழ்நிலைக்கேற்பக் கோரப்படும் இழப்பீடு, தனிமுறை இழப்பீடாகும்.

### பழி கொள்ளத்தக்க இழப்பீடுகள்

வாதிக்கு இழப்பீடு நல்க வேண்டுமென்ற நோக்கமின்றி, எதிர் வாதியினைத் தண்டிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் வழங்கப் படுகின்ற இழப்பீடு, பழி கொள்ளத்தக்க இழப்பீடாகும். ஒப்பந்த வழக்குகளில் இத்தகைய இழப்பீடுகள் பெரும்பாலும் வழங்கப்படு வதில்லை. உரிமைத் தீங்கு வழக்குகளிலேயே இது வழங்கப்படு கிறது. எனினும் திருமண உறுதியுரை மீறுகை, வாடிக்கை யாளரின் பணத்தைத் தன் பொறுப்பில் வைத்துள்ள வங்கியாளர் வாடிக்கையாளரின் காசோலையை மதிக்காது செய்கின்ற ஒப்பந்த மீறுகை முதலானவற்றில் இத்தகைய இழப்பீடு தரப்படுகின்றன. பின்னர் கூறிய வழக்கில் 'குறைந்த காசோலைக்கு மதிப்பு மறுப்பி னும் இகழ்ச்சியே' என்ற தத்துவம் கையாளப்படுகிறது. வேண்டு மென்றோ, செருக்கியோ இழைக்கப்படும் கொடும் தீங்கிற்குச் சரி யீடு செய்வதற்கான தொகைக்கு அதிகமாக அளிக்கப்படும் இழப் பீடாக இதனைக் கொள்ளலாம்.

பெயரளவு இழப்பீடு

ஈட்டுத்தொகையின் அளவு பெயரளவில் உள்ள இழப்பீடு என்று இதனைக் கருதலாம். போதிய இழப்பை ஏற்படுத்தாத ஆனால் சட்ட உரிமை ஒன்றறன் நுட்ப மீறுகை (Technical Violation) உள்ள ஒப்பந்த மீறுகை வழக்குகளில் இத்தகைய இழப்பீடு தரப்படுகின்றன. அத்தகைய வழக்குகளில் அளிக்கப்படும் இழப் பீடுகள் பெயரளவில் இருக்குமே தவிர தொகை அளவில் அதிக மாக இருப்பதாக எண்ணக் கூடாத நிலையில் உள்ளனவாகும்.

இங்கிலாந்தில் உள்ள இதுபற்றிய சட்ட விதிகளை Hadley *vs.* Baxendale (1854) 9. Ex 341 வழக்கில் காணமுடிகிறது. ஆலை அதிபரான வாதி, பழுதுபார்க்கவென்று பொறியின் ஒரு பகுதி யினைப் பொதுச் சரக்கேற்றியான எதிர்வாதியிடம் ஒப்படைத் தார். அப்பகுதி இன்றி ஆலை முழுமையும் வேலையின்றி இருக்கும் என்பது பற்றி எதிர்வாதிக்கு அறிவிக்கப்படவில்லை. பொறியின் பகு தியினைக் கொண்டு தருவதில் அசாதாரண காலதாமதமாயிற்று. வாதி, காலதாமதத்திற்கான இழப்பீடு மட்டுமல்லாமல் ஆலை வெறுமனே இருந்ததால் ஏற்பட்ட இழப்பீடுகளையும் கோரி உரிமை இயல் வழக்குத் தொடர்ந்தார். வழக்கில் காலதாமதத்தினால் ஏற்பட்ட பலன் இழப்பிற்கு எதிர்வாதி கடப்பாட்டிற்குள்ளாக மாட்டார் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

ஒப்பந்தமீறுகைக்கான, இழப்பீடுகள் அளிப்பதற்கான. விதி கள் கீழ்வருமாறு விளக்கப்படுகின்றன.

1. ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டிருப்பின் எந்த நிதி நிலையில் இருப்பாரோ, அதற்குச் சமமான நிலையில் தீங்கிழைக்கப் பட்ட நபர் வைக்கப்படல் வேண்டும்.
2. ஒப்பந்த மீறுகையினால் இயற்கையாக நேரிய முறையில் எழு கின்ற இழப்பீடுகள் நேரிய வழியிலும், நியாயமானதாகவும் கருதப்படும். (Hadley *vs.* Baxendale) ஏனைய இழப்பீடுகள் தொடர்பில்லாத விளைவாக எண்ணப்படுவதால், திரும்பப் பெறமுடியாதவைகளாக உள்ளன.
3. Pinnock Bros. *vs.* Lewis Peat Ltd. (1923) 1.K.B. 690. ஒப்பந்தம் மீறுகையில் இயற்கையில் எழாதவையாயினும், ஒப்பந்தம் மேற்கொண்ட காலத்தில், ஒப்பந்தக்காரர் களின் எண்ணத்தில் நியாயமானதாகக் கருதப்படுகிற இழப் பீடுகள், மீறுகையின் காரணத்தினால் ஏற்படின், திரும்பிப் பெறக் கூடியவையாகும் என இவ் வழக்கில் தீர்ப்பளிக்கப் பட்டது.

4. முன்னர்க் குறிப்பிட்ட விதிகள் 2 அல்லது 3 ஆகிய இரண்டில் ஒவ்வொன்றிலும் சேராத தனிச் சூழ்நிலைகளின் காரணமாக வழக்கிற்கே உரிய ஒன்றான தனிமுறை இழப்பீடுகள், ஒப்பந்தம் ஏற்படுவதற்கு முன்பாக அடுத்தவருக்கு அத்தகைய தனிச் சூழ்நிலைகள் பற்றி அறிவித்திருந்தாலொழிய, பெற இயலாததாகும் (Hadley *vs*. Baxendale).

5. British Westing House & Co. *vs*. Under Ground Electric Etc. Co. (1915)

   Jamal *vs*. Moola Dawood & Sons. 43 Cal. 493 (P. C.) வழக்குகளில் இழப்பீடுகளைக் குறித்துக் கொள்வது, தீங்கிழைக்கப்பட்டவரின் கடமையாகும் என்று கூறப்பட்டுள்ளது.

6. Cellulose Acetate Silk Co. *vs*. Widnes Foundry (1933) A. C. 20.

   இந்த வழக்கில் ஒப்பந்த மீறுகைக்காக இழப்பீடுகள்பற்றி ஒப்பந்தக்காரர்கள் உடன்படின், உடன்பட்ட அளவுக்கு மேலாகப் பெற இயலாது என்று தீர்ப்பாகியது.

7. இழப்பின் அளவினைத் தீர்மானிப்பது கடினம் என்பதனால் தீங்கிழைக்கப்பட்டவர் இழப்பீடு பெறும் தகுதியினை இழக்க மாட்டார்.

8. பழிகொள்கிற அல்லது எச்சரிக்கை இழப்பீடுகள், திருமண ஒப்பந்த மீறுகையில் தவிர வேறு ஒப்பந்த மீறுகைக்கு அளிக்க முடியாதன என்று Addis *vs*. Gramaphone Co (1909) A. C. 488 வழக்கில் கூறப்பட்டது.

இங்கிலாந்துச் சட்டத்தை ஒத்து, இந்தியச் சட்டமும் இ. ஒ. சட்டத்தின் 73-வது பிரிவில் "ஒப்பந்தம் ஒன்று முறிவு கொள்ளின், மீறுகையினால் அல்லலுறும் நபர், ஒப்பந்த முறிவினைச் செய்த நபரிடமிருந்து, ஒப்பந்த மீறுகையின் காரணமாக நடைமுறையில் இயற்கையாக எழக்கூடிய, அல்லது ஒப்பந்த ஏற்பாட்டின்போது ஒப்பந்தக்காரர்கள் அறிந்திருந்த மீறுகையினால் ஏற்படக்கூடிய இழப்பு அல்லது தீங்கிற்கான நிறையீடு பெறுகின்ற உரிமையினை அடைகின்றார்", என்று கூறப்பட்டுள்ளது.

"மீறுகையின் காரணத்தினால் ஏற்பட்ட இழப்பு அல்லது தீங்கு தொடர்பற்றதாகவும், நேரடியானதாக இல்லாமல் இருப்பினும், நிறையீடு கொடுக்கப்பட முடியாது".

**விளக்கம்**

ஒப்பந்த மீறுகையினுல் எழும் இழப்பு அல்லது தீங்கு பற்றி மதிப்பிடுகையில், ஒப்பந்த நிறைவேற்ருமையினுல் ஏற்பட்ட வசதிக்கேட்டினை அல்லது தொல்லேயை (Inconvenience)த் தீர்க்க இருந்த வழிவகையில் கணக்கில் எடுத்துக் கொள்ளப் படும். இ. ஒ. சட்டத்தின் 73-வது பிரிவில் கொடுக்கப்பட்ட சான்றுகள் கூர்ந்து நோக்கத்தக்கனவாகும்.

**தண்டப்பணமும் அறுதியிட்ட இழப்பீடுகளும் (Penalty and Liquidated Damages)**

தண்டப்பணத்திற்கும், அறுதியிட்ட இழப்பீடுகளுக்குமுள்ள வேறுபாட்டினை **Dunlop Pneumatic Tyre Co vs. New Garage and Motor Co (1914) A. C. 79.** வழக்கில் எடுத்துக் காட்டப் பட்டது. இழைக்கப்பட்ட தீங்கிற்கு ஈடாக அல்லது தண்டனை யாகச் செலுத்தப்பட வேண்டிய தொகை தண்டப்பணமாகும். ஒப்பந்த முறிவு நிகழ்ந்தால் நட்ட ஈடாகக் கொடுப்பதற்கு ஒப்புக் கொள்ளப்பட்ட தொகையாகவும் இதனைக் கொள்ள வேண்டும். •ஒப்பந்தம் முறிக்கப்பட்டால், அதற்கென அறுதி யிட்டு ஒப்பிய இழப்பீட்டுத் தொகைக்கு அறுதியிட்ட இழப்பீடு என்று சொல்லப்படுகிறது. வழக்கில் தவறிவிடுகின்ற நபரை அச்சுறுத்தும் வகையில் (In Terrorem) நிர்ணயிக்கப்பட்ட செலுத்துப்பணமே தண்டப் பணத்தின் கருவாக உள்ளது. உண்மையுள்ள வரைமொழி, உடன்பாடு கொள்வதற்கு (Covenanted) முன்னரே அறுதியிட்ட இழப்பீடுகளின் கருவாக உள்ளது என்று கூறப்பட்டிருந்தது.

இழப்பின் அளவு மீறிய ஒரு தொகையை, மீறுகை ஏற்படின் தண்டப் பணமாகச் செலுத்த வேண்டும் என்று கட்டுவரம்பாக ஓர் ஒப்பந்தத்தில் ஏற்றிருப்பின், அவ்விதம் வரையறுக்கப்பட்ட தண்டப் பணத்தைப் பெற இயலாது குறிப்பிட்ட நாளில் ரூபாய் 100-ஐச் செலுத்தாவிட்டால் ரூபாய் 200 தரவேண்டும் என்று கட்டுவரம்பு விதிக்கப்பட்டிருந்தால், அத்தகைய நிர்ணயம் தண்டப் பணமாக எண்ணப்பட்டு, பெற இயலாது போய்விடும். இத்தகைய தண்டம் பற்றிய கட்டுவரம்பு ஒப்பந்தக்காரரை அச் சுறுத்தி அவரின் மூல உறுதியுரையினை• நிறைவேற்றச் செய்ய வேண்டும் என்பதற்காக இடப்பட்டதாகும். அறுதியிட்ட இழப் பீடுகளானவை, வழக்கு மன்றத்தைத் தீர்மானிக்க விடாமல், ஒப் பந்தக்காரர்களாலேயே ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்ட நேரத் திலேயே நிச்சயிக்கப்பட்ட இழப்பீடுகளாக உள்ளன. ஆலே

ஒன்றைத் துவக்க குறிப்பிட்ட கால அளவில் முடியாவிடின், கால தாமதமாகும் நாள் ஒன்றிற்கு ரூபாய் 100 தருவதெனக் கட்டுவரம்பு கொள்ளப்பட்டது. இது அறுதியிட்ட இழப்பீடு என்று கருதப்படுகிறது. வழக்கு மன்றம், இத்தகைய கட்டு வரம்பால் கட்டட ஒப்பந்தக்காரர் இழப்புக்குள்ளாவார் என்று கணக்கிட்டுக் கூற இயலாது. எனவே இத்தகைய இழப்பீடு பெறக் கூடியதாகும்.

ஆகலான், தண்டப் பணத்திற்கான கட்டுவரம்பானது சட்டப் படி வலியுறுத்தப்பட இயலாது. அறுதியிட்ட இழப்பீடுகள் பற்றிய கட்டுவரம்பானது சட்டப்படி வலியுறுத்தப்படக் கூடியது. தண்டப்பணம் பற்றிய கட்டுவரம்பா அல்லது அறுதியிட்ட இழப்பீடுகள் பற்றிய கட்டுவரம்பா என்பதை வழக்கின் சூழ் நிலைகளிலிருந்தும், பயன் படுத்தும் மொழி அமைப்பைக் கொண்டும் தீர்மானிக்க வேண்டும். இங்கிலாந்துச் சட்டத்தை விட இந்தியச் சட்டம் கடைப்பிடிக்கப்படுவதற்கு எளியதாக உள்ளதை 74-வது பிரிவில் காணலாம்.

**இ. ஒ. சட்டத்தின் பிரிவு 74 பின் வருமாறு விளக்குகிறது :**

*(1)* தண்டப்பணமாகவோ அல்லது அறுதியிட்ட இழப்பீடு களாகவோ, மீறுகை ஏற்படும்போது தொகை ஒன்றைச் செலுத்த வேண்டும் என்று ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருப் பின், ஒப்பந்தம் முறிவடைந்ததும், மீறுகை பற்றிப் புகார் செய்யும் நபர், உள்ளபடியான இழப்பு நிரூபிக்கப்பட்டாலும், படா விடினும், குறிப்பிடப்பட்ட தொகைக்கு மிகாமல் நியாயமான நிறையீடு பெற உரிமை அடைகின்றார்.

*(2)* கட்டுவரம்பானது அறுதியிட்ட இழப்பீடுகளுக்கானது எனினும் இரண்டிலும், நியாயமான நிறையீடுதான் அனுமதிக் கப்படுமே தவிர, முழுத்தொகைக்கும் தீர்ப்பாணை கிடைக்காது.

*(3)* குறிப்பிட்ட நாளில் முதலினை (Principal)ச் செலுத்தா விடின், வட்டி விகிதம் அந்நாளிலிருந்து உயர்த்தப்படும் என்கின்ற கட்டுவரம்புகளோ தொடர்வட்டிக்கான நிபந்தனைகளோ தண்டத் திற்குரிய நிலையில் வைத்து, எண்ணப்படும்.

**Nageswaraswami *vs.* Viswa sundararao *(1953)* S.C.R. 894.** அடைமானப் பத்திரம் ஒன்றில், வாங்கப்பட்ட முதலினுக்கு ஆண்டொன்றுக்கு 7½ விழுக்காடு தனிவட்டி செலுத்தப்படல் வேண்டும் என்றும் அத்தகைய வட்டி ஆண்டுதோறும் செலுத்தப்

படல் வேண்டும் என்றும், தவறினுல் பாக்கியாகவுள்ள முதல் தொகை முழுமையும், வட்டியுமாகச் சேர்க்கப்பட்டு 9 விழுக்காடு தொடர் வட்டியுடன் வசூலிக்கப்படும் என்று கட்டுவரம்பு விதிக் கப்பட்டிருந்தது. உச்சநீதி மன்றத்தில் இத்தகைய கட்டுவரம்பு தண்டமாகக் கருதப்படத்தக்கது என்றும் அடைமான நாளி லிருந்து மீட்பு நாள்வரை 7½% தனி வட்டி மட்டுமே அனுமதிக் கப்படக்கூடியது என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

(4) பொதுக்கடமை நிறைவேற்றத்திற்கான, அரசின் சார்பி லுள்ள பிணையாவணம், (Bail Bond) மற்றும் அது போன்றவை களும் தண்டம் போன்ற கட்டுவரம்புகளைக் கொண்டிருப்பினும், அது சட்டப்படி வலியுறுத்தப்படக் கூடியதாகும். அதில் குறிப் பிடப்பட்டுள்ள தொகை முழுமையும் செலுத்தப்பட வேண்டும்.

(5) அரசின் சார்பில் நிறைவேற்றப்பட்ட ஆவணம் ஆவணத் தின் கட்டுவாசகத்தைப் பொறுத்து அரசின் நிறைவேற்றம் பற்றியதா இல்லையா என்று தீர்மானிக்கப்படும்.

# 1. ஈட்டுறுதியும், பொறுப்புறுதியும்
## (Indemnity and Guarantee)

பொது ஒப்பந்தத்தில், பொதுவான கொள்கைகளின் அடிப்படையில் எப்படி ஒப்பந்தம் மிளிர்கிறது என்று அறிவித்தோம். தனி ஒப்பந்தந்தனில் ஒப்படைவுகள் (Bailments), ஈட்டுறுதி (Indemnity), பொறுப்புறுதி (Guarantee), முகவரியம் (Agency) முதலானவற்றைப் பொறுத்த சட்ட நுணுக்கங்களைக் காண்போம்:

குறிப்பிட்ட தொகை ரூபாய் 200-ன் பொருட்டு 'ஆ'வுக்கு எதிராக 'இ' மேற்கொள்ளுகின்ற நீதி மன்ற நடவடிக்கையின் விளைவுக்கு எதிராக 'அ' ஈட்டுறுதி செய்வதாக ஒப்பந்தம் மேற்கொள்ளின், அத்தகைய ஒப்பந்தத்தினை, "ஈட்டுறுதி ஒப்பந்தம்", (Contract of Indemnity) என்பர்.

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 124-வது பிரிவு ஈட்டுறுதி ஒப்பந்தத்திற்கான வரைவுரையினைத் தெரிவிக்கிறது.

"தனது அல்லது மற்றவர் நடத்தையால் விளையும் இழப்பிற்கு ஈடு செய்வதாக ஒருவர் வாக்குறுதி அளிக்கும் ஒப்பந்தம்."

'ஆ'வின் வீட்டிற்குள்ள காற்று, ஒளி, வசதியைத் தடுக்கும் வகையில் குறிப்பிட்ட இடத்தில் கட்டடம் கட்டாமலிருக்க 'அ' உறுதியுரை செய்தும், அத்தகைய தன் உறுதியுரையின் மீறுகையினுல் 'ஆ'வுக்கு ஏற்படும் எந்த விதமான இழப்பினின்றும் காப்பதாகவும் உறுதி அளிக்கிறுர் என்றுல் 'அ' ஈட்டுறுதி ஒப்பந்தத்தில் ஈடுபடுகின்றுர் என்று பொருள். முன்னர் கூறியுள்ளபடி, காப்பீடு ஒப்பந்தம் ஓர் ஈட்டுறுதி ஒப்பந்தமே.

இங்கிலாந்துச் சட்டத்தில் ஈட்டுறுதியினை, "உறுதியுரை செய்பவரின் தூண்டுதலினுல் ஈடுபடுகிற விவகாரத்தினுல் ஏற்படும்

இழப்பினின்றும் தீங்கற்ற வழியில் அடுத்தவரைக் காப்பதாகச் செய்கின்ற உறுதியுரை," என்று விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே ஈட்டுறுதி ஒப்பந்தத்தில் உறுதியுரை செய்பவரின் கடப்பாடானது நிகழ்வுசார்பினதாகும் (Contingency). நிகழ்வு சார்பு, மூன்றும் பேராலோ, உறுதியுரை செய்பவர் தன்னாலோ, கடவுளின் செயலாலோ ஏற்படுகின்ற ஒன்றாக இருக்கலாம். இந்தியச் சட்டத்தைவிட இங்கிலாந்துச் சட்டம் விரிவான வரைவுரையை வகுத்துள்ளது. உறுதியுரை செய்பவரின் அல்லது மூன்றும் பேரின் நடத்தையால் மட்டுமல்லாமல், மனிதரது நடத்தையினால் கட்டுப்படாத, இறப்பு, இயலாமை, தீயினால் ஏற்படும் அழிவு, புயல் முதலான நிகழ்ச்சிகளினால் அல்லது எதிர்பாராத விளைவுகளினால் ஏற்படும் இழப்பினின்று தீங்கற்ற வழிகளில் காப்பாற்றச் செய்கின்ற உறுதியுரைகளும் இங்கிலாந்துச் சட்டத்தில் அடங்குகின்றன. இ. ஒ. சட்டத்தின் பிரிவு 124-ல் அத்தகைய விளைவுகளினால் ஏற்படும் இழப்புகளைப் பொறுத்த உறுதியுரைகள் அடங்கவில்லை. ஈட்டுறுதிக்கான தீர்மானமான உறுதியுரைகள் பற்றியே 124, 125-வது பிரிவுகள் குறிப்பிடுகின்றன. ஆனால் சட்ட அமுலினாலும், ஈட்டுறுதி செய்கின்ற கடமை இணைக்கப்படக் கூடும். முகவர் ஒருவரால், செய்யப்பட்ட சட்டநெறியான செயல்கள் அனைத்திற்கும் முகவருக்கு ஈட்டுறுதி செய்ய முதல்வர் கடமைப்பட்டுள்ளார் என்று பிரிவு 222 கூறுகிறது.

இ. ஒ. சட்டத்தின் 126-வது பிரிவில் பொறுப்புறுதி ஒப்பந்தத்திற்கான (Contract of Guarantee) வரைவுரை கூறப்பட்டுள்ளது.

"மூன்றும் நபர் தன் வாக்குறுதியைச் செயல்படுத்தவோ, பொறுப்பை நிறைவேற்றவோ தவறினால், தான் அவற்றை நிறைவேற்றுவதாக உத்தரவாதமளிக்கும் ஒப்பந்தம்." பொறுப்புறுதி கொடுப்பவர் பிணையாளர் (Surety) என்று அழைக்கப்படுவார். தவறுகின்ற நபர் "தலைக் கடனாளி" (The Principal Debtor) என்றும், யாரிடம் பொறுப்புறுதி அளிக்கப்படுகின்றதோ அவர் கடனாளர் (Creditor) என்றும் அழைக்கப்படுகிறார். வாய்ச்சொல்லாகவோ (Oral) எழுத்து மூலமாகவோ (Written) பொறுப்புறுதி இருக்கலாம். ஒரு கடனையோ, கடப்பாட்டையோ தீர்ப்பதற்குத் தலையாய பொறுப்பு உடையவர் தலைக் கடனாளியாவர். கடப்பாட்டை நிறைவேற்ற வேண்டிய ஒருவர் அதைச் செய்யத் தவறினால் தானே அதை நிறைவேற்றுவதாகத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவர் பிணையாளராகும். கடன் கொடுத்தவர் அல்லது கடப்பாட்டினை ஏற்கவேண்டியவர் கடனாளராவார்.

இங்கிலாந்துச் சட்டம், பொறுப்புறுதி ஒன்றில் நபரொருவர், மூன்றும் நபர் ஒருவர் செலுத்த வேண்டிய கடனுக்கோ ஆற்ற வேண்டிய கடப்பாட்டுக்கோ பதில் சொல்லப் பொறுப்பேற்கிறார் என்று விளக்கம் தருகிறது.

'அ' வும் 'ஆ' வும் வாணிபக் கடை ஒன்றில் நுழைந்தனர். வியாபாரியிடம், " 'அ', 'ஆ'வுக்கு தேவைப்படும் பொருள்களைத் தருக! அவர் பணம் செலுத்தாவிடில், நான் செலுத்துகின்றேன்" என்று கூறினால் இது ஒரு பொறுப்புறுதி ஒப்பந்தமாகும். தலை நிலை பொறுப்பு நிலை (Primary Liability) 'அ' விடமும், சார்நிலை, பொறுப்பு நிலை (Secondary Liability) 'அ' விடமும் உள்ளன. மாறாக " 'அ', வியாபாரிடம், 'ஆ' பொருள்கள் அடையட்டும், உனக்குப் பணம் செலுத்தப்படுவதை நான் கவனித்துக்கொள்கின்றேன்," என்று கூறுவாரானால் அது ஒரு ஈட்டுறுதி ஒப்பந்தமாகும். இதனை விளக்கிய (Birkmyer vs. Darnell (1704) 1 Salk. 27 — வழக்கில், ஈட்டுறுதி செய்கின்ற 'அ' விடம் தலை நிலை பொறுப்பு நிலை உள்ளது என்றும் எவரிடமும் சார்நிலை பொறுப்பு நிலை ஏற்படாது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது.

ஈட்டுறுதி பொறுப்புறுதி ஒப்பந்தங்களிடை காணப்படும் வேறுபாடுகள் பின்வரும் அட்டவணையில் கொடுக்கப்பட்டு உள்ளன.

| ஈட்றுதி ஒப்பந்தம் | பொறுப்புறுதி ஒப்பந்தம் |
|---|---|
| 1. இதில் இரண்டே சாரார் காணப்படுகின்றனர் — ஒருவர் ஈட்டுறுதியாளர் (Indemnifier) மற்றவர் ஈட்டுறுதியேற்றவர் (Indemnifited) | 1. இதில் மூன்று தரப்பினர் உள்ளனர், தலைக் கடனாளி. பிணையாளர். கடனாளர் என்ற மூவரும் இதில் இருக்கின்றார்கள் |
| 2. மோசடியாளர் சட்டத்திலும் (Statute of Frauds) இஃது எழுத்தில் இருக்கவேண்டும் என்ற நியதி இல்லை. | 2. மோசடியாளர் சட்டத்தில் இது எழுத்தில் இருத்தல் வேண்டும். |
| 3. நிகழ்வு சார்புடைய துணிவினின்றும் (Risk) ஈட்டுறுதி ஏற்பவரைக் காக்கும் பொருட்டு, ஈட்டுறுதியாளர் செய்கின்ற உறுதி உரையாகும். | 3. நிகழ்வு சார்புடையதல்லாத ஆனால் நிலைத்திருக்கின்ற (Subsisting) ஒன்றன் கடப்பாட்டுக்குள்ளான தலைக் கடனாளியை விடுவிக்கப் பிணையாளர் பொறுப்பேற்கிறார். |

4. துணிவு ஏற்பட்டதும் ஈட்டு றுதியாளர் ஒருவரே பொறுப்பு நிலைக்குள்ளாகிறார்.

4. பிணையாளரின் உறுதியுரை துணைசேர் பொறுப்பே (Colla teral Undertaking) தவிர. தலைக் கடனாளி தவறுகின்ற வரையில் பிணையாளர் பொ றுப்பு நிலைக்குள்ளாகார்.

5. மூன்றும் நபரின் நடத்தை யினால் ஏற்படுகின்ற துணிவுக்கு (Risk) உறுதியுரை ஏற்பவருக்கு ஈட்டுறுதி செய்கின்ற உறுதி யுரை செய்பவர் ஈட்டுறுதி ஏற்ற வருக்குச் செலுத்திய பின்னர் தன்பெயரால் அத்தகைய மூன் றும் நபர்களின் மீது வழக்கிடல் முடியாது. ஈட்டுறுதி ஏற்பவர் உரிமை மாற்றம் செய்யின் வழக் கிடல் முடியும், இதனை Peria manna Marakkayar vs. Bani-an & Co. 49 MAD. 1956 — வழக்கில் விளக்கியுள்ளனர்.

5. கடனாளருக்குச் செலுத்திய பின்னர், திரும்பப்பெற தலைக் கடனாளியின்மீது தன் பெயரா லேயே வழக்கிட பிணையாள ரால் முடியும்.

ஈட்டுறுதி உடையவரின் உரிமைகள் (Rights of Indemnity Holder)

இ. ஒ. சட்டத்தின் 125-வது பிரிவு அன்னாரின் உரிமைகள் பற்றி விளக்குகின்றது. ஈட்டுறுதி ஒப்பந்தத்தில், உறுதிவுரை செய்தவரிடமிருந்து தன் அதிகாரத்தின் கீழ்ச் செயல்பட்டே, உறுதியுரை ஏற்பவர் கீழ்வருவனவற்றைப் பெறலாம்.

(1) ஈட்டுறுதியான உறுதியுரையில் அடங்கும் எந்த ஒரு பொருளுக்காகவும் தொடரப் படுகின்ற உரிமை இயல் வழக்கு களில் கட்டாயப் படுத்தப்பட்ட செலுத்தல்களினால் ஏற்பட்ட இழப்பீடுகள்.

(2) உறுதியுரை செய்தவரின் உத்தரவுகளுக்கு எதிரிடையாக அமையாத நிலையில், ஈட்டுறுதி ஒப்பந்தம் இல்லாத பொழுது எத்தகைய விவேகமான முறையில் செயல்பட்டிருப்பரோ அங்ங னம் செயல்பட்ட நிலையில் அல்லது உரைசெய்பவரால் வழக்கிடல் தொடர அல்லது எதிர் வழக்கிட அதிகாரமளிக்கப்பட்ட நிலையி லும் உரிமை இயல் வழக்கு ஒன்றனைத் தொடர அல்லது எதிர் வழக்கிட கட்டாயத்துக்குள்ளான செலுத்தல்களினால் ஆன செல வினங்கள்.

(3) ஈட்டுறுதி ஒப்பந்தம் இல்லாத எந்த விவேகமான முறையில் செயல் பட்டிருப்பாரோ அவ்விதம் செயல்பட்டுச் செய்யப் பட்ட ஒன்ருகவும் அல்லது உறுதியுரை செய்பவர் அதிகாரமளித்துச் செய்யப்பட்ட ஒன்ருகவும், உறுதியுரை செய்தவரின் உத்தரவுகளுக்கு எதிரிடையாக அமையாத ஒன்ருகவும், ஒரு சமாதான உடன்பாடுகளின், அத்தகைய உடனபாட்டின் கட்டுவரம்புகளுக்கான உரிமை இயல் வழக்கில் செலுத்தப்பட்ட அனைத்துத் தொகைகள்.

Gajanan Moresowar vs. Moreshwar Madan- I. L. R. 1942. Bom 670– வழக்கில் இங்கிலாந்தில் காணப்படுவது போலவே நேர்மை நெறி விதிகளைக் கடைப்பிடித்து ஈட்டுறுதி வழக்குகளைத் தீர்க்லாம் என்றும், ஈட்டிறுதி ஒப்பந்தம் ஒன்றில், முழுமையான கடப்பாட்டுக்குள்ளாக்கும் செலவினம் மேற்கொண்ட ஈட்டுறுதி ஏற்றவர், உள்ளபடியான இழப்பினுல் தொல்லைக்காளாகாத நிலையிலும் ஈட்டுறுதி செய்தவரை, தன்மீது சுமத்தப்பட்ட கடப்பாட்டினைச் சந்திக்கும் நிலையில் வைக்கவேண்டும் என்று கோரலாம் எனத் தீர்ப்பாயிற்று.

சென்னை, அலகாபாத், கல்கத்தா உயர் நீதி மன்றங்கள் இதே நோக்கினைக் கொண்டன. ஆனுல் லாகூர், பம்பாய் உயர் நீதி மன்றங்கள் சில வழக்குகளில் இதற்கு மாருன எண்ணத்தைக் கொண்டன.

## பொறுப்புறுதி ஒப்பந்தம் அல்லது பிணை (Suretyship)

பொறுப்புறுதி ஒப்பந்தமும், ஓர் ஒப்பந்தம் என்பதால் செல்லு நிலை ஒப்பந்தத்திற்கான அனைத்து தேவைகளையும் பூர்த்தி செய்திடல் வேண்டும். ஆயினும் அதற்கான சிவப்புச் கூறுகளும் உள்ளன. சான்ருக, பொறுப்புறுதி ஒப்பந்தந்தனில், தலைக் கடனளிக்கு அளிக்கின்ற மறு பயனுக்குக் கூடுதலாகப் பிணையாளருக்கென எத்தகைய மறுபயனையும் கடனுளர் அளித்திடத் தேவையில்லை. இதனையே 127-வது பிரிவில், "தலைக் கடனுளியின் பயனுக்காகச் செய்யப் படுகின்ற எந்த ஒரு செயல் அல்லது அளிக்கப்பட்ட உறுதியுரையும், பிணையாளர், பொறுப்புறுதி தருவதற்குப் போதுமான மறுபயனுகும்", என்று கூறப் பட்டுள்ளது,

(அ) கடன் மீது பொருள்களைத் தனக்கு விற்பனை செய்து தர 'ஆ', 'அ' வினைக் கேட்டான். பொருள்களின் விலை செலுத்தலுக்கு 'இ' பொறுப்புறுதி தருவதாஞல் 'அ' உடன்படச்

சம்மதித்தான். பொருள் கொண்டுதர செய்த 'அ' வின் உறுதி' யுரைக்கு மறுபயனுகச் செலுத்தலுக்கான பொறுப்புறுதி செய்ய 'இ' உறுதியுரை செய்தான். 'இ' யின் உறுதியுரைக்கு இது போதுமான மறு பயனுயிற்று.

(ஆ) 'ஆ'வுக்கு பொருள்கள் 'அ' வினுல் விற்கப்பட்டுக் கொண்டு தரப்பட்டன. பின்னர், அக்கடனை ஓராண்டு வரையில் வலியுறுத்தி 'ஆ' வின் மீது வழக்கிடல் தவிர்ப்பாராஞல், அவ்விதம் அவர். 'அ' செய்வாராஞல், 'ஆ' செலுத்தத் தவறிஞல் 'இ' செலுத்துவதாக உறுதியுரை செய்கிறுர். கோரிக்கையின் படியே தவிர்ப்பதாக 'அ' உடன்படுகிருர். இது, 'இ' யின் உறுதியுரைக்கேற்ற போதுமான மறுபயனுகிறது.

(இ) 'ஆ' வுக்கு பொருள்கள் விற்பனை செய்து 'இ' கொண்டு தருகின்ருன். பின்னர் 'இ' மறுபயன் ஏதுமின்றி 'ஆ' தவறிஞல், தான் செலுத்துவதாக 'இ' உடன்படுகின்ருன். இத்தகைய உடன்பாடு இல்லா நிலையது. (பி. 127) ஆகும்.

பிணை ஒப்பந்தம் (Contract of Suretyship) ஒன்று முழு நம்பிக்கையில் எழுகிற ஒப்பந்தமாகாது. ஒப்பந்தம் ஏற்குமுன்னர் பிணையாளுக்கு அனைத்துக் கருநிலைப் பொருண்மைகளையும் (**Material Facts**) தலைக் கடனுளி அல்லது கடனுளரால் முழுமையாக வெளிப் படுத்துதல் தேவைப்படுகின்ற முழு நம்பிக்கையில் எழுகின்ற ஒப்பந்தமாகாது.

London General Omnibus Co *vs.* Holloway (1912) 2. K. B. 72 வங்கி ஒன்றனுக்கு ஒரு பொறுப்புறுதி அளிக்கப்பட்டபொழுது, பிணையாளியின் நிலையினை மேலும் சுமையுள்ளதாக்கக் கூடிய நிலையில் வைக்கக் கூடிய விதத்தில் கடனுளியின் நாணயத்தைப் பாதிக்கும் கரு நிலைகள் அல்லது அந்த விவகாரம் பற்றிய சூழ்நிலைகள் எது பற்றியும் பிணையாளுக்கு அறிவிக்க வேண்டிய கடப்பாடு வங்கிக்குக் கிடையாது, ஆனுல் காப்பீடு போன்ற நிலையில் உள்ள பொறுப்புறுதியாயின் (சான்ருக நம்பிக்கையுள்ள பொறுப்புறுதியானுல்) அனைத்துக்கருநிலைப் பொருண்மைகளையும் வெளிப்படுத்த வேண்டும். இல்லையெனில் பிணையாள் ஒப்பந்தத்தைத் தவிர்க்கலாம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

Kashiba *vs.* Shri pat (1894) 19. Bom. 697

கடனுளர், பிணையாளர் இருவரிடையே ஏற்படுகிற ஒப்பந்தந்தனில் கடப்பாடானது, தலைக் கடனுளியினை விடுவிப்பிக்கின்ற

துணை நோக்கம் கொண்ட பொறுப்புள்ளதானால், ஒப்பந்தத் தகுதியின்மை அல்லது தன் அதிகாரங்கள் வரம்பிகந்த (Ultra Vires His Powers) ஒன்று என்ற காரணத்திற்காகத் தலைக் கடனாளி செய்த உறுதியுரை இல்லாத நிலையினை அடையினும், பிணையாளர், அவரின் கடப்பாட்டினின்றும் விடுவிக்கப் பட மாட்டார். அத்தகைய ஒப்பந்தங்களின் பிணையாளரின் உறுதியுரையே தலை ஒப்பந்தமாகி, முழுமையாகச் செல்லு நிலையதும் சட்டப்படி வலியுறுத்தக் கூடியதுமாம் என்று அவ்வழக்கில் தீர்வு காணப்பட்டது.

இ. ஒ. சட்டத்தின் 128-வது பிரிவில்,

"ஒப்பந்தத்தில் வேறுவிதமாக வழிவகை செய்திடாத வரையில் பிணையாளரின் கடப்பாடானது தலைக்கடனாளியின் கடப்பாட்டுடன், இணைந்து நீடிப்பதாகவுள்ளது" (Coextensive) என்று கூறப்பட்டுள்ளது.

**Subramania** vs. **Narayanaswamy A.I.R. 1951. MAD 48. (F.B.)** வழக்கில், 1938-ம் ஆண்டு சென்னை விவசாயிகள் மாற்றீடு சட்டத்தினால் நிர்ணயிக்கப்பட்ட கடனில், அவ்விதம் குறைக்கப்பட்ட தொகையினையே கடனாளருக்குச் செலுத்தும் கடப்பாட்டில் பிணையாளர் இருக்கின்றார் என்று, **Surbramania** vs. **Batcha Rowther (1941) 2 M. L. J. 751** சென்னை உயர்நீதி மன்றத்தில் முழு ஆயத்தினால் அளிக்கப்பட்ட தீர்ப்பின் முடிவினை விலக்கித் தீர்ப்பளித்தனர்.

தலைக்கடனாளி தவறிழைத்த பின்னரே ஏற்படுகின்ற, சார் நிலையான, கடப்பாடாகப் பிணையாளுடைய கடப்பாடு உள்ளது. எழுத்து மூலமாக உடன்பட்டிருந்தாலொழிய, தவறியமைக்கான அறிவிப்பு பிணையாளுக்குக் கொடுக்கத் தேவையில்லை: அதே போன்று கடனாளர், பிணையாளர் இருவரிடையேயும் எழுத்து மூலமான உடன்பாடு கொள்ளப்படவில்லை எனின், பிணையாளர் மீது நீதி மன்ற நடவடிக்கை ஒன்று எடுக்கப்படுமுன்னர் கட னாளர், கடனாளியினைச் செலுத்தச் சொல்லியோ வழக்கிடல் செய்யவோ, செய்திடல் வேண்டும் என்பது அவசியமில்லை. ஆயினும் பொறுப்புறுதி ஒப்பந்தத்தில் கண்டுள்ள கட்டுவரம்பு களின்படி கடனாளர் நடத்தல் வேண்டும். அப்படி, பிணையாளரின் இசைவின்றி, பொறுப்புறுதி ஒப்பந்தத்தில் கண்டுள்ள கட்டுவரம்பு களினின்றும் மாறுபட்டுக் கடனாளர் நடந்தாரென்றால், கடப் பாட்டினின்றும் அன்னார் விடுவிக்கப்படுவார். ஆகலான் பிணை யாளர் சில நேரங்களில் ஆதரிக்கப்பட்ட கடனாளி (Favoured

Debtor) என்றழைக்கப்படுகின்ருர். இதஞல் கடஞளரின் சார்பில் உள்ள சிறிய பழியிஞலும் பிணையாளர், தனது கடப்பாட்டினின்றும் விடுவிக்கப்பட முடியும். தலைக் கடஞளி, பிணையாளர் இருவரும் வெவ்வேறு தனிப்பட்ட நபரானதால் தலைக் கடஞளியின் ஏற்கின்ற அல்லது ஒப்புகின்ற செயலிஞல் பிணையாளரின் காலவரை அளவு நீடிக்கப்படாது. அதே போன்று தலைக் கடஞளிக்கெதிராகப் பெறப்பட்ட தீர்ப்பாணை ஒன்றைப் பிணையாளுக்கெதிராக நிறைவேற்ற இயலாது.

தொடர் பொறுப்புறுதி (Continuing Guarantee)

தனி விவகாரம் பற்றிய பொறுப்புறுதியாகவோ பல விவகாரங்கள் உள்ளடக்கிய தொடர் பொறுப்புறுதியாகவோ பொறுப்புறுதிகள் காணப்படுகின்றன. சுற்றுச் சூழ்நிலைகள், ஒப்பந்தக் கருப்பொருள், ஆவணத்தில் காணப்படுகின்ற மொழி அமைதி முதலானவைகள் பொருத்து "தொடர் பொறுப்புறுதி"யா இல்லையா என்பது கண்டறியப்படும். பிரிவு 129. "தொடர் விவகாரங்களுக்கான முறையில் விரிவாக்கப்படுகின்ற பொறுப்புறுதி" என்று, தொடர் பொறுப்புறுதிக்கான வரைவுரை செய்கின்றது.

'ஆ'வின் நிலச் சொத்தில் வாடகை வசூலிக்க 'இ'யினை நியமிக்க வேண்டியும், 'இ'யின் அத்தகைய வாடகை செலுத்லுதல்களுக்காக ரூபாய் 5000 வரையில் பொறுப்பேற்பதற்காக 'ஆ'வுக்கு 'அ' உறுதியுரை செய்தான். இது தொடர் பொறுப்புறுதியாகும். பின்னர் விவகாரங்களினின்றும் தொடர் பொறுப்புறுதியினை, கீழ்க்கண்ட வழிகளில் முடித்துக் கொள்ளலாம்.

(i) கடஞளருக்கு அறிவிப்பு (Notice) மூலம் மறுத்தழிப்பு செய்தல்

அதாவது மறுத்தழிப்பு (Revocation) பி. 130.

(ii) எதிரிடையானதாக ஒப்பந்தந்தனில் இல்லாதபோது பிணையாளர் இறப்பு (பி. 131).

மறித்தழிப்பு, பிணையாளர் இறுத்தல் இவைகளிஞலும் தொடர் பொறுப்புறுதி முடிவுறும்.

முழுக்கடனின் ஒரு பகுதிக்கான பொறுப்புறுதி ஒப்பந்தமும் எல்லைக் குட்பட்ட முழுக்கடனுக்கான பொறுப்புறுதி ஒப்பந்தமும் (Difference Between Guarantee for Part of the Whole Debt and a Guarantee for the Whole Debt Subject to a Limit.)

ஒப்பந்தக்காரர்களின் எண்ணத்தைப் பொருத்தே இதனைக் கண்டுபிடிக்க இயலும். Ellis vs. Emanvel (1876) I. Ex. Div. 157.

இப் பிரபல வழக்கில் இழைவுறு மிகுதியின் (Floating Balance) பகுதிக் கடனுக்காகத் தரப்பட்ட பொறுப்புறுதியினைப் பொருத்து முதல் நோக்கிலேயே முடிவு செய்து கடனின் ஒரு பகுதிக்கே கடப்பாடாக்கலாம்.

ஆனால் கொடுக்கப்பட்ட பொறுப்புறுதி குறிப்பிட்ட பகுதிக் காயினும் நிர்ணயிக்கப்பட்ட (அறுதியிட்ட தொகைக்கான (Fixed and Ascertained) கடப்பாடாயின், பொறுப்புறுதி ஒப்பந்தத்தினை முதல் நோக்கிலேயே (Prima Facie) எல்லைக்குட்பட்ட முழுக் கடனுக்கானதாகத் தீர்மானிக்க வேண்டும் என்று அந்த வழக்கில் தீர்ப்பாயிற்று. இவ் விதிகள் ஒப்பந்தக்காரர்கள் மேற் கொள்ளும் ஒப்பந்தத்திற்குத் தகுந்தாற்போல் மாற்றப்படக் கூடியன. இவ் விதமாக இழைவுறு மிகுதியில்கூட (Floating Balance) எல்லைக்குட் பட்ட முழுக் கடனுக்காகத் தன்னை கடப்பாடாக்கி எழுத்து மூல ஒப்பந்தம் ஒன்றினைப் பிணையாளர் மேற்கொள்ள முடியும். இந்த வகை ஒப்பந்தத்தில், தலைக் கடனாளி நொடிப்பு நிலைக்குள்ளானால் (Bankruptcy), பிணையாளரிடமிருந்து பெறப்பட்ட தொகை யினைக் கழிக்காமல், கடனாளர், முழுக் கடனுக்காக மெய்ப்பிக்க முடியும். கடனாளரின் கடன் முழுமையும் செலுத்தப்படாத வரையில் கடனாளரின் நிலையில் தன்னை வைத்து எண்ண, பிணை யாளர் எந்த விதமான உரிமையையும் பெறமுடியாதிருப்பார். இதுபோன்ற நிலை கடனின் ஒரு பகுதிக்கான பொறுப்புறுதி ஒப் பந்தத்தில் ஏற்படுவதில்லை. இரண்டு பொறுப்புறுதி ஒப்பந்தங் களின் விளைவுகளும் முற்றிலும் மாறுபட்டுள்ளன.

'ஆ' ரூபாய் 5000 'அ'வுக்குத் தர வேண்டும். ரூபாய் 3000-க்கு 'இ' பிணையமாகிறார். இதில் ரூபாய் 5000-த்தில் ரூபாய் 3000-க்கு மட்டும் 'இ' பிணையாளரானரா அல்லது மொத்தம் ரூ. 5000-க்கும், ரூபாய் 3000 எல்லைக்குட்பட்ட முழுக் கடனுக்காகப் பிணையாளராக உள்ளாரா என்பதையறிய வேண்டும்.

'ஆ'வின் சொத்து நொடிப்பு நிலைக்குள்ளாகி ரூபாயில் 25 பைசா பங்கு ஆதாயம் (Dividend) அனுமதிக்கப்படின் 'இ'யின் பொறுப்புறுதி கடனின் பகுதிக்கான ஒப்பந்தமாகக் கருதப்படு மானால் 'அ' ரூபாய் 3000-த்தை 'இ'யிடமிருந்தும், ரூபாய் 500 'ஆ'வின் சொத்துக்களினின்றும் ஆதாயமாகப் பெற முடியும். 'இ'யும் 'ஆ'வும் சொத்துக்களிலிருந்து ரூபாய் 750 பெறலாம். மாறாக 'இ'யின் பொறுப்புறுதி ரூபாய் 3000 எல்லைக்குட்பட்ட ரூபாய் 5000-க்கான ஒப்பந்தமாகக் கருதப்பட்டால், 'அ' 'இ'யிட மிருந்து ரூபாய் 3000மும், மொத்தத் தொகைக்கான ஆதாயத்

தொகையான ரூபாய் 1250-ஐ, 'ஆ'வின் சொத்துக்களிலிருந்தும் பெறமுடிகிறது. ஆனால் 'அ'வின் முழுக் கடன் பணமும் செலுத்தப்படாத வரையில் 'இ' எத்தகைய ஆதாயமும் 'ஆ'வின் சொத்துக்களிலிருந்து பெற இயலாது. 'ஆ'வின் சொத்துக்கள் ரூபாயில் 40 காசுகள் மேற்பட்டு ஆதாயம் அனுமதித்தாலொழிய, இது நடைபெற முடியாது.

**கடனாளருக்கெதிரான பிணையாளரின் உரிமைகள் (Rights of Surety Againts the Creditor)**

*(1)* கடனாளர், தலைக்கடனாளி இருவரிடையேயும் ஏற்பட்டுள்ள ஒப்பந்த கட்டுவரம்புகளைப் பிணையாளரின் இசைவின்றி, மாற்றக் கூடாது. இல்லையெனின் பிணையாளர் அத்தகைய மாற்றத்தின் பின்னர் உண்டாகும் விவகாரங்களினின்றும் விடுவிக்கப் படுவார் (பி. 133).

*(2)* ஒப்பந்தம் ஒன்றினாலோ செயல் ஒன்றினாலோ, தவறி விட்ட ஒன்றினாலோ, கடனாளர், தலைக்கடனாளியை அன்னாரின் கடப்பாட்டினின்றும் விடுவிப்பு செய்யக்கூடாது. தவறினால் பிணையாளர் விடுவிக்கப்படுவார் (பி. 134).

*(3)* பிணையாளரின் இசைவின்றி, தலைக்கடனாளி மீது வழக்கிடல் செய்யாமலிருப்பதற்கான நிறுத்திசைவு (Compound) கொள்ள அல்லது காலக்கெடு தர அல்லது உடன்பாடு செய்ய கடனாளர் முற்படக் கூடாது. தவறினால் பிணையாளர் விடுவிக்கப் படுவார் (பி. 135).

*(4)* தலைக்கடனாளிக்கு எதிராகப் பிணையாளர் முடிவு கொள்ளத்தக்க தீர்வழியினைப் பழுதாக்க, செயல் ஒன்றையோ செய்யாமை ஒன்றினையோ கடனாளர் மேற்கொள்ளக்கூடாது. அவ்விதம் மேற்கொள்ளின் பிணையாளர் விடுவிக்கப்படுவர் (பி. 139).

*(5)* பணியாளர் ஒருவர் வஞ்சனையானவர் (Dishonest) என்று மெய்பிக்கப்பட்டால், அன்னாருக்காக நம்பிக்கையாயுள்ள பொறுப்புறுதி ஒப்பந்தம் தந்தவர் அவரைப் பணியினின்றும் நீக்கப்பணியாண்மையரைக் கோருகின்ற உரிமை உடைய பிணையாளர் போன்றே, கடன் செலுத்து முன்னர், சில குறிப்பிட்ட உரிமைகள் பிணையாளருக்கு இருக்கின்றன.

*(6)* பணம் செலுத்துகின்றபோது, கடனாளரை, அவரின் அடைமானச் சொத்தின் வரிசை உரிமையினை (Marshalling Securities) மாற்றச் சொல்லிக் கோரும் உரிமை பிணையாளருக்குண்டு.

(7) வழக்கிடல் ஒன்றில் கடனுளருக்கு எதிராக தலைக்கட னுளியால் கோரப்படுகின்ற எந்த விதமான எதிரீடு (Set Off) அல்லது எதிர்பாத்தியதை (Counter Claim) முதலானவற்றைப் பிணையாளர் வழக்கிடலில் பாத்தியதை கொண்டாடலாம்.

(8) பிணையாளரின் இசைவின்றிக் கடனுளியின் எந்த வித மான பிணையத்தினையும் கடனுளர் பிரியவோ இழக்கவோ செய் தல் கூடாது. இல்லை யெனில் பிணையாளர் விடுவிக்கப்படுவார் (பி. 141).

**தலைக்கடனுளிக்கெதிரான பிணையாளரின் உரிமைகள் (Rights of Surety Against the Principal Debtor)**

(1) தலைக்கடனுளி கடப்பாட்டினின்று விடுவிக்கப்பட்ட பின்னர் பிணையாளர், கடனுளரின் போர்வையில் உரிமைகள் பெறுகிருர். இத்தகைய மாற்றமர் அடைமான உரிமை (Right of Subrogation) 140, 141-வது பிரிவுகளில் விளக்கப்பட்டுள்ளது. இவ்விடத்தில் வெறும் உறுதியுரை போதுமானதன்று என்பதும் செலுத்துதல் (Payment) அல்லது நிறைவேற்றம் (Pereformance) நடைபெற வேண்டும் என்பதும் கவனிக்கத்தக்கது. மாற்ருமல் அடைமான உரிமை கோருவதற்கு முன்பாக செலுத்துதல் அல்லது நிறைவேற்றம் முழுகடனுக்காக அல்லது கடப்பாட்டுக்கானதாக இருத்தல் வேண்டும்; பகுதியானதாக இருத்தல் கூடாது.

(2) பி. 141-ன் கீழ், செலுத்துதல் ஆன பின்னர் பிணையா ளர் ஒருவர், பிணை ஒப்பந்தம் மேற்கொண்டபோது கடனுளரி டமிருந்து கடனுளியின் பிணையங்கள் மீது, நீதி மன்ற நடவடிக்கை எடுக்கும் உரிமையினைப் பெருகின்ருர். இங்கிலாந்துச் சட்டத்தில் ஒப்பந்தத்திற்குப் பிறகு உண்டான பிணையங்கள் மீதும் நீதி மன்ற நடவடிக்கை எடுக்க வழிவகை உள்ளது.

(3) பி. 145-ன் கீழ் சீராகச் செலுத்தப்பட்ட அனைத்துச் செலுத்துதல்களுக்கும் ஈட்டுறுதி கொள்ளும் உரிமையினைப் பிணை யாளர் அடைகின்ருர். Raghavendra *vs.* Mahi pat வழக்கில். கடனுளிக்கெதிரான கெடுகடந்த கடனைச், செலுத்திய பிணை யாளர் சரியான முறையில் செலுத்தினவராகத் தீர்ப்பளிக்கப் பட்டது.

Putti narayana Moorthy *vs.* Marimuthu—இந்த வழக்கில் கடனுளியின் கடனுக்காகப் பிணையாளர் கடனுறுதிச் சீட்டுத் தந்து அக்கடனுளியைக் கடப்பாட்டிலிருந்து விடுவிப்புச் செய்த தனைக் கொண்டு கடனுளியிடமிருந்து அதனைப்பெற இயலாது. ஏனெனில் உள்ளபடியாக அவர் கடனைச் செலுத்திவிடவில்லை. என்பதைக் காணவேண்டும். இவ்வித பிணை, செலுத்

தப்பட்ட கடனுக்காகவே பொருந்தும். ஆனால் கடனுக்காகப் பிணையாளர் தன் பொருளில் சிலவற்றை இழந்து அதனால் கடனாளியைக் கடப்பாட்டிலிருந்து விடுவிப்புச் செய்திருந்தால் கடனாளியின் மீது நீதி மன்ற நடவடிக்கை எடுக்க இயலும் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**உடன் பிணையாளர்களுக் கெதிரான பிணையாளர் உரிமைகள்** (Rights Against Co Sureties)

பி. 146-ன் கீழ் கடனாளியினால் செலுத்தப்படாத பகுதிக் கடனையோ முழுமையான கடனையோ உடன் பிணையாளர்கள் சமபங்கில் செலுத்தத் தங்களுக்குள் கட்டுப்பட்டுள்ளார்கள். எனவே, தன் பங்கினுக்கு அதிகமாகச் செலுத்துகின்ற உடன் பிணையாளர், விகிதப் பொறுப்பு (Contribution) உரிமையினைப் பெறுகின்றார். இத்தகைய உரிமை, மாறான ஒப்பந்தம் கொள்வதற்கு உடன்பட்டது. பி. 147-ன் கீழ் வெவ்வேறான தொகைகளுக்குக் கட்டுப்பட்ட உடன் பிணையாளர்கள் தத்தம் கடப்பாட்டிற்குள் அனுமதிக்கப்பட்ட எல்லைவரையில் சமமாகச் செலுத்தக் கடப்பாட்டுக்குள்ளாகின்றனர். இங்கிலாந்துச் சட்டத்தில் அத்தகைய சூழ்நிலைகளில் பிணையாளர்கள் விகிதாச்சாரத்தில் பங்கேற்கின்றனர்.

**பிணையாளர் விடுவிப்பு** (Discharge of Surety)

*(அ)* ஒப்பந்தத்தில் காணப்படும் குறைபாட்டினால் (Defect) பிணை ஒப்பந்தம் இல்லாநிலையதாக அல்லது தவிர்தகு நிலையாக ஆனநிலையில் பிணையாளர் விடுவிப்பு ஏற்படும்.

*(ஆ)* பிணை மறித்தழிக்கப்படுவதனால் பிணையாளர் விடுவிப்பு ஏற்படும்.

*(இ)* கடனாளர் தவறான நடத்தையினால் குற்றவாளியான போது பிணையாளர் விடுவிப்பு ஏற்படும்.

**(அ) பிணை ஒப்பந்தம் இல்லாநிலையது அல்லது தவிர்தகு நிலையது** (Where the Contract of Surety is Void or Voidable)

பிணையாளரின் வசதிக்கிணங்க,

*(1)* விவகாரம் ஒன்றின் கருநிலையைப் பற்றி கடனாளரால் அல்லது அவரால் அறிந்து கொண்ட அவரின் சம்மதம் பெற்றவர் திரித்துக்காட்டல் மூலம் றெபப்பட்ட பொறுப்புறுதியில் (பி 142);

*(2)* கருநிலை சூழ்நிலைகள்பற்றி மௌனமாயிருந்து பொறுப்புறுதி பெறப்பட்ட ஒன்றில் (பி. 133);

*(3)* அடுத்தவர் உடன் பிணையாளராகச் சேராதவரையில் செயல்படுத்தாமலிருக்கக் கடனாளர் மேற்கொண்ட ஒப்பந்தத்தில்

அத்தகைய நபர் சேராத நிலையிலுள்ள பொறுப்புறுதி ஒன்றில் (பி. 144) ஒப்பந்தம் இல்லாத நிலையதாகவோ தொடர் நிலையதாகவோ மாறும் தன்மையதாகிறது.

(ஆ) பிணை மறித்தழிக்கப்பட்ட நிலையில்

பிணையானது தனி விவகாரம் பொருத்தும், கடப்பாட்டுக்குள்ளாக்கப்பட்ட பொழுதும் ஒரு பிணையாளர் பொறுப்புறுதியை மறித்தழிக்க இயலாது. ஆனால் தொடர் பொறுப்புறுதியில் வருங்கால விவகாரங்களில் மறித்தழிப்பு செய்யக் கூடியதாக உள்ளது.

(இ) கடனாளர் தவறான நடத்தையினால் குற்றவாளியானபோது.
(Where the creditor is Guilty of Improper Conduct)

கடனாளர் தரங்கெட்ட செயலினால் குற்றவாளியான நிலையில், பிணையாளர் ஆதரிக்கப்பட்ட ஒரு கடனாளி என்ற வழியில் விடுவிக்கப்படுகிறார்.

(1) பிணையாளரின் இசைவின்றி, ஒப்பந்தத்தின் கட்டுவரம்புகள் கடனாளரால் மாற்றப்பட்டபோது (பி. 133) பிணையாளர் விடுவிப்பு செய்யப் படுகிறார்.

Whiteher *vs*. Hall வழக்கில் குத்தகை எடுத்தவருக்கு வாடகையின் பொருட்டு 30 கறவை பசுக்கள் குத்தகை விட்டதற்குப் பிணையாளர் பொறுப்புறுதி செய்து தந்தார். ஆனால் குத்தகை விட்டவர் சில காலம் 32 பசுக்களையும் பின்னர் சில காலம் 28 பசுக்களையும் விட்டு குத்தகை எடுத்தவரிடம் குத்தகைக்குத் தந்திருந்தார். பலன் பாதிக்கப்படவில்லை என்றாலும் ஒப்பந்தம் 30 பசுக்களுக்கு என்பதால் பிணையாளர் விடுவிக்கப்படுகிறார் எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

(2) ஒப்பந்தம் ஒன்றினாலோ செயல் ஒன்றினாலோ, தவறிவிட்ட செயலினாலோ, கடனாளர், தலைக்கடனாளியை அவரது கடப்பாட்டினின்றும் விடுவிப்புச் செய்திருப்பின் பிணையாளர் விடுவிப்பு செய்து கொள்ளலாம் (பி. 134). ஆயினும் மாறான ஒப்பந்தம் மேற்கொண்டாலொழிய தலைக் கடனாளி மீது வழக்கிடல் செய்யாமலிருக்க கடனாளர் ஒப்புவதோ, அவருக்கெதிராகத் தீர்வழி சட்டச் செலுத்துதலில்லாமலிருக்க ஒப்புவதோ பிணையாளரை விடுவிப்பிக்கச் செய்யாது (பி. 137). கடனாளரின் செயல் அல்லது செயல் தவறு காரணமானதாக நொடிப்பு நிலை (Bankruptcy) கருதப்படாததால் கடனாளியின் நொடிப்பு நிலையும் பின்னர் உண்டாகின்ற அவரின் விடுவிப்பும் பிணையாளரை விடுவிப்பு செய்யாது.

(3) பிணையாளரின் இசைவு இல்லாமல் தலைக் கடனாளி மீது வழக்கிடல் செய்யாமலிருப்பதற்கான நிறுத்திசைவு (Compound) செய்ய அல்லது மேலும் காலக்கெடு தர அல்லது உடன்பாடு கொள்ள கடனாளர் முற்படின் பிணையாளர் விடுவிப்பு செய்யப்படுவார் (பி. 135). ஆயினும் தலைக் கடனாளிக்குக் கால நீட்டிப்புத் தருவதாக மூன்றும் நபரிடம் கடனாளர் உறுதியுரை செய்திடின் பிணையாளர் விடுவிக்கப்பட மாட்டார் (பி. 136).

(4) பிணையாளரின் இசைவின்றி கடனாளியின் எந்தவிதமான பிணையத்தினையும், கடனாளர் பிரியச் செய்யவோ இழந்திடவோ செய்யின் பிணையாளர் விடுவிக்கப்படுவார் (பி. 141).

(5) தலைக் கடனாளிக்கு எதிராகப் பிணையாளர் முடிவு கொள்ளத்தக்க தீர்வழியினைப் பழுதாக்கும் செயல் ஒன்றினையோ செய்யாமை ஒன்றினையோ, கடனாளர் மேற்கொள்வதால் பிணையாளர் விடுவிக்கப் படுகின்றார் (பி. 139).

சான்றாக 'ஆ' வுக்கு 'அ' வினால் அறிமுகப்படுத்தப்பட்டு, 'ந' பயிற்சிக்கு அமர்த்தப்படுகிறார். 'ந' வின் நம்பிக்கைக்கு 'அ' பொறுப்புறுதி தருகிறார். 'ஆ' வும் தன் பங்காகக் கை நிலுவை (Cash), பற்று வரவு கணக்குகளையும் சரி பார்ப்பதாக உறுதியுரை செய்கிறார். 'ஆ' தன் பங்கை செய்யத் தவறினார். 'ந' கையாடல் செய்துவிட்டார். பிணை ஒப்பந்தத்தின் மீதான பொறுப்பு நிலைக்கு 'அ' உள்ளாக மாட்டார்.

# 2. ஒப்படைவுகள்
## (Bailments)

ஒப்படைவினைக் குறிக்கின்ற ஆங்கிலச் சொல்லான 'Bailment' ஃபிரெஞ்சு மொழியிலுள்ள வினைச் சொல்லான 'Bailler' என்ற சொல்லின் வழி வந்ததாகும். 'Bailler' என்பது கொண்டு தருகின்ற (To Deliver) என்ற பொருளினை உடையது. கொடுத்தவரின் உத்தரவிற்கிணங்க திருப்பித் தரப்படுகின்ற, பொருள்களின் கொண்டு தருதலைக் குறிக்கின்ற நுணுக்கச் சொல்லான 'Bailment' (ஒப்படைவு) என்று இயற்றுச் சட்டத்தில் இலங்குகின்றது. தைத்துக் கொடுப்பதற்கென தையற்காரரிடம் துணி கொடுக்கப்படுதல் ஒப்படைவாகிறது. படித்த பின்னர் திருப்பித் தரும் பொருட்டு நண்பரிடமிருந்து நூல் ஒன்றினைப் பெறுதல் " ஒப்படைவு " என்றாகும்.

ஒப்படைவும் ஒரு வகையான ஒப்பந்தமே என்பதை இனிக் காண்போம். இ. ஒ. சட்டத்தின் 148-வது பிரிவில் இதற்கான வரைவுரை கொடுக்கப்பட்டுள்ளது.

"ஒருவர் மற்றொருவரிடம் குறித்த நோக்கத்துடன் சில பொருள்களை, அந்நோக்கம் நிறைவேறியவுடன் திரும்பவும் கொடுத்துவிட வேண்டும் அல்லது தாம் ஏவுகின்றபடி தரப்பட வேண்டும் என்ற ஒப்பந்தத்தின் மீது ஒப்படைத்தல்". (இ.ஒ. சட்டத்தின் 148-ம் பிரிவு) இதையே "Halsbury's Laws of England"-ல் பொறுப்புரிமை அமைப்பில் கொண்டு தரப்பட்ட தனியார் பொருள்களை, அத்தகைய பொறுப்புரிமை ஒழுங்கான முறையில் நிறைவேற்றப்பட்டு, பயன்படுத்த அனுமதிக்கப்பட்ட கால முடிவிற்குப் பின்னரோ கொடுக்கப்பட்ட கட்டுவரம்பு நிறைவேற்றம் ஆன பின்னரோ கொடுக்கப்பட்ட நிலையிலோ மாறுபட்ட நிலையிலோ பொருள்களைத் திருப்பிக் கொண்டு தரப்படுதல் வேண்டும், என்று வெளிப்படையாகவோ உட்கிடையாகவோ உண்டான ஒப்பந்தம் ஒன்றின் அடிப்படையில் ஒப்படைத்தல்," என்று கூறப்பட்டுள்ளது. கடிகாரம் ஒன்று பழுது

பார்க்கத் தரப்பட்டிருப்பினும், பொன் மோதிரத்தில் பதித்துத் தர என்று வைரங்கள் கொடுக்கப்பட்டிருப்பினும் அவற்றின் நோக்கம் நிறைவேற்றப்பட்ட பின்னர் அஃதேயான கடிகாரம் அல்லது அஃதேயான வைரக்கற்கள் திருப்பிக் கொண்டு தரப்பட வேண்டும். பணம் வாங்க, பிணையமாக வைக்கப்படும் நகை, பாதுகாப்பின் பொருட்டு வங்கியில் கொண்டு தரப்படுகின்ற பொன் நகைகள், நுகர்வோருக்குக் கொண்டு தருவதற்காக எடுத்துச்செல்ல என்று ரயில்வே நிறுவனத்திடம் கொண்டு தரப் படுகின்ற பொருள்கள் அனைத்தும் ஒப்படைவுகளுக்கான சான்று களாகும்.

**Coggs** vs. **Bernard (1703) 1. Sm. L. C. 175**—வழக்கில் பிரதம நீதிபதியான ஹோல்ட் பிரபு ஒப்படைவுகளை வகைப்படுத்தி ஆறு தலைப்புகளில் விளக்கினர். அவையாவன: *(1)* **Depositum**-ஒப் படை செய்பவரின் உபயோகத்திற்கெனக் கொண்டு தரப்படுகின்ற பொருள்கள், *(2)* **Commodatum**-ஒப்படைவு பெறுபவருக்கு இல வசக் கடனாகக் கொண்டு தரப்படும் பொருள்கள், *(3)* **Locatio Rei**-வாடகைக்காக ஒப்படைவு பெறுபவருக்குக் கடனாகத் தரப் படும் பொருள்கள், *(4)* **Vadium**-அடகு, *(5)* **Locatio Operis Faciendi**-கைம்மாறு பெறும் பொருட்டு ஒப்படைவு பெறுபவரால் ஓரிடத்திலிருந்து மறு இடத்திற்கு எடுத்துச் செல்ல அல்லது அவற்றை ஏதேனும் ஒன்று செய்ய வேண்டும் என்ற போக்குடன் கொண்டு தரப்படுகின்ற பொருள்கள், *(6)* **Mandatum**-கைம்மாறு ஏதுமின்றி மேற்சொன்ன காரியத்தைச் செய்வதற்காகக் கொண்டு தரப்படுகின்ற பொருள்கள்.

ஒப்படைவு ஒப்பந்தம் பற்றிய பொதுத் தத்துவங்களையும் சில தனித்தன்மை வாய்ந்த ஒப்படைவுகளான அடகும், தொலைந்த பொருள்கள் கண்டவர் பற்றியும் இ. ஒ. சட்டம் விளக்குகின்றது. மற்றவை தனிச் சட்டங்களினால் கட்டுப்படுத்தப் படுகின்றன. ஒப்படைவு ஒப்பந்தம் ஒன்றில் பொதுவாக மறு பயன், ஒப்படைவு செய்பவர் செலுத்தும் பணமாக இருக்கும். கடிகாரம் பழுது பார்த்தவருக்குப் பணம் தரப்படுகிறது. மறு பயன் ஒப்படைவு பெறுபவர் செலுத்தும் பணமாகவும் இருக்க லாம். சான்றாக: மரச்சாமான்கள் வாடகைக்கு விடும் ஒப்பந்தம். அத்தகைய மறுபயன் பொருளைத் திருப்ப ஒப்படைவு பெறுபவர் செய்கின்ற உறுதியுரையினைத் தாங்கி நிற்க வேண்டும் என்பது அவசியம் இல்லை. ஒப்படைவு பெறுபவரின் உறுதியுரைக்குப் பொருள்களைப் பிரிந்து, ஒப்படைவு செய்பவர் அடைகின்ற தொல்லையானது போதுமான மறுபயனாகும். இவ்விதத்தில் இல வசமான ஒப்படைவில் ஒப்படைவு பெறுபவர் தம் கடப்பாட்டி

லிருந்தும் ஒப்படைவுப் பொருள்களைத் திருப்பாமல் இருக்க இயலாது.

**ஒப்படைவு பெறுபவரின் கடமைகள் (Duties of Bailee)**

**(1) பொருள்களைக் கவனமாக பராமரித்தல் (To Take Care Of Goods)**

ஒப்படைவு பெறுவரின் தலையாய கடமை, ஒப்படைவுப் பொருள்களைக் கவனமாகப் பராமரித்து, ஒப்பந்த கட்டுவரம்பு களுக்கேற்ப பெறப்பட்ட நிலையிலோ மாறுபட்ட நிலையிலோ திருப்புதலாகும். பொருள்கள் ஒப்படைவு பெறுபவரின் உடமை வைப்பில் (Possession) இருக்கும்போது, அவரின் கவனக் குறை வினால் ஏற்படுகின்ற இழப்பு அல்லது பழுதடைதலுக்கு அவரே முழுப் பொறுப்பாவார்.

இங்கிலாந்துச் சட்டத்தில் மூன்று வகையான கவனமின்மை யும், மூன்று வகையான கவனப் பொறுப்பும் ஒப்படைவு பெறுபவ ரால் சூழ்நிலைகளுக் கேற்ப செயல்பட வேண்டும் என்று கூறப்பட் டுள்ளது. ஆனால் இந்தியச் சட்டத்தில் ஒரே வகையான கவனம் தான் குறிப்பிடப்படுகிறது. இலவசமாகவோ கைம்மாருகவோ ஒப்பந்தம் எப்படியிருப்பினும் ஒப்படைவு பெறுபவர் ஒரே நிலை யான, நியாயமான சராசரி அறிவுள்ள மனிதர் மேற்கொள்ளு கின்ற கவனப் பராமரிப்புடையவராக விளங்க வேண்டும் என்று இந்திய ஒப்பந்தச் சட்டம் வரைவுரைக்கின்றது.

பி. 151-ல் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட பொருள்களின் அளவுள்ள தன்மைத்தான, மதிப்புள்ள தன் பொருள்களை அத் தகைய சூழ் நிலைகளில் சராசரி அறிவுள்ள சாதாரண மனிதர் எந்த விதத்தில் அவற்றைக் கவனமாகப் பராமரிப்பாரோ, அதேபோன்று ஒப்படை பெற்ற பொருள்களை அவ்வளவினதாகக் கவனத்துடன் எல்லா ஒப்படைவுகளிலும் ஒப்படைவு பெறுபவர் கவனிக்க வேண்டும் என்று கூறப்படுகிறது (பி. 152).

"பி. 151-ல் விவரிக்கப்பட்ட அளவினதான கவனம் மேற் கொண்டிடின், தனி ஒப்பந்தம் ஏதும் இல்லாத நிலையில், ஒப் படைவு பெறுவர், ஒப்படைவுப் பொருளின் இழப்புக்கு, அழிவுக்கு அல்லது சிதைவுக்குப் பொறுப்பானவராக மாட்டார்" என்று கூறப்பட்டுள்ளது.

இரண்டு பிரிவுகளினாலும் இலவச ஒப்படைவு கைம்மாறு ஒப் படைவு இரண்டிலும் கவனத்தின் அளவு ஒன்றாகவே காணப்படும். ஒப்பந்தத்தில் வேறாகக் காணப்படாத வரையில் பொருள்களுக்குக் காப்பாக காப்பீடு அளிப்பவராக ஒப்படை பெறுபவர் இல்லை.

சான்றுகக் கைம்மாருக எதனையும் பெருத ஒப்படைவு பெறுபவர் ஒருவரிடம் வைர மோதிரம் ஒன்று அதன் உரிமையாளரால் ஒப் படைக்கப்படின், அதை அவர் இரும்புக் காப்புப் பெட்டியிலோ, வேறு ஏதேனும் பாதுகாப்பான இடத்திலோ வைத்துக் காப் பாற்ற வேண்டுமே தவிர அத்தகைய ஒப்படைவு இலவசமானது என்பதால் அவருடைய பயனற்ற சாமான்கள் போடப்பட்டுள்ள அறையில் அதனைப் போட்டுவைக்கக் கூடாது. அதே போன்று காப்பதன் பொருட்டு கொண்டுதரப்பட்ட பசுவினைக் கைம்மாறு கருதப்பட்ட ஒப்படைவு எனினும் காப்பான சூழ்நிலையிலுள்ள கொல்லைப்புறத்தில் வைத்திருந்தால் போதுமானது. அதனை வீட்டின் முன் கூடத்தில் வைத்திருக்க வேண்டும் என்று யாரும் எதிர்பார்க்க மாட்டார்கள். போதுமான நியாயமான கவனம் செலுத்திய பின்னரும் பொருள்கள் திருட்டினுல் அல்லது தீயினுல் அல்லது புயலினுல் அழிக்கப்பட்டிருப்பின், ஒப்படைவு பெறுப வரைக் குறை கூற இயலாது. ஒப்படைவு செய்பவர் இழப்பினைப் பொறுத்தாக வேண்டும்.

**(2) ஒப்படைவானவை மற்றப் பொருள்களுடன் கலக்கப்படாமல் பார்த் துக் கொள்ள வேண்டும்.**

இதற்கான விதிகள் பிரிவு 155 முதல் 157 வரையில் கூறப் பட்டு உள்ளன. (i) ஒப்படைவு செய்பவரின் இசைவுடன் ஒப் படைவு பெறுபவர் அன்னுரின் பொருள்களைத் தன் சொந்தப் பொருள்களுடன் கலப்பின், அத்தகைய கலப்பில் அவரவர்களின் பங்குகளுக்கேற்ப விகிதத்தில் உரிமை கொள்வர் (பி. 155).

(ii) ஒப்படைவு செய்பவரின் இசைவின்றி ஒப்படைவு பெறு பவர் அன்னுரின் பொருள்களைத் தன் சொந்தப் பொருள்களுடன் கலப்பின். அக் கலப்பிலிருந்து பிரித்தெடுத்து அல்லது பங்கிட்டுப் பொருள்களின் உரிமை அவரவர்களிடத்திலிருக்கும். ஆனுல் ஒப் படைவு பெறுபவர் அவ்விதக் கலப்பினின்றும். பிரித்தெடுக்கவோ பங்கீடு செய்து கொள்ளவோ ஆகும் செலவினம் முழுமையும் அத் தகைய கலப்பினுல் ஏற்படும் இழப்பையும் ஒப்படைவு பெறுபவரே ஏற்க வேண்டும் (பி. 156).

(iii) ஒப்படைவு செய்பவரின் இசைவின்றி ஒப்படைவு பெறு பவர் அன்னுரின் பொருள்களைத் தன் சொந்தப் பொருள்களுடன் பிரித்தெடுத்து, திருப்பி அளிக்க இயலாத முறையில் கலந்துவிடின் எத்தகைய பொருள்கள் இழப்பினையும் ஒப்படைவு செய்பவருக்கு ஒப்படைவு பெறுபவர் நிறையீடு செய்ய வேண்டும் (பி. 157).

ஒப்படைவுப் பொருள்களை ஒப்படை பெறுபவர் அதிகார மற்ற உபயோகத்திற்குப் பயன்படுத்தக் கூடாது. ஒப்படைவு ஒப்பந்த கட்டுவரம்புகளுக்குட்பட்ட இன்றியமையாதவற்றிற்குத் தவிர ஒப்படைவுப் பொருள்களை அதிகப்படியாக ஒப்படைவு பெறுபவர் உபயோகிக்கக் கூடாது. அதிகாரமளிக்கப்படாத உபயோகத்திற்கு அத்தகைய பொருள்களைப் பயன்படுத்துகின்ற பொழுது, நியாயமான கவனத்துடன் இருந்திருப்பினும் ஏற்பட்ட இழப்பு அல்லது பழுதடைதல் முதலியவற்றிற்கு ஒப்படைவு பெறுபவர் பொறுப்பாகிறார். ஏனெனில் அதிகார வரம்பிகந்த உபயோகம் செய்கின்ற பொழுது அவர் காப்பீடு அளிப்பவர் போன்று பொறுப்பு நிலைக்குள்ளாகிறார். மேலும் வரம்பிகந்த உபயோகத்திற்குப் பொருள்கள் பயன்படுத்தப்பட்ட போது ஒப்பந்தத்தினை ஒப்படைவு செய்பவர் முடித்துக் கொள்ளலாம். பி. 153-ல் "ஒப்படைவு ஒப்பந்தத்தின்" கட்டுவரம்புகளுக்கு எதிரிடையாக ஒப்படைவு பெறுபவர் ஒப்படைவுப் பொருள்களைப் பொறுத்து எத்தகைய செயல் செய்திடினும் ஒப்படைவு செய்பவரின் விருப்பத்திற்கிணங்க ஒப்படைவு ஒப்பந்தத்திறம் தவிர்தகு ஒப்பந்தமாகிறது என்று கூறப்படுகிறது.

*(3)* ஒப்படைவு செய்யப்பட்ட பொருள்களை ஒப்படைவு பெறுபவர் **திருப்புதல் வேண்டும்** : ஒப்பந்தத்தின் நோக்கம் நிறைவேற்றப்பட்ட பின்னர் ஒப்படைவு பெறுபவர் ஒப்படைவுப் பொருள்களை ஒப்படைவு செய்தவருக்குத் திருப்பிவிட வேண்டும். அவ்விதம் செய்யாவிடில் கால தாமதத்தினால் ஏற்படுகின்ற இழப்புகளுக்கு ஒப்படைவு பெறுபவர் கடப்பாட்டிற்குள்ளாவர். மேலும் அத்தகைய காலத்தில் காப்பீடு அளிப்பவர் போன்றே ஒப்படைவு பெறுபவரும் கடப்பாட்டிற்குள்ளாவார், பிரிவு 160-ல்,

"ஒப்படைவுக்கான நோக்கம் நிறைவேறிய உடனே ஒப்படைவுக்கான காலக்கெடு தீர்ந்த உடனே உரிமையாளர் கோராமலே ஒப்படைவுப் பொருள்களை ஒப்படைவு செய்தவரின் உத்தரவிற்கிணங்க திருப்பிவிட வேண்டியது ஒப்படைவு பெறுபவரின் கடமையாகும்" என்று கூறப்பட்டுள்ளது.

ஒப்படைவு பெறுபவரின் வைப்புக்குள்ள அவரின் பயனுக்காக ஒப்படைவு செய்யப்பட்ட பொருளை, (சான்றாக வாடகை ஒப்பந்தம்) ஒப்படைவு செய்தவர் குறிப்பிட்ட கால அளவுக்கு முன்னதாகக் கோருவதற்கு முடியாது. ஆனால் இலவச ஒப்படைவுகளில், ஒப்படைவு செய்யப்பட்ட நோக்கம் நிறைவேறும் முன்பாகவும் ஒப்படைவு செய்பவர் ஒப்படைவுப் பொருளைத் திருப்பும்படிக் கேட்கலாம். ஒப்படைவு செய்தவர் பொருளைத் திருப்பக்

கட்டாயப்படுத்தும்போது அத்தகைய திருப்புதலினுல் கடனுல் அடைந்த நன்மையை விட இழப்பு அதிகமானுல் அத்தகைய அடைந்த பயனை மீறிய இழப்பினுக்குக் கடன்வாங்கியவருக்கு, ஒப்படைவு செய்பவர் ஈட்டுறுதி செய்தல் வேண்டும் (பி. 159).

ஒப்படைவு செய்பவர்கள் பலராக இருக்கின்ற பொழுது, ஒப்பந்தத்திற்கு மாருக இல்லாதபோது அனைவரின் இசைவின்றி, யாரேனும் ஒரு கூட்டு உரிமையாளரின் குறிப்பின்படி, பொருள் களை மீண்டும் கொண்டுதரின், ஒப்படைவு பெறுபவர் தன் கடமையினை நிறைவேற்றுகிருர் (பி. 165). ஒப்பந்தத்திற்கு மாருக இல்லாதபோது. ஒப்படைவுப் பொருள்களினின்றும் விளைந்த உபரியினை அல்லது பலனை, ஒப்படைவு பெறுபவர், ஒப்படைவு செய்தவரிடமோ அவரின் குறிப்புகளுக்கிணங்கவோ அவற்றை ஒப்படைக்க வேண்டும் (பி.· 163). ஒப்படைவு பெறு பவரின் தவற்றினுல், பொருள்களை உரிய காலத்தில் திருப்பிக் கொடுக்காவிடினும், கொண்டுதராவிடினும் அல்லது ஒப்படைக் காவிடினும், அந்தக் காலத்திலிருந்து எத்தகைய பொருள்களின் இழப்பு, அழிவு அல்லது சிதைவுக்கும் ஒப்படைவு பெறுபவர் பொறுப்பாளியாகிருர் (பி. 161).

### ஒப்படைவு செய்பவரின் கடமைகள்

#### 1. பொருள்களில் உள்ள குறைகளைத் தெரியப்படுத்துதல்

இலவச ஒப்படைவு ஒன்றில் தனக்குத் தெரிந்த அனைத்துக் குறைகள் பற்றியும் ஒப்படை செய்பவர் தெரியபடுத்த வேண்டும். அவ்விதம் செய்யாவிடில் அதனுல் உண்டாகும் இழப்புக்கு அவரே கடப்பாடுடையவர் ஆவார். கைம்மாறு கருதப்பட்ட ஒப்படைவு ஒன்றில், ஒப்படைவு செய்த வரும் அறியாத குறைகள் இருப்பின், அத்தகைய பொருள்கள் உபயோகத்திலும் அனுபவிக்கின்ற போதும் ஏற்படுகின்ற இழப்பீடுகளுக்கு ஒப்படைவு செய்பவரே பொறுப்பாகிருர் (பி. 150).

#### 2. ஒப்படைவு பெறுபவரின் செலவினங்களைத் திரும்பச் செலுத் துதல்

ஒப்பந்தத்தில் மாருகக் குறிப்பிடாதவரையில், இலவச ஒப் படைவில் சாதாரண செலவினங்களை ஒப்படைவு பெறுபவரும், அசாதாரண செலவினங்களை ஒப்படைவு செய்பவரும் ஏற்க வேண்டும். கைம்மாறு கருதப்பட்ட ஒப்படைவில் ஒப்படைவு பெறுபவர் ஒப்படைவுக்காகச் செய்த சாதாரண செலவினங் களைக் கூட ஒப்படைவு செய்பவர் ஏற்க வேண்டும் (பி. 158).

### (3) ஒப்படைவு பெறுபவருக்குப் பழுதுள்ள உரிமை மூலத்தினுல் (Defective Title) உண்டாகும் இழப்புகளுக்கான பொறுப்பேற்றல்

164, 166, 167 பிரிவுகள் இதற்கான விதிகளை வகுத்துள்ளன. (1) பழுதுள்ள உரிமை மூலத்தினுல் ஒப்படைவு பெறுபவருக்கு ஏற்படும் இழப்புகளை, ஒப்படைவு செய்பவர் ஏற்ருக வேண்டும் (பி. 164).

(2) ஒப்படைவு செய்பவரின் உத்தரவிற்கிணங்க, ஒப்படைவுப் பொருள்களை ஒப்படைவு பெறுபவர் நன்னம்பிக்கையில் திருப்பிக் கொண்டுதரின், அப்பொருள்களின் உண்மையான உரிமையாளர்களுக்கு, ஒப்படைவு பெறுபவர் எந்த விதத்திலும் பொறுப்பாக மாட்டார் (பி. 166).

(3) உண்மையான உரிமையாளர், ஒப்படைவு செய்தவருக்குப் பொருள்களை ஒப்படைவு பெற்றவர் கொண்டு தருவதைத் தடுக்க நீதி மன்றத்தின் ஆணையினைப் பெறலாம் (பி. 167).

### ஒப்படைவு பெறுபவரின் பற்றுரிமை (Bailee's Lien)

மற்றவரின் பொருள்களைத் தன்னிடத்தே வைத்துள்ள நபரொருவர், தனக்கு அவரிடமிருந்து வர வேண்டிய கடனை வரப் பற்றும் வரையில் அந்தப் பொருள்களைத் தன்னிடத்தே வைத்துக் கொள்ளப் பெறுகின்ற உரிமையினைப் 'பற்றுரிமை' (Lien) என்பர். இது சில நேரங்களில், "உடைமைப் பற்றுரிமை" என்றும் கூறப்படுகிறது. ஒருவர் தனக்கு வர வேண்டிய கடனைக் கடன் பட்டவரின் சொத்தின் வழி வரப்பற்றும் உரிமை, பற்றுரிமையாகும்.

### உடைமைப் பற்றுரிமை (Possessory Lien)

இது இருவகைத்தாக உள்ளது. அவையாவன: (1) தனி அல்லது குறிப்பிட்ட பற்றுரிமை (2) பொதுப் பற்றுரிமை.

(1) தன்னிடமுள்ள அடுத்தவரின் பொருள்களுக்காக ஏற்பட்ட கடன் அல்லது கடப்பாடு முதலியவைகளுக்காகஅப் பொருள்களை நிறுத்தி வைத்துக் கொள்ளும் உரிமையினைத் தனிப் பற்றுரிமை (Special Lien) என்றும் குறிப்பிட்ட பற்றுரிமை (Particular Lien) என்றும் சொல்லுவர். சான்ருக: அதன் மீது நடந்த வேலை அல்லது அவற்றின் பாதுகாப்புக்காகச் செலவழிக்கப்பட்ட செலவினங்கள் இத்தகையவை பற்றுரிமையின் பாற்படும். (2) தன்னிடமுள்ள அடுத்தவரின் பொருள்களுக்காகச் செலவழிக்கப்பட்டு உண்டான கடன் அல்லது கடப்பாட்டிற்காக மட்டுமின்றிப் பொதுவாகப் பொருள்களின் உரிமையாளருக்கும், பொருளை

நிறுத்தி வைத்துள்ள நபருக்குமிடையே உள்ள கணக்கு பாக்கிக் காகவும் அவற்றை நிறுத்தி வைத்துக் கொள்ளும் உரிமையினைப் பொதுப் பற்றுரிமை (General Lien) என்பர்.

**குறிப்பிட்ட பற்றுரிமை கொண்டவர்கள்**

(1) ஒப்படைவு பெறுபவர்கள். சான்றாக சரக்கேற்றிகள் (Carriers), கைவேலைக்காரர்கள் (Mechanics), பழுது பார்ப்போர் (Repairers), விடுதியாளர்கள் (Inn Keepers);

(2) விற்கப்பட்ட சரக்குகளின் விலை செலுத்தப்படாத நிலையில், அச் சரக்குகள் விற்றவரின் உடமையிலிருந்தால் (Un Paid Seller Of Goods).

(3) முதல்வருக் கெதிராகத் தங்களின் அனைத்து பாத்தியதைகளையும் கொண்ட முகவர்கள் (Agents)

**பொதுப்பற்றுரிமை கொண்டவர்கள்**

வங்கியர்கள் (Bankers) நியோகிகள் (Factors), துறையாளர்கள் (Whar Fingers).

உயர்நீதி மன்ற வழக்கறிஞர்கள் (Attorneys of High Court) பத்திரத்தரகர்கள் (Policy Brokers). பிரிவுகள் 170, 171 ஆகிய இரண்டும் இவற்றைப் பற்றி விளக்குகின்றன.

மாறாக ஒப்பந்தம் கொள்ளாத நிலையில், ஒப்படைவின் எண்ணத்திற் கிணங்க ஒப்படைவு பெறுபவர், ஒப்படைவுப் பொருள்களைப் பொறுத்து உழைப்பு அல்லது திறமை கொண்ட எவ்வகையான சேவை செய்திருப்பினும், அன்னார் அவற்றின் பொருட்டு செய்த சேவைக்களுக்கென சம்பள பாக்கியினைப் பெறுகின்ற வரையில் அப் பொருள்களைத் தக்க வைத்துக் கொள்ளும் உரிமை உடையவராகிறார் (பி. 170).

மாறாக ஒப்பந்தம் கொள்ளாத வரையில், வங்கியர்கள், நியோகிகள், துறையாளர்கள், உயர் நீதி மன்ற வழக்கறிஞர்கள், பத்திரத் தரகர்கள் தங்களிடமுள்ள ஒப்படைவுப் பொருள்களைப் பொதுவான கணக்கு பாக்கிக்காக பிணையமாகத் தக்க வைத்துக் கொள்ளலாம்; ஆனால் அவ்விதம் செய்ய எழுத்து மூல ஒப்பந்தம் ஒன்று இருந்தாலொழிய, வேறு யாதொரு நபருக்கும், தன்னிடமுள்ள ஒப்படைவுப் பொருள்களைப் பொதுவான கணக்கு பாக்கிக்காக நிறுத்திவைத்துக் கொள்ள உரிமை இல்லை (பி. 171).

171-வது பிரிவின்படி அதில் குறிப்பிட்டுள்ளவரைத் தவிர வேறு யாரும் பொதுப் பற்றுரிமை கோர முடியாது. ஆயினும் அதற்கான எழுத்து மூல ஒப்பந்தம் ஒன்றினுல் அதனை அவர்கள் பெற முடியும்.

**மூன்ரும் நபர்களுக்கெதிராக ஒப்படைவு செய்பவரின், ஒப்படைவு பெறுவரின் உரிமைகள்**

Inre Wink Field (1902) P. 42 — வழக்கில் கண்டுள்ள இங்கிலாந்துச் சட்டத்தின் விளக்கம் பிரிவு 180, 181-ல் கொடுக்கப் பட்டுள்ளது.

(1) ஒப்படை பெறுபவரால் செய்யப்படுகின்ற ஒப்படைவுப் பொருள்களின் உபயோகம் அல்லது உடைமையினை மூன்ரும் நபர் ஒருவர் தவருக இழக்கச் செய்யினும் அல்லது அவற்றிற்குத் தீங்கு விளைவிப்பினும், ஒப்படைவுப் பொருளாக இல்லாமல் அது உரிமை யாளரிடமிருந்து அந்நிலையில் அவர் என்ன தீர்வழிகள் கண்டிருப் பாரோ, அந்நிலையில் ஒப்படைவுப் பெறுபவர் இருந்து தீர்வழிகள் காண உரிமைகள் அடைகின்ருர். மேலும் ஒப்படைவு செய் பவரோ ஒப்படைவு பெறுபவரோ மூன்ரும் நபரின்மீது, இழப் பினை அல்லது தீங்கினை ஏற்படுத்தியமைக்காக உரிமையியல் வழக்குத் தொடரலாம் (பி. 180).

(2) அத்தகைய உரிமை இயல் வழக்குகளில் பெற்ற மாற்றீடு அல்லது நிறையீடுகளை ஒப்படைவு செய்பவர், ஒப்படைவு பெறு பவர், இருவரிடையேயும் அவர்களின் நலன்களுக்குகந்தவகையில் தீர்க்கப்படும் (பி. 181).

**தொலைந்த பொருள்களைக் கண்டெடுத்தவர் (Finder of Lost Goods)**

இ. ஒ. சட்டத்தின் 71-வது பிரிவில் கூறப்பட்ட நிகழ்வுசார் ஒப்பந்தத்தில் ஒப்படைவு பெறுபவர் நிலையில், தொலைந்த பொருளைக் கண்டெடுத்தவர், வைத்து எண்ணப்படுகின்ருர் என்று கண்டுள்ளோம். பிரிவுகள் 168, 169-ல் அன்னுரின் உரிமைகள் பற்றி விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

(1) தொலைந்த பொருளைக் கண்டெடுத்தவர், பொருளைப் பத்திரப்படுத்தி வைக்கவும் உரிமையாளரைக் கண்டுபிடிக்கவும் தன்னிச்சையாக மேற்கொண்ட தொல்லை, செலவினம் முதலான வற்றைத் திரும்பப் பெறமுடியாது.

(2) ஆயினும் அவர், அதன் பொருட்டு, பொருள்களுக் கெதிராகக் குறிப்பிட்ட பற்றுரிமையினை உபயோகிக்கலாம்.

(3) அத்தகைய பொருள் திரும்புதலுக்கான கைம்மாறு ஒன்றினை முனைவு (Offer) செய்யப்பட்டிருப்பின், அவர் அதற்காக வழக்கிடல் முடியும்.

(4) கண்டெடுத்த பொருள் விற்பனைக்குரிய ஒன்றுயினும், நியாயமான தேடுதலுக்குப் பின்னரும் உரிமையாளரைக் கண்டு பிடிக்கமுடியாத போதும் அல்லது உரிமையாளர், கண்டெடுத்த வரின் சட்டநெறியான செலவினங்களைச் செலுத்த மறுக்கின்ற போதும், கண்டெடுத்தவர், (அ) அவை அழிய இருக்கின்ற போதும் அல்லது அது தனது பெரும்பகுதியான மதிப்பை இழக் கின்ற போதும் அல்லது (ஆ) கண்டெடுத்தவரின் சட்டநெறியான செலவினங்கள் அம் மதிப்பில் 3-ல் 2 பங்குமான நிலையில் இருப் பின் அவற்றை விற்கலாம்.

**அடகு (Pawn or Pledge)**

இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 173-வது பிரிவில் அடகுக்கான பின்வரும் வரைவுரை காணப்படுகிறது.

''கடனுக்கு அல்லது வாக்குறுதி நிறைவேற்றத்திற்குப் பிணைய மாகப் பொருளை ஒப்படைவு செய்தல்; ஒப்படைப்பவரை அடகு வைப்பவர் என்றும் ஒப்படைவு பெறுபவரை அடகு பெறுபவர் என்றும் சொல்லலாம்.''

அடகு வைக்கப்பட்ட பொருள்கள் தொடர்ந்து அடகு வைப் பவரின் (Pawner) பொருள்களாக இருக்கும். ஆனால் அவற்றின் உடமை உரிமை அடகு பெறுபவரிடம் (Pawnee) இருக்கும். இந்த வேறுபாடே பொருள்களின் அடைமானத்திற்கும் (Mort-gage) இதற்கும் உள்ளதாகும். அடைமானத்கில் பொருள்களின் சொத்துரிமை அடைமானம் பெறுபவரிடமும், உடைமை உரிமை அடைமானம் வைப்பரிடமும் உள்ளது. அடகு ஒன்றினை பற்று ரிமையினின்றும் வேறுபடுத்திக் காணலாம். அடகினில், அடகு பெறுபவர் சில கட்டுவரம்புகளுக்குட்பட்டு பொருள்களை விற்க முடியும். ஆனுல் பற்றுரிமையிலோ, விற்பதற்கு எந்த விதமான உரிமையும் கிடையாது; பொருள்களைத் தக்க வைத்துக் கொள்ளும் உரிமைதான் உண்டு.

**அடகுபெறுபவரின் உரிமைகள் :** இதற்கான விதிகள் பிரிவு 173 முதல் 176 வரை உள்ளன :

1. கடன் செலுத்தலுக்கு மட்டுமல்லாமல், வட்டிப் பொருள்களை வைத்திருந்ததற்கான அல்லது பாதுகாத்திருந்த தற்காக ஏற்பட்ட செலவினங்களுக்காகவும் அடகு பெறுபவர் பொருள்களைத் தக்க வைத்துக் கொள்ளலாம் (பி. 173).

2. மாறான ஒப்பந்தம் கொள்ளாத வரையில், அடகு பெறுபவர், அடகுக்கான கடன்கள் தவிர மற்றைய கடன்களுக்காகப் பொருள்களைத் தக்க வைத்துக் கொள்ளக்கூடாது. ஆனால் அடகுக்குப் பின்னர் மேற்கொள்ளும் கடன்களில் அத்தகைய ஒப்பந்தம் ஒன்றினைத் துணிபு (Presume) (பி. 174) கொள்ளல் ஆகும்.

3. அடகுப் பொருள்களினைப் பாதுகாத்து வைத்துக் கொள்வதற்காகச் செலவழிக்கப்பட்ட அனைத்து அசாதாரண செலவினங்களையும் பெறத் தகுதி அடைகின்றார் (பி. 175).

4. கடன் செலுத்தலில் அடகுவைத்தவர் தவறினால், அடகு பெறுபவர் :

(அ) அடகுப் பொருள்களைத் துணைப் பிணையமாகக் கொண்டு கடனுக்காக உரிமை இயல் வழக்குத் தொடரமுடியும், அல்லது

(ஆ) அடகு வைத்தவருக்கு நியாயமான அறிவிப்பு செய்த பின்னர் அடகுப் பொருளினை அவரே விற்கலாம். அத்தகைய விற்பனையால் கடனைவிட குறைந்த பணமே கிடைத்திருப்பின், அடகு வைத்தவர் மிகுதிக்குக் கடப்பாடுடையவராகிறார். அத்தகைய பணம் கடனுக்கதிகமாக இருப்பின், அடகு பெறுபவர் கூடுதலானவற்றை அடகு வைத்தவர்க்குச் செலுத்த வேண்டும் (பி. 176).

**அடகு வைத்தவரின் மீட்கும் உரிமைகள்**

அடகு வைத்தவரின், ஒப்படைவுப் பொருள்களிலுள்ள உரிமை பாத்தியதையானது தனியான முறையில் பாதுகாக்கப் படுகிறது. எனவே அடகு மேற்கொண்ட கடன் செலுத்துதலுக்கான காலக்கெடு அல்லது உறுதியுரை நிறைவேற்றம் செய்கின்ற காலக்கெடு கடந்திடினும், அடகு வைத்தவர் தவறு செய்திடினும் பொருள்கள் உள்ளபடியாக விற்பதற்கு முன்னர், அடகு பொருள்களைப் பிற்காலத்தில் மீட்டுக் கொள்ள அனுமதிக்கப் படுகிறார். ஆனால் அடகு வைத்தவர் மீட்பதற்கு முன்பாக, அவரின் தவறுதலினால் ஏற்பட்ட செலவினங்களைச் செலுத்த வேண்டும் (பி. 177).

**உரிமையாளரல்லாதவர்களால் அடகுவைக்கப்படும் பொருள்கள்**

(Pledge of Goods by Non Owners) பொருள்களின் உண்மை உரிமையாளர்களே செல்லுநிலையான அடகு வைக்

கலாம். இதனை **"Nemodat Quod Non Habet"** என்ற கொள்கை மொழி வெளியிடுகிறது. வைத்திருப்பவரை விட வேறு யாரும் சிறந்த உரிமை மூலத்தை மாற்றளிக்க முடியாது என்பதே இதன் பொருளாகும். இந்த விதியானது விற்பனை, அடகு ஒப்பந்தங்களுக்குப் பொருந்துகிறது. இவ்விதியே இல்லையெனின், உரிமையாளரின் பொருள்களுக்குக் காப்பே இல்லை எனலாம். அடகு தரகர்கள் திருடர்களுடனும், சுரண்டல்காரர்களுடனும் சேர்ந்து கொள்ள துடிப்புக் கொள்வர். இந்த விதிக்கும் சில விலக்குகள் உண்டு. இது பற்றி பிரிவுகள் 178, 178 A-வில் காணலாம். அவற்றில் உண்மையான உரிமையாளரல்லாத நபரால் பொருள்கள் அடகு வைக்கப்படினும் செல்லுநிலையாகும் என்றும் உரிமையாளர்களைக் கட்டுபடுத்தக் கூடியது என்றும் கீழ்க்காண்பவைகளில் உள்ளன என்று விளக்கப்பட்டுள்ளது.

(1) வாணிகவியல் முகவரால் வைக்கப்படுகின்ற அடகு, பொருள்களின் உரிமையாளரால் அதிகாரமளிக்கப் படாதபோதும் கீழ்க்கண்டவைகள் பூர்த்தியானல் ஒரு வாணிகவியல் முகவரால் வைக்கப்படும் அடகு செல்லுநிலையதாகும் :

(அ) பொருள்களை வைத்திருப்பின் அல்லது பொருள்களுக்கான உரிமை மூல ஆவணம் (கப்பல் சரக்குப் பட்டியல் முதலானவை) வைத்திருப்பின் ;

(ஆ) அத்தகைய வைத்திருத்தலானது உரிமையாளரின் இசைவு கொண்டதாயின் ;

(இ) அடகு வைக்கின்றபோது அந்த வாணிகவியல் முகவர், அசாதாரண வியாபார வழியில் நடப்பின் ;

(ஈ) அடகு பெறுபவர் நன்னம்பிக்கையில் நடப்பின் ;

(உ) அடகு வைப்பரின் (வாணிகவியல் முகவர்) உரிமை மூலம் பழுதானது என்பது பற்றி அடகு பெறுபவருக்கு அறிவிப்பு இல்லாதிருப்பின் (பி. 178).

(2) இ. ஒ. சட்டத்தில் 19, 19A பிரிவின் கீழ்க் கண்டுள்ள, வலுக்கட்டாயம், மோசடி, தகாநிலை வற்புறுத்தம் அல்லது திரித்துக்காட்டல்களினல் தவிர்தகு நிலையான ஒப்பந்தத்தின் அடிப்படையில் பொருள்களின் உடைமை உரிமையினை அடைந்த நபரொருவர் கீழ்க்காணும் தேவைகளைப் பூர்த்தி செய்திடின், செல்லு நிலையாக்கும் அடகு வைக்கலாம்.

(அ) அடகு வைக்கும்போது பொருள்களின் உடைமை உரிமையினை அடகு வைப்பவர் அடைந்த ஒப்பந்தத்தினை முறிவடையச் செய்யாதிருப்பின்;

(ஆ) அடகு பெறுபவர் நன்னம்பிக்கையில் செயல் பட்டிருப்பின்;

(இ) அடகு வைப்பவரின் உரிமை மூலம் பழுதானது என்பது பற்றி அடகு பெறுபவருக்கு அறிவிப்பு இல்லாதிருப்பின் பொருள்களில் குறிப்பிட்ட அளவே அக்கறை (Interest) கொண்ட நபரொருவர் அவ்வளவினதாகச் செல்லு நிலைத்தான அடகு செய்ய முடியும் (பி. 179).

# 3. முகவரியம்

## (Agency)

வாணிகம், தொழில் ஆகியவை வளர்ச்சியடைந்து வருகின்ற இன்றையவுலகில் தனி மனிதனுகவே எல்லாச் செயல்களிலும் ஈடுபட்டு அவற்றை நிறைவேற்ற முடிவதில்லை. அதற்காக மனி தன் மற்ருெரு நபரது துணையை நாடுகிருன், அவரிடம் அச் செயல்களில் சிலவற்றை ஒப்படைத்து நிறைவேற்றச் செய்கிருன். அந்த நபர்தான் இங்கு முகவர் (Agent) என்று அழைக்கப்படுகிருர். எந்த ஒப்பந்தத்தின் மூலம், அவர் நியமிக்கப்படுகிருரோ அந்த ஒப்பந்தத்தை 'முகவரியம்' (Agency) என்று குறிப்பிடலாம். இது போன்றே ஒப்பந்தங்கள் பெரும்பாலும், பல தரப்பட்ட தொழில் களில் ஈடுபாடுடைய வணிகர் பெருமக்களிடையே நடைமுறை யில் இருந்துவருகின்றன. உள் நாட்டிலும் வெளிநாடுகளுடனும் அறிந்தவர்களுடனும் அறியாதவர்களுடனும் வணிகத் தொடர்பு கொள்ள இதுபோன்ற ஒப்பந்தங்கள் பெருந்துணையாக இருக்கின் றன. முகவரியச் சட்டமென்பது "பிறர்வழிச் செய்தலும் தானே செய்தலாம்" (Qui Facit Per Aluim Facit Per Se) என்ற சூத்தி ரத்தினை அடிப்படையாகக் கொண்டது. அஃதாவது பிறர்வழி ஒன்றைச் செய்பவன் தானே அதைச் செய்பவனுகக் கருதப்படு கிருன் என்பதாகும். இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் பத்தாவது அத்தியாயம் (182 முதல் 238 வரையுள்ள பிரிவுகள்) இந்த முக வரியச் சட்டத்தைப் பற்றிய விவரங்களைக் கொண்டுள்ளது.

வரைவுரை : மூன்றும் நபருடன் தான் சட்டத் தொடர்பு (Legal Relation) கொள்வதற்கென ஒருவர் மற்ருெருவரை அமர்த்துதலை முகவரிய ஒப்பந்தம் என்று ஆங்கிலச் சட்டம் கூறு கிறது. இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 182-வது பிரிவின்படி, "முகவர்" மற்ருெருவருக்காகச் செயலாற்றுவதற்கென் அமர்த்தப் படுபவர்; அல்லது மூன்றும் நபர்களுடனுள்ள ஈடுபாடுகளில் (Dealings) மற்ருெருவர் சார்பாக நின்று செயல்படுபவர்.

யாருக்காக அல்லது யாரைச் சார்பாகக் கொண்டு செயலாற்றப் படுகிறதோ அவர் 'முதலர்' அல்லது 'முதல்வர்' (Principal) என்ற வாறு வரையறுக்கப்பட்டுள்ளன. சுருங்கக் கூறுமிடத்து, தம் சார்பாக ஒன்றைச் செய்வதற்கென்று இன்னொருவருக்கு அதி காரம் அளிப்பவரை 'முதலர்' என்றும் அந்த அதிகாரத்தைப் பெற்றவரை முகவர் என்றும் கொள்ளலாம்.

மேலே கூறப்பட்ட வரைவுரைகளிலிருந்து, ஒருவருக்காக மற்றொருவர் செயல்படும் பிரதிநிதித்துவக் கொள்கையை அடிப் படையாகக் கொண்டதே முகவரியச் சட்டம் என்பதும் முகவர், மூன்றும் நபர்களையும் முதலரையும் பிணைக்கும் ஒரு தொடர்ச்சிச் சங்கிலி (Connecting Link) என்பதும் தெளிவாகப் புலனாகும்.

**முகவர், பணியாளர் (Servant) சுதந்திர ஒப்பந்தப் பணியர் (Independant Contractor)**

சட்டத்தில் முகவருக்களிக்கப்பட்டுள்ள தனி இடம், முக வருக்கும் முதலருக்கு மிடையே அமைந்த உறவு-இவற்றை விளக்கமாக அறிந்து கொள்வதற்கு முகவர் செயல் படுவதை யொத்த மற்றுள்ள பணிகளில் ஈடுபடும் பணியாளர், சுதந்திர ஒப்பந்தப் பணியர் ஆகியோரின் இயல்புகளையும் தனிச்சிறப்பு களையும் அவர்களுக்கும் அவர்தம் தலைவர்களுக்கு மிடையே அமைந்த உறவு முறைகளையும் முகவர் அவர்களினின்றும் எந்த அளவுக்கு வேறுபட்டு நிற்கிறார் என்பதையும் இங்கு ஓரளவுக்கு அறிந்து கொள்ளுதல் முறையாகும்.

ஒருவர் (பணித்தலைவர்) (Master) தம் பணியைப் புரிவ தற்கு மற்றொருவரை (பணியாளரை) பணிபுரியும் வகையில் தம் மேற்பார்வைக்கும் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டுப் பணியாற்று தல் வேண்மெனும் கட்டுவரம்புடன் பணிக்கும்பொழுது பணித் தலைவர்—பணியாளர் என்னும் தொடர்பு அவர்களுக்கிடையே ஏற்படுகிறது.

முதலருக்கு, "எந்தெந்த"ப் பணிகளை முகவர் செய்திடல் வேண்டும் என்று பணித்திடும் உரிமையுண்டு. ஆனால் பணித் தலைவர் தன் பணியாளரிடம் எந்தெந்தப் பணிகள் செய்திடல் வேண்டும் என்பதோடு அப்பணிகள் எவ்வாறு செயற்படுத்தப் பட வேண்டும் என்பது குறித்தும் கட்டுவரம்புடன் பணிக்கின்ற உரிமையுண்டு. இதையொத்த வேறுபாடு பணியாளருக்கும் சுதந்திர ஒப்பந்தப் பணியாளருக்கும் இடையேயும் காணலாம்.

சுதந்திரமாகக் தொழில் நடத்தி மற்றவர்களுக்காகக் குறித்த வேலைகளைச் செய்துதருபவர் சுதந்திர ஒப்பந்தப் பணியர். இவர் மற்றவர் குறித்த வேலைகளைச் செய்யும் வகையில் மற்றவரின் கட்டுப்பாட்டுக்கு உட்படாதவர். தன் சொந்த வழிமுறைகளையும் பொருட்களையும் பயன்படுத்தி மேற்கொண்டுள்ள வேலைகளைக் குறித்தபடிச் செய்துதருபவர். பணியாளரோ, தம் பணித்தலைவர் கட்டுப்பாட்டுக்கும் மேற்பார்வைக்கும் உட்பட்டே இடப்பட்ட வேலைகளைச் செய்து முடித்தல் வேண்டும். ஆனால் முகவர், முதலரின் சட்டத்திற் குகந்த கட்டுவரம்புகளுக்கு இணங்கியே தான்பெற்ற அதிகாரத்தைச் செயல்படுத்தக் கடமைப்பட்டிருந் தாலும் முதலரின் மேற்பார்வைக்கோ நேரடியான கட்டுப் பாட்டிற்கோ உட்பட்டவரில்லை. 'முகவர்' என்ற முறையில் ஒருவரைப் பணியாளர் என்று கொள்ளமுடியாது. அதே நேரத்தில் ஒரு பணியாளர் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள பொறுப்புக் களையும் செல்வாக்கை (Position)யும் ஒட்டி பணித்தலைவரின் உட்கிடை முகவரா (Implied Agent) கலாம். Lakshmi Narayan Ram Gopal & Sons Ltd *vs*. The Govt. of Hyderabad AIR 1954 S. C. 364. (இதற்காகவே முகவர் ஒரு மேம்பட்ட பணி யாளர் (Superior Servant) என்று அழைக்கப் படுகிறார்.

**முகவரிய ஒப்பந்தம் (Contract of Agency)**

ஒப்பந்தத்தின் எல்லாத் தன்மைகளையும் தன்னுடன் கொண்ட தாக முகவரிய ஒப்பந்தம் அமைந்திருப்பதோடு, தனக்கே உரிய சில தனித்தன்மைகளையும் உள்ளடக்கி நிற்கிறது. முகவர் அமர்த் தப்படுவதன் முக்கிய குறிக்கோள், முதலவருக்கும் மூன்றும் நபர் களுக்கு மிடையே சட்டத் தொடர்பை ஏற்படுத்துவதற்காதலால் முதலில் முதலர் ஒப்பந்தம் செய்து கொள்வதற்கான தகவுடைமை (Capacity)-ப் பெற்றிருத்தல் வேண்டும். இதனை 183-வது பிரிவில் கீழ்க்காணுமாறு குறிப்பிடப் பட்டுள்ளது.

"சட்டப்படி உரிமை வயது எய்தியுள்ள ஒருவர் புத்தி சுவா தீனம் (Sound Mind) உடையவராயுமிருப்பின் அவர் ஒரு முக வரை அமர்த்தலாம்" 184-வது பிரிவின்படி "எந்த ஒரு நபரும் முதலருக்கும் மூன்றும் நபருக்கு மிடையே முகவர் ஆகலாம். அவ்வாறு முகவராகின்றவர் உரிமை வயதை அடையாதவரும் புத்தி சுவாதீனம் இல்லாதவராயுமிருப்பின் சட்டத்தில் அடங் கியுள்ள கட்டுவரம்புகளுக்கு ஒப்ப முதலருக்கு எந்த வகையிலும் பொறுப்புள்ளவராக மாட்டார்.

அதாவது ஒரு முகவர் ஒப்பந்தத் தகவுடைமை இல்லாத வராக (உரிமை வயதை அடையாதவராகவோ புத்தி சுவாதீனம்

இல்லாதவராகவோ) இருந்த போதிலும், அவர் முதலவரையும் மூன்றும் நபர்களையும் இணைத்து அன்னவருக்கிடையே ஒப்பந்த உறவை உண்டுபண்ண முடியும். ஆயினும் அவர் தகவுடமை அல்லது சட்டத்திறன் இல்லாத நிலையில் முதலருக்கோ மூன்றும் நபர்களுக்கோ சட்டப்படி பொறுப்புள்ளவராவதில்லை. ஆனால் முதலரைப் பொருத்தவரைத் தமது சார்பாக முகவரால் ஆக்கப் படும் ஒப்பந்தங்களுக்குத் தானே கட்டுப்பட வேண்டியவரா யிருப்பதால், அவர் தகவுடைமை கண்டிப்பாய்ப் பெற்றிருத்தல் வேண்டும்.

ஓர் ஒப்பந்தம் செல்லுடைமை யாவதற்கான தேவைகளுள் மறுபயன் முக்கியமான தொன்றென்றும், அந்த மறுபயன் ஊறு நிலையில் (Detriment) இருப்பினும், ஒப்பந்தம் செல்லுபடி யாவதற்குத் துணைநிற்கும் என்றும் கண்டோம். 'அ' 'ஆ'-வை முகவராக அமர்த்துகிறார் என்றால் 'அ' தன்னுடைய வேலைகளை 'அ' வசம் ஒப்படைக்கிறார் என்பதாகும். அவ்வாறு 'அ' தன் வேலைகளை 'ஆ' வின் பொறுப்பில் செயல்பட விடுகின்ற நிலை 'அ'-ஐப் பொறுத்தவரையில் ஒரு ஊறுநிலை என்று கொண்டு அதுவே 'அ' 'ஆ'க்கு இடையிலே ஆன ஒப்பந்த முகவர்நிலைக்குரிய மறுபயனாகக் கருதப்படுகிறது. ஆதலால் மறுபயன், முகவர் பெறுகின்ற ஊதியம் (Remuneration) என்ற வடிவில்தான் இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. 'அ' 'ஆ' வுக்கு இடையேயுள்ள முகவரிய ஒப்பந்தத்தில் 'அ' 'ஆ' வுக்குத் தரகு கொடுப்பதாக எந்தவித கட்டுவரம்பும் இல்லாவிடினும் 'ஆ' அந்த ஒப்பந்தத்துக்குக் கட்டுப்பட்டவராகிறார். இந்தத் தத்துவம் 185-வது பிரிவில் அவ்வளவு திறம்பட எடுத்துரைக்கப்படா விட்டாலும் பொதுப்படையாக,

"முகவரிய ஒப்பந்தம் ஏற்பட மறுபயன் தேவையில்லை"— என்று கூறுகிறது.

முகவரிய ஒப்பந்தம் நன்னம்பிக்கையை (Good faith) அடிப் படையாகக் கொண்டெழுதுவதாகையால், அந்த ஒப்பந்தம் ஏற்படுவதில் முதலரைப் பாதிக்கின்ற வகையிலான விவரம் எதுவும் முகவருக்குத் தெரிந்தால் அதை முதலரிடம் முகவர் வெளிப்படுத்திவிட வேண்டும். Heath *vs*. Parkinson (1926) 42 T.L.R, 693

### முகவரியம் அமையும் வகை முறைகள் (Kinds of Agency)

முகவரிய ஒப்பந்தம் கீழ்க்காணும் ஏதாவதொரு வகையில் அமையப் பெறலாம்.

1. முன்பெற்ற அதிகாரத்தால் உண்டாகும் முகவரியம் (Agency by Precedent Authority).

2. பின் பெற்ற அதிகாரத்தால் எழும் முகவரியம் (Agency by Subsequent Authority) அல்லது ஏற்புறுதி (Ratification)யினால் எழும் முகவரியம்.

3. முரண்தடையால் ஆகும் முகவரியம் (Agency by Estoppel).

4. அதிகாரப் போலிச் செயலால் உண்டாகும் முகவரியம் (Agency by Holding Out).

5. தேவை நிலையால் எழும் முகவரியம்(Agency of Necessity).

**1. முன்பெற்ற அதிகாரத்தால் உண்டாகும் முகவரியம்**

இது பெரும்பாலும் வழக்கிலிருந்து வரும் சாதாரண முறையாகும். இதன்படி ஒருவர் (முதலர்) பேச்சு அல்லது எழுத்து மூலமாக வழக்குரை அதிகாரம் (Vakalat) அல்லது பகர அதிகாரப் பத்திரம் (Power of Attorney) கொடுத்து மற்றொருவரை (முகவர்) நியமிப்பதால் எழுகிறது. முதலிலேயே அதிகாரத்தைப் பெற்றுக்கொண்டு முகவர் செயல்படுகிற காரணத்தால், இதற்கு முன் பெற்ற அதிகாரத்தால் உண்டாகும் முகவரியம் என்று கூறுவர்.

**2. பின்பெற்ற அதிகாரத்தால் எழும் முகவரியம்**

இது, ஒருவர் (முகவர்) மற்றொருவர் (முதலர்) சார்பாக அதிகாரம் எதுவும் பெறாமல் செயல்பட்டு, அல்லது பெற்ற அதிகாரத்தையோ, கொண்ட ஒப்பந்தத்தையோ விஞ்சிச் செயல்பட்டு, பின்னர் அந்தச் செயலை மற்றவர் (முதலர்) அங்கீகரிப்பதால் ஏற்படுவது. முதலரின் இந்த அங்கீகாரத்தின் மூலம் முகவரது செயல் அல்லது ஒப்பந்தம் செல்லுநிலையடைகிறது.

செயற்பட்ட பின்னர் அதிகாரம் பெறக் கிடைப்பதால் இது பின்பெற்ற அதிகாரத்தால் எழும் முகவரியம் என்றும் முகவரின் செயலையும் ஒப்பந்தத்தையும் முதலர் ஏற்று அவற்றுக்குத் தாம் பொறுப்பாவதால், ஏற்புறுதி முகவரியம் (Agency by Ratifications) என்றும் கூறலாம்.

**3. முரண் தடையால் எழும் முகவரியம்**

இதில் வெளிப்படையாக அதிகாரம் வழங்கப்படாவிடினும் தொடர்புடைய தரப்பினரின் நடத்தையிலிருந்து அவர்களிடையே

யுள்ள உறவில் முகவரியம் அடங்கியுள்ளதை உட்கிடையாக அறிந்து கொள்ளலாம். எடுத்துக்காட்டாக ‘அ’ தன்னை ‘ஆ’ வின் முகவர் என்று பிரகடனப் படுத்துவதாக வைத்துக் கொள் வோம். ‘ஆ’ இதை அறிந்திருந்தும் மறுப்பு எதுவும் தெரிவிக் காமல் இருந்துவிட்டு ‘இ’ என்ற மூன்றும் நபர், ‘அ’வை ‘அ’வின் முகவர் தான் என்ற நம்பிக்கையில் ‘அ’வுடன் ஒப் பந்தம் செய்துகொண்டபின், ‘அ’ தன்னுடைய முகவரில்லை என்று ‘ஆ’ முரணுகக் கூறுதல் முறையன்று. இம் முரண் கூற்று சட்டத்தால் தடை செய்யப்பட்டு அ, ஆ, இ, ஆகிய தொடர்புடைய தரப்பினரிடையான முகவரியம் உறவு அங்கீகரிக் கப்படுவதால் இதனை, முரண் தடையால் எழும் முகவரியம் என்று கொள்ளவேண்டும்.

### 4. அதிகாரப் போலிச் செயலால் எழும் முகவரியம்

பணியாளர், மனைவி முதலானோர், இந்தவகை முகவரியத் திற்குச் சில சாதாரண எடுத்துக்காட்டுகளாகும். ஒரு பணித் தலைவர் குறிப்பிட்ட காரியங்களைச் செய்வதற்குத் தம் பணி யாளருக்கு அனுமதியளிக்கிறார். பணியாளர், தம் பணித்தலை வரின் செல்வாக்கையும், தம்மோடுள்ள நீடித்த நடத்தையையும் (Long Course of Conduct) பயன்படுத்திக் குறிப்பிட்ட காரியங் கள் மட்டுமின்றி அவற்றையொத்த மற்றும் சில காரியங்களிலும் ஈடுபடுகிறார். இவை பணித்தலைவரின் அனுமதியைப் பெறாமல் செய்யப்படுகின்ற காரியங்களாயிருப்பினும், பணித்தலைவரைக் கட்டுப்படுத்துபவையாகும். பணித்தலைவர் தம் பணியாளருக்கு அதிகாரம் இருப்பதுபோலத் தோற்றுவித்துப் பணியாளரை ஒரு முகவர் என்று பிறர் நம்புமாறு செய்வதால், இது அதிகாரப் போலிச் செயலால் எழும் முகவரியம் என்று கூறப்படுகிறது.

### 5. தேவை நிலையால் எழும் முகவர் நிலை

ஒருவர் உண்மையிலேயே முகவராக இல்லாதிருந்த போதி லும், சில சமயங்களில் இக்கட்டான சூழ்நிலையின் காரணமாக முகவராகப் பணியாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒருவர் தம் சொத்துக்களை மற்றொருவர் பொறுப்பில் ஒப்படைத்திருக்கும்போது, அச் சொத்துக்கள் அழிந்து விடாமல் பாதுகாக்கப்படுவதற்குச் சில செலவுகளை மேற் கொள்ள வேண்டிய தேவை ஏற்படுகிறதென்றால் அதற்கான பெற்ற அதிகாரம் இல்லாதிருந்தும் உட்கிடையாக அவ்வதிகாரம் இருப்பதாகக் கொண்டு, அவர் மேற்கொள்ளுகின்ற செலவைச் சட்டம் அங்கீகரிக்கிறது. தேவையின் காரணமாக ஒருவர் பெற்ற அதிகாரம் தனக்கு இல்லாதிருந்த போதிலும் மற்றொருவருக்

காகச் செயல்பட வேண்டி வந்து அச்செயலைச் சட்டம் ஏற்று நிற்ப தால் தேவைநிலையால் எழும் முகவரியம் என்றாயிற்று. முகவரியம் தேவைநிலையால் எழுவதாகக் கொள்ளப்பட வேண்டுமெனில், கீழ்க்காணும் கட்டுவரம்புகளை அது கொண்டிருத்தல் வேண்டும்.

(i) திட்டவட்டமானதும் நேரடியானதுமான தேவை எழ வேண்டும் (Actual and Definite Necessity). Prager *vs*. Blatspiel Stamp & Heacock Ltd (1924) I.K.B. 566

(ii) முதலரிடமிருந்து உத்தரவு அல்லது அதிகாரம் பெறு வதற்கான வாய்ப்பு அல்லது சந்தர்ப்பம் கிடைக்காமல் இருந் திருக்க வேண்டும்.

(iii) இந்த நிலையில் முகவராகச் செயல்படுபவர் செயலில் நல்லெண்ணத்துடனும் (அந்தச் செயலில்) தொடர்புடையோரது நலனுக்காகவும் செயற்பட வேண்டும்.

**கணவனும் மனைவியும் :** திருமணத்தினுல் மட்டும் கணவன்-மனைவியருக்கிடையே முகவரிய உறவு ஏற்படுவதில்லை. மனைவி ஒருத்தி முகவர் என்ற நிலையில் தன் கணவரைக் கட்டுப்படுத்த வேண்டுமெனில், கணவனிடமிருந்து வெளிப்படையாகவோ கண வனின் நடத்தையிலிருந்து உட்கிடையாகவோ அதிகாரம் பெற்றி ருத்தல் வேண்டும்.

கீழ்வரும் கொள்கைகள் கணவன்-மனைவிக்கிடையிலே உண் டான முதலர்-முகவர் உறவை விளக்குவனவாகும் :

(i) ஒருவர் தம் மனைவியுடன் சேர்ந்து வாழ்க்கை நடத்தும் பொழுதும், தம் வீட்டு விவகாரங்களைக் கவனிக்கும் பொறுப்பை மனைவியிடம் ஒப்படைத்தாராயின் மனைவி தன் கணவர் செல் வாக்கைப் பயன்படுத்தி அவர் பெயரால் கடன் பெறுகின்ற அதிகாரத்தை அடைவதாகத் துணிபு கொள்ளலாம். Debenham *vs*. Mellon (1880) 6. A. C. 24.

ஆனுல் அத்தகைய துணிபு மறுக்கப்பட்டு, மனைவி தன் கணவன் செல்வாக்கைப் பயன் படுத்த முடியாத நிலை சில சந்தர்ப்பங்களில் எழுவதுண்டு. அவை கீழ்வருமாறு :

(அ) கணவன் தன் மனைவியை வெளியில் கடன் கொள்ளக் கூடாது என்று தவிர்த்திருக்கும் பொழுது,

(ஆ) கடனுக்கு வாங்கிய பொருள் தேவைப் பொருளாக (Necessaries) இல்லாதிருந்தால். உதாரணமாக ரூபாய் 200 மாத வருமானம் உள்ள ஓர் எழுத்த(Clerk)ருக்குக் குளிர்சாதனப் பெட்டியை (Refrigirator) ஒரு தேவைப் பொருளாகக் கொள்ள முடியாது.

(இ) தேவைப்படுகின்ற பொருட்கள் வாங்கவேண்டிய பணத்தை மனைவியிடம் கொடுத்து கணவன் தன் செல்வாக்கைக் கடன்வாங்கப் பயன்படுத்தக் கூடாதென மனைவியை விலக்கியிருக்கும்போது (Morel Bros *vs*. Weatmore Land (1940) A. C. 11), அல்லது மனைவிக்கு, வேண்டிய அளவு, படியானது (Adequate Allowance) கொடுக்கப்பட்ட அல்லது சொந்த வருமானமோ, சம்பாதிக்கும் திறனோ இருக்குமானால் Biberfeld *vs*. Berens (1952) 2 Q. B. 770,

(ஈ) வியாபாரியிடம் கணவன், தம் மனைவிக்குக் கடன் கொடுக்கக் கூடாது என்று எச்சரித்திருந்தால், மனைவி தன் கணவனது செல்வாக்கைப் பயன்படுத்தமுடியாது (Justifiable)

(ii) மனைவி தன் கணவனிடமிருந்து, நேர்மையான சூழ்நிலைகளால் விலகித் தனியாக வாழவேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும்போது, கணவன் தம் மனைவிக்குச் சட்டப்படி வாழ்க்கைப் பொருளுதவி அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். எனவே, அவ்வாறு விலகி வாழ்கின்ற காலத்தில் மனைவி தன் தேவைக்கான பொருட்களை கடனுக்கு வாங்கியிருந்தால் அந்தக் கடனைத் தீர்க்க வேண்டிய பொறுப்பு கணவனுக்கு உரியதாகும். மனைவி இவ்வாறான சூழ்நிலைகளில் பெறுகின்ற அதிகாரம் இன்றியமையாத் தேவையில் எழும் முகவரியத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாகுமென சில சட்டவியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

**முகவரின் பல்வேறு பிரிவுகள்**

முகவரை வாணிக முகவர், வாணிகம் அல்லாத முகவர் என, பொதுவாக இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். (Merchantile or Commercial Agent and Non-Merchantile or Non-Commercial Agent) இவ்விரு பிரிவுகளில் வாணிக முகவரியம் பற்றியதே நாம் இங்கு ஆராய்கின்ற பிரிவு.

முகவரைப் பொது முகவர், தனி முகவர் என (General and Special Agents)வும் பிரித்துக் கூறுவர். முதலரின் எல்லா அலுவல்களையோ, ஒருவகையைச் சார்ந்த எல்லா அலுவல்களையோ நடத்துவதற்கு அதிகாரம் அளிக்கப்பட்ட முகவர், பொது முகவர் (General Agent) என்றும் குறிப்பிட்ட அலுவல்களை நடத்துவதற்கு மட்டும் வரைவுரைக்கப்பட்ட அதிகாரத்தைப் (Limited

Authority) பெற்றுள்ள முகவரைத் தனி முகவர் என்றும் கூறப்படும். இவ்விருவகை முகவரும் தாம் பெற்ற அதிகாரத்தை விஞ்சிச் செயல்பட்டால் முதலர் அச் செயல்களுக்கு ஏற்புறுதி (Ratification) வழங்கினுலொழிய அச் செயல்களுக்குப் பொறுப்பாளராக மாட்டார்.

வாணிக முகவர் பட்டியலில், கீழ்க்குறிப்பிடப்படுபவர்கள் முக்கியமானவராவர் :

## 1. ஏலம் விடுபவர் (Auctioneer)

இவர், பொருட்களை ஏலத்தில் விற்க விரும்புவோரால் நியமிக்கப்படுபவர் ; பொது ஏலத்தில் பொருட்களை விற்று அதற்குரிய தரகை (Commission) ஊதியமாகப் பெறுகிருர். தன் உடைமையில் இருக்கின்ற விற்பவர் பொருட்களை, அவற்றுக்குரிய விலையைப் பெற்றுக்கொண்டு வாங்குபவரிடம் ஒப்படைக்க வேண்டிய அதிகாரத்தைப் பெற்றிருப்பவர். இங்கிலாந்தில் நடைமுறையிலுள்ள பொருட்கள் விற்பனைச் சட்டத்தில் ஏலம் விடுபவர் விற்பவருக்கு மட்டுமின்றி வாங்குபவருக்கும் சில சந்தர்ப்பங்களில் முகவராகச் செயலாற்றுகிருர். சோதனைக்காக வைக்கப்பட்டுள்ள விற்பனைப் பொருட்கள் பற்றிய விவரங்கள் அடங்கிய பட்டியலில் குறிப்பிட்டுள்ள விவரங்களில் தவறு ஏதும் இருந்தால் அதற்கு விற்பவர் (ஏலம் விடுபவர்) பொறுப்பாளர் அல்லர் என்ற அச்சிட்ட கட்டுவரம்பு, பார்வைக்குத் தெரிகின்ற வகையிலான குறைபாடுகளைப் பொறுத்தவரையில் செல்லுபடியாகும். அப் பொருட்களில் தரத்திலோ தன்மையிலோ பார்வைக்குத் தெரியாத விதத்திலான குறைபாடுகள் இருப்பின், அந்த கட்டுவரம்பு செல்லுபடியாகாது.

Couchman *vs.* Hill (1947) A.E.R. 103 (C.A.)

## 2. வங்கியாளர் (Banker)

வங்கியாளருக்கும் அவர்தம் வாடிக்கையாளருக்குமிடையேயான தொடர்பு, கடன் பெற்றவர், கொடுத்தவர்களுக்கிடையேயான தொடர்பைப் போன்றது. ஆனுல் வங்கியாளர், வாடிக்கையாளர் கொடுக்கின்ற காசோலைகள் அல்லது வரைவுகளைப் பெற்று அவற்றுக்குப் பணம்வழங்கவேண்டிய அதிகமானதொரு பொறுப்பையும் கொண்டிருக்கிருர். இந்த வகையில் வங்கியாளரும், வாடிக்கையாளரின் முகவராகிருர்.

3. தரகர் (Broker)

இவர், வாணிக நடவடிக்கைகளில், ஒப்பந்தத் தரப்பினருக் கிடையே பணியாற்றும் முகவர். இவர் அதற்காகப் பெறுகின்ற ஊதியம் தரகு எனப்படும். தரகரிடம் பொருட்கள் எதுவும் ஒப்படைக்கப்படுவதில்லை. இவர் ஒப்பந்தத்துக்கான கட்டு வாசகங்களை ஒரு புத்தகத்தில் குறித்துக் கையொப்பமிட்டு ஒப் பந்த விவரங்களை இருதரப்பினருக்கும் அனுப்புகிறார். விற்ப வருக்கு அனுப்பப்படும் பத்திரத்திற்கு விற்ற குறிப்புச்சீட்டு (Sold-Note) என்றும் வாங்குபவருக்கு அனுப்பப்படும் பத்திரத் துக்கு வாங்கிய குறிப்புச்சீட்டு (Bought-Note) என்றும் பெயர். இருதரப்பினரும் அந்தப் பத்திரங்களில் அடங்கியுள்ள விவரங் களுக்கு இணங்குவதாக இருந்தால், ஒப்பந்தத்தின் கட்டு வாசகங்கள் வரைவுரைக்கப்பட்டுள்ளன என்று கொள்ளப்பட்டு ஒப்பந்தத்தில் ஈடுபடுவர். இதுவே சாதாரணமாகத் தரகர்கள் மேற்கொள்கின்ற பணியாகும். ஒரு தரகர் வாங்குபவர், விற்பவர் ஆகிய இருவருக்குமே முகவராவார்.

4. உரிமைப் பேராள் (Factor)

இவரிடம் பொருட்களின் உடைமை ஒப்படைக்கப்பட்டு, அவற்றை வாங்குவது, விற்பது, பிணையம் வைப்பது போன்ற அதிகாரங்களும் இவரிடம் வழங்கப்படுகின்றன. இவருக்கு அப் பொருட்கள் மீது பொதுவான பற்றுரிமையும் உண்டு.

5. தரகு முகவர் (Commission Agent)

இவர் பொருட்களை வாங்க அல்லது விற்கவேண்டி நிய மிக்கப் படுபவர். இவர் தன் பணிகளுக்காகப் பெறுகின்ற ஊதியம் தரகு (கமிஷன்) எனப்படும்.

6. பிணை முகவர் (Del Credere Agent)

முதலர் சார்பாகத் தான் செய்யும் ஒப்பந்தங்களில், சம்பந் தப்பட்ட நபர்கள் தம் கடமைகளைச் செய்யும் நிலையிலுள்ளவ ரென பிணைநிற்கும் முகவர் இவர். இத்தகைய முகவர்களுக்கு அதிகப்படியான தரகு உண்டு. ஒரு முதலர் தனக்கு அறிமுக மில்லாத வெளிநாடுகளிலுள்ள நபர்களுடன் வணிகத்தொடர்பு கொள்ளும்போது பெரும்பாலும் இத்தகைய பிணை முகவர் அமர்த்தப் படுகிறார். பிணைமுகவர், முகவர் மட்டுமின்றி முதல ருக்குப் பொறுப்புறுதி அளிப்பவராகவும் (Guarantor) இருக்கிறார். இவர், வாராக் கடன்களுக்கான (பொறுப்பைத்) தான் மேற் கொள்வதனால், அதிகப்படியான தரகினைப் பெறுகிறார்.

முகவர் பெற்றிடும் அதிகாரத்தின் விரிவளவு (Extent of Agent's Authority)

முகவர் ஒரு மேம்பட்ட பணியாளர் (Superior Servant) என்பதை மேலே கண்டோம். அவர் மற்றுள்ள பணியாளர்களைப் போல சின்னஞ்சிறு காரியங்களுக்கும் முதலரின் கட்டளைகளை எதிர்பார்க்க வேண்டிய தேவை இல்லை. எந்தச் செயலுக்காக முகவரிய ஒப்பந்தம் உருவாக்கப்பட்டதோ, அந்தச் செயல் நிறைவேறுதற்குத் தேவையான எல்லாச் செயல்களிலும் ஈடுபடும் அதிகாரம் முகவருக்கு உண்டு.

முகவர் பெற்றிடும் அதிகாரத்தை நேரில் அல்லது உண்மையில் பெற்ற அதிகாரம் (Actual or Real Authority), வெளித்தோற்றத்தால் பெற்ற அதிகாரம் (Ostensible or Apparent Authority) எனப் பொதுவாக இருவகைகளாகப் பிரிக்கலாம். நேரில் அல்லது உண்மையில் பெற்ற அதிகாரமானது, நேரில் முகவருக்கு அளிக்கப் பெற்றதாகவோ உட்கிடையால் பெற்றதாகவோ (Express or Implied) இருக்கலாம். உண்மையில் பெற்ற அதிககாரத்தைப் போல் அன்றி, முதலரின் நடவடிக்கைகளிலும் பேச்சிலுமிருந்து, முகவருக்கு அதிகாரம் இருப்பதாகப் பிறர் ஊகித்துணரும் வகையில் பெறப்படும் அதிகாரம் வெளித்தோற்றத்தால் பெற்ற அதிகாரம் (Ostensible or Apparent Authority) எனப்படும். வெளித்தோற்றத்தால் முகவர் பெற்ற அதிகாரத்தை தேவைப்படும்போது முதலர் கட்டுப்படுத்தவும் செய்யலாம். எடுத்துக்காட்டாக ; ஒரு குறிப்பிட்ட ஒப்பந்தம் முகவர் நேரில் பெற்ற உரிமையை விஞ்சியதாகச் செய்யப்பட்டு அதே நேரத்தில் முகவர் வெளித்தோற்றத்தால் பெற்ற அதிகாரத்திற்கு உள்ளடங்கியிருந்தால் அந்த ஒப்பந்தம் முதலரைப் பிணைக்கும். அனால் நேரடியாகப் பெற்ற அதிகாரத்துக் குட்பட்டுத்தான் செயல்பட வேண்டுமென்று கட்டுப்பாடிருந்து அதை விஞ்சிச் செயல் படுவதாக அவ்வொப்பந்தத்தை நிறைவேற்றும் பொறுப்பினைப் பெற்றுள்ள மூன்றும் நபருக்குத் தெரிந்திருந்தால், முகவரின் விஞ்சிய செயல் முதலரைப் பிணைக்காது. Watteau *vs.* Fenwick (1893) I Q. B. 346 முகவர் பெற்ற அதிகாரத்தின் வரம்பை நிர்ணப்பது அவர்தம் வெளித்தோற்றத்தால் பெற்ற அதிகாரமேயாகும். இந்தியச் சட்டத்தின் 188, 237 ஆகிய பிரிவுகள் இது பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றன.

"ஒரு செயலைச் செய்யும் அதிகாரத்தைப் பெற்றுள்ள முகவர் அச்செயலைச் செய்வதற்குத் தேவையான சட்டப்படியான எல்லாச் செயல்களிலும் ஈடுபடுவதற்கான அதிகாரத்தை

யும் பெறுகிறுர். ஒரு தொழிலை நடத்தும் அதிகாரத்தைப் பெற்றுள்ள முகவர், அத்தொழிலை நடத்துவதற்கு அவசியமான, சட்டப்படியான, அல்லது அத்தொழிலை நடத்துவதில் சாதாரண மாகக் கடைபிடிக்கப்படுகின்ற செயல்களில் ஈடுபடுவதற்கான அதிகாரத்தையும் பெறுகிறுர்'' (பிரிவு 188).

''பெற்ற—அதிகாரமில்லாமல் ஒரு முகவர் காரியங்களைச் செய்து முடித்திருந்தால் அல்லது முதலரின் சார்பாக மூன்ரும் நபர்களை சட்டப்பிணைப்புக்கு உள்ளாக்கியிருந்தால் முதலர் அச் செயல்கள் அல்லது சட்டப்பிணைப்பு முகவரின் அதிகார வரம் புக்கு உட்பட்டதென மூன்ரும் நபர்கள் நம்புமாறு தம் பேச் சாலோ நடத்தையாலோ அவர்களைத் தூண்டியிருந்தால், அந்தச் செயல்கள் அல்லது சட்டப்பிணைப்புக்கு முதலர் கட்டுப்பட்ட வராவர் (237 பிரிவு).

பொதுவான சூழ்நிலைகளில் முகவர் பெற்ற அதிகார விரி வளவானது 188-வது பிரிவில் மேலே குறித்தவாறு வரையறுக்கப் பட்டுள்ளது. ஆனல் நெருக்கடி நிலைகளில் அந்த விரிவளவுக்குள் நின்று செயல்படுவது சாத்தியமாவதில்லை. எனவே 189-வது பிரிவு அந்த நெருக்கடி நிலைகளில் எவ்வாறு செயல்பட வேண்டு மென்பதைக் குறிப்பிடுகிறது.

சாதாரண செயலறிவுத்திறன் வாய்க்கப்பெற்ற ஒருவன், நெருக்கடி நிலைகளில் தன் சொந்தக் காரியங்களை எவ்வாறு செயற் படுத்துவானே அவ்வாறே நெருக்கடி நிலைகளில். ஒரு முகவர், முதலரை இழப்பிலிருந்து காக்கும் பொருட்டான எல்லாச் செயல்களிலும் ஈடுபடுகின்ற அதிகாரத்தைப் பெறுகிருன்.

இந்த அதிகப்படியான அதிகாரமானது முன்னரே விளக் கப்பட்ட கட்டாய நிலை முகவரிய முகவருக்கு வழங்கப்படும் அதிகாரமாகக் கொள்ளப்படும்.

### துணை முகவர் (Sub-Agent)

அளிப்படைவு அதிகாரத்தை மீட்டளிக்க இயலாது. (Delegatus Non Potest Delegare)

ஒரு முகவர், தன் முதலரின் அனுமதியின்றித் துணைமுகவர் எவரையும் நியமித்தலாகாது என்பது பொது நியதி. இது ''அளிப்படைவு அதிகாரத்தை மீட்டளிக்க இயலாது''. (Delegatus Non Potest Delegare) என்ற லத்தீன் சூத்திரத்தினை அடிப் படையாகக் கொண்டது. அதாவது அளிப்படைவு அதிகாரத்

தைப் (Delegated Power) பெற்றவர் மீண்டும் அவ்வதிகாரத்தை மற்றொருவருக்கு அளிக்க இயலாது என்பதாகும். Dc. Bussche vs. Alt (1877) 8. Ch. D. 286 முதலரின் பற்றுறுதி (Confidence)க் குப் பாத்திரமாயுள்ள முகவர், தன்பால் முதலரால் ஒப்படைக் கப்பட்ட அதிகாரங்களை அல்லது தான் மேற்கொள்ளவேண்டிய பொறுப்புகளை மற்றொருவருக்கு அளிக்கக் கூடாது என்பதே இச் சூத்திரத்தில் அடங்கியுள்ள தத்துவம். இந்த நியதிக்கு மாறாக சில சந்தர்ப்பங்களில் முதலரின் அனுமதியின்றி முகவரால் துணைமுகவர் நியமிக்கப்பட்டு அதிகாரம் அளிக்கப்படுகிறார். அத்தகைய சந்தர்ப்பங்களை இந்நியதிக்குரிய விதிவிலக்குகளாக (Exceptions)க் கொள்ளலாம். அவையாவன :

1. முகவரது பணிகளும் பொறுப்புகளும் அவரது திறமை யையோ, நம்பிக்கையுடைமையையோ (Confidence) பொறுத் தல்லாது, நிறைவுதரும் வகையில் யாரும் அதைச் செய்து முடிக்கலாம் என்றிருக்கும்போது,

2. குறிப்பிட்ட வாணிகம் அல்லது தொழிலில் நிலைத்த நடைமுறை அல்லது நெடுநாளைய வழக்காறு (Custom and usage) பெற்ற அதிகார அளிப்படைவு (Delegation of Authority) அங் கீகரிக்கப்படுவதாக இருந்தால்,

3. முகவர், தன் அதிகாரத்தை மற்றொருவருக்கு அளிக்க எண்ணியுள்ளார் என்பது குறித்து முதலருக்குத் தெரிந்திருந்தால்,

4. வாணிகம் அல்லது தொழிலின் தன்மைக்கு அதிகார அளிப்படைவு அவசியம் என்றுள்ளபோது,

5. எதிர்பாராத நெருக்கடி நிலையில்,

மேற்கண்ட சூத்திரமும் அதன் விதிவிலக்குகளும் 190-வது பிரிவில் பின்வருமாறு சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

"ஒரு முகவர், தானாகவே செய்து முடிப்பதாக வெளிப் படையாகவோ, உட்கிடையாகவோ பொறுப்பேற்றுக் கொண்ட செயல்கள் சம்பந்தப்பட்ட தொழிலின் நடைமுறை வழக்கில் அல்லது அத்தொழிலின் தன்மையால் துணைமுகவர் அமர்த்தியாக வேண்டுமென்ற நிலை இருந்தாலொழிய, முகவர் மற்றொருவரை அச் செயல்களைச் செய்வதற்காகச் சட்டப்படி அமர்த்த முடியாது".

**துணைமுகவரும் பகர முகவரும் (Sub-Agent and Substituted Agent)**

முகவரியநிலை அலுவல்களில் தொடக்க முகவரால் (Original Agent) அமர்த்தப்பட்டு அவரது கட்டுப்பாட்டில் செயல்படும் ஒருவர் துணைமுகவர் எனப்படுவார் (பிரிவு 191).

பகர முகவர் பற்றிய வரைவுரையை, 194-வது பிரிவில் காணலாம் :

" முகவரியம் அலுவல்களில், முதலரின் சார்பாகச் செயல்பட வேண்டி மற்றொருவரை அமர்த்தும் (பணிக்கெனச் சுட்டிக்குறிப்பிடும்) அதிகாரத்தை வெளிப்படையாகவோ உட்கிடையாகவோ பெற்றுள்ள ஒரு முகவர், மற்றொருவரை அவ்வாறு அமர்த்துவதாயின் " துணை முகவராக மாட்டார். ஆனால் முகவரிய அலுவல்கள் அவரிடம் பொறுப்பேற்கப்பட்டுள்ள அளவுக்கு அவர் முதலரின் முகவராவார்".

துணை முகவருக்கும் பகர முகவருக்குமிடையே சில முக்கிய வேறுபாடுகள் உள்ளன. முகவரால் நியமிக்கப்பட்டு அவரது கட்டுப்பாட்டில் துணை முகவர் செயல்படுவதால், துணை முகவரின் செயல்களுக்கெல்லாம் முகவரே பொறுப்பாளராவார். ஆனால் பகர முகவரைப் பொறுத்தவரை, ஒரு முகவரின் கடமை அவரை நியமிப்பதோடு அல்லது சுட்டிக் குறிப்பிடுவதோடு முடிந்து விடுகிறது. பகர முகவர் நியமிக்கப்பட்ட உடனேயே, அவருக்கும் முதலருக்குமிடையே ஒப்பந்தச் சார்புறவு ஏற்பட்டு விடுவதால் தொடக்க முகவர் அந்த இடத்திலிருந்து அகன்று விடுகிறார்.

195-வது பிரிவின்படி தொடக்க முகவர் முதலருக்கான பகர முகவரைத் தேர்ந்தெடுப்பதில், சாதாரண செயலறிவுத் திறன் வாய்க்கப்பெற்ற ஒருவன் தனக்கெனச் செய்வதாயிருப்பின் எவ்வாறு செயல்படுவாரோ அவ்வாறே செயல்பட வேண்டும்.

**நேர்மையாக அமர்த்தப்படும் துணைமுகவரும் அதிகாரமின்றி அமர்த்தப்படும் துணைமுகவரும் (Sub-Agent Properly Appointed and Snb-Agent Appointed Without Authority)**

துணைமுகவர்கள் அமர்த்தப்படுவதால் முதலர், முகவர் மூன்றும் நபர்களுக்கு இடையே ஏற்படும் தொடர்புகள், பொறுப்பு, கடமைகள் ஆகியவற்றைப் பிரிவு 192, 193 இவற்றில் காணலாம்.

வெளிப்படையாகவோ உள்ளிடையாகவோ தான் பெற்ற அதிகாரத்தின்கீழ் ஒரு முகவரால் அமர்த்தப்படுகின்ற துணைமுகவர் நேர்மையாக அமர்த்தப்பட்ட துணைமுகவராவார். அத்தகைய அதிகாரமின்மையால் அமர்த்தப்படும் துணைமுகவர் அதிகாரமின்றி அல்லது நேர்மையின்றி அமர்த்தப்பட்ட துணைமுகவர் எனப்படுவார். இவ்விருவகை துணைமுகவர்களும் தொடக்க முகவரால் அமர்த்தப்பட்டு அவரது கட்டுப்பாட்டுக்குள் செயல்படுகிற காரணத்தால் இத் துணைமுகவர்களுக்கும் முதலருக்குமிடையே ஒப்

பந்தச் சார்புறவு ஏற்படுவதில்லை. ஆதலால் துணைமுகவர் தான் பெறவேண்டிய ஊதியத்திற்கு முதலர் மீது வழக்குத் தொடரவோ, அதே போன்று முதலர் தமக்குத் துணைமுகவரிடமிருந்து வர வேண்டிய பணத்துக்குத் துணைமுகவர்மீது வழக்குத் தொடரவோ இயலாது. இந்த நிலையில் ஒவ்வொருவரும் தம்மையடுத்துள்ள ஒப்பந்தத் தரப்பினர் அதாவது முகவர்மீது தான் வழக்குத் தொடர முடியும். ஆனல் நேர்மையாக நியமிக்கப்பட்ட துணை முகவர், முதலரின் பிரதிநிதி என்ற முறையில் மூன்றும் ஆளுடன் ஒப்பந்தங்கள் ஏற்படுத்திக் கொள்ளவும் முதலரை அவ்வொப்பந் தங்களுக்குக் கட்டுப்படுத்தவும் முடியும். நேர்மையாக நியமிக்கப் பட்ட துணைமுகவரின் மோசடி முதலிய தீங்குகளுக்கு முகவர் முத லருக்குப் பொறுப்புடையவராவார். அதிகாரமின்றி நியமிக்கப் படும் துணைமுகவர், மூன்றும் ஆட்களைப் பொறுத்தவரையில் முதலரைப் பிரதிநிதியாகக் கொள்ள முடியாது. மூன்றும் ஆட் களுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்களுக்கு முகவரைத்தான் கட்டுப்படுத்த முடியும். ஆகவே முகவர் அதிகாரமின்றி அமர்த் தப்பட்ட துணைமுகவர் தான் மேற்கொள்ளுகின்ற ஒப்பந்தங் களுக்கு மூன்றும் ஆட்களுக்கும் அதேபோல முதலருக்கும் பொறுப் புடையவராவார்.

## ஏற்புறுதி (Ratification)

ஏற்புறுதியில் முகவரியம் அமையும் வகைபற்றி முன்னரே குறிப்பிட்டோம் அதிகாரம் இல்லாமலோ அதிகாரத்தை விஞ்சி யோ செய்யப்பட்ட செயல் பின்னர் அங்கீகரிக்கப்படும் போது அச்செயல் நடந்த போதே அது அதிகாரம் பெற்றுச் செய்யப் பட்டதாகக் கருதப்படும். இந்தக் கொள்கை Omnis Ratihabitio Retro Trahitur Et Mandato Priori Aequiparatur (Ratification relats back to and is equivalent to Prior Authority) என்ற சூத்திரத்தால் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

இதில் அடங்கி உள்ள விதி, 196-வது பிரிவில் கீழ்க்காணுமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

“ஒருவர் மற்றெருவருக்காக அவருக்குத் தெரியாமலும் அவருடைய அதிகாரம் இல்லாமலும் ஒரு செயலைச் செய்யும் பொழுது அச்செயலை மற்றவர் ஏற்கவோ மறுக்கவோ செய் யலாம். மற்றவர் ஏற்றுக் கொள்வதாக இருப்பின் அவரது அதிகாரத்துடன் செய்யப்பட்ட செயலாகக் கருதப்படுவதால், பெற்ற அதிகாரத்துடன் செயல்படும்போது உள்ள விளைவுகளே இதற்கும் ஏற்படுகின்றன.

ஏற்புறுதி வெளிப்படையானதாகவோ யாருக்காகச் செயல்கள் செய்யப்பட்டனவோ அவரது நடத்தை (Conduct) யிலிருந்து ஊகிக்கப்படுகின்ற வகையில் உட்கிடையானதாகவோ இருக்கலாம் (197-வது பிரிவு). உதாரணமாக 'அ' அதிகாரம் பெறுமல் 'ஆ' வுக்காகப் பொருட்களை வாங்குவதாக வைத்துக் கொள்வோம் 'ஆ' பின்னர் அப் பொருட்களை தன் சொந்தக் கணக்கிலேயே 'இ'-க்கு விற்றுவிடுகிருர் என்றுர். 'ஆ' தன்னுடைய நடத்தையில் 'அ' வாங்கியதை ஒப்புவதாக ஊகிக்கலாம். இஃது உட்கிடை ஏற்புறுதிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

**ஏற்புறுதியின் தேவைகள் (Requirements for Ratification)**

ரைட் (Wright) என்ற நீதிபதி Firth *vs.* Staines வழக்கில் ஏற்புறுதி செல்லுடைமையாவதற்கு முக்கியமானதாக மூன்று கட்டுவரம்புகளைக் குறிப்பிடுகிருர். அவை வருமாறு:

(1) ஏற்புறுதி வழங்கப்பட வேண்டிய செயல், ஒரு முதலருக்காகச் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

(2) செயல் நடைபெற்ற நேரத்தில், முகவருக்குத் தகுதி பெற்ற முதலர் (Competent Principal) ஒருவர் இருந்திருக்க வேண்டும்.

(3) ஏற்புறுதி அளிக்கின்ற நேரத்தில் முதலர், அச் செயலைத் தானே செய்திட சட்டத்தகுதி பெற்றிருத்தல் வேண்டும். இவற்ருேடு இன்னும் சில தேவைகளும் இங்குக் குறிப்பிடத் தக்கவையாகும்.

(4) ஏற்புறுதி அளிப்பவர் எல்லா உண்மைகளையும் விவரங்களையும் நன்கு அறிந்தவராாய் இருந்து, தான் முதலர் என்ற முறையில் பொறுப்பு ஏற்கும் எண்ணத்துடன் ஏற்புறுதி வழங்க வேண்டும் (198-வது பிரிவு).

(5) ஏற்புறுதி செயல் முழுமைக்குமாக இருக்க வேண்டும். அதன் ஒரு பகுதிக்காக இருத்தல் கூடாது (பிரிவு 199).

(6) மூன்ரும் நபர்களின் உரிமைக்கோ நலனுக்கோ ஊறு விளைவிப்பதாகவும் அவர்களுக்கு கேடு விளைவிப்பதாகவும் இருக்கக் கூடாது.

(7) ஏற்புறுதி வழங்குபவர் செய்ய ஆற்றப்பட்ட நாளில் தோன்றி இருந்திருக்க (உருப்பெற்றிருக்க) (Exitence) வேண்டும். எடுத்துக்காட்டாக தோன்றியிராத ஒரு நிறுவனத்தின் சார்பாக அந் நிறுவன அமைவுக்கான ஆக்க முயற்சிகள் செய்பவர்களால்

(Promoters) மேற்கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தை, அந் நிறுவனம் தோன்றிய பின் அதனால் ஏற்றுக் கொள்ள முடியாது.

(8) நியாயமான கால வரம்புக்குள்ளதாக அவ்வொப்பந்தங்கள் ஏற்புறுதி அளிக்கப்பட வேண்டும்.

**முகவரியம் முடிவுறுதல் (Termination of Agency)**

கீழ்க்காணும் முறைகளில் முகவரியம் முடிவுறுகிறது.

(1) முதலர் தான் கொடுக்கும் அதிகாரத்தைத் திருப்பப் பெற்றுக் கொள்ளும்போது (Principal Revoking his Authority),

(2) முகவர் தான் பெற்ற அதிகாரத்தைத் துறந்துவிடும் போது,

(3) எந்தத் தொழிலுக்காக முகவர் அமர்த்தப்பட்டாரோ அத்தொழில் அல்லது செயல் முற்றுப் பெற்று விட்டால்,

(4) முதலர் அல்லது முகவர் இறந்து விட்டால்,

(5) முதலர் அல்லது முகவர் பித்துப்பிடித்த (Unsound Mind)வராகி விட்டால்,

(6) முகவர் நிலைக்கு ஒரு காலவரை இருந்து, அந்தக்கால அளவு கடந்துவிடும்போது,

(7) முகவர் மேற்கொள்ள வேண்டிய தொழிலானது, சட்டத்தினால் தடுக்கப்பட்டதாக அல்லது அத்தொழிலின் மூலப் பொருள் அழிவுற்றிருந்தால் (Destruction of Subject Matter) அத்தொழிலை அல்லது செயலைச் செய்ய முடியாத நிலைமை இருந்தால்,

இந்த முறைகளை 201-வது பிரிவு உள்ளடக்கிக் கூறுகிறது.

**நலம் இணைந்த முகவர் நிலை (Agency Coupled with Interest)**

முகவருக்குப் பயன் கிடைக்கின்ற வகையில் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தால், அந்த முகவரியம் (Agency) நலம் இணைந்த முகவர் நிலை எனப்படும். 202-வது பிரிவின்படி, முகவரியத்தின் மூலாதாரப் பொருளில் முகவருக்கு நலன் இருப்பதாக இருந்தால் அந்த முகவரியம் வெளிப்படையான ஒப்பந்தமாக இல்லாதிருந்தாலன்றி, அவருடைய நலனைப் பாதிக்கும் வகையில் குறிக்கப்படலாகாது.''

'அ' தான் 'ஆ'வுக்குக் கொடுக்க வேண்டிய கடனுக்காகத் தன்னுடைய நிலத்தை விற்று அதன் விலையில் ஒரு பகுதியைக் கொண்டு அக்கடனை ஈடு செய்து கொள்ளுமாறு 'ஆ'வுக்கு அதிகாரம் அளித்திருந்தால், பின்னர் அந்த அதிகாரத்தை 'அ' தள்ளிவிட முடியாது. 'அ' பித்துப்பிடித்தவராகிவிட்டாலும் அல்லது இறந்துவிட்டாலும் கூட இந்த அதிகாரம் முறிவு பெறாது.

முகவருக்குக் கிடைக்கும் ஊதியத்தை இங்கும் பயன் அல்லது நலன் என்று கருதுவதற்கில்லை. பெரும்பாலான எல்லா முகவரியங்களிலும் ஊதியமானது, உள்ளடங்கிய ஒரு முக்கிய பகுதியாக இருப்பதால், அது முகவருக்குக் கிடைக்கும் தனிப்பட்ட நலன் என்றோ, ஊதியம் பெறும் எல்லா முகவரும் நலம் இணைந்த முகவர் என்றோ கொள்ள முடியாது. மேற் கூறப்பட்ட எடுத்துக் காட்டின்படி முகவருக்குச் சொந்த நலனை ஒட்டிய தனிப்பட்ட பயன் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் (தன்) நலம் இணைந்த முகவரியம் ஏற்படும்.

21-வது பிரிவில் கூறப்பட்டுள்ள (தன்) நலம் இணைந்த முகவரியமும் 207-வது பிரிவில் சொல்லப்பட்டுள்ள "பகுதி அதிகாரம் மட்டும் பயன்படுத்தப்பட்ட" (Where Authority has been partly Exercised) முகவரியமும் முறிக்கப்பட முடியாதனவாகும்.

முகவரியத்தின் முடிவு எப்பொழுது நிறைவு பெற்றுச் செயல் படுத்தப்படுகிறது என்பது பற்றிய விதிகள் பிரிவு 208, பிரிவு 210 ஆகியவற்றில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன :

(1) ஒரு முகவரைப் பொறுத்தவரையில் தன்னுடைய அதிகாரம் முறிக்கப்பட்டுள்ளது என்று அவருக்குத் தெரிந்த மாத்திரத்தில் (பிரிவு 208),

(2) மூன்றும் ஆட்களைப் பொறுத்தமட்டில் அதிகாரம் முடிவுறப்பட்டிருப்பது தெரியும்வரை, அவர்கள் முகவருடன் செயல் தொடர்பு வைத்துக் கொள்ளலாம் (பிரிவு 208).

(3) முகவரின் அதிகாரங்கள் முறிவு பெற்றுவிட்ட மாத்திரத்தில், துணை முகவர்களின் அதிகாரங்களும் முடிவு பெற்று விடுகின்றன.

**முகவரின் கடமைகள் (Duties of Agent)**

(1) தொழிலில் செய்முறை பற்றிய கட்டளைகள் எதுவும் முதலரால் கொடுக்கப்படாதிருந்தால், வட்டார வழக்குப்

படியோ தொழில் வழக்காறு அடிப்படையிலோ முகவர் செய லாற்ற வேண்டும் (பி. 211).

(2) அதிகார விரிவளவுக்குள்ளிருந்தே முகவர் எப்பொழுதும் செயல்பட வேண்டும். அத்துடன் அவர் முதலரின் வெளிப் படையான கட்டளைகளுக்கும் இசைந்து செயல் ஆற்றவேண்டும். நல்லெண்ணத்துடனும் முதலரின் நலனை முன்வைத்தும் செயல் படுவதோடு வேறுபட்ட வழியில் செயல்பட்டிருந்தபோதும், அதனால் முதலருக்கு இழப்பு ஏற்படுமாயின் அதனை முகவர் ஈடுசெய்தல் வேண்டும் (பிரிவு 211).

(3) ஒத்த தொழிலில் ஈடுபட்டுள்ளோர் பொதுவாகப் பெற்றிருக்கும் அளவில் தன் திறமையைப் பயன்படுத்தி முகவர் தொழிலை நடத்த வேண்டும். அந்த அளவுக்குள்ள திறமை முக வருக்கில்லையென, முதலருக்குத் தெரிந்திருந்தால் முகவரை இந்த கட்டுவரம்பு கட்டுப்படுத்தாது. ஆனால் பொதுவாகத் தான் பெற்றுள்ள திறமையையும் நுண்ணறிவையும் நேர்மையான முறையில் தான் மேற்கொண்ட தொழிலில் முகவர் பயன்படுத்த வேண்டும். முதலர் அவ்வாறு செய்யத் தவறினால் தன் கவனக் குறைவு, திறமையின்மை, ஒழுங்கீனம் ஆகியவற்றால் ஏற்படும் நேரடியான விளைவுகளை ஈடுசெய்ய முகவர் முதலருக்குக் கடமைப் பட்டுள்ளார் (பிரிவு 212).

(4) முகவர், முதலரின் கோரிக்கைக்கு இணங்கிச் சரியான கணக்குக் கொடுக்க வேண்டும் (பிரிவு 213).

(5) தொழில் நடைமுறையில் தடங்கள் ஏற்படும்பொழுது தன் பொதுவான அறிவுத்திறனைப் பயன்படுத்தி முதலரோடு தொடர்பு கொண்டு அவரது உத்தரவைப் பெற்று அதன்படி முகவர் செயல்பட வேண்டும் (பிரிவு 214).

(6) முகவர் தன் சொந்தக் கணக்கில் முதலரின் இசைவு இன்றித் தொழில் நடத்தக் கூடாது. அதற்குத் தவறினால் முதலர் அத்தொழின் செயல்முறைகளை ஏற்க மறுக்கலாம் (பிரிவு 215). அதோடு அத்தொழில் செயல்முறைகளின் விளைவாகக் கிடைக்கப்பெற்ற அனுகூலத்தையும் முகவரிடமிருந்து கோரிப் பெறலாம் (பிரிவு 216).

(7) சட்டப்படிக் கழித்துக் கொள்ளும்படியான ஊதியம் மற்றும் செலவுகளைத் தவிர்த்துத் தான் பெற்ற இரகசியத் தரகு (Secret Commission) உட்பட உள்ள எல்லாப் பணத்தையும் முகவர், முதலரிடம் ஒப்படைத்துவிடவேண்டும்.

### முகவரின் உரிமைகள் (Rights of Agent)

*(1)* ஊதியம் கோரும் உரிமை முகவரின் முதலானதும் முக்கியமானதுமான ஒன்று. இந்த உரிமை கைம்மாறு இல்லாமல் அமர்த்தப்பட்டுள்ள முகவர்கள் (Appointment is Gratuitous) தவிர மற்றெல்லாருக்கும் உண்டு. முகவர்—முதலர் ஒப்பந்தத்தில் ஊதியத்தைப் பற்றிக் குறிப்பிடாதிருப்பினும் சந்தர்ப்பச் சூழ் நிலைகளை வைத்து முகவர் ஊதியம் பெறும் உரிமை உடையவரா அல்லரா என்பதை ஊகித்து அறிந்துக்கொள்ள வேண்டும். ஊதியம் கொடுப்பதாக ஒப்பந்தத்தில் கண்டிருந்தால், அதனை முகவர் பெறுவதில் முதலர் எந்த வகையிலும் தடை ஏற்படுத்த முடியாது. ஊதியம் கோரும் உரிமை ஒப்பந்தப்படி உள்ள செயல்கள் அனைத்தையும் நிறைவேற்றியவுடன் தானே எழுகிறது.

*(2)* முகவரியத் தொழிலில் இருந்து வந்த பணத்திலிருந்து அத்தொழில் நடத்துவதில் முகவர் தனக்குரிய ஊதியம், சம்பந் தப்பட்ட செலவுகள் முதலியவற்றைத் தன்னிடமே நிறுத்தி வைத்திருக்கலாம் (பிரிவு 217)

*(3)* முகவருக்கு சில, சந்தர்ப்பங்களில் முதலரின் சொத்தில் பற்றுரிமை உண்டு (Agent has a lien on his Principal's Property) ஒப்பந்தத்தில் மாறுகச் சொல்லப்படாதிருந்தால் (In the Absence of a Contract to the Contrary) தனக்குச் சேரவேண்டிய பணத் திற்காக முதலருடைய பொருட்கள் (Goods), பத்திரங்கள் மற்றும் அசைவியல், நிலையியல் சொத்துக்களில் முகவருக்குப் பற்றுரிமை உண்டு (பிரிவு 221).

*(4)* அதிகார விரிவளவுக்குள்ளிருந்து சட்டப்படி செயற் பட்டு அதில் முகவருக்கு இழப்பு ஏற்படுமாயின் அதனை முதலரிடம் ஈடு செய்யக் கோரும் உரிமை முகவருக்குண்டு (பிரிவு 222).

*(5)* குறித்த வேலையை நல்லெண்ணத்துடன் செய்துமுடித் தும் அதன் விளைவால் மூன்றும் ஆளுடைய உரிமைக்கு ஊறு ஏற்பட்டிருந்தால், அதனை முதலரிடம் ஈடுசெய்யும்படிக் கோரும் உரிமை முகவருக்கு உண்டு (பிரிவு 223). குற்றச் செயல்களைப் பொறுத்தமட்டில் (Criminal Acts) முகவருக்கு இந்த உரிமை கிடையாது (பிரிவு 224).

### மூன்றுந் தரப்பினருக்கு முதலரின் கடப்பாடு (Liability of Principal to Third Parties)

1. முகவரியம் பிரதிநிதித்துவத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், முகவரால் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்

தங்களுக்கும், செயல்களின் விளைவுகளுக்கும் முதலரே கடப் பாடுடையவராவார் (பிரிவு 226).

(2) தோற்ற அதிகார (Ostensible Authority) வரம்புக்குள் ஆனால் உண்மை அதிகாரத்தை (Auctual or Real Authority) விஞ்சி ஒரு முகவர் செயல்பட்டிருந்தால் அச் செயல்களுக்கும் கடப்பாடுகளுக்கும் மூன்றாம் ஆட்களைப் பொறுத்தவரையில் முதலரே பொறுப்புடையவராவார். அதிகாரத்துக் கதிகமாகச் செயற்படும்போது முதலர் அச் செயல்களை ஏற்றுக்கொள்ளலாம். அவ்வாறான விஞ்சிய செயலை முதலர் ஏற்றுக்கொள்ளவில்லை யெனில், அந்தச் செயலில் எந்த அளவு முகவரின் அதிகார விரிவளவுக்குள் செய்யப்பட்டதோ அந்த அளவு (பகுதி) முதல ரைக் கட்டுப்படுத்தும் (பிரிவு 227). விஞ்சிய செயல், அதிகாரத் துக்குட்பட்ட செயல் என்று பிரிக்க முடியாத நிலையில், மொத்தச் செயல் முறையும் முதலர் ஏற்புறுதி வழங்காவிடில், அவரைக் கட்டுப்படுத்தாது 2 (பிரிவு 227).

'அ' என்பவர் ஒரு கப்பலுக்கும் அதிலுள்ள சரக்குகளுக்கும் சொந்தக்காரர். 'அ'வுக்கு அதிகாரம் அளித்துக் கப்பலை ரூபாய் 40,000-க்கு காப்பீடு (Insurance) செய்யச் சொன்னார். 'ஆ' கப்பலுக்கும், சரக்குகளுக்கும் தனித்தனியாக ரூ. 40,000-க் கான காப்பீடு ஒப்பந்த இதழ்கள் (Policy) இரண்டினைப் பெற்று வந்தார். 'அ' கப்பலுக்கான காப்பீட்டுக்கு மட்டுமே காப்புக் கட்டணம் செலுத்தக் கடமைப்பட்டுள்ளார். சரக்குகளுக்கான காப்பீட்டுக்குள்ள கட்டணத்துக்கு 'அ' பொறுப்பாக மாட்டார்.

(3) முகவர் தொழில் நடத்தும் பொழுது அவருக்குக் கொடுக்கப்பட்ட அறிவிப்பு (Notice)களுக்கும் பெற்ற செய்தி களுக்கும் முதலரே கட்டுப்படுவார் (பிரிவு 229).

(4) பெயர் வெளிப்படுத்தப்படாத முதலரின் (Undisclosed Principal) சார்பாக முகவர் மூன்றாம் நபர்களுடன் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தால், முதலரின் பெயர் வெளிப்பட்ட பின் மூன்றாம் நபர்கள் முதலரின் மேல் அந்த ஒப்பந்தத்தின்மீது நட வடிக்கை எடுக்கலாம். இதுபோன்ற ஒப்பந்தங்களுக்கு முகவர் தானாகப் பொறுப்புடையவராக மாட்டார். Universal Steam Navigation Co., Ltd *vs*. James Mc Elvie & Co., (1923) A. C. 492.

(5) முகவர் தானாகப் பொறுப்புக்குள்ளாக வேண்டி வரும் சூழ்நிலைகளில் முகவருடன் தொழில் ஈடுபாடு கொண்ட மற்றவர், முதலரையோ, முகவரையோ இருவரையுமோ பொறுப்புக்குள்

ளாக்கலாம் (பிரிவு 233). ஆனால் ஆங்கிலச் சட்டப்படி இருவருள் யாராவது ஒருவர்மீது தான் நடவடிக்கை எடுக்க முடியும். பிரிவு 234-ன் படி மூன்றும் ஆள் இருவருள் ஒருவரை அவருக்குப் (மூன்றும் ஆள்) பொறுப்பில்லையென நம்புமாறு தூண்டியிருந்தால், அவ்வாறு தூண்டப்பட்டவர்மீது நடவடிக்கையேதும் எடுக்க முடியாது. தூண்டப்படாத மற்றொருவர்தான் பொறுப்புக்குள்ளாவார்.

(6) முகவர் மேற்கொண்ட தொழிலில் தன்னுடைய சொந்த நலனுக்காகப் பொய்யுரை பகன்றோ, மோசடி செய்தோ இருந்தால், அதற்கு முதலரே பொறுப்பாவார். Lloyd vs. Gracc, Smith & Co., (1912) A.C. 716 பொய்யுரை அல்லது வஞ்சகம் முகவர் பெற்ற அதிகாரத்துக்கு அப்பாற்பட்ட செயல்களைப் பொறுத்தனவாக இருந்தால், அவை முதலரைப் பாதிப்பதில்லை (பிரிவு 238).

மூன்றுந் தரப்பினர்களுக்கு முகவரின் கடப்பாடு (Liability of Agent to Third Parties)

1. பிரிவு 230-ல் கூறப்பட்டிருப்பதன் அடிப்படையில் ஒரு முகவர், முகவரியத்தில் செய்துகொண்ட ஒப்பந்தங்களுக்குத் தனிப்பட்ட முறையில் பொறுப்பு இல்லாதிருந்தும், சில சார்தார்ப்பங்களில் தானே பொறுப்பேற்க வேண்டிய நிலையும் ஏற்படுகிறது.

(i) சரக்குகள் வாங்க அல்லது விற்க வெளிநாட்டு வணிகரோடு முகவர் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தால்,

(ii) முகவர் முதலர் பெயரை வெளிப்படுத்தாதிருந்திருந்தால்,

(iii) முதலர் பெயர் வெளிப்படுத்தப்பட்டிருந்தாலும் அவர் மீது நடவடிக்கை எடுக்க முடியாத நிலையிலிருந்தால், (அதாவது சட்டத் தகவுடைமை பெற்றிராதிருந்தால்)

(2) பிரிவு 235-ன் படி, ஒருவர், மற்றொருவரிடம் தன்னை அதிகாரம் பெற்ற முகவர் என்று குறித்துக் காட்டி, அதனால் மூன்றும் நபர் தூண்டப்பட்டு அவரை முகவர் என்று எண்ணித் தொடர்பு கொண்டபின், அவரது செயல்கள் குறிப்பிடப்பட்ட முதலரால் ஏற்கப்படா விட்டால், அச் செயல்களால் ஏற்படும் இழப்பு அல்லது சேதத்தை மற்றவருக்கு ஈடுசெய்து கொடுக்கக் கடமைப் பட்டுள்ளார்.

(3) முகவர் என்ற தன்மையில் ஒருவரோடு ஒப்பந்தம் செய்து கொண்டால், அவர் உண்மையில் முகவராகச் செயல்படாது தான் தனிப்பட்ட வகையிலேயே செயல்படுவதாக இருப்பின், அவருக்கு அந்த ஒப்பந்தத்தை செல்லாற்றக் கோரும் உரிமை இல்லாதாகி விடுகிறது (பிரிவு 236).

# 4. சரக்கு விற்பனை
## (Sale of Goods)

**சரக்கு விற்பனைச் சட்டம் (1930) (The Sale of Goods Act. No. iii of 1930)**

சரக்கு விற்பனை ஒப்பந்தம் என்பது பொதுவாக இன்று எல்லா வாணிக நடவடிக்கைகளிலும் வழக்கத்திலிருக்கின்ற ஒன்றாகும். 1930-ம் ஆண்டில் இயற்றப்பட்டு நடைமுறையில் இருந்து வருகிறது. இது, சர் மெக்கன்சி சால் மெர்சு (Sir Mac-kenzie Chal Mers) என்னும் சட்ட நிபுணரால் உருவாக்கப் பெற்ற ஆங்கிலச் சரக்கு விற்பனைச் சட்ட (1893) த்தைத் தழுவி இயற்றப் பெற்றுள்ளது. இந்தியாவில் இத் தனிச் சட்டம் நடைமுறைக்கு வருமுன் சரக்கு விற்பனை பற்றிய சட்டவிதிகள், இந்திய ஒப்பந்தச் சட்டத்தில் (1872) ஏழாவது அத்தியாயத்தின் 76 முதல் 123 வரையுள்ள பிரிவுகளில் கூறப்பட்டிருந்தன. இவை தொழில்களின் துரித வளர்ச்சியால் ஏற்பட்ட வணிக நடைமுறைகளின் புதிய சூழ்நிலைகளைச் சரி செய்யப் போதுமானவையாக இல்லை என அறியப்பட்டதால், ஒப்பந்தச் சட்டத்திலிருந்து நீக்கப் பெற்று 1930-ல் தனிச் சட்டமாக்கப்பட்டது.

**(I) ஒப்பந்தம் உருவாதல் (Formation of the Contract)**
**விற்பனை ஒப்பந்தம் (Contract of Sale)**

ஓர் ஒப்பந்தத்தின் மூலமாக விற்பவர், வாங்குபவருக்கு ஒரு விலைக்குச் சரக்கினை (உரிமைப் பொருளை) (Property) மாற்றினால் அல்லது மாற்றித் தருவதாக ஒப்புதல் செய்தால், அந்த ஒப்பந்தம் சரக்கு விற்பனை ஒப்பந்தம் எனப்படும்.

பகுதி உரிமையாளரொருவருக்கும் (Part-Owner) மற்றொரு பகுதி உரிமையாளருக்கும் இடையேயும் ஒப்பந்தம் உருவாகலாம். பிரிவு 4 (1) விற்பனை ஒப்பந்தம் முழுமையானதாகவோ கட்டுவரம்புடன் கூடியதாகவோ இருக்கலாம்.

(Absolute of Conditional) பிரிவு 4 (2)

சரக்கு (Goods)

தொடர்தகு பாத்தியம் (Actionable Claims) தவிர்த்து ஏனைய எவ்வொருவகை அசைவியல் சொத்தும் (Movabl Property) சரக்கு என்று பொருள்படும். பிரிவு 2 (7), தொடர் தகு பாத்தியத்தின் பொருள் விளக்கமானது சொத்துரிமை மாற்றடைவுச் சட்டத்தின் (Transfer of Property Act) 3-வது பிரிவிலும், அசைவியல் சொத்தின் வரைவுரையானது, பொது விதிகள் சட்டத்தின் (General Clauses Act) 3-வது பிரிவு 34-வது விதியிலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆங்கிலச் சட்டப்படி தொகைப் பங்குகளும் பங்குகளும் (Stock and Shares) சரக்கு களாகா. இந்தியச் சட்டத்தில் (பிரிவுக் கௌன்சில்) Maneckji *vs*. Wadilal-ல் எடுத்துரைக்கப்பட்டுள்ளபடி அவை சரக்கு களாகப் பிரிவு 2 (7)-ல் சேர்க்கப்பட்டுள்ளன. இருநாட்டுச் சட்டங்களிலும் பணம் சரக்காகக் கொள்ளப்படவில்லை.

விற்பனையும் விற்பனை ஒப்புதலும் (Sale and Agreement to Sell)

பிரிவு 4 (1)-ல் குறித்துள்ளபடி, விற்பனையோடு, விற் பனைக்கு ஒப்புதல் தெரிவிப்பதையும் விற்பனை ஒப்பந்தத்தின் வரைவுரைக்கு உட்படுத்தலாம். விற்பனை ஒப்பந்தத்திற்கும், விற்பனை ஒப்புதல் ஒப்பந்தத்திற்குமுள்ள வேறுபாடுகள் பிரிவு 4 (3)-லும் 4 (4)-லும் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

ஒரு விற்பனை ஒப்பந்தத்தின் கீழ் சரக்குகளின் உரிமைப் பொருள் (Property in the Goods) விற்றவரிடமிருந்து வாங்கிய வருக்கு மாற்றப்பட்டிருந்தால், அது விற்பனை எனப்படும். ஆனால் அந்த ஒப்பந்தத்தின்படி சரக்குகளின் உரிமைப் பொருள்கள் மாற் றம் பெறுவது எதிர் காலத்திலோ (Future Time) சில கட்டுவரம்பு கள் நிறைவு செய்யப்பட்ட பிறகோ என்றிருந்தால், அது விற்பனை ஒப்புதல் எனப்படும். குறிப்பிட்ட காலம் கடந்து விட்டால் அல்லது சரக்கின் உரிமைப் பொருள் மாறுவதற்கான கட்டுவரம்பு கள் நிறைவேற்றப்பட்டு விட்டால், விற்பனை ஒப்புதலானது விற் பனையாகி விடுகிறது.

சான்றுகள்

(1) 'அ', 'ஆ' வின் நிலத்திலுள்ள வைக்கோல் போரை (Hay Stock) அந்த நிலத்திற்குச் சென்று சுதந்திரமாக எடுத்து வரும் நோக்குடன் வாங்க இசைகின்றான். இது விற்பனையாகும். Wood *vs*. Manley (1839).

(2) 'அ', 'ஆ' விடமிருந்து குறிப்பிட்ட கப்பலில் கொண்டு வரப்படும் வெடியுப்பில் (Nitrate of Soda) ஒரு பகுதியை வாங்கு வதாக ஒப்புக் கொள்கிறான். இது இரண்டு கட்டுவரம்புக்கு உட் பட்ட விற்பனை ஒப்புதலாகும். முதல் கட்டுவரம்பு-அந்தக் கப்பல் வந்து சேர வேண்டும் என்பது. இரண்டாவது கட்டுவரம்பு அக் கப்பலில் குறிப்பிட்ட சரக்கு வந்து சேர வேண்டும் என்பதாகும். Johnson vs. Macdonald (1842) விற்பனைக்கும் விற்பனை ஒப்பு தலுக்குமுள்ள முக்கியமான சில வேறுபாடுகளை பின் வருமாறு பிரித்துக் காட்டலாம்.

1. விற்பனையானது, சரக்கின்மீதுள்ள பொதுவான உரிமைப் பொருளை வாங்குபவருக்கு மாற்றுகிறது. அதாவது விற்பனை யானது, மன்று சுட்டிய உரிமையை (Jus in Rem) ஏற்படுத்து கிறது. விற்பனை ஒப்புதலில், உரிமைப் பொருள் மாறுவதில்லை. ஆனால் இரு தரப்பினருக்குள் உடன்பாட்டை நிறைவேற்றத் தவறியவரின் மீதோ அவரது பொதுச் சொத்துக்கள் மீதோ மற்ற வருக்குத் தீர்வழி (Remedy) யுண்டு. அதாவது விற்பனை ஒப்புத லானது, நபர் சுட்டிய உரிமையை (Jus in Personam) வழங்கு கிறது.

2. விற்பனை நடந்தபின் வாங்கியவர் சரக்குகளுக்கான பணத் தைக் கொடுக்கத் தவறினால் விற்றவர் சரக்குகளின் விலைக்காக வழக்கிடலாம். ஆனால், விற்பனை ஒப்புதலில் வாங்கியவரால் சரக்கு ஏற்றுக் கொள்ளப்படாமலும், விலை கொடுக்கப்படாம லும் இருந்தால், அவற்றுக்காக விற்றவர் இழப்பீடுகோரி மட்டுந் தான் வழக்கிடலாம் (Damages for Non-Acceptance) (பிரிவு 55, 56).

3. விற்பனை ஒப்புதலுக்கான உடன்பாடு இருந்து, அதனை விற்பவர் மீறினால், வாங்குபவருக்கு, விற்பவர்மீது ஆள் எதிர் தீர்வழி மட்டுந்தான் உண்டு (Personal Remedy). எனவே விற் பவர் மீது இழப்பீட்டுக்காக மட்டும் வழக்கிடலாம். சரக்குகளி லுள்ள உரிமைப் பொருள் விற்றவரிடம் இருந்து கொண்டிருப்ப தால், அவர் விருப்பப்படி அதைக் கையாண்டு கொள்ளலாம். ஆனால் பொருள் விற்பனையாகியிருந்து விற்றவரால் ஒப்பந்த மீறுகை ஏற்பட்டிருந்தால், வாங்கியவருக்கு ஆள் எதிர்தீர்வழி மட்டுமின்றி, விற்றவர் மீது, கையாடல் அல்லது தடைப்படுத்தி வைத்தல் (Conversion and Detinue) போன்ற தவறுகளுக்காக வழக்கிடுதல் போன்ற சரக்குகளின் சொந்தக்காரருக்குரிய தீர்வழி யும் உண்டு. பல சூழ்நிலைகளில் சரக்கு மூன்றும் ஆள் கைக்குப் போயிருந்தாலுங்கூட அவற்றைப் பின் தொடர்ந்து, வாங்கியவர்

மீட்க வழியுண்டு. இத்தகைய உரிமை பெறுவதற்குக் காரணம் 'விற்பனை'யில் சரக்குகளின் மீதுள்ள உரிமைப் பொருள் வாங்கியவருக்கு மாறிவிடுவதால், அவர் அவற்றுக்கு உரிமையாளராகி விடுவதேயாகும்.

4. விற்பனை ஒப்புதலில், சரக்குகள் அழிந்து போயிருந்தால் அவற்றுக்குரிய இழப்பு (வேறுவகையில் உடன்பாடில்லாதிருந்தால்) விற்றவரையே சாரும். 'விற்பனை'யில் அவற்றுக்கான இழப்பு (வேறுவகையில் உடன்பாடு இல்லாதிருந்தால்) சரக்குகளை வாங்கியவர் உடைமைக்கு வராதிருந்த போதிலும், வாங்கியவரையே சாரும்.

**விற்பனை ஒப்பந்தமும் வேலை ஒப்பந்தமும் (Contract of Sale and Contract for Work)**

விற்பனை ஒப்பந்தத்தில் சரக்கு ஒப்படைக்கப்படுதல் (Delivery of Goods) முக்கிய கூறுகும். வேலை ஒப்பந்தத்திலோ வேலை செய்பவரின் அறிவு நுட்பமும் தொழிலுமே அடிப்படை யாகும் (Skill and Labour). சரக்கு ஒப்படைக்கப்படுதல் முக்கிய கூறன்று.

Lee *vs.* Griffins (1861) 30 L.J.Q. B. 252. ஒரு நோயாளியின் வாயில் பொருத்தப்படுவதற்கான, செயற்கைப் பற்கள் வழங்குவதற்கான ஒப்பந்தம் விற்பனை ஒப்பந்தம் என்று தீர்மானிக்கப்பட்டது.

Robinson *vs.* Graves (1935) I. K. B. 579. ஒருவர், ஓவியரிடம் வரை பொருட்களும் வரை துணியும் (**Canvas and Painting Materials**) கொடுப்பதாக இசைந்து, குறிப்பிட்ட தொகைக்கு ஓவியம் வரைந்து கொடுக்க வேண்டிச் செய்துகொண்ட ஒப்பந்தம் வேலை அல்லது தொழில் ஒப்பந்தமாகக் கொள்ளப்பட்டது.

**விற்பனையும் தவணை முறைக் கிரயமும் (Sale and Hire-Purchase)**

இன்று வழக்கிலுள்ள அங்கீகரிக்கப்பட்டுள்ள விற்பனை முறைகளில் ஒன்று, பொருளை வாடகைக்கு எடுத்துப் பொருளின் விலையைத் தவணை முறைகளில் செலுத்தி இறுதித் தவணை செலுத்தியவுடன் அவ்வாறு வாடகைக்கு எடுத்தவருக்கு அப்பொருள் சொந்தமாவதாக உடன்பாடு செய்து கொள்ளுதல் ஆகும். இந்தத் தவணை முறை கிரயத்தின்படி ஒப்புக்கொண்டத் தவணை தொகையைத் தவறுமல் குறிப்பிட்டப்படி செலுத்தப் படும் வரை, தவணைக்கு வாங்கியவர், ஒப்படைவு பெறுபவர் (Bailee) என்ற நிலையில் இருக்கிறார். இந்த முறையில் சரக்குகளின் உரிமைப் பொருள், தவணைத் தொகை முழுமையும் செலுத்தப்

படும்வரை தவணையில் வாங்கியவருக்கு (ஒப்படைவு பெற்ற வருக்கு) மாறுவதில்லை. ஆதலால் தவணைமுறைக் கிரய ஒப்பந்தம் விற்பனை ஒப்புதல் அல்லது ஒப்படைவு (Bailment) ஒப்பந்தமாகவே கருதப்படும். இந்த ஒப்பந்தத்தின்படி தவணைத் தொகைகள் செலுத்தப்படாதிருந்தாலோ மற்றுமுள்ள கட்டுவாசகங்கள் தவணைமுறையில் வாங்கியவரால் மீறப்பட்டாலோ, பொருளைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டிய பொறுப்பு வாங்கியவருக்கு உண்டு.

### ஒப்பந்தத்தின் விதிமுறை ஒழுங்குகள் (Formalities of the Contract)

ஏனைய ஒப்பந்தங்களைப் போலவே விற்பனை ஒப்பந்தமும் முனைவு, ஏற்பு ஆகியவற்றால் உருப்பெறுகிறது. ஒப்பந்தங்கள் செல்லுடைமையாவதற்கான எல்லா முக்கிய கூறுகளும், விற்பனை ஒப்பந்தத்திற்கும் தேவையாகும். விற்பனை ஒப்பந்தம் எவ்வாறு செய்துகொள்ளப்படுகிறது என்பது பற்றி பிரிவு 5 (1) பின்வருமாறு கூறிச் செல்லுகிறது :

*விலைக்குச் சரக்குகள் வாங்க அல்லது விற்க முனைவு தெரிவித்து அந்த முனைவு ஏற்பு பெற்றுவிட்டால் விற்பனை ஒப்பந்தம் உண்டாகி விடுகிறது.*

இந்த ஒப்பந்தத்தில் சரக்குகள் உடனடியாக ஒப்படைக்கப் படவோ — விலை உடனடியாகக் கொடுக்கப் படவோ — இரண்டும் உடனடியாக நடக்க வேண்டுமென்றோ எப்படியேனும் வகை செய்து கொள்ளலாம். இவையே யன்றிச் சரக்குகள் ஒப்படைக் கப்படுவதும், விலை செலுத்தப்படுவதும் தவணை முறையில் இருக் கலாம் என்றாவது ஒப்படைக்கப் படுவதும் விலை செலுத்தப்படுவ தும் காலம் தாமதித்து இருக்கலாம் என்றாவது வகை செய்து கொள்ளலாம்.

இந்த ஒப்பந்தம், எழுத்து மூலமோ வாய்ச்சொல் மூலமோ இருக்கலாம்; தரப்பினரின் நடவடிக்கைகளிலிருந்தும் ஊகித்து உணர்ந்து கொள்ளுமாறு அமையலாம் பிரிவு 5 (2).

ஒருவர், ஒரு கடையினுள் சென்று விற்பனைக்காக வைக்கப் பட்டிருந்த பொருட்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துச் செல்வதா யிருந்தால், அந்தச் செயல் அவர் அப்பொருளைக் குறிப்பிட்டிருந்த விலைக்கோ, விலை குறிப்பிடாதிருந்தால் நியாயமான ஒரு விலைக்கோ வாங்கியிருப்பதைக் குறிக்கும்.

**ஒப்பந்தத்தின் உட்கிடைப் பொருள் (Subject-Matter of the Contract)**

விற்பனை ஒப்பந்தத்தின் உட்கிடைப் பொருளாக அமைவன சரக்குகள் சரக்குகளின் வரைவுரைப் பிரிவு 2 (7)-ல் மேலே கண்டோம். இந்தச் சரக்குகள் விற்பவரின் உடமையிலோ சொந்தத்திலோ இருக்கும். உள்ள பொருட்களாகவோ (Existing Goods) உளதாகும் (Future Goods) பொருட்களாகவோ இருக்கலாம் பிரிவு 6 (1).

குறிப்பிட்ட வயலில் விளைந்துக் கொண்டிருக்கும் நெல், அல்லது குறித்த ஒரு தொழிற்சாலையில் உற்பத்தி செய்யவிருக்கும் பொருள், ஒப்பந்தத்தின் உட்கிடைப் பொருள்களாக அமையலாம்.

மேலும் ஒப்பந்தத்தின் உட்கிடைப் பொருள், குறித்த சரக்காகவோ (Specifie Goods) குறித்திடாச் சரக்காகவோ (Unascertained) இருக்கலாம். விற்பனை ஒப்பந்தத்தின் பொருள் குறிப்பிட்ட ஒரு யானை அல்லது மோதிரம் என்றிருந்தால் அது குறித்த சரக்கு; ஆட்டு மந்தையிலிருந்து இரு ஆடுகள் என்றிருந்தால் அது குறிப்பிடாச் சரக்காகும். மந்தையிலுள்ள ஆடுகளிலிருந்து இரண்டு ஆடுகளைப் பிரித்துக்காட்டும் அளவுக்குக் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டிருந்தால், அவை குறித்த சரக்காகும்.

ஒப்பந்தம் செய்யப்படும் சமயத்தில் விற்பவருக்குத் தெரியாமல் சம்பந்தப்பட்ட சரக்குகள் அழிந்துபட்டு அல்லது ஒழிந்து போயிருந்தாலும், ஒப்பந்தம் செய்துகொண்ட பின்னர் விளைவுக்குரிய பொறுப்பு (Risk) வாங்கியவருக்குப் போய்ச் சேருமுன், விற்றவர் மீது எந்தத் தவறும் இல்லாமல் சரக்குகள் அழிந்து விட்டாலும் அந்த ஒப்பந்தம் இல்லா நிலையதாகி (Void) விடுகிறது. இந்தக் கொள்கை பிரிவு 7, 8 ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

குறிப்பிட்ட ஒரு குதிரையை 'ஆ'விடமிருந்து 'அ' விலைக்கு வாங்க உடன்படுகிறான். இந்த உடன்பாடு குறித்துப் பேரம் பேசும் போதே குறிப்பிட்ட குதிரை இறந்துபோய் விட்டதாகப் பின்னர் தெரியவருகிறது. இந்த ஒப்பந்தம் இல்லா நிலையதாகும்.

**விலை (Price)**

சரக்கு விற்பனைக்கு மறுபயனாகக் கொடுக்கப்படும் பணம் விலையெனப்படும் பிரிவு, 2 (10). விலை கொடுக்கப்பட வேண்டியது விற்பனை ஒப்பந்தத்தின் ஒரு முக்கிய கட்டுவரம்பாகும். எனவே பண்டமாற்று, இந்த ஒப்பந்தத்துக்கு உட்படாது. பிரிவு 9-ன்

படி விலையானது கீழ்க் குறிப்பிடும் நான்கு வகைகளில் திட்டப் படுத்தப் படுகிறது.

(i) ஒப்பந்தத்தினுலேயே திட்டப்படுத்தப் படுதல்.

(ii) ஒப்புக் கொண்டுள்ள முறையைக் கையாண்டு விலையைத் திட்டப்படுத்தல். (சான்று: குறிப்பிட்ட நாளில் நிலவுகிற சந்தை விலை)

(iii) இருதரப்பினருக்குமுள்ள நடப்பு முறைகளிலிருந்து (Cours of Dealings) (சான்று: உற்பத்தி விலை; சந்தை விலை; நியாய விலை)

(iv) நியாயமான விலை.

கட்டுவரம்புகளும் நம்புறுதிகளும் (Condition and Warranties)

ஓர் ஒப்பந்தத்தின் வரைவுரைகள் (Terms) அல்லது குறிப்பிடுகைகள் (Stipulations) கட்டுவரம்புகளாகவோ, நம்புறுதிகளாகவோ இருக்கலாம். இது பற்றிய வரைவுரை 12-வது பிரிவில் கூறப்பட்டுள்ளது.

(1) சரக்கினை உட்பொருளாகக் கொண்ட விற்பனை ஒப்பந்தத்தின் ஒரு குறிப்பிடுகையானது, கட்டுவரம்பாக அல்லது நம்புறுதியாக இருக்கலாம்.

(2) கட்டுவரம்பு என்பது ஒப்பந்தத்தின் முதன்மையான நோக்கத்திற்கு இன்றியமையாத ஒரு குறிப்பிடுகையாகும். இதன் மீறுகை (Breach) ஒப்பந்தத்தை உதறித் தள்ளும் (கைவிடும்) (Repudiate) உரிமையை வழங்குகிறது.

(3) நம்புறுதி என்பது ஒப்பந்தத்தின் முதன்மையான நோக்கத்திற்குத் துணை நிற்கும் ஒரு குறிப்பிடுகையாகும், இது மீறப்பட்டால் இழப்பீடு கோரும் உரிமைதானுண்டு. சரக்குகளை ஏற்றுக்கொள்ள மறுக்கும் உரிமையோ, ஒப்பந்தத்தைக் கைவிடும் உரிமையோ கிடையாது.

(4) ஒரு விற்பனை ஒப்பந்தத்தின் குறிப்பிடுகையானது கட்டுவரம்பா நம்புறுதியா என்பது ஒவ்வொரு ஒப்பந்தத்தின் அமைப்பையும் பொறுத்துள்ளது. ஒப்பந்தத்தின் ஒரு குறிப்பிடுகை நம்புறுதியென்று குறிப்பிடப்பட்டிருந்தால், அந்த ஒப்பந்தத்தின் அமைப்பையொட்டி அது கட்டுவரம்பாக இருத்தல் கூடும்.

விற்பனை ஒப்பந்தத்தில் விற்பவரது கடப்பாடுகள் (Obligations) எல்லாம் ஒரேவிதமான முக்கியத்துவம் கொண்டதாக இருப்பதில்லை. சில பொறுப்புக்கள் ஒப்பந்தத்தின் அடித்தளத்திற்கோ கருப்பகுதிக்கோ (Substance) நேரடியாகச் சென்று விடுகின்றன. ஆகவே அக்கடமைகள் நிறைவேற்றப்படாமலிருந்தால், எந்தக் குறிக்கோளுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டதோ அந்தக் குறிக்கோள் அடங்கிய ஒப்பந்தம் தோல்வியடைந்ததாகக் கருதப்படும். அந்தக் கடமைகளும் பொறுப்புகளுமே இங்கு கட்டுவரம்புகள் என்று குறிக்கப்படுகின்றன. ஓர் ஒப்பந்தத்தில் கோதுமை விற்பதாக இருந்து, கோதுமைக்குப் பதிலாக வேறு ஏதாவது தானியத்தை அனுப்பினல், அது கட்டுவரம்பு மீறுகை (Breach of Condition) யாகும்.

வேறுசில பொறுப்புக்களும் கடமைகளும் தவறினுலும் அவை ஒப்பந்தத்தின் முக்கியத்துவத்தைப் பாதிப்பதில்லை. அத்தகைய பொறுப்புக்களும் கடமைகளும் இங்கு நம்புறுதிகள் எனப்படும்.

கட்டுவரம்புகளும் நம்புறுதிகளும் வெளிப்படையானவைகளாகவோ, சட்டத்தால் ஊகிக்கக் கூடியவைகளாகவோ இருக்கலாம். பி. 12-ல் கண்டுள்ளபடி வெளிப்படை வரையுரை கட்டுவரம்பா அல்லது நம்புறுதியா என்பது, தரப்பினரின் நோக்கைப் பொருத்துள்ளது.

**விற்பனை ஒப்பந்தத்தின் உட்கிடை கட்டுவரம்புகளும் நம்புறுதிகளும் (Implied Conditions and Warranties in a Contract of Sale)**

இவை 14 முதல் 17 வரையுள்ள பிரிவுகளில் கூறப்பட்டுள்ளன. முரண்பட்ட உடன்பாடு எதுவும் இல்லாதிருந்தால் (In the Absence of an Agreement to the Contrary) கீழ்க்காணும் கட்டுவரம்புகள் ஒவ்வொரு விற்பனை ஒப்பந்தத்திலும் உள்ளடங்கி இருப்பதாகக் கருதவேண்டும்.

(1) விற்பவருக்கு உரிமை மூலம் வேண்டும் (Condition as to Title)

விற்பவர் விற்பனை (Sale)யில் சரக்குகளை விற்கும் உரிமையைப் பெற்றிருத்தல் வேண்டும். விற்பனை ஒப்புதலில் (Agreement to Sell) சரக்குகளின் உரிமைப்பொருள் கைமாறும் நேரத்தில் (Passing of Property) அந்த உரிமையைப் பெற்றிருத்தல் வேண்டும் பிரிவு 14(a).

**Niblett vs. Confectioners Material Co. (1921) 3. K.B. 387**

'அ' தகர அடைப்புகளில் அடைக்கப்பட்டு 'Nissly Brand' என்று தாள் (Lable) ஒட்டி, செறிவுப்பாலே (Condensed Milk) 'ஆ'வுக்கு விற்கிறார். பின்னர் 'அ', 'நி' நிறுவனத்தின் வாணிகக் குறி (Trade Mark)யை மீறிப் பயன்படுத்தியதாக (Infringement) மெய்ப்பிக்கப்பட்டது. 'அ'வுக்கு அந்தப் பொருளை விற்கும் உரிமை இல்லாதிருந்தும் விற்றதால் அது 'அ' உரிமை மூல உட்கிடை கட்டுவரம்பை மீறியதாகும். ஆகவே 'ஆ' சரக்குகளை ஏற்க மறுக்கவோ தாள்களை நீக்கிவிட்டு, விற்பனை விலை குறைவுக்காக இழப்பீடு கோரவோ செய்யலாம் என்று முடிவாக்கப்பட்டது.

**(2) சரக்குகள், வருணனையை ஒத்திருத்தல் வேண்டும் (Goods Should Correspond with the Description)**

வருணனை விவரங்களின் அடிப்படையில் சரக்குகள் விற்பனைக்கான ஒப்பந்தம் இருந்தால், சரக்குகள், வருணனை விவரங்களை ஒத்திருத்தல் வேண்டும். மாதிரி (Sample) வருணனை இரண்டின் அடிப்படையிலும் விற்பதாக இருந்தால், மொத்தச் சரக்கும் மாதிரியை மட்டும் ஒத்திருந்தால் போதாது, வருணனைப்படியும் இருத்தல் வேண்டும் பிரிவு. (15).

**Varley vs. Whipp (1900) I Q.B. 513**

'அ' தன்னிடமுள்ள அறுவடை இயந்திரத்தை (Reaping Machine) 'ஆ'வுக்கு விற்கவும், 'ஆ' அதனை வாங்கிக் கொள்ளவும் (இருவரும்) உடன்பட்டனர். 'அ' அந்த இயந்திரத்தை முதலில் பார்த்ததில்லை. 'அ' என்பவன் அந்த இயந்திரத்தை ஓராண்டுக்கு முன்னர்தான் புதிதாக வாங்கியதாகவும் 50 முதல் 60 ஏக்கர் அளவில்தான் அந்த இயந்திரத்தைப் பயன்படுத்தி அறுவடை செய்ததாகவும் 'ஆ'விடம் கூறியிருந்தான். இயந்திரத்தைப் பெற்ற 'ஆ', 'அ' எடுத்துரைத்த விளக்கங்களையொத்து அந்த இயந்திரம் இல்லை என்பதை அறிந்தான். அது பழையதாகவும் பழுதுபார்க்கப்பட்டதாகவும் இருந்தது. விற்பனை வருணனையின் அடிப்படையில் இயந்திரம் வருணனைக்கு ஏற்ப இல்லாதிருந்ததால் 'ஆ' அதனை மறுத்துத் திருப்பியனுப்புவதற்குரிய உரிமையைப் பெற்றான்.

**(3) சரக்குகள் குறித்த காரியத்திற்கு உகந்ததாகப் பயன்படக் கூடியதாக இருத்தல் வேண்டும் (Goods shall be fit for the particular purpose)**

குறிப்பிட்ட காரியத்திற்குப் பயன்படக்கூடிய விதத்தில் விற்பனைச் சரக்குகளின் தரத்திற்கும் தகுதிக்கும் விற்பவர் உறுதி

யளிக்க வேண்டும். இந்தப் பொதுவான நியதிக்குப் பிரிவு 16 (1)-லும் (3)-லும் கீழ்க்காணும் இரு விதிவிலக்குகள் குறிப்பிடப் பட்டுள்ளன.

**முதல் விதிவிலக்கு பிரிவு 16 (1)**

(i) வாங்குபவர் விற்பவரிடம் சரக்குகள் எந்தக் காரியத்திற் காகத் தேவைப் படுகின்றன என்பதை அறிவித்திருக்க வேண்டும்.

(ii) வாங்குபவர், விற்பவரின் திறமையையும் நுண்ணறி வாற்றலையும் பெரிதும் நம்பியிருக்க வேண்டும்.

(iii) விற்பவர் தாமே உற்பத்தி செய்பவராயிருந்தாலும் இல்லாவிட்டாலும், தாம் வாணிகம் செய்யும் சரக்குகளின் வருணனைக்குட்பட்டவையாக இருக்க வேண்டும். இத்தனை கட்டு வரம்புகளும் ஒரு சேரக் காணப்பட்டால் விற்கப்படும் சரக்குகள் எதற்காக வாங்கப்படுகின்றனவோ அதற்கு ஏற்றதாக உள்ளது என்ற கட்டுவரம்பு உள்ளடங்கியிருப்பதை ஊகித்துணரலாம்.

ஆனால், ஆக்குப் பொருள் உரிமை அல்லது வாணிகக் குறிப் புடன் (Patent or Trade Mark) விற்கப்படுகின்ற ஒரு குறிப்பிட்ட பொருளுக்கான விற்பனை ஒப்பந்தத்தில் அப்பொருள் குறிப்பிட்ட காரியத்திற்கு உகந்ததாக இருக்க வேண்டுமென்ற கட்டுவரம்பு கிடையாது.

**இரண்டாம் விதிவிலக்கு பிரிவு 16 (3)**

ஓர் உட்கிடை நம்புறுதி அல்லது கட்டுவரம்பு, பொருளின் குறிப்பிட்ட உபயோகத்துக்கான தகுதி, திறன் ஆகியவைகளைப் பொறுத்தவரையில் வாணிக வழக்காறுகளைச் சார்ந்து இணைந் திருக்கலாம்.

BomBay, Burma Trading Corparotion Ltd. *vs.* Aga Muhammad) 34 Mad. 453.

புகைவண்டிப் பெட்டிகளுக்கு தூங்குவதற்கான பெட்டிகள் செய்வதற்கென்று குறிப்பிட்டு, மரம், வாங்கப்பெற்றது. அம் மரம் அவ்வுபயோகத்திற்குப் பயனுடைத்தாயில்லை என்று கண்டதால் நீதிமன்றம் ஒப்பந்தத்தைத் தவிர்த்து விடலாம் என்று முடிவு கூறியது.

**(4) வாணிகத்திற்கு உகந்தவையாய் இருத்தல் வேண்டும் (Merchantableness)**

சரக்குகள் வருணிக்கப்பட்டவாறு இருப்பதுமட்டுமன்றிச், சாதாரணமாகச் சந்தையில் ஒப்புக்கொள்ளுகின்ற அளவு தரமும் பெற்றிருக்க வேண்டும்.

விற்பவரிடமிருந்து வருணனைப்படி வாங்கிய சரக்குகள் அது போன்ற சரக்குகளில் விற்பவர் வாணிகம் செய்பவராயிருந்தால், (அவர் அச் சரக்குகளை உற்பத்தி செய்பவராகவோ, செய்யாத வராகவோ இருந்தாலும்) அவை வாணிகத்திற்கேற்ற தரம் உடையனவாயிருத்தல் வேண்டும். ஆனால், வாங்குபவர் சரக்கு களை முதலில் பரிசோதித்துப் பார்த்திருந்து, அப்பரிசோதனையில் வெளிப்பட்டிருக்கக் கூடிய குறைபாடுகள், வாங்கிய பிறகு காணப் பட்டால் இந்த உட்கிடை கட்டுவரம்பு கிடையாது பிரிவு 16 (2). **Jackson vs. Rotax Motor & Cycle Co. Ltd, (1910) 2 K.B. 937.**

அனுப்பப்பட்ட விசைப்பொறி (மோட்டார்) ஒலி எழுப்பி (**Motors horn**) களில் பெரும்பாலானவை, சரியாகக் கட்டி அனுப் பப்படாமையால், கீறலாயும் சேதமடைந்தும் வந்து சேர்ந்தன. மீதி இருந்தவை உற்பத்தி செய்யும்போது கவனக் குறைவின் காரணமாக சரியானபடி முலாம் பூசப்படாமலிருந்தமையால் விற்பனைக்கு ஏற்றனவாய் இல்லை. ஆகவே, அனுப்பப்பட்ட சரக்குகள் அனைத்தும் வாணிகத்திற்கு ஏற்றவையல்ல என்று கண்டு மொத்தச் சரக்கினையும் வாங்கியவர் திருப்பி அனுப்பிவிட உரிமை பெற்றவர் ஆவார் என்று நீதி வழங்கப்பட்டது.

வாணிகத்திற்கு உகந்த என்று குறிப்பிடும்போது, அது திரும்பவும் விற்பனைக்கேற்ற என்பதுமட்டுமன்றி சொந்த உப யோகத்திற்கு உகந்த என்ற கருத்தும் உள்ளடங்கியுள்ளது.

**(6) முழுமையும் மாதிரியை ஒத்திருத்தல் வேண்டும் (Bulk shall Correspond with sample).**

பிரிவு 17-ல் இது பற்றிய கட்டுவரம்பு பின்வருமாறு குறிப் பிடப் பெற்றுள்ளது:

1. மாதிரி அடிப்படையில் விற்பனை (Sale by Sample) என்று ஒப்பந்தம் செய்துகொள்வதாயிருந்தால், அது பற்றிய ஒரு வரை வுரை வெளிப்படையாகவோ உள்ளிடையாகவோ ஒப்பந்தத்தில் கண்டிருக்க வேண்டும்.

2. மாதிரி அடிப்படையில் விற்பனை என்று ஒப்பந்தம் இருந் தால், அதில் சில கட்டுவரம்புகள் ஊகிக்கப்படுகின்றன.

(a) முழுமையும் மாதிரித் தரத்தை ஒத்திருக்க வேண்டும்.

(b) வாங்கியவருக்கு மாதிரியோடு மொத்தச் சரக்கையும் ஒப் பிட்டுப் பார்த்திட தக்க வாய்ப்பு அளிக்கப்படவேண்டும்.

(c) மாதிரியைப் பரிசோதிக்கும்போது வெளிப்படையாகத் தோன்றாத குறைபாடுகள் எதுவும் சரக்குகள் வாணிகத்திற்கு உகந்ததல்லாதனவாகின்ற வகையில் பின்னர் வெளிப்படாமலும் இருக்க வேண்டும்.

ஒன்று 700 படியும், மற்றொன்று 1400 படியும் கொண்ட இரண்டு மூட்டை கோதுமையை மாதிரி விற்பனைக்கு (Sale by Sample) 'அ' விற்க ஒப்பந்தம் செய்து கொண்டான். சிறிய மூட்டையைப் பரிசோதனைக்கு அனுமதித்து விட்டுப் பெரிய மூட்டையை அதற்கு அனுமதிக்கவில்லை. ஆதலால் இரண்டு மூட்டையுமே விரும்பினால் மறுத்துவிட, வாங்கியவருக்கு உரிமையுண்டு என முடிவு கூறப்பட்டது.

(Lorymer vs. Smith (1822 1 B. & C. 1)

உட்கிடை கட்டுவரம்புகளைப் போன்று, வேறுபட்ட எண்ணம் (Contrary Intention) எதுவும் இல்லாதவரை, கீழ்க்குறிப்பிடப்படும் உட்கிடை நம்புறுதிகளைச் சட்டம் வகைப்படுத்திக் கூறியுள்ளது.

**(1) அமைதியான உடைமை (Quiet Possession)**

தன்வசம் வைத்திருக்கவும், அனுபவிக்கவும் ஏற்ற முறையில் அமைதியான உடைமை, வாங்கியவருக்குச் சரக்குகளின்மேல் இருக்க வேண்டும் பிரிவு-14 (b).

**(2) பற்றுப் பொறுப்பும் வில்லங்கமும் இல்லாதிருத்தல் (Free from Charges and Encumbrances)**

மூன்றும் ஆளுக்குச் சாதகமாகப் பற்றுப் பொறுப்பு, வில்லங்கம் எதுவும் சரக்குகள்மீது இல்லாதிருக்க வேண்டும் பிரிவு. 14 (C).

**II ஒப்பந்தத்தின் விளைவுகள் (Effects of the Contract)**

**உரிமைப் பொருள் மாற்றம் (Transfer of Property)**

உரிமைப்பொருள் மாற்றமானது, வெளிப்படுத்தப்பட்ட தரப்பினரின் எண்ணத்தில் இருந்து தெளிவதாகும். இதுபற்றிய எண்ணம் வெளிப்படையாக அறிவிக்கப்படாதிருந்தால், அதனை உணர்ந்து தெரிந்து கொள்வதற்காகப் பிரிவு 20 முதல் 24 வரை சில விதிகள் வகுத்துக் கூறப்பட்டுள்ளன. இந்த விதிகள் வேறுபட்ட எண்ணங்கள் இல்லாதபோது, பயன்படுத்தப்படுபவைகளாகும், பிரிவு- 19-ன்படி.

(1) குறித்த சரக்குகளுக்கான விற்பனை ஒப்பந்தத்தில், ஒப்பந்தத் தரப்பினர் எப்பொழுது உரிமைப் பொருள் வாங்கு

பவருக்கு மாற வேண்டுமென்று விரும்புகின்றனரோ, அப்பொழுது அது மாற்றப்படுகிறது.

(2) தரப்பினரின் எண்ணத்தை நிர்ணயிப்பதற்கு, ஒப்பந்தத்தின் வரைவுரைகள், தரப்பினரின் நடைமுறை, நிகழ்ச்சியின் சூழ்நிலைகள் ஆகியவற்றைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

(3) எந்தச் சமயத்தில் சரக்குகளின் மீதான உரிமைப் பொருள் வாங்குபவருக்கு மாற்றப்பட வேண்டுமென்பது பற்றியுள்ள தரப்பினரின் எண்ணமானது, வேறுபட்ட எண்ணம் வெளிப்படாதவரை பிரிவு 20 முதல் 24 வரையுள்ள விதிகளின் வழி நிர்ணயிக்கப்படுகிறது.

இந்த விதிகளைக் கீழ்வருமாறு சுருக்கிக் கூறலாம் ;

(1) குறித்த சரக்குகள், ஒப்புவிக்கத்தக்க நிலை (Deliverable State)யில் இருந்தால் ஒப்பந்தம் செய்யப்படும்பொழுது உரிமைப் பொருள் மாறுகிறது பிரிவு-20.

(2) குறித்த சரக்குகளை ஒப்புவிக்கத்தக்க நிலைக்குக் கொண்டு வர சில காரியங்கள் செய்து முடிக்க வேண்டியிருக்கும்பொழுது, அக் காரியங்கள் செய்து முடித்து, அதுபற்றி வாங்குபவருக்கு அறிவிப்பு விடும்பொழுதுதான், உரிமைப் பொருள் மாறுகிறது பிரிவு-21.

(3) குறித்த சரக்குகள் ஒப்புவிக்கத்தக்க நிலையில் இருந்து, ஆனால் அவற்றின் விலை நிர்ணயிக்கப்படுவதாக வேண்டி நிறை அல்லது அளவு முதலியன பார்க்க வேண்டியிருந்தால் விற்பவர் அவற்றைப் பார்த்து முடித்து, வாங்குபவருக்கு அறிவிப்புவிடும் பொழுதுதான் உரிமைப் பொருள் மாறுகிறது (பிரிவு 22).

(4) வருணனையில் விற்கப்படுகின்ற ஒப்புவிக்கத்தக்க நிலையிலுள்ள, குறித்திடாச் சரக்குகளின் மீதான உரிமைப் பொருள், அந்த வர்ணனைக்குட்பட்ட சரக்குகள், விற்பவரால் அல்லது விற்பவர் சம்மதத்தோடு வாங்குபவரால் எந்தவித கட்டுவரம்புமின்றி ஒதுக்கி வைக்கப்படும்போது மாறுகிறது, சரக்கேற்றியிலோ (Carrier) ஒப்படைவு பெறுபவரிடமோ (Bailee) விற்பவர், விற்கும் உரிமையைத் தனக்கென வைத்துக் கொள்ளாது சரக்குகளை அனுப்புவதற்காக ஒப்படைத்து விட்டால், அந்தச் செயல் கட்டுவரம்பின்றி ஒதுக்கி வைத்தல், என்று கருதப்படும் (Unconditional Appropriation) (பிரிவு-23).

(5) ஏற்றுக் கொள்ளல் அல்லது விற்பனையின்றேல் திருப்பி அனுப்பிவிடுதல் (On Approval or on Sale or Return) என்ற கட்டுவரம்பில் வாங்குபவருக்கு அனுப்பப்பட்ட சரக்குகளின் மீதான உரிமைப்பொருள், வாங்குபவர் ஏற்றுக் கொள்வதாகச் சம்மதம் தெரிவிக்கும் பொழுதும்-சம்மதம் தெரிவிப்பதற்காகக் குறிப்பிட்ட காலத்தை விட அதிக காலம் சரக்குகளைத் தாம் வைத்திருக்கும் பொழுதும்-சரக்குகள் தமக்குத் தேவையில்லை என்று அறிவிப்பு விடாமல் இருந்து விட்டுத் தகுந்தகாலமும் கடந்து விடும்பொழுதும் அவற்றின் மீதான உரிமைப் பொருள், வாங்குபவருக்கு மாறிவிடுகிறது (பிரிவு-24).

'ஒப்புவிக்கத்தக்க நிலை' என்றால் என்ன? என்பது பற்றி பிரிவு 2 (3)-ல் கூறப்பட்டுள்ளது. சரக்குகள் தக்க நிலையில் இருந்து, வாங்குபவர், ஒப்பந்தத்தின் கீழ், அந்த நிலையில் அச் சரக்குகளைப் பெற்றுக்கொள்ள வேண்டிய கடப்பாடுடையவராக இருந்தால். சரக்குகளின் அந்தநிலை-"ஒப்புவிக்கத்தக்க நிலை" என்று கூறப்படும்.

தரையில் பதிக்கப்பட்டிருந்த ஓர் இயந்திரம் நகர்த்தப்பட்டு புகைவண்டி நிலையத்திற்கு இலவசமாகக் கொண்டு (Free Delivery) வந்து சேர்ப்பிக்கப்பட வேண்டும் என்பது ஒப்பந்தம். புகைவண்டி நிலையத்தை வந்து சேர்வதற்கு முன்னர் இயந்திரம் வழியில் சேதமடைந்து விட்டது. புகைவண்டி நிலையத்தை வந்தடையும்போது. இயந்திரம் ஒப்புவிக்கத்தக்க நிலையில் இல்லை என்று கூறப்பட்டது. (Underwood *vs.* Burgh Castle Cement Syndicate (1922) 1. K. B. 343)

மேலே கூறப்பட்ட நியதிகளை விளக்கும் சில சான்றுகளை ஈண்டுக் காண்போம்:

(a) 'ஆ', 'அ' விடமுள்ள கைக்கடிகாரத்தை ரூபாய் 100-க்கு வாங்கவும் ஆனால் அந்தக் கைகடிகாரத்தை ஒரு குறிப்பிட்ட நாளில் பெற்றுக் கொள்ளவும் அதன் விலை வேறொரு குறிப்பிட்ட நாளில் செலுத்தப்படவும் முனைவு தெரிவிக்கின்றான். 'அ' அந்த முனைவை ஏற்றுக் கொண்டான். இந்த ஒப்பந்தம் செய்யப்பட்ட பொழுதே 'அ' ஏற்பு தெரிவித்தவுடன் தானாகவே கைகடிகாரத்தின் உரிமைப்பொருள் 'ஆ' வுக்கு மாறிவிடுகிறது.

(b) 'அ' சில மரங்களுக்குச் சொந்தக்காரன். மரங்களை வெட்டி, நிறுத்து ஒரு டன் மரங்கள் ரூபாய் 100-க்கு 'ஆ' வுக்குக்

கொடுக்க 'விற்பனை' ஒப்பந்தம் செய்து கொள்கிறான். 'ஆ' அவற்றைப் பெற்றுக் கொள்ளவும், ஒரு குறிப்பிட்ட நாளில் விலை செலுத்தவும் இசைகிறான். மரங்களின் பகுதிதான் வெட்டி நிறுத்து 'ஆ' வுக்குக் கொடுக்கப்பட்டது. மீதி மரங்களின் மீதான உரிமைப் பொருள், அவை நிறை பார்க்கப்பட்டு அதுபற்றி 'ஆ' வுக்கு அறிவிப்பு விடுவதுவரை, 'ஆ'வுக்கு மாறாது.

(c) குறிப்பிட்ட விலைக்குக் குறித்த நாளில் பணம் செலுத்துவதாக 'ஆ', 'அ' விடமுள்ள நெல் கிடங்கிலிருந்து, 10 மூட்டை நெல் வாங்க இசைகிறான், 'ஆ' நெல் இடுவதற்கான கோணிப் பைகள் அனுப்புவதாகவும் 'அ' அவற்றில் நெல்லைக் கட்டி அனுப்புவதாகவும் உடன்பட்டனர். 'ஆ' அவ்வாறே கோணிப்பைகளை அனுப்புகிறான்.

'அ' 50 மூட்டை நெல்லை, கோணிகளில் நிரப்புகிறார். 'ஆ' வினிடைய கோணிப்பைகளில் 'அ' நெல்லை நிரப்பும்போதே நெல்லின் மீதுள்ள உரிமைப் பொருள் 'அ' வுக்கு மாறுகிறது. இதற்குப் பின் 'அ' தான் 'ஆ' வுக்கு விற்கும் எண்ணத்தை மாற்றி வேறொருவருக்கு அந்த நெல்லைக் கொடுக்க முடியாது. (Aldridge vs. Johnson (1857) 26 L. J. Q. B. 296)

**பிறர்க்கு அளிக்கும் உரிமை (Right of Disposal Jus Disponendi)**

பிறர்க்கு அளிக்கும் உரிமைபற்றிய சட்டம் பிரிவு 25-ல் கூறப்பட்டுள்ளது.

பொதுச் சரக்கேற்றி (Common Carriers)யிடம் சரக்குகளை ஒப்புவிப்பதன் மூலம் உரிமைப் பொருள், வாங்குபவருக்கு மாற வேண்டுமானால் அச் சரக்குகள் கட்டுவரம்பின்றித் தனியாக ஒதுக்கப்பட்டு வைத்திருத்தல் வேண்டும். அதாவது விற்பவர், சரக்குகளைப் பிறர்க்களிக்கும் உரிமையைத் தன்பக்கம் வைத்துக்கொண்டிருத்தல் கூடாது. குறித்த சரக்குகளுக்கான விற்பனை ஒப்பந்தத்தில், அல்லது சரக்குகளை ஒப்பந்தத்தின் பேரில் பின்னர் தனியாக ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பின். விற்பவர் சரக்குகளைப் பிறர்க்களிக்கும் உரிமையைக் குறிப்பிட்ட கட்டுவரம்புகளை நிறைவு செய்யப்படுவதுவரை ஒப்பந்தத்தின் வரைவுரை அல்லது ஒதுக்கிவைத்தல் மூலம் தன் பக்கம் வைத்துக் கொள்ளலாம். அப்பொழுது வாங்குபவரின் சரக்கேற்றி அல்லது ஒப்படைவு பெறுபவர் யாரிடமேனும் சரக்குகள் கொடுக்கப்பட்டிருப்பினும் அவற்றின் உரிமைப் பொருளானது குறிப்பிட்ட கட்டுவரம்புகள் நிறைவேற்றப்படும்வரை, வாங்குபவருக்கு மாறாது.

சரக்குகளைப் பொதுச் சரக்கேற்றியில் ஏற்றிய பின்னும் அவற்றைப் பிறர்க்கு அளிக்கும் உரிமையை விற்பவர் தன்னுடன் வைத்துள்ளாரா ? இல்லையா ? என்பது, ஒப்பந்தத்தின் வரைவுரைகளையும் சூழ்நிலைகளையும் பொறுத்ததாகும். புகை வண்டி நிறுவனப் பற்றுச் சீட்டு அல்லது கப்பல் சரக்குப்பட்டியல், வாங்குபவரின் பெயரில் இருந்தால் விற்பவர் பிறர்க்களிக்கும் உரிமையைத் தன்னுடன் வைத்துக் கொள்ளவில்லை என்பது துணிபாகும். (இந்தத் துணிபு மறுக்கப்படலாம்); விற்பவரின் பெயரிலேயே இருந்தால் பிறர்க்கு அளிக்கும் உரிமையை தன்னுடன் வைத்துள்ளார் என்பது துணிபாகும்.

**உரிமைப் பொருள் மாறும்போது மேலோட்டமாக விளைவுக்குரிய பொறுப்பும் மாறும் (Risk Prima Facie Passes With Property)**

ஒப்பந்தத்தில் குறிப்பான வரைவுரை இதுபற்றி இல்லாத போது, விளைவுக்குரிய பொறுப்பும் உரிமைப்பொருளைப் பின் தொடர்கிறது என்பது பொது நியதி. சரக்குகளின் மீதுள்ள உரிமையோடு அச் சரக்குகளினால் ஏற்படும் விளைவுக்குரிய பொறுப்பும் அவ்வுரிமையுடன் செல்கிறது. வாங்குபவரிடம் சரக்குகளின் உரிமைப் பொருள் மாறிவிட்டபின், அவை உண்மையிலேயே வாங்குபவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தாலும் இல்லாவிடினும், அவற்றின் சேதத்தினால் ஏற்படும் இழப்பை வாங்குபரே ஏற்க வேண்டும். விற்பவர் அல்லது வாங்குபவர் மீதுள்ள தவறுதலின் காரணமாகச் சரக்குகள் ஒப்படைக்கப்படுவதில் தடையேதும் ஏற்பட்டால், யார்மீதுள்ள குறையினால் தடையேற்பட்டதோ அவரே இழப்புக்குரிய பொறுப்பை ஏற்கல் வேண்டும் (பிரிவு. 26).

**உரிமை மூலம் மாறுதல் (Transfer of Title)**

தாம் பெற்றிருக்கும் உரிமை மூலத்தை விடவும் அதிகமான உரிமை மூலத்தை ஒருவர் மற்றவருக்கு வழங்க முடியாது.

**(No one can convey a better title than what he has—Nemo Dat Quod Non Habet)** என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட விதி.

சரக்குகளின் உரிமையாளரோ — உரிமையாளரிடமிருந்து அதிகாரம் அல்லது அனுமதி பெற்றவரோ அல்லாமல் வேறுயாரும் அந்தச் சரக்குகளை விற்கவோ அவற்றின் மீதான உரிமை மூலத்தை மற்றவருக்கு வழங்கவோ முடியாது என்பது பொதுவிதி. ஒருவன் உரிமையாளரிடமிருந்து அல்லாமல் வேறு யாரிடமிருந்தேனும் சரக்குகளை, அறியாது வாங்கியயிருந்தாலும் அவனுக்கு அச்சரக்குகளின் மீதான உரிமைப் பொருள் எந்தவகையிலும் கிட்டுவதில்லை. இந்தப் பொதுவிதியை வில்ஸ் ஜே. (Willes J.) "தாம் பெற்றிருக்

கும் உரிமை மூலத்தை விட அதிகமான உரிமை மூலத்தை ஒருவர் மற்றவருக்கு வழங்க முடியாது'' என்று குறிப்பிடுகிறார். இது பிரிவு 27-ல் கூறப்பட்டுள்ளது.

இந்தப் பொதுவிதிக்கு ஐந்து முக்கிய விதிவிலக்குகள் 27 முதல் 30 வரையுள்ள பிரிவுகளில் கூறப்பட்டுள்ளன அவை வருமாறு:

**(1) வாணிக முகவர் மூலம் விற்பனை (Sale by Merchantile Agent)**

வாணிக முகவர், சரக்குகளின் சொந்தக்காரராக இல்லா விட்டாலும் கீழ்க்காணும் கட்டுவரம்புகள் நிறைவு செய்யப்பட்டிருந்தால், அச்சரக்குகளின் மீதான முழு உரிமை மூலத்தையும் மற்றொருவருக்கு மாற்றிக் கொடுக்க முடியும் (Provisio to பிரிவு 27).

(i) சரக்குகளை விற்பவர், வாணிக முகவராக இருக்கவேண்டும்.

தொழில் நடைமுறையிலுள்ள வழக்கங்களில் சரக்குகளை விற்கவும், விற்பனைக்கு அனுப்பவும், வாங்கவும், அவற்றைப் பிணையம் வைத்துப் பணம் எழுப்பவும், அதிகாரம் கொண்ட முகவர், வாணிக முகவர் ஆவார் (பிரிவு 2 (9) ).

ஏல விற்பனை செய்பவர் (Auctioneer) உரிமைப் பேராள் (Factor) தரகர் (Broker) ஆகியோர் வாணிக முகவர்களே.

(ii) வாணிக முகவர் விற்பனையின்போது சரக்குகளையோ அவற்றிற்கான உரிமை மூல ஆவணங்களையோ தன் உடைமையில் வைத்திருத்தல் வேண்டும்.

(iii) தொழிலின் நடைமுறைகளில் அவர், தான் ஒரு வாணிக முகவர் என்ற நிலையில் நின்று செயல்பட வேண்டும்.

(iv) வாங்குபவர் நல்லெண்ணத்துடன் செயல்படுவதோடு, விற்பனை ஒப்பந்தத்தின் போது விற்பவருக்கு எவ்வித அதிகாரமும் இல்லை என்பது போன்ற அறிவிப்பு எதுவும் பெறாதிருக்கவேண்டும்.

(v) சரக்குகளையோ. அவற்றின் உரிமை மூல ஆவணங்களையோ, சொந்தக்காரரின் சம்மதத்துடன் அவர், தன் உடைமையில் வைத்திருக்க வேண்டும்.

**(2) கூட்டு-உரிமையாளர்களுள் ஒருவர் செய்யும் விற்பனை (Sale by One of Joint-Owners)**

கூட்டு-உரிமையாளர்களில் ஒருவர் மற்றவரின் அனுமதியுடன் தன் உடைமையில் வைத்திருக்கின்ற சரக்குகளை இன்னொருவர்

வாங்கினுல், வாங்குபவர் நல்லெண்ணத்துடனும், விற்பவருக்கு அச்சரக்குகளை விற்க எவ்வித அதிகாரமும் இல்லை என்றவாறு அறிவிப்பு எதுவும் பெருத நிலையிலும் வாங்குவதாக இருந்தால், அச் சரக்குகளின் மீதான உரிமைப் பொருளை கூட்டு உரிமையாளர் நல்லபடி, வாங்குபவருக்கு மாற்றிவிட முடியும் (பிரிவு-28).

**(3) தவிர்தகு ஒப்பந்தத்தின் கீழ், உடைமையை வைத்திருப்பவர் செய்யும் விற்பனை (Sale by Persons in Possession under a Voidable Contract)**

மோசடி, திரித்துக் காட்டல், வலுக்கட்டாயம், தகாநிலை வற்புறுத்தல் இவற்றின் அடிப்படையில் புறக்கணிக்கவல்ல தவிர் தகு ஒப்பந்தத்தின்கீழ் சரக்குகளைத் தன் உடைமையில் வைத் துள்ள ஒருவர், அந்த ஒப்பந்தம் புறக்கணிக்கப்படுமுன், நல் லெண்ணத்துடனும், விற்பவருக்குரிய உரிமையில் ஊனம் இருக் கிறது என்று அறிவிப்புப் பெருமலும் வாங்குகிற மற்றொருவருக்கு, நல்லபடி உரிமை மூலத்தை வழங்க முடியும் (பிரிவு-29).

**(4) விற்றவர் தன் உடைமையில் வைத்துள்ள விற்ற சரக்குகளை மீண்டும் விற்றல் (Sale by One Who has already sold the Goods but Continues in Possession there of)**

சரக்குகளை விற்றபின்னும் தொடர்ந்து அச்சரக்குகளை அல்லது அவற்றின் உரிமை மூல ஆவணங்களைத் தன் உடைமையில் வைத் துள்ள ஒருவரிடமிருந்து மூன்ரும் நபர் நல்லெண்ணத்துடனும் முதலில் சரக்குகள் விற்கப்பட்டுள்ளதைப் பற்றிய அறிவிப்பு இல்லாமலும் அச்சரக்குகளை வாங்கியிருந்தால், முதலில் வாங்கிய வருக்குச் சரக்குகளின் மீதான உரிமைப் பொருள் மாறிவிட்டிருந்த போதிலும், அம்மூன்ரும் நபர் நல்லபடியான உரிமையைப் பெறு கிருர் (பிரிவு-30 (1)).

**(5) சரக்குகளில் உரிமை பெறுவதற்கு முன்னரே வாங்கியவர் தன் உடைமையில் வந்து வாங்கிய சரக்குகளை விற்றல் (Sale by buyer obtaining Possession before the Property in the Goods has Vested in him)**

விற்றவரின் சம்மதத்தோடு, சரக்குகளின் மீதான உரிமைப் பொருள் மாறுவதற்கு முன் அவற்றின் உடைமையைப் பெற்றவர் அல்லது வாங்கியவர், மூன்ரும், நபருக்கு அச் சரக்குகளை விற் கவோ, அடகு வைக்கவோ, அல்லது வேறு வகையில் உரிமை- உடைமை மாற்றவோ செய்யலாம்.

மூன்ரும் நபர் அச் சரக்குகளை நல்லெண்ணத்துடனும், அவற்றின்மீது முதலில் விற்றவருக்கு (Original Seller) பற்று

ரிமையோ, அல்லது வேறு உரிமைகளோ இருப்பதாக அறிவிப்பு இல்லாமலும் வாங்கியிருந்தால், அம் மூன்றும் நபர் நல்லபடியான உரிமையைப் பெறுகிறார் (பிரிவு-30 (2)).

தனக்குச் சொந்தமில்லாத சரக்குகளை விற்பது செல்லுபடியாகாது என்ற பொதுவிதிக்கு மேலே கூறிய ஐந்து முக்கிய விதி விலக்குகளும் அன்றி, இங்கிலாந்தில் மற்றுமொரு விதிவிலக்கும் உண்டு. அது 'Market Over' என்று சொல்லப்படும் வெளிப் படை விற்பனை விலைக்களன்களில் விற்கப்படும் சரக்குகள்.

இங்கிலாந்து நாட்டின், சரக்குகள் விற்பனைச் சட்டத்தின் பிரிவு 22 (1)-ன்படி சந்தை வழக்காறு (Market Usage)களுக்கு ஏற்ப வெளிப்படை விற்பனை விலைக்களனில் விற்கப்படும் சரக்குகளை வாங்குபவர், நல்லெண்ணத்துடனும் விற்பவருக்கு உரிமையில்லை அல்லது உரிமையில் ஊனம் இருப்பதாக அறிவிப்பு இல்லாமலும் வாங்கினால், அச்சரக்குகளின்மீது நல்லபடியான உரிமை மூலத்தைப் பெறுகிறார்.

ஒப்பந்த நிறைவேற்றம் (Performance of the Contract)

ஒப்படைவு (Delivery)

ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குத் தன்னியலாக உடைமை மாற்றம் அடைவதை ஒப்படைப்பு எனலாம் (பிரிவு-2 (2)).

இன்னது செய்து முடித்தால், அது ஒப்படையாகக் கருதப்பட வேண்டுமென்று தரப்பினர் உடன்பட்டிருக்கின்றனரோ, அதைச் செய்து முடித்தால், அல்லது இன்னது செய்து முடித்தால் அதை வாங்குபவர் அல்லது அவரது அதிகாரம் பெற்ற வேறொருவர் உடைமைக்குச் சரக்குகள் சேர்ந்துவிடும் என்று ஏற்படுமோ அப்பொழுது ஒப்படைப்பு ஒப்பப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம்.

உதாரணமாக 'அ' இங்கிலாந்திலிருந்து 1000 கட்டு (Bales) பருத்தி பம்பாயிலுள்ள 'ஆ'வுக்கு அனுப்புமாறு செய்கிறார். பருத்தியை ஏற்றுக்கொண்டு வருவதற்காகத் தன்னுடைய கப்பலையும் பம்பாயிக்கு அனுப்பி வைக்கிறார். பம்பாய் துறைமுகத்தில் கப்பலில் பருத்திக் கட்டுகள் ஏற்றப்பட்டு விட்டால் அவை 'அ'வைப் பொறுத்தவரையில் ஒப்படைப்பு செய்யப்பட்டதாகும்.

கீழே குறிப்பிட்டுள்ள ஏதாவது ஒரு வழியில், சரக்குகள் ஒப்படைப்பு செய்யப்படலாம்.

(i) மெய்ந்நிலை அல்லது நேரடி ஒப்படைப்பு (Actual or Physical Delivery)

விற்பவர், சரக்குகளை உள்ளவாறு அப்படியே வாங்குபவருக்கு எடுத்துக் கொடுத்து விடுவது மெய்ந்நிலை ஒப்படைப்பு ஆகும்.

(ii) அடையாள ஒப்படைப்பு (Symbolic Delivery)

ஒரு பொருளின் உடைமையை மாற்ற வேண்டி, அதற்கடையாளமாக ஒரு இலச்சினையை (Token) ஒப்படைத்தல், அடையாள ஒப்படைப்பாகும்.

எடுத்துக்காட்டாக, ஒரு கிடங்கின் சாவியைக் கொடுப்பது அக்கிடங்கிலுள்ள சரக்குகளை ஒப்படைப்பதாகும்.

(iii) கொள்நிலை ஒப்படைப்பு (Constructive Delivery)

உண்மையில் உடைமை ஒப்படைப்பு செய்யப்படாவிடினும். சட்ட நோக்கில் அது செய்யப்பட்டதாகக் கொள்ளப்படும்.

'அ' என்பவர் 'இ' என்ற பண்டகசாலை மேலாளரின் (Ware house Man) உடைமையில் வைக்கப்பட்டுள்ள தன்னுடைய நெல் மூட்டைகளிலிருந்து 50 நெல் மூட்டைகளை 'ஆ' வுக்கு விற்கிறான்.

'ஆ' விடம் 50 மூட்டைகளை 'இ' இடமிருந்து பெற்றுக் கொள்வதற்கான ஒப்படைப்பு ஆணையை (Delivery Order)யும் கொடுக்கிறான்.

'ஆ' தான் வாங்கிய சரக்குகளை 'இ'யிடமிருந்து பெற்றுச் செல்லாமல் 'இ'யிடமே வைத்துக் கொள்ளும்படி 'ஆ' சொல்ல அதற்கு 'இ'யும் இசைகிறான்.

அப்போது சட்ட நோக்கில் சரக்குகளின் உடைமை 'அ'விடமிருந்து 'ஆ'வுக்கு மாறி விட்டதாகவும் 'இ' என்பவர் 'ஆ'வின் சரக்குகளை ஒப்படைவாக வைத்திருக்கும் ஒப்படைவு பெற்றவர் (Bailee) என்றும் கருதப்படுவார்.

**வாங்குபவர் விற்பவர் ஆகியோரின் உரிமைகளும் கடமைகளும் (Rights and duties of the buyer and seller)**

**விற்பவர் கடமைகள் (Duties of the Seller)**

(1) விற்பனை ஒப்பந்தத்தின் வரைவுரைகளின்படிச் சரக்குகளை விற்பவர் ஒப்படைக்க வேண்டும் (பிரிவு-31).

(2) வேறுவகையில் உடன்பாடு இல்லாதிருந்தால், சரக்கு ஒப்படைப்பும், விலை செலுத்தலும் ஒருங்கியல்வாக (உடன்) நிகழ

வேண்டும். அதாவது வாங்குபவர் விலை கொடுக்கும்பொழுது அதற்கு மாற்றாக (in Exchange for the Price) சரக்குகளின் உடைமையைக் கொடுக்க விற்பவர் தயாராகவும், விருப்புடனும் இருக்க வேண்டும் (பிரிவு 32).

(3) வேறுவகையில் வெளிப்படையான ஒப்பந்தம் எதுவும் இல்லாதிருந்தால், வாங்குபவர் ஒப்படைப்பு கோரினால் ஒழிய, விற்பவர் சரக்குகளை ஒப்படைக்க வேண்டிய கட்டுப்பாடு உடையவர் அல்லர் (பிரிவு 35).

(4) விற்பவர், வாங்குபவருக்குச் சரக்குகளை ஒப்படைக்கக் கடமைப்பட்டிருந்தது, ஒப்படைக்கப்பட வேண்டிய காலம் குறிப்பிடப்படாமல் இருந்தால், தகுமான கால அளவுக்குள் (Reasonable Time) விற்பவர் சரக்குகளை அனுப்ப வேண்டும் (பிரிவு-36 (2).

(5) வாங்குபவர் சரக்குகளைத் தன் உடைமைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமா அல்லது விற்பவர் அவற்றை வாங்குபவருக்கு அனுப்பிக் கொடுக்க வேண்டுமா என்பன இரு தரப்பினருக்கிடையே கொண்டிடும் வெளிப்படை அல்லது உள்ளிடை ஒப்பந்தத்தைப் பொறுத்ததாகும்.

வேறுபட்ட ஒப்பந்தம் எதுவும் இல்லையெனில், விற்பவர் விற்பனைக்கு ஒப்பிய சரக்குகளை வாங்குபவருக்கு அவை எந்த இடத்தில் ஒப்பந்தம் செய்து கொள்ளும் காலத்தில் இருந்தனவோ அவ்விடத்தில் வைத்து ஒப்படைக்க வேண்டும்.

அப்படி ஒப்பந்தம் செய்து கொள்ளும் நேரத்தில் அச்சரக்குகள் தோன்றியிராதிருந்தால் (Not in existence) அவை உற்பத்தி செய்யப்படுகிற அல்லது விளைவிக்கப்படுகிற இடத்தில் வைத்து ஒப்படைக்கப்பட வேண்டும் (பிரிவு 36 (1)).

(9) வேறுவகையில் உடன்படாதிருந்தால், சரக்குகளை ஒப்படைப்பு நிலைக்கு(Deliverable State)க்கொண்டு வருவதற்கு ஏற்படுகின்ற சம்பந்தப்பட்ட செலவுகளை விற்பவரே ஏற்க வேண்டும் (பிரிவு 36 (5)).

(7) வாங்குபவரால் வேறுவகையான அதிகாரம் எதுவும் அளிக்கப்படாதபோது, விற்பவர், சரக்கேற்றியுடன் சரக்குகளைப் பாதுகாப்புடன் எடுத்துச் செல்லுவதற்கான தகுந்த ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும்.

துறை மேடையாளரிடம் (Whar Finger) ஒப்படைக்கப்பட வேண்டியிருந்தால். அவற்றை அவர் சொந்தப் பொறுப்பில் வைத்துக் கொள்வதற்கும், திருப்பி ஒப்புவிப்பதற்கும் வேண்டிய ஒப்பந்தத்தைச் செய்துகொள்ள வேண்டும்.

இவ்வாறு செய்து கொள்வதற்கு விற்பவர் தவறினால், வாங்குபவர் ஒப்படைவு செல்லுடைமையாகாது. ஆதலால் அவர் தன்னைக் கட்டுப்படுத்தாது என்று நிராகரிக்கலாம் அல்லது விற்பவரிடம் அதற்கு இழப்பீடு கோரலாம் (பிரிவு 39(2)).

(8) வேறுவகையான ஒப்பந்தம் எதுவும் இல்லாதிருந்து சரக்குகள் கடல்வழி அனுப்பப்பட வேண்டியிருந்தால், அந்தச் சூழ்நிலைகளில் சாதாரணமாகக் காப்பீடு செய்து கொள்ள வேண்டுமென்று இருக்கும் பொழுது விற்பவர் வாங்குபவருக்குச் சரக்குகளைக் கடல்வழிப் பயணத்திற்குக் காப்பீடு செய்துகொள்வதற்கு வேண்டிய போதிய அறிவிப்புக் கொடுக்க வேண்டும். விற்பவர் அதற்குத் தவறினால் சரக்குகளின் விளைவுக்குரிய பொறுப்பு (Risk) விற்பவரையே சாரும் ( பிரிவு 39 (3) ).

**வாங்குபவரின் உரிமைகள் (Rights of the Buyers)**

(1) ஒப்பந்த வரைவுரைகளின் படிச் சரியான அளவு சரக்குகளைப் பெற வாங்குபவர் உரிமை பெற்றுள்ளார்.

வாணிக வழக்காறு, தனிப்பட்ட உடன்பாடு அல்லது தரப்பினரின் கொடுக்கல் — வாங்கல் முறைகள் ஆகியவை வேறு வகையில் இல்லாமலிருந்து, ஒப்படைக்கப்பட்ட சரக்குகளின் அளவு சரியில்லா திருந்தால், வாங்குபவர் பின்வரும் உரிமைகளைப் பெறுகிறார்.

(i) அனுப்பப்பட்ட சரக்குகள் குறிப்பிட்ட அளவினுக்குக் குறைவாக இருந்தால், வாங்கியவர் அவற்றை மறுத்து விடலாம். அப்படியே பெற்றுக் கொள்வதாக இருந்தால் அவற்றிற்கான விலையை ஒப்பந்த விகிதப்படி கொடுக்க வேண்டும் (பிரிவு 37 (1)).

(ii) அனுப்பப்பட்ட சரக்குகள் குறிப்பிட்ட அளவினுக்கு அதிகமாக இருந்தால் ஒப்பந்தப்படியுள்ள அளவு சரக்குகளை மட்டும் ஏற்றுக் கொண்டு எஞ்சியிருப்பனவற்றைத் திருப்பி அனுப்பி விடலாம். அல்லது மொத்தச் சரக்கையுமே திருப்பி அனுப்பி விடலாம். வாங்குபவர் மொத்தச் சரக்கையும் ஏற்றுக் கொள்வதாக இருந்தால், அவற்றிற்கான விலையை ஒப்பந்த விகிதப்படி கொடுக்க வேண்டும் ( பிரிவு 37 (2) ).

(iii) விற்பவர் ஒப்பந்தத்திற்குட்பட்ட சரக்குகளோடு வேறு வகை சரக்குகளையும் கலந்து அனுப்பியிருந்தால், வாங்குபவர் ஒப்பந்தப்படியுள்ள சரக்குகளை மட்டும் ஏற்றுக் கொள்ளலாம், அல்லது மொத்தச் சரக்கையும் மறுத்து விடலாம் (பிரிவு 37 (3))·

(2) வாங்குபவர் ஒப்பந்தப்படி சரக்குகளை மொத்தமாகப் பெற உரிமையுண்டு. வேறுவகையில் உடன்பாடு இல்லாதிருந்தால் சரக்குகள் பகுதிகளாக அனுப்பப்படும்போது (Delivery by Instalments) அவைகளை அவ்வாறு ஏற்றுக்கொள்ள வேண்டிய கடமையில்லை (பிரிவு 38 (1)).

(3) குறிப்பிட்ட பகுதிகளாகச் சரக்குகளை அனுப்பி அவற்றிற்கான விலையைத் தனித்தனியே பெறுவதற்கான விற்பனை ஒப்பந்தம் இருப்பின் முறையாகப் பெறுகின்ற சரக்குகளுக்கு முறையாக விலை கொடுக்கப்பட வேண்டும். வாங்குபவர் விலையை முறையே கட்டத்தவறினல் அல்லது விற்பவர் சரக்குகளைப் பகுதிகளாக அவ்வப்போது அனுப்பாமல் இருந்தால் முழு ஒப்பந்தமும் தவிர்க்க அல்லது நிறையீடு (Compensation) மட்டும் கோருவதற்கான உரிமை பெறுவது ஒப்பந்தத்தின் வரைவுரைகளையும் சூழ்நிலைமைகளையும் பொறுத்ததாகும் (பிரிவு-38).

(4) சரக்குகள் ஒப்படைக்கப் பட்டாலோ, அல்லது ஒப்படைக்கப்பட முன்வந்தாலோ (Tenders Delivery) வாங்குபவர் ஒப்பந்தத்தின்படி சரக்குகள் சரியாக இருக்கின்றனவா என்று சோதித்துப் பாக்கத்தகுந்த சந்தர்ப்பம் வழங்கப்படவேண்டுமென்று கோரமுடியும் (பிரிவு-41).

(5) வாங்குபவர் சரக்குகளை ஏற்றுக் கொண்டதாக விற்பவருக்குத் தெரிவித்தாலோ, அல்லது சரக்குகளைப் பெற்றுக் கொண்ட பிறகு அவற்றைச் சொத்துரிமைக்கு ஒவ்வாத (Owner Ship) (வேறொருவருக்கு அடகு வைத்தல், திரும்ப விற்றல் போன்ற) செயல்களில் அவற்றை ஈடுபடுத்தினலோ, அல்லது சரக்குகளை வேண்டாமென்று விற்பவருக்கு மறுப்பு தெரிவிக்காமல் இருந்து, தகுமான காலம் (Reasonable Time) கழித்து விட்டாலோ, வாங்குபவர் அச்சரக்குகளை ஏற்றுக் கொண்டதாகக் கொள்ள வேண்டும் (பிரிவு-42).

(6) அனுப்பப்பட்ட சரக்குகளை வாங்குபவர் ஏற்றுக் கொள்ள மறுக்க உரிமையிலிருந்து (Rufusal to accept) அவ்வாறே மறுப்பதாகயிருந்தால், அச்சரக்குகளை விற்பவருக்குத் திருப்பியனுப்ப வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. வாங்பவர்

தான் ஏற்க மறுப்பதாக விற்பவருக்குத் தெரிவித்தால் போதுமானது (பிரிவு-43).

(7) விற்பவர் சரக்குகளை அனுப்புவதில் கவனக் குறைவாகவோ அல்லது அனுப்ப மறுப்பதாகவோ இருந்தால், அதற்காக இழப்பீடு கோரி வாங்குபவர் வழக்கிடலாம் (பிரிவு-57).

(8) நம்புறுதி மீறுகையின்போது அதனால் ஏற்பட்டுள்ள இழப்பு சரக்குகளின் விலைக்கு நிகராக இருந்தால், வாங்குபவர் விலை முழுவதையும் கொடுக்க மறுக்கலாம்.

இழப்பானது, விலையைவிட அதிகமாக இருப்பின், விலை கொடுக்க மறுப்பதோடு, அதிகப்படியான இழப்பிற்கு வழக்கிடலாம். அல்லது விலை முழுவதையும் கொடுத்து விட்டு, நம்புறுதி மீறுகைக்கான இழப்பீடு கோரி வழக்கிடலாம் (பிரிவு-59).

(9) சரக்குகள் ஒப்படைக்க வேண்டிய தினத்திற்குள் விற்பவரால் ஒப்பந்த மீறுகை ஏற்பட்டால், வாங்குபவர் அந்த ஒப்பந்தத்தை உள்ளதாகக் கொள்ளவோ அல்லது அதை முடித்து விட்டு (Terminate) இழப்பீட்டுக்காக வழக்கிடவோ செய்யலாம் (பிரிவு-60).

(10) வாங்குபவர் சரக்குகளின் விலையைக் கொடுத்திருந்தும், விற்பவர் ஒப்படைப்பு செய்யத் தவறினால் வாங்குபவர், விலையுடன் அதற்கான வட்டியும் கோரலாம் (பிரிவு-61).

(11) குறித்த வகை மாற்றீடு சட்டத்தின் (Specific Relief Act) கட்டுவரம்பு வாசகங்களுக்கு (Provisions) உட்பட்டு, நீதிமன்றங்கள், வழக்கைப் பொறுத்து, குறித்த சரக்குகளை ஒப்படைப்பதற்கான ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்ட சரக்குகளையே ஒப்படைத்தாக வேண்டுமென உத்தரவு வழங்கலாம் (பிரிவு-58).

**வாங்குபவரின் பொறுப்புக்கள்**

(1) சரக்கு ஒப்படைப்பும், விலை கொடுத்தலும் ஒருங்கியல்வாக நிகழவேண்டுமாகையால், வாங்குபவர் சரக்குகளைப் பெறும்பொழுது விலையைக் கொடுக்க ஆயத்தமாகவும் விருப்புடனும் இருக்க வேண்டும் (பிரிவு-32).

(2) விற்பனையின்போது இருந்த இடத்தில் அல்லாமல், வேறு இடத்தில் தன் பொறுப்பில் சரக்குகளை ஒப்படைப்பதாக விற்பவர் ஒத்திருந்தாலும், சாதாரணமாகப் போக்குவரத்தில்

ஏற்படுகின்ற பொருள் சிதைவுக்கு (Deterioration of goods in Transit) வேறுவகையில் ஒப்பந்தம் இல்லாதபோது வாங்குபவர் தான் பொறுப்பாவார் (பிரிவு-40).

*(3)* வாங்குபவர் தகுமான காலத்திற்குள் (Reasonable Time) சரக்குகளை ஒப்புதல் பெறத் தவறினால், அவரது கவனக்குறைவால் அல்லது சரக்குகளை ஏற்க மறுப்பதால் ஏற்படுகின்ற இழப்பினுக்கு விற்பவருக்குப் பொறுப்பாவார் (பிரிவு-44).

**விற்பவரின் உரிமைகள்**

*(1)* வாங்குபவர், தன் கவனக்குறைவினால் சரக்குகளை ஏற்க மறுத்து விலையும் கொடுக்காதிருந்தால், சரக்குகளை வாங்குபவர் ஏற்றுக் கொள்ளாததற்காக விற்பவர் இழப்பீடு கோரி வழக்கிடலாம் (பிரிவு-56).

*(2)* சரக்குகளின் மீதுள்ள சொத்துரிமை வாங்குபவருக்கு மாறியிருந்து, வாங்குபவர் அவற்றின் விலையைக் கொடுக்க மறுத்தாலோ, அல்லது கவனக் குறைவாகவோ இருப்பின் சரக்குகளின் விலைக்காக விற்பவர் வழக்கிடலாம் (பிரிவு-55 (1)).

*(3)* சரக்குகளின் மீதுள்ள சொத்துரிமை வாங்குபவருக்கு மாறாது இருந்தாலும், அவற்றிற்கான விலையைச் சரக்குகள் ஒப்படைப்பைச் சம்பந்தப்படுத்தாமல் கொடுத்து விடுவதாக வாங்குபவர் ஒப்புக் கொண்டிருந்து பின்னர் கொடுக்கத் தவறினால், விற்பவர் (சரக்குகளை ஒப்படைக்காதிருந்தும்) வழக்கிட்டுப் பெறலாம் (பிரிவு-55 (2)).

*(4)* விலைக்காக வழக்கிடும்போது, விற்பவருக்கு விலை கொடுக்கப்படவேண்டிய நாளிலிருந்து அதற்கான வட்டியைப் பெறவும் உரிமையுண்டு (பிரிவு 61 (2) (a).

*(5)* சரக்குகளின் மீதான உரிமைப் பொருள் வாங்குபவருக்கு மாறியிருப்பினும், விற்றவர் விலை பெறாது விற்றவராக இருந்தால் (Unpaid Vendor) பின்வரும் உரிமைகள் அவருக்கு உண்டு.

(i) சொத்துக்கள் தன் உடைமையில் இருந்தால் அவற்றின் மீது பற்றுரிமை (Lien) கொள்ளல்.

(ii) வாங்கியவர் நொடிப்பு நிலையில் இருந்தால் (Insolvent) சரக்குகளை விற்றவர் உடைமையிலிருந்து சென்றுவிட்ட பிறகு வழியில் நிறுத்தும் உரிமை பெறல்.

(iii) திருப்பி விற்கும் உரிமை (பி. 46 (1)) பெறல்,

(6) சரக்குகளின் மீதுள்ள உரிமைப்பொருள் வாங்கியவருக்கு மாருதிருக்கும் போது, மற்ற தீர்வழிகளுடன் சரக்குகளை ஒப்பு விக்காமல் தன்னிடம் தக்கவைத்துக் (இட்டுக்) கொள்ளும் உரிமையும் விலைபெருத விற்றவருக்குண்டு (பி. 46 (2)).

**விலைபெரு விற்றவர் (Unpaid Seller)**

விலைபெரு விற்றவர் யார் என்பது பிரிவு 45 (1)-ல் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

சரக்குகள் விற்பனைச் சட்டத்தின் வரம்புக்குள், பின்வரும் நிகழ்ச்சிகள் நேரும் பொழுது விற்றவர் விலைபெரு விற்றவராகிருர்.

(a) முழுவிலையும் செலுத்தப்படாமலோ, செலுத்த முன் வராமலோ இருந்தால்.

(b) கட்டுவரம்பான செலுத்தமாக (Conditional Payment) மாற்றுச் சீட்டோ (Bill of Exchange) அல்லது வேறு மாற்று முறையாவணமோ (Negotiable) பெற்றிருக்கும் பொழுது, எந்த கட்டுவரம்பின் பேரில் பெற்றுக் கொள்ளப்பட்டதோ, அந்த கட்டுவரம்பு ஆவணத்தின் மதிப்பு மறுப்பினுல் (Dishonour) அல்லது வேறு காரணத்தினுல் நிறைவேற்றப்படாதிருந்தால்.

**(i) சரக்குகளின் மேல் விலைபெரு விற்றவரின் உரிமைகள் விலைபெரு விற்றவரின் பற்றுரிமை (Unpaid Sellers Lien)**

தன் உடைமையில் சரக்குகளை வைத்திருக்கும் விலைபெரு விற்றவர் விலைப்பணம் கொடுக்கப்படாமல் அல்லது கொடுக்க முன் வராமல் இருந்தால் அச்சரக்குகளை கீழ்க் குறிப்பிடும் சந்தர்ப்பங்களில் விற்பனைச் சட்டத்தின் விதிகளுக்குட்பட்டுத் தன் வசமே வைத்துக் கொள்ளலாம்.

(a) கடனுக்கு விற்பதாக வரைவுரை எதுவும் இல்லாமல் சரக்குகள் விற்கப்பட்டிருக்கும்போது.

(b) கடனுக்கு விற்கப்பட்டுக் கொடுத்திருந்த கடன் தவணை கழிந்திருந்தால்.

(c) வாங்கியவர் நொடிப்பு நிலைக்குள்ளாயிருந்தால் (insolvent) (பிரிவு 47 (1)).

வாங்கியவரின் முகவர் அல்லது ஒப்படைவு பெற்றவர் (Agent or Bailee for the buyer) என்ற நிலையில் விற்றவர் தன் உடைமையில் சரக்குகளை வைத்திருந்தாலும் கூட, விற்றவர், தன் பற்றுரிமையைப் பயன் படுத்தலாம் (பிரிவு-47 (2)).

சரக்குகளில் ஒரு பகுதி மட்டும் அனுப்பப்பட்டிருந்து, விற்றவர் விலை பெறு விற்றவராக இருந்தால், மீதிச் சரக்குகளின் மீது தன் பற்றுரிமையைப் பயன்படுத்தலாம்.

ஆனால் பகுதிச் சரக்குகள், மீதிச் சரக்குகளின் மீது பற்றுரிமையைப் பயன்படுத்த முடியாத சூழ்நிலையில் ஒப்பந்தத்துக்குட்பட்டு அனுப்பப் பட்டிருந்தால் மீதிச் சரக்குகளின் மீது பற்றுரிமையைப் பயன் படுத்த முடியாது (பிரிவு-48).

சரக்குகளின் விலைக்கான தீர்ப்பாணை (Decree) பெற்றிருந்தாலுங்கூட, விலைபெறு விற்றவர் தன் பற்றுரிமையை இழப்பதில்லை (பிரிவு-49 (2).

**பற்றுரிமை இழத்தல்**

கீழ்க் குறிப்பிடப்படும் நிகழ்ச்சிகளினால் விலைபெறு விற்றவர் தன் பற்றுரிமையை இழக்கிறார்.

(a) சரக்குகளை வேறுவகையில் பிரயோகிக்கும் உரிமையைத் தன்வசம் வைத்துக் கொள்ளாமல் (Without reserving the right of disposal) அவற்றைச் சரக்கேற்றியிடமோ, ஒப்படை பெறுபவர் இடமோ வாங்கியவருக்கு அனுப்புவதற்காக விற்றவரால் ஒப்படைக்கப்படும் பொழுது.

(b) வாங்கியவரோ, அவருடைய முகவரோ, சட்டப்படி சரக்குகளின் உடைமையைப் பெற்றுக் கொள்ளும் பொழுது.

(c) பற்றுரிமையை விட்டுக் கொடுத்திருந்தால் (Waiver) (பிரிவு-49).

(d) பகுதிச் சரக்குகள் மீதிச் சரக்குகளின்மீது பற்றுரிமையைப் பயன்படுத்த முடியாத சூழ்நிலையில் உள்ள ஒப்பந்தத்துக்குட்பட்டு அனுப்பப்பட்டிருந்தால் மீதிச் சரக்குகளின்மீது பற்றுரிமையைப் பயன்படுத்த முடியாது (பி. 48).

**II செல்லுகையில் நிறுத்தம் (Stoppage in Transit)**

வாங்கியவர் நொடிப்பு நிலைக்குள்ளாகியிருந்தால் தன் கைவசம் இருந்து சரக்குகளின் உடைமை விட்டுப் பிரிந்த விலைபெறு

விற்றவருக்கு விற்பனைச் சட்டத்தின் விதிகளுக்குட்பட்டு அச்சரக்குகளைச் செல்லுகையில் இருக்குங்கால் நிறுத்தும் உரிமையுண்டு. அதாவது சரக்குகள் செல்லுகையில் இருக்கும்பொழுது (in the Course of Transist) அவற்றின் உடைமையை மீட்டு, விலை கொடுக்கப்படும் வரைக்கும், அல்லது கொடுக்க முன் வருவது வரைத் தன் வசமே வைத்துக் கொள்ளும் உரிமையுண்டு (பிரிவு-50).

கீழ்க்காணும் கட்டுவரம்புகளுக்குட்பட்டுத்தான், செல்லுகையில் நிறுத்தும் உரிமையை விற்றவர் பயன்படுத்த முடியும்.

(1) விற்றவர், விலைபெறு விற்றவராக இருக்க வேண்டும்.

(2) வாங்கியவர் நொடிப்பு நிலைக்குள்ளாய் இருக்கவேண்டும்.

(3) விற்றவர் சரக்குகளின் உடைமையை விட்டுப் பிரிந்திருக்க வேண்டும்.

(4) சரக்குகள் செல்லுகையில் இருக்க வேண்டும்.

விலைபெறு விற்றவரின் இரண்டு முக்கிய உரிமைகளான பற்றுரிமைக்கும் செல்லுகையில் நிறுத்தலுக்கும் உள்ள சில இன்றியமையாத ஒற்றுமை வேற்றுமைகள் இங்கு குறிப்பிடத்தக்கவை.

**ஒற்றுமைகள்**

(1) இரண்டிலும் சரக்குகளின் மீதுள்ள சொந்தம் வாங்குபவருக்கு மாறி விடுகிறது.

(2) இரண்டு உரிமைகளையும் பயன்படுத்தத் தகுதியுடைவர் விலைபெறு விற்றவராக இருக்க வேண்டும்.

(3) சரக்களில் ஒரு பகுதி ஒப்புவிக்கப்பட்டு மீதி ஒப்புவிக்கப்படாத நிலையில் மீதிச் சரக்குகளின் மீது இரண்டு உரிமைகளையும் பயன்படுத்தலாம்.

**வேற்றுமைகள்**

| பற்றுரிமை | செல்லுகையில் நிறுத்தம் |
|---|---|
| 1. உடைமையைத் தன்னிடம் இருத்திக் (இட்டுக்) கொள்வது இதன் முக்கிய அடிப்படை. (Retain Possession) | 1. உடைமையை மீட்டுப் பெறுவது இதன் முக்கிய அடிப்படை (Regain Possession) |

| | |
|---|---|
| 2. விற்றவர் உடைமையில் சரக்குகள் இருக்க வேண்டுவது இன்றியமையாதது. | 2. இன்றியமையாதத் தகுதிக் கூறுகள் : (i) சரக்குகளின் உடமையை விற்றவர் கைவிட்டுப் பிரிந்து இருக்க வேண்டும். (ii) சரக்குகள், சரக்கேற்று அல்லது வேறு இடையீட்டாளர் (Middleman) உடைமையில் இருக்க வேண்டும். (iii) வாங்கியவர் உடைமையைப் பெற்றிராதிருக்க வேண்டும். |
| 3. வாங்கியவர் நொடிப்பு நிலைக்கு உள்ளாகாதிருந்தாலும் இந்த உரிமையைப் பயன்படுத்தலாம். | 3. வாங்கியவர் நொடிப்பு நிலைக்குள்ளாயிருந்தால் மட்டுமே இந்த உரிமையைப் பயன்படுத்த முடியும். |
| 4. இந்த உரிமை முடிவடையும் பொழுது, செல்லுகையில் நிறுத்தும் உரிமை துவங்குகிறது. | 4. இந்த உரிமை துவங்கும் பொழுது, பற்றுரிமை முடிவடைகிறது. |

**செல்லுகையின் கால அளவு (Duration of Transit)**

சரக்குகள் செல்லுகையில் இருக்கும் பொழுதுதான் அவற்றை நிறுத்தும் உரிமையைப் பயன்படுத்த முடியுமாகையால், செல்லுகை எப்பொழுது துவங்குகிறது, எப்பொழுது முடிகிறது அதன் கால அளவென்ன என்பனவற்றை அறிந்து கொள்வது முக்கியமாகும். இவை பற்றிய விளக்கம் பிரிவு-51-ல் கூறப்பட்டுள்ளது.

(1) வாங்கியவருக்கு அனுப்புவதற்காக, சரக்கேற்றியிலோ, ஒப்படைவு பெறுபவரிடமோ கொடுப்பதிலிருந்து வாங்கியவர் அல்லது அவரது முகவர் அந்தச் சரக்கேற்றியிடமிருந்தோ ஒப்படைவு பெற்றவரிடமிருந்தோ பெற்றுக் கொள்ளும்வரை சரக்குகள் செல்லுகைக்குள் (in the Coarse of Transit) இருப்பதாகக் கருதப்படும்.

(2) வாங்கியவரோ, அவரது முகவரோ சரக்குகள் நியமிக்கப்பட்ட சேரிடத்தை (Oppointed Destination) வந்தடையு முன்னரே அவற்றை ஏற்றெடுத்துக் கொண்டால் செல்லுகை அத்துடன் முற்றுப்பெற்று விடுகிறது.

(3) சரக்குகள் நியமிக்கப்பட்ட சேரிடத்தை வந்தடைந்த பின்னர், சரக்கேற்றி அல்லது ஒப்படைவு பெற்றவர், வாங்கிய வரிடமோ அல்லது அவரது முகவரிடமோ, அச்சரக்குகளைத் தான் அவர்கள் சார்பிலேயே வைத்துக் கொள்வதாக அங்கீ கரித்து வாங்கியவருடைய அல்லது அவரது முதலருடைய ஒப் படைவு பெற்றவர் என்றுள்ள நிலையில் தொடர்ந்து தன் உடை மையில் வைத்துக் கொள்வதாக இருந்தால் அத்துடன் செல்லுகை முற்றுப் பெறுகிறது. அதற்குப் பின்னர் வேறொரு சேரு மிடத்தை வாங்கியவர் குறிப்பிட்டுத் தெரிவித்து இருந்தால், அது செல்லுகை முற்றுப்பெறுதலை பாதிக்காது.

(4) வாங்கியவரால் சரக்குகள் ஏற்றுக் கொள்ள மறுக்கப் பட்டு சரக்கேற்றி அல்லது மற்ற ஒப்படைவு பெற்றவருடைய உடைமையில் தொடர்ந்து இருந்து வந்து, விற்றவர் திரும்பப் பெற்றுக் கொள்ள மறுத்தாலும் செல்லுகை முற்றுப் பெற்ற தாகக் கருதப்பட மாட்டாது.

(5) வாங்கியவரால் அமர்த்தப்பட்ட கப்பலில் ஒப்படைக் கப்பட்ட சரக்குகள், கப்பல் தலைவரின் உடைமையில், அவர் ஒரு சரக்கேற்றி என்ற முறையில் இருக்கின்றனவா, அல்லது வாங்கியவரின் முகவர் என்ற முறையில் இருக்கின்றனவா என்பது குறிப்பிட்ட சம்பவத்தின் சூழ்நிலைகளில் பொறுத்ததாகும்.

(6) சரக்கேற்றியோ அல்லது மற்ற ஒப்படைவு பெற்றவரோ வாங்கியவரிடம் அல்லது அவரது முகவரிடம் சரக்குகளை ஒப் படைக்க முறையின்றி மறுத்தால் செல்லுகை முடிவு பெற்றதாகக் கருதப்படும்.

(7) மொத்தச் சரக்குகளில் ஒரு பகுதி மட்டும் வாங்கிய வரிடம் அல்லது அவரது முகவரிடம் ஒப்புவிக்கப்பட்டிருந்தால், மீதிச் சரக்குகளைச் செல்லுகையில் நிறுத்தலாம். மொத்தச் சரக்குகளின் உடைமையையும் விட்டுக் கொடுக்கும்படியான உடன்பாடு, சூழ்நிலைகளில் இருந்து புலனாகுமானால் மீதிச் சரக்கு களைச் செல்லுகையில் நிறுத்த முடியாது.

### செல்லுகையில் நிறுத்தம் எவ்வாறு செய்யப்படுகிறது (How Stoppage in Transit is effected)

இதுபற்றிய வழி முறைகள் பிரிவு 52-ல் சொல்லப்பட்டுள்ளன,

(i) விலைபெறு விற்றவர் தன் செல்லுகையில் நிறுத்தும் உரிமையை (அ) சரக்குகளைத் தன் நேரடி உடைமைக்கு எடுத்துக் கொள்வதின் மூலமோ அல்லது (ஆ) தன் உரிமையைக் கோரி சரக்

கேற்றிக்கோ, மற்ற ஒப்படைவு பெற்றவருக்கோ அறிவிப்பு விடுவதின் மூலமாகவோ செயல்படுத்தலாம். அத்தகைய அறிவிப்பு சரக்குகளைத் தன் நேரடி உடைமையில் வைத்திருப்பவருக்கோ அல்லது அவரது முதலருக்கோ விடுக்கலாம்.

*(ii)* விற்றவரால் செல்லுகையில் நிறுத்தத்துக்கான அறிவிப்பு சரக்கேற்றிக்கோ அல்லது மற்ற ஒப்படைவு பெற்றவருக்கோ விடுக்கப்பட்டிருந்தால், விற்றவருக்கு அல்லது விற்றவரின் ஆணையின்படி மற்றவருக்குச் சரக்குகள் திரும்பக் கொடுக்கப்படவேண்டும். அவ்வாறு திருப்பியனுப்புவதில் ஏற்படும் செலவுகள், விற்றவரையே சாரும்.

### III திரும்பி விற்கும் உரிமை (Right of Resale)

பற்றுரிமை, செல்லுகையில் நிறுத்தம் ஆகிய உரிமைகளுடன் திருப்பி விற்கும் உரிமையும் விலைபெறு விற்றவருக்குண்டு. இது பற்றியுள்ள விதிகள் பிரிவு-54-ல் சொல்லப்பட்டுள்ளன.

*(1)* இப்பிரிவிலுள்ள விதிமுறைகளுக்கு உட்பட்டு (Subject to the Provission of this Section) விலைபெறு விற்றவர், பற்றுரிமையையோ, செல்லுகையில் நிறுத்தும் உரிமையையோ பயன்படுத்துவதன் மூலம் மட்டும் விற்பனை ஒப்பந்தம் நீக்கம் பெற்று விடுவதில்லை.

*(2)* சரக்குகள் அழுகும் பொருள்களாய் இருந்தால் அல்லது பற்றுரிமையையோ, செல்லுகையில் நிறுத்தும் உரிமையையோ பயன்படுத்திய விலைபெறு விற்றவர் தன் சரக்குகளைத் திருப்புவதற்கும் தன் எண்ணத்தை வாங்கியவருக்கு அறிவித்தும், வாங்கியவர் தக்க காலத்திற்குள் விலை கொடுக்காமலோ, அல்லது கொடுக்க முன்வராமலோ இருந்தால், விலைபெறு விற்றவர் அச்சரக்குகளைத் தக்க காலத்திற்குள் திருப்பி விற்று, ஒப்பந்த மீறுகையால் ஏற்பட்டுள்ள இழப்பிற்கு முதலில் வாங்கியவரிடமிருந்து இழப்பீடு கோரலாம். திருப்பி விற்பதால் இலாபம் கிடைத்தால் அதில் வாங்கியவருக்கு எந்த உரிமையும் கிடையாது. திருப்பி விற்பது பற்றிய அறிவிப்பு வாங்கியவருக்கு விடுக்கப்படாதிருந்தால், விலைபெறு விற்றவருக்கு வாங்கியவரிடமிருந்து இழப்பீடு கோரும் உரிமை கிடையாது. ஆனால் திருப்பி விற்றதால் இலாபம் கிடைத்திருந்தால் விற்றவரிடமிருந்து முதலில் வாங்கியவர் அதனைப் பெறுகின்ற உரிமையுண்டு.

*(3)* பற்றுரிமை அல்லது செல்லுகையில் நிறுத்தல் மூலமாகப் பெற்ற சரக்குகளை திருப்பி விற்கும்போது முதலில் வாங்கிய

வருக்கு இதுபற்றிய அறிவிப்பு இல்லாதிருந்தபோதிலும் திருப்பி வாங்கியவர் நல்லபடியான உரிமை மூலத்தைப் பெறுகிறார்.

*(4)* வாங்கியவர் தவறிழைத்தால் விற்றவருக்குத் திருப்பி விற்கும் உரிமை உண்டென வெளிப்படையாக உடன்பாடு இருப்பின், தவறிழைக்கப்பட்டு சரக்குகள் திருப்பி விற்கப்படும் போது முதல் ஒப்பந்தம் இறுத்தம் அடைகிறது. (Original Contract of Sale is rescinded). அதனால் இழப்பீடு கோரும் விற்றவருடைய உரிமை பங்கப்படுவதில்லை.

ஏல விற்பனை (Action Sale)

ஏல விற்பனை பற்றிய விதிகள் பிரிவு-64-ல் கூறப்பட்டுள்ளன.

விற்பனை ஏல முறைப்படியிருப்பின்,

*(1)* சரக்குகள் கூறுகளாக (Lot) விற்பனைக்கு விடப்பட்டால் ஒவ்வொரு கூறும் முதல் நோக்கில் (Prima facie) தனித்தனி விற்பனை ஒப்பந்தத்தின் பொருளாகக் கொள்ளப்படும்.

*(2)* ஏலம் கூறுபவர் சுத்தியால் தட்டி அல்லது வேறு வழக்க நடைமுறைப்படி அறிவிக்கும்போது விற்பனை முடிந்து விட்டதாகக் கொள்ளப்படும். அவ்வாறு அறிவிக்கும்வரை ஏலம் கேட்பவர் (Bidder) யாராயினும் தம் விலைக் குறியைப் (Bid) பின்வாங்கிக் கொள்ளலாம்.

# 5. கூட்டாண்மை

## (Partnership)

கூட்டாண்மை ஒப்பந்தம், தொழில் புரிபவர்க்கு இன்றியமையாத ஒரு தனி ஒப்பந்தமாகும். ஒப்பந்தச் சட்டத்தின் 11-வது இயலில் காணப்பட்ட இதன் பகுதி வணிக வளர்ச்சியினால் பெருக்கமடைந்து அதினின்றும் நீக்கப்பட்டு 1932-ம் ஆண்டிலிருந்து தனிச் சட்டமாகவே மிளிர்கின்றது. 1890-ல் இங்கிலாந்தில் தொகுக்கப் பெற்ற சட்டத்தின் மறுபதிப்பாக இந்தியச் சட்டம் இருப்பினும் இது இந்நாட்டு நிலைமைகளுக்கேற்ப சில மாற்றங்களைக் கொண்டு இலங்குகின்றது.

வாணிகம் அல்லது தொழிலைக் கூட்டாக நடத்துபவர்கள் கூட்டாளிகள் (Partners) எனப்படுவார்கள். கூட்டாண்மையில் சேர்ந்து தொழில் நடத்துபவரைத் தொகுப்பு முறையில் 'நிறுமம்' (Firm) என்று குறிப்பிடுகிறோம். எந்தப் பெயரால் தொழில் நடத்தப் படுகிறதோ, அது நிறுமத்தின் பெயராகக் கொள்ளப் படுகிறது.

அனைவரும் அல்லது அனைவர் சார்பில் அவருள் எவரேனும் நடத்தும் ஒரு தொழிலில் கிடைக்கும் ஆதாயத்தை அனைவரும் பங்கிட்டுக் கொள்வது என்று உடன்பட்டவர்களிடையே எழும் தொடர்பினைக் கூட்டாண்மை அல்லது கூட்டு (Partnership) என்று இந்தியக் கூட்டாண்மைச் சட்டம் 4-ம் பிரிவு கூறுகிறது.

கூட்டாண்மையின் இன்றியமையாத கூறுகளாகப் பின்வருவன காணப்படுகின்றன:

(1) இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நபர்களிடையே கருத்து உடன்பாடு ஏற்படுதல் தேவையாகும். இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட நபர்களிடையே கூட்டாண்மை

ஒப்பந்தங் கொள்ள உடன்பாடு உண்டாதல் வேண்டும். கூட்டாண்மையும் ஓர் ஒப்பந்தமே என்பதனுல் செல்லுநிலை ஒப்பந்தம் (Valid Contract) நிறைவேறத் தேவைப்படும் அனைத்து கட்டு வரம்புகளும் நிறைவேற்றப்படுதல் தேவையாகிறது. இந்தியப் பங்கமைப்புச் சட்டத்தில்—வங்கித் தொழிலில் பத்து நபர்களுக்கு மிகாமலும். ஏனைய தொழில்களில் இருபது நபர்களுக்கு மிகாமலும் கூட்டாண்மை ஏற்பட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இந்த எண்ணிக்கை மிகைப்படுமானுல் கூட்டாண்மையானது, சட்ட முரணுன கருத்து உடன்பாடு, கொண்டதாகும்.

(2) நலன்கள் பங்கீடு (Share of Profits)

செலவுக்கு மீறிக் கிடைக்கும் அதிகப்படியானவற்றை நலன் (Profit) என்று கூறப்படும். இதனை நிகர நலன் (Net Profit என்றும் சொல்லலாம். இதில் தீர்மானமாகிய (Positive) நலன்களும், எதிர் மறையான (Negative) நலன்களும் அடங்குகின்றன. இத்தகைய நலன்களைப் பங்கிட்டுக்கொள்ள மேற்கொள்ளும் உடன்பாடு இருத்தல் வேண்டும்.

(3) தொழில் நிலை (Existence of Business)

தொழில் ஒன்றினை நடத்துவதற்கன்றி வேறு எதற்காகவும் கூட்டுக்கொள்ள இயலாது. அத்தொழிலும் சட்ட நெறியானதாக இருத்தல் வேண்டும்.

Varadarajulu Naidu *vs*. Thavasi Nadar (1963) — வழக்கில் 100 கட்டு பருத்தியினைக் கூட்டாக வாங்கி விற்க 'அ' வும் 'ஆ' வும் உடன்பட்டனர். இதில் 'அ' வும் 'ஆ' வும் கூட்டாளிகளாகக் கருதப்படுவர். ஆனுல் 'அ' வும் 'ஆ' வும் 100 கட்டு பருத்தியினை ஒட்டு மொத்தமாக வாங்கித் தங்களுக்கிடையில் பங்கிட்டுக் கொள்ள உடன்படுவாரேயானுல் அவர்கள் கூட்டாளிகளாக மாட்டார்கள் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

(4) முகவரிய தத்துவம் உள்ளடக்கியது (Principle of Agency)

தொழில் ஒன்றினை, அனைவருமோ அனைவர் சார்பில் அவருள் எவரேனும் ஒருவரோ நடத்துதல் வேண்டும். தொழிலில் நடைபெறும் எச்செயலுக்கும் ஒரு கூட்டாளி மற்றக் கூட்டாளிகளைக் கட்டுப்படுத்த இயலும். அதேபோன்ற மற்றக் கூட்டாளிகளும் அந்த ஒரு கூட்டாளியினைக் கட்டுப்படுத்தலாம். இத்தகைய ஒரு விதியினை Cox *vs*. Vickman (1860) வழக்கு நிர்ணயித்தது.

(5) விகிதப் பொறுப்பு (Contribution)

கூட்டாண்மைத் தொழிலில் விகிதப் பொறுப்பு தேவையான கூறுக இருப்பதில்லை. சொத்து, உழைப்பு அல்லது திறமையினை இணைக்கும் உடன்பாடு—கூட்டாளிகளிடை ஏற்படும் ஒரு தொழிலில்—கூட்டாளியாக, அதன் பொறுப்பு நிலைகளை மேற்கொள்ள உடன்பட்டால் போதுமானது.

(6) கூட்டாளிகளிடையே காணப்படும் சட்ட நெருக்கமான உறவினைத்தான் கூட்டாண்மையென்று சொல்லப்படுகிறதேயன்றி அனைத்துக் கூட்டாளிகளின் ஒட்டுமொத்தப் பெயராக அதனைக் கருதுவதில்லை.

(7) கூட்டாளிகளிடை ஏற்படும் உடன்பாட்டின் விளைவே கூட்டாண்மையாகுமேயொழிய, இந்துக் கூட்டுக் குடும்பத்தில் காணப்படுவது போலவோ, கூட்டுச் சொத்தெடுப்பில் (Joint Acquisition Property) உள்ளது போன்றோ, தகுநிலை (Status) காரணமாகக் கூட்டாண்மை எழுவதில்லை. கூட்டாண்மை ஏற்பட எழுத்து மூலம் அல்லது முறைகள் முக்கியமானவையல்ல. கூட்டாண்மையில் காணப்படும் கருநிலை திட்டவரைகள் பற்றிய சான்றுகள் நிரூபிக்கப்பட்டால் போதுமானதாகும். மன்றங்களும் சங்கங்களும் கூட்டாண்மையாகா. உறுப்பினர் ஒருவரின் செயலுக்கு மற்றவர், இதில் பொறுப்பு நிலைக்கு உள்ளாகார்.

கூட்டாளிகளின் வகைகள் (Kinds of Partners)

இயங்கும் தன்மைக்கேற்பக் கூட்டாளிகள் பலவகையினராவார்கள்.

(1) மெய்நிலைக் கூட்டாளி (Actual Partner)

இக் கூட்டாளி வெளித்தோற்றமானவர் (Ostensible) கூட்டாண்மை ஒப்பந்தத்தினல் கூட்டாளியான இவர், முகவரியத்திலிருந்து மற்றக் கூட்டாளிகளின் செயல்களுக்குக் கட்டுப்பட்டு ஒப்பந்தத்தினல் உரிமைகளைப் பெற்றுக் கடப்பாட்டிற்குள்ளாகிறர்.

(2) இயக்கமற்ற அல்லது உறங்கும் கூட்டாளி (Dormant or Sleeping Partner)

கூட்டாண்மைத் தொழிலில் தீவிர பங்கு கொள்ளாமல் உள்ள இவர், கூட்டாண்மைச் சட்டக் காரியங்கள் அனைத்திலும் கூட்டாளியாக விளங்குகிறர். இவர் நிறுமத்தின் கடனளருக்கு இந்த நிலையை அவர்கள் அறியாதபோதும், மற்றக் கூட்டாளி

களுக்குச் சமமான அளவில் நிறுமத்தின் கடன்களுக்குப் பொறுப்பாகிறார். அறிவிக்கப்படாத முதலர் நிலையில் இவர் உள்ளார்.

(3) பெயரளவேயான கூட்டாளி (Nominal Partner)

இவர், தொழிலில் மூலதனம் போடாமல், நிறுமத்திற்குத் தன் பெயரை அளிப்பதன் மூலம் கூட்டாளியாகிறார். கூட்டாண்மைத் தொழிலில் வரும் நலன்களில் பங்கு கொள்ளாத இவர், நிறுமத்தின் கடன்களுக்கு ஏனைய கூட்டாளிகளுடன் சேர்ந்து பொறுப்பாகிறார். இயக்கமற்ற கூட்டாளிபோலல்லாமல் இவர் நிறுவனத்தின் கடனாளர்களுக்கு அறிந்த ஒருவராக உள்ளார்.

(4) நலன்களுக்குமட்டுமான கூட்டாளி (Partners for Profit Only)

தொழிலில் மூலதனம் செய்கின்ற இவர், நிறுமத்தின் இழப்புகளுக்குத் தன்னை உட்படுத்திக் கொள்வதில்லை. ஆனால், உள் உடன்பாடு அறியாத நிலையில், வெளியார், இவரையும் ஏனைய கூட்டாளிகளுடன் சேர்த்தே நிறுமத்தின் கடன்களுக்குப் பொறுப்பாக்குவர்.

(5) கீழ்க் கூட்டாளி (Sub Partner)

இ. கூ. சட்டத்தின் 31-வது பிரிவில் கூட்டாண்மையின் கூட்டாளி ஒருவர் தன் நலனில் பங்கு கொள்ள, மூன்றும் பேருடன் கொள்ளும் உடன்பாட்டின்கீழ் இத்தகைய கீழ்க் கூட்டாளித் தோன்றுவதாகக் கூறப்பட்டுள்ளது. எனவே, அத்தகைய கீழ்க் கூட்டாளி நிறுமத்தின் கூட்டாளியாக மாட்டார்.

(6) முரண்தடையால் கூட்டாளி அல்லது அதிகாரப்போலி அல்லது உரிமைப்போலிக் கூட்டாளி (Partner by Estoppel or Holding out)

இ. கூ. சட்டத்தின் 28-வது (1) பிரிவில், சொல்லாலோ, எழுத்தினாலோ. செயலொன்றினாலோ, ஒருவர் கூட்டாண்மை ஒன்றன் கூட்டாளியாகத் தன்னை அறிவித்துக் கொண்டாலோ, கூட்டாளியாக அறிவிக்கும்படியான அளவில் தெரிந்து அனுமதித்துவிடினும் அத்தகைய அவரது செயலை நம்பி நிறுமத்திற்குக் கடனளித்தவர், அத்தகைய அவரைப் கடப்பாட்டிற்குள்ளாக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது. கடன் கொடுத்தவர், அவரது செயலை அறிந்தவரா இல்லையா என்பது அவசியமில்லை.

முகவரியச் சட்டத்திலும் இதுபோன்ற முரண்தடையால் உண்டான முகவரியம் பற்றி அறிந்துள்ளோம். இத்தகைய நிலை,

கூட்டாண்மையினின்றும் விடுபட்ட கூட்டாளி ஒருவர் அது பற்றிப் பொது அறிக்கை ஒன்றின் மூலம் உண்மையினைத் தெரிவிக்காமலிருந்து, ஏனைய கூட்டாளிகள் அவருடைய பெயரைக் கடிதத் தலைப்புகள், சீட்டுக்கள் முதலானவற்றில் பயன்படுத்த அனுமதித்தபோது ஏற்படுகின்ற ஒன்றாகும். இளவரையோ, உரிமைத் தீங்கினையோ இச்சட்டம் கட்டுப்படுத்தாது.

**கூட்டாளியின் கடமைகள் (Duties of a Partner)**

1. கூட்டாளியானவர் சம்பளமில்லாமல், தொழில் நிறுமத்தின் நடைமுறையில் தன் கடமைகளைச் சிரத்தையுடன் கவனிக்க வேண்டும் (13 (a) பிரிவு).

2. அவர் அதிகப்படியான பொதுநன்மையை உள்ளடக்கி நிறுமத்தின் தொழிலை நடத்த வேண்டும்.

3. கூட்டாண்மையானது முழுநம்பிக்கையில் எழுகின்ற ஒப்பந்தமாதலால், அவர் அனைத்து நடவடிக்கைகளிலும் தனக்கும் ஏனைய கூட்டாளிகளுக்குமிடையே மிகுந்த நல்லெண்ணம் நிலவப் பார்த்துக் கொள்ள வேண்டும் (Green *vs*. Howell (1910) 1. ch 495).

4. அவர் உள்ளபடியான பற்று வரவு கணக்கினைக் காட்ட வேண்டும்.

5. அவர் நிறுமத்தைப் பாதிக்கக்கூடிய யாவற்றையும் பற்றிய முழுவிவரமும் கூட்டாளி ஒருவருக்கோ அவருடைய சட்டப்பிரதிநிதிக்கோ தருதல் வேண்டும்.

6. அவர் நிறுமத்தின் பெயரைப் பயன்படுத்தியோ நிறுமத்தின் தொழில் தொடர்பினாலோ, நிறுமத்தின் சொத்தின் உபயோகத்தினாலோ நிறுமத்தின் தொழில் முறைகளினாலோ அடைந்த இரகசிய நலன்களை உள்ளடக்கிய அனைத்து நலன்களுக்கும் பற்றுவரவு கணக்கு வைக்க வேண்டும்.

(Sitha Ramamurthy Chetty *vs*. Gurnswamy Chetty. (1949) 1. M. L. J. 400)

7. ஒரு நிறுமத்தின் கூட்டாளியாக இருக்கும் ஒருவர், அந்நிலையில் இருக்கும் வரை, வேறு தொழிலில் ஈடுபடாமலிருக்குமாறு அவருக்கும் ஏனைய கூட்டாளிகளுக்குமிடையே ஏற்படும் உடன்பாட்டினால் கட்டுப்படுத்தப் படுகிறார் (பி. 11 (2). இ. ஒ. சட்டத்தின் 27-வது பிரிவின்படி தொழில் தடுப்பு ஒப்பந்தமாயினும் இது செயல்படும்.

8. ஒரு நிறுமத்தின் கூட்டாளி, அதே தொழிலை அந் நிறுமத்திற்கு போட்டியாக நடத்திடின், அதனால் பெற்ற நலன்கள் அனைத்தையும் நிறுமத்திற்களித்துப், பற்று வரவு கணக்குகளையும் காண்பிக்க வேண்டும் (பி. 16 (b).

9. நிறுமம் ஒன்று கலைக்கப்பட்ட பின்னர், அதன் நடவடிக்கைகள் அனைத்தும் முழுமையாக முடிக்கப்பெறுகின்றவரையில், நிறுமத்தின் பெயராலோ நிறுமத்தின் சொத்தினைத் தனக்குப் பயன்தரும் வகையில் உபயோகப்படுத்தியோ (நிறுமத்தால் நடத்தப்பட்ட) அதே தொழிலினைக் கூட்டாளியுள் யாரேனும் ஒருவர் நடத்துவதை மற்றவர் தடை செய்யலாம் (பி. 53).

10. பரஸ்பர பொறுப்புரிமை (Mutual Trust) நம்பிக்கையின் மீது ஏற்படுகின்ற உறவாகக் கூட்டாண்மை இருப்பதால், உடன் கூட்டாளியின் இசைவின்றி ஏனைய கூட்டாளிகளின்மீது திணிப்பதுபோல் கூட்டாளி ஒருவர் தம் பங்கினை மூன்றும் பேருக்கு உரிமை மாற்று செய்ய இயலாது. அத்தகைய உரிமை மாற்றம் நடைபெறின் கூட்டாண்மைக் கலைப்புக்கு அதுவே போதுமான ஆதாரமாகும் (பி. 44 (e) ).

11. நிறுமம் அடைகின்ற இழப்புக்குச் சரிவிகிதப் பொறுப்பு மேற்கொள்ள வேண்டும்.

12. கூட்டாண்மை உடன்பாட்டில் அளிக்கப்பட்ட அதிகாரங்களைத் தவிர மீறிச் செய்கின்ற செயல்களினால் ஏற்படுகின்ற இழப்புகளுக்காக கூட்டாளியொருவர் ஏனைய கூட்டாளிகளுக்கு நிறைவீடு செய்தல் வேண்டும்.

13. நிறுமத்தின் தொழிலில் வேண்டுமென்றேதான் தவிர்த்த (Wilful Neglect) செயலினால் இழப்பு ஏற்படின் அதற்கு அக் கூட்டாளி நிறுமத்திற்குப் பொறுப்புறுதி செய்யவேண்டும் (பி. 13).

14. நிறுமத்தின் தொழிலில் செய்யப்பட்ட மோசடியினால் உள்ளான இழப்பிற்கு, கூட்டாளி நிறுமத்திற்குப் பொறுப்புறுதி செய்ய வேண்டும் (பி. 10).

கூட்டாளியின் உரிமைகள் (Rights of a Partner)

1. ஒவ்வொரு கூட்டாளியும், தொழில் நிறுமத் தொடக்க காலத்தில் போடப்பட்ட அல்லது வாங்கப்பட்ட அல்லது யாதானும் ஒரு வழியில் தன்னாலோ-நிறுமத்திற்காகவோ, தொழில் நடத்துவதற்கும் அல்லது தொழில் நடத்துகின்றபோது

மூலதனமான பொருள்களுக்கும் உரிமைகளுக்கும் வாணிக நற்பெயருக்கும் (Good Will) கூட்டு உரிமையாளர் ஆவார்.

2. சம்பாதித்த நலனில் (Earned Profit) ஒவ்வொரு கூட்டாளியும் சமபங்கிற்கு உரிமையுடையவராகிறார் (பி. 13 (b)).

3. தொழில் நடத்துவதில் பங்கு கொள்ள ஒவ்வொரு கூட்டாளிக்கும் உரிமையுண்டு.

4. நெருக்கடி காலங்களில், நிறுமத்தை இழப்பினின்றும் பாதுகாக்கும் பொருட்டுத் தேவையான, நியாயமான செயல்களை ஒவ்வொரு கூட்டாளியும் செய்யலாம்.

5. நிறுமத்தின் எந்த ஒரு ஏட்டினையும் காண, சோதிக்க, பிரதி எடுக்க ஒவ்வொரு கூட்டாளிக்கும் உரிமையுண்டு (பி. 12 (d)).

6. எந்த ஒரு பொருளின்மீதும் தன் கருத்தினைத் தெரிவிக்க ஒவ்வொரு கூட்டாளிக்கும் உரிமையுண்டு. ஆனால், தொழிலின் சாதாரண நடைமுறைகளில் கருத்துவேறுபாடுகள் ஏற்படுகின்றபோது, பெரும்பான்மையோர் எண்ணத்திற்கு அவர் கட்டுப்பட்டவராவார். ஆனால் கூட்டாளிகளின் இசைவின்றித் தொழிலில் எந்தவித மாற்றத்தினையும் செய்தல் முடியாது (பி. 12 (c)).

7. தன்னால் அளிக்கப்பட்ட மூலதனத்திற்கு வட்டி பெறும் உரிமையுடைய கூட்டாளிக்கு, நலன்களினின்றே அத்தகைய வட்டி செலுத்தப்படும்.

8. உடன்பட்ட மூலதனத்திற்கு மேலும் செலுத்தப்படுகின்ற முன்பணத்திற்கு ஒவ்வொரு கூட்டாளியும் ஆண்டொன்றுக்கு 6 விழுக்காடு வட்டி பெறும் உரிமை உடையவராவார் (பி. 13 (d)).

9. தொழிலின் அன்றாட நடவடிக்கைகளிலும், நெருக்கடியான நிலைகளிலும் தன்னால் உண்டான கடப்பாடுகளுக்கு நிறுமம் ஈட்டுறுதி செய்யும் உரிமையினை ஒவ்வொரு கூட்டாளியும் பெறுகின்றார் (பி. 13 (e)).

10. நல்லெண்ணத்தில் பெரும்பான்மை கூட்டாளிகள் சேர்ந்து கூட்டாளி ஒருவரை வெளிநீக்கம் செய்து அதிகாரம் செலுத்துகின்ற வரையில் ஒவ்வொரு கூட்டாளியும் நிறுமத்தில் இருக்க உரிவையுடையவராவார் (பி. 33 (1)).

11. நிறுமத்திலுள்ள அனைத்துக் கூட்டாளிகளின் இசை வின்றிப் புதுக் கூட்டாளி ஒருவரை நிறுமத்தில் அறிமுகமாக்கிப் புகுத்த இயலாது (பி. 31 (1)).

12. தான் சேர்வதற்கு முன்பாக நிறுமத்தினுல் ஒப்புக் கொள்ளப்பட்ட எந்த ஒரு கடப்பாட்டிற்கும் கூட்டாளி ஒருவர் உள்ளாக மாட்டார் (பி. 31 (2)).

13. (அ) அனைத்துக் கூட்டாளிகளின் இசைவோடு, கூட் டாளி ஒருவர் கூட்டாண்மையினின்றும் ஒய்வு பெறலாம்.

(ஆ) கூட்டாளிகளிடையே ஏற்படுகின்ற எழுத்துமூல உடன்பாட்டினுல் ஒரு கூட்டாளி ஓய்வு கொள்ளலாம்.

(இ) விருப்பு முறிக்கூட்டு (Partnership at Will) ஒன்றில், மற்றக் கூட்டாளிகளுக்குத் தன் ஓய்வு பெறும் எண்ணத்தை எழுத்து மூல அறிக்கை செய்து, ஒரு கூட்டாளி ஓய்வு பெறலாம் (பி. 32 (1)).

14. நியாயமான உடன்பாட்டினுல் தடுக்கப்பட்டிருந்தா லொழிய-வெளியேறுங் கூட்டாளி நிறுமத்திற்குப் போட்டியான தொழில் ஒன்றினை நடத்தலாம். அல்லது அதற்கான விளம்பரம் செய்யலாம். ஆனுல், அவர் (அ) நிறுமத்தின் பெயரைப் பயன் படுத்தக்கூடாது. (ஆ) நிறுமத்தின், தொழிலின் பிரதிநிதியாகத் தன்னைக் கூறிக்கொள்ளக் கூடாது. கூட்டாண்மையினின்றும் தன்னை விடுவித்துக்கொள்ளு முன்பாக நிறுமத்தின் வாடிக்கை யாளர்களாக இருந்தவர்களின் ஒத்துழைப்பை அத்தகையவர் பெற முயலக் கூடாது (பி. 36 (1)).

15. ஓய்வுபெற்ற கூட்டாளியோ, இறந்த கூட்டாளியின் பிரதிநிதியோ, நிறுமத்தின் சொத்தில் அவருக்குரிய பங்குபற்றி ஏனைய கூட்டாளிகளால் அறுதியிடப்பட்டுக் கொண்டு செலுத்தப் படாத வரையில், அத்தகையவர், பங்கின் உபயோகத்தினுல் பெறப்பட்டதான நலனின் உரிமை அல்லது அங்ஙனம் தன் பங் கினைப் பிரித்துக் கொடுக்கப்பட வேண்டிய நாளிலிருந்து கொடுக் கப்படுகின்ற நாள்வரையில் ஆண்டிற்கு 6 விழுக்காடு வட்டி ஆகிய இவ்விரண்டில் எது அதிகமோ அதனைப் பெறும் உரிமை அடைகின் றுர். ஆனுல் அத்தகைய கூட்டாளிகளிடையே முன்னரே இருந்த உடன்பாட்டின்படி, அன்னுரின் பங்கினை ஏனைய கூட்டாளிகள் விலைக்குப்பெறும் உரிமையினுல், உடன்பாட்டின் கருநிலை திட்ட வரையறைகள் அனைத்து முறைகளிலும் நிறைவேறியிருப்பின், மேற் சுட்டிய விதி பொருந்தாது (பி. 37).

கூட்டாண்மைச் சொத்துகளைப் பொறுத்தவரை எஞ்சியுள்ள கூட்டாளிகள், இறந்துபட்ட கூட்டாளியின் பிரதிநிதிகளுடன் நம்பக உறவு (Fidnciary Relationship) கொள்ளுகிறார்கள். இறந்துபட்ட கூட்டாளியின் பிரதிநிதியின் பாத்தியத்தையும் நலனுக்காக மட்டும் அல்லது வட்டிக்காக மட்டுமே கொண்டதாகும். கலப்புப் பாத்தியதை அனுமதிக்கப்பட மாட்டாது.

கூட்டாளிகளில் ஒருவர் இறந்து விட்டாலோ, ஓய்வு பெற்று விட்டாலோ எஞ்சியக் கூட்டாளிகள் மட்டும் தனித்தோ புதிய கூட்டாளி ஒருவரைச் சேர்த்தோ தொழிலினை நடத்தலாம். நிறுவப்பட்ட தொழிலின் வரையறுத்துக் கொண்ட கால எல்லைக்கு மேலும் இத்தகைய கூட்டாண்மையினைத் தொடர்ந்து நடத்தலாம். ஆனால் சட்டத்தின் கண்ணுக்கு அத்தகைய நிறுமம் மாறுபட்ட புதிய ஒன்றாக "மீண்டும் நிறுவப்பட்ட நிறுமமாக"வே தோன்றும். மீண்டும் நிறுவப்பட்ட நிறுமத்தின் கூட்டாளிகளின் உரிமைகளும் சட்டப் பிணைப்பு நிலைகள் பற்றியும் இந்தியக் கூட்டாண்மைச் சட்டத்தின் 18-வது பிரிவில் கூறப்பட்டுள்ளது.

**கூட்டாண்மைக்கான சோதனை**

பொதுவாகக் கூறுமிடத்து, இழப்பினை அடையக் கூட்டாண்மையில் சேர்கின்றவர் எவருமிலர். ஆனால் அதுவே சில நேரங்களில் தவிர்க்க இயலாமலும் நேரிடுகின்றது. கூட்டாண்மை உள்ளபடியாக இருக்கின்றதா இல்லையா என்பதனை அறிய, நீதிமன்றத்தினை நாடுகின்ற நிலையில்தான் உண்மையறிய இயலும். பிரபல வழக்குகளின் தீர்ப்பினின்றும், உண்மையான நலனில் பங்கு கொள்ள ஏற்படும் உடன்பாடு என்பதாக மட்டுமல்லாமல் ஏனையோரின் நடத்தையினால் உண்டாகும் இழப்புகளுக்குப் பங்கேற்கும் உடன்பாடாகக் கூட்டாண்மையினைக் கருத வேண்டும் என்று அறிகின்றோம். இது பற்றி இ. கூ. சட்டத்தின் 6-வது பிரிவில் விளக்கம் காணப்படுகின்றது.

**ஏனைய சட்டநிலையான உறவுநிலைகளுக்கும் கூட்டாண்மைக்குமுள்ள மாறுபாட்டினைச் சிறிது ஆராய்வோம்**

கூட்டாண்மையினைப் போன்றே காணப்படுகின்ற முற்றிலும் மாறுபட்ட சட்டமுறையான உறவு நிலைகள் பற்றிப் பிரிவு 6 விளக்கம் 2-ல் காணப்படுகிறது.

I. உடன் சொத்துரிமை (Co-Ownership) யனிரினின்றும் கூட்டாண்மை வேறுபடுகிறது. சான்றாக இருவர் கூடி ஒரு வீட்டின் உரிமையாளராகி, வாடகைக்கு அதனைவிட்டுப் பங்கு கொள்வாரானால் அன்னவர் உடன் சொத்துரிமையினராவரே

யன்றி அவரை கூட்டாண்மையின்பாற்பட்ட உறவினராகக் கொள்ள இயலாது. ஏனெனில் இதில் ஒருவரை மற்றவரின் பிரதி நிதியாகக் கொள்ளக்கூடிய கருத்துக் காணப்படவில்லை.

கீழ்க்காணும் அட்டவணையினின்றும் இரண்டிற்குமுள்ள மாறு பாட்டினை அறியலாம்.

| கூட்டாண்மை (Partnership) | உடன் சொத்துரிமை (Co-Ownership) |
|---|---|
| 1. ஒப்பந்தத்தின் அடிப்படையில் உண்டாவது. | 1. ஒப்பந்தத்தின் அடிப்படையிலே அன்றித் தகுதிநிலை (Status)யினாலும். உண்டாவது. இறந்த நபரின் வாரிசாகப் பலர் உண்டாகலாம். |
| 2. நலன்களும், இழப்புகளும் பங்கேற்கின்ற வகையில் அமைகின்றன. | 2. எப்பொழுதும நலன்களிலும் இழப்புகளிலும் பங்கேற்பதாக அமைவதில்லை. |
| 3. நிறுமத்தின் அதிகப்படியான நிலுவைகளில் பங்கு கொள்ளும் பாத்தியதையினைக் கூட்டாளி ஒருவர் பெறலாம். ஆனால் நிறுமத்தின் சொத்தின் வகைகளில் பங்கு கொள்ள முடியாது. | 3. கூட்டுச் சொத்தின் வகைகளில் கூறுபோடும் பாத்தியதை உடையவராக உடன் சொத்துரிமையினர் உள்ளனர். |
| 4. மற்றக் கூட்டாளிகளின் இசைவின்றித் தன் பங்கினை முற்றிலும் புதிய ஒருவருக்குக் கூட்டாளி ஒருவர் உரிமை மாற்று செய்து வைக்க முடியாது. | 4. உடன் சொத்துரிமையினர் தம் பங்கினை மற்ற உடன் சொத்துரிமையினரின் இசைவின்றியே முற்றிலும் புதியவருக்கு மாற்றுக்கம் (Alianation) செய்துவைக்க முடியும். |
| 5. தொழில் நிறுமத்தின் மற்றக் கூட்டாளிகளின் நடத்தைகளுக்கு ஒவ்வொரு கூட்டாளியும் கட்டுப் பட்டவராக உள்ளார். | 5. மற்றைய உடன் சொத்துரிமையினர் தம் இசைவின்றி உண்டாக்கப்படும் கடப்பாடுகட்கு உடன் சொத்துரிமையினர் கட்டுப்பட்டவராகார். |

**II.** கூட்டாண்மைத் தொழிலில் உண்டாகும் நலன்களில் மட்டும் வட்டிக்காக அல்லது வட்டிக்கு மேலும் பங்கேற்கும் கடனுளர் (Creditor) கூட்டாளியாக மாட்டார்.

**III.** தொழில் நிறுமத்தில் கிடைக்கும் நலன்களில் மட்டும் தம் பணிக்கான கூலியாக அல்லது கூலிக்கு மேலுமாகப் பங்கேற்கின்ற பணியாளர் (Servant) கூட்டாளியாகார்.

**IV.** சமூக விடுதிகள் அல்லது சமுதாயக்குழுமம், கூட்டாண்மையின்பாற்படாது. ஏனெனில் நலன் (Profit) பெறும் நோக்கத்துடன் அமைக்கப் படுகின்றனவாக அவற்றை எண்ணுவதற்கில்லை.

**V.** நிறுமத்தினின்றும் கூட்டுருமம் (Corporation) வேறுபட்டதாகும். தனிநபர்கள் பலரின் தொகுதி அல்லது தொடர் வரிசை கூட்டுருமம் எனப்படும். சட்ட நோக்கில் கூட்டிருமத்திற்கு அந்நபர்களினின்றும் வேறுபட்ட சட்டநிலையும் உரிமைகளும் கடமைகளும் உண்டு.

| நிறுமம் (Firm) | கூட்டுருமம் (Corporation or incorporated Company) |
|---|---|
| 1. நிறுமம் வேறுபட்ட சட்டநிலையுடையதன்று. ஆனால், தற்காலிகமான தனிநபர் கூட்டாளிகளைக் கொண்டதாக உள்ளது. | 1. தனிநபர்கள்பலரின்தொகுதியோடு கூடிய கூட்டுருமம் அந்நபர்களினின்றும் மாறுபட்ட சட்டநிலையும், உரிமைகளும், கடமைகளும் கொண்டுள்ளன. |
| 2. நிறுமத்தின் கடப்பாடுகட்கு ஒவ்வொரு கூட்டாளியினையும் சொந்தமாகப் பொறுப்புக்குள்ளாக்க இயலும். | 2. வரையறுக்கப்பட்ட கடப்பாட்டுக் கூட்டுருமத்தில், கூட்டுருமத்தின் நிலுவைகளினின்றும் தாம் கடப்பாடுகளைப் பெற இயலுமே ஒழிய பங்குதாரர் தாம் மேற்கொண்ட பங்குக்குரிய மதிப்பிற்கு மேலாக எதற்கும் பொறுப்பாகார். |
| 3. கூட்டாளி ஒருவர், முற்றிலும் புதிய ஒருவருக்குத் தன் பங்கினை மற்றை கூட்டாளிகளின் இசைவின்றி உரிமை மாற்று செய்ய முடியாது. | 3. பொதுவாகக் கூறுமிடத்துத் தாம் விரும்பிய யாருக்கும் தம் பங்கினை உரிமைமாற்று செய்யும் நிலையில், கூட்டுருமத்தில் பங்குதாரர் உள்ளார். |
| 4. கூட்டாளி ஒருவர், இறந்துவிட்டாலோ, ஓய்வு பெற்றாலோ, நொடிப்பு நிலைக்கு உள்ளானாலோ நிறுமம் கலைக்கப்படுகின்றது. | 4. பங்குதாரர் ஒருவரின் இறப்பினாலோ, ஓய்வடைதலினாலோ, நொடிப்பு நிலையினாலோ கூட்டுரும நிலைப்புப் பாதிக்கப்படுவதில்லை. |

VI. கூட்டாண்மைக்கும் இந்துக் கூட்டுக் குடும்ப நிறுமத்திற்குமுள்ள வேறுபாடுகள் பின்வருவனவாகும்:

| கூட்டாண்மை நிறுமம் (Partnership) | இந்துக் கூட்டுக் குடும்ப நிறுமம் (Joint Hindu Family Firm) |
|---|---|
| 1. உறுப்பினர்களிடையே உண்டான உடன்பாட்டின் விளைவினால் உண்டாவது. | 1. தகுநிலையினால் எழுந்த ஒன்றே தவிர, உடன்பாட்டினால் உண்டானதன்று. |
| 2. உறுப்பினர் ஒருவர் இறந்து படுவதனால் ஒற்றுமை குலைக்கப்பட்டு, நிறுமம் கலைக்கப்படும். | 2. எந்த ஆண்மகன் இறப்பதனாலும் கலைப்பு ஏற்படுவதில்லை. |
| 3. நிறுமத்தின் கூட்டாளியாக ஆண், பெண் ஆகிய எப்பால் (Either Sex) உறுப்பினரும் இருக்கலாம். | 3. ஆண் உறுப்பினர்கள் மட்டுமே கூட்டுக் குடும்ப நிறுமத்தில் உறுப்பினர்களாக முடியும். |
| 4. மற்றைய கூட்டாளிகளின் இசைவின் மீதே புதிய கூட்டாளி சேர்க்கப் படுவார். | 4. ஆண் குழந்தைகள் பிறப்பினால் இந்துக் கூட்டுக் குடும்ப நிறுமத்தில் தானாகவும், அடிக்கடியும் உறுப்பினர்களின் எண்ணிக்கை கூடும். |
| 5. எந்த ஒரு கூட்டாளியும் நிறுமத்தின் பெயரால், கூட்டாண்மைத் தொழிலின் நிமித்தம் அடைமானம் செய்யும் உரிமையுடையவராக உள்ளார். | 5. மற்ற உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தும் வகையில் இந்துக் கூட்டுக் குடும்ப மேலாளர் மட்டுமே கடன் ஒப்பந்தம் மேற்கொள்ள முடியும். |
| 6. நிறுமத்தின் கடன்களுக்கு ஒவ்வொரு கூட்டாளியும் சொந்தமாகக் கடப்பாட்டிற்குள்ளாகிறார். | 6. நிறுமக் கடன்களுக்கு மேலாளரே பொறுப்பேற்கிறார். கூட்டுக் குடும்பத்தின் ஏனைய உறுப்பினர்கள் தங்களுடைய நலனுக்குகந்த விகிதாச்சாரத்தில் கடப்பாட்டிற் குள்ளாவார். மேலாளருடன் சேர்ந்து கடனுக்கு ஒப்பந்தம் கொண்டாலும், பின்னர் அவர் கொண்ட கடன் ஒப்பந் |

| கூட்டாண்மை நிறுமம் (Partnership) | இந்துக் கூட்டு குடும்ப நிறுமம் (Joint Hindu Family Firm) |
|---|---|
| | தத்தை ஒப்புதலளித்து மேற்கொண்டால் தவிர ஏனேயோர் சொந்தப் பொறுப்புக்கு உள்ளாகார். |
| 7. ஒவ்வொரு கூட்டாளியும் கலைப்பு வேண்டவும், நிறுமத்தின் கணக்கினைக் கோரவும் உரிமையுடையவராக உள்ளனர். | 7. உள்ள நிலுவைகளில் பங்கு கொள்ளும் உரிமையினைத் தான் - உறுப்பினர் பெற முடியுமே தவிர மேலாளரின் முன் நடத்தைக்கான கணக்குக் கோர இயலாது. |

**கூட்டாண்மைக் கால வரையறை (Duration of Partnership)**

**1. விருப்பு முறிக் கூட்டாண்மை (Partnership at Will)**

கூட்டு வாணிக ஒப்பந்தத்தில் அது எவ்வளவு நாள் நீடிக்க வேண்டுமென்றோ, எப்பொழுது முடியவேண்டுமென்றோ எழுதப்படவில்லையெனில் அது "விருப்புமுறிக் கூட்டு" அல்லது "விருப்பு வரைக்கூட்டு" எனப்படும்.

**2. குறிப்பிட்ட கூட்டாண்மை (Particular Partnership)**

குறிப்பிட்ட தொழில் அல்லது வாணிகம் ஒன்று முடியும்வரை மட்டும் ஒருவர் மற்றவருடன் கூட்டு சேர்ந்து அமைவது குறிப்பிட்ட கூண்டாண்மை என்று கருதப்படும். எடுத்துக்கொண்ட வியாபார பணி முடிகின்றவரையில் மட்டும் இந்தக் கூட்டு நீடிக்கும். மாறுன ஒப்பந்தம் கொள்ளாத வரையில், அத்தகைய நிறுமத்தினுல் மேற்கொள்ளப்படுகின்ற வேறு தொழில்களிலும் கூட்டாளிகளின் கடமைகளும் உரிமைகளும் முன்னதில் உள்ளது போன்றே தொடருகின்றது.

**3. குறிப்பிட்ட காலக் கூட்டாண்மை (Partnership for a Fixed Term)**

கூட்டாளிகளிடையே தொழில் ஒன்றினைக் குறிப்பிட்ட கால அளவில் கூட்டாக மேற்கொள்ள வரையறுத்துக் கொண்டு ஒப்பந்தம் மேற்கொள்ளப்பட்டால், அத்தகைய கூட்டாண்மை குறிப்பிட்ட காலக் கூட்டாண்மை என்று கருதப்படுகின்றது.

**கூட்டாண்மை நன்மைகளுக்காகச் சேர்ந்த இளவரின் உரிமைகள் (Rights of Minor Admitted to Benefits of Partnership)**

இளவர் ஒப்பந்தம் மேற்கொள்ளும் தகுதி உடையவர் அல்லர் என்பதும் அவரால் மேற்கொள்ளப்படும் ஒப்பந்தம் செல்லா நிலை

யது என்றும் ஒப்பந்தச் சட்டத்தில் கண்டுள்ளோம். எனவே, இ. கூ. சட்ட இளவர் ஒருவர் கூட்டாளியாக இருக்க இடமளிக்க வில்லை. ஆனல் ஏற்கனவே நிறுவப்பட்டுள்ள நிறுமத்தின் நன்மை களில் இளவரைச் சேர்த்துக்கொள்ள முடியும் என்று பி. 30 வழி வகை செய்துள்ளது.

1. இளவரின் பங்கு, நலன் (Profits) முதலானவை உடன் பாட்டினுல் முடிவு செய்யப்படும்.

2. கூட்டாண்மை பற்று வரவு கணக்கினை அணுகும் வாய்ப் புப் பெற்றவராக இளவர் இருக்கிருர்.

3, நிறுமத்தின் நிலுவைகளில் உள்ள தம் பங்கின் அள விற்கே இளவர் கடப்பாட்டிற்குள்ளாவார்; சொந்தப் பொறுப்புக் குள்ளாகார். இளவர் பங்குரிமையர் (Minor Coparcener) ஒரு வர் தம் இளமையின்போது நிறுமம் ஒப்பந்தம் மேற்கொண்ட கடன்களுக்குப் பொறுப்பாகார்.

4. கூட்டாளியின் நிலையினை இளவர் அடைய முடியாதாகை யால், தம் பங்கினைச் செலுத்துமாறு மற்றக் கூட்டாளிகளின் மீது வழக்குத் தொடரும் உரிமை இவருக்குக் கிடையாது.

5. கூட்டாண்மையினின்றும் பிரிந்து போகும் விருப்புடைய வராக இளவர் இருப்பின், மற்றைய கூட்டாளிகள்மீது வழக்குத் தொடர்ந்து பிரித்துக் கொள்ளலாம்.

6. உரிமை வயது அடைந்த பின்னர் நிறுமத்தில், கூட்டாளி யாகச் சேரவோ சேராமலிருக்கவோ இளவர் முடிவு செய்து கொள்ளலாம்.

7. இளவர் கூட்டாண்மையில் சேர்வதாக முடிவு கொள்ளின் அன்னுர் தம் பங்கின் அளவேயன்றிச் சொந்தமாகவும் கடப்பாட் டிற்கு உள்ளாகிருர்.

இங்கிலாந்துச் சட்டப்படி இளவர் ஒருவர் கூட்டாளியாக முடியும். அவருடைய இளமை வயதில் நிறுமத்தின் கடன் களுக்குப் பொறுப்பாக மாட்டார் என்பதோடு அவராலும் கடப் பாட்டிற்குள்ளாக்க முடியாது. உரிமை வயதடைந்த பின்னர் நிறுமத்தின் முன் நடவடிக்கைகளை ஒத்துக் கொள்ளாமல் இருக் கலாம். கூட்டாண்மைக் கடன்களுக்காக இளவரின் கூட்டாண் மைச் சொத்து முழுமையையும் உட்படுத்தலாம். உரிமைக் கூட் டாளிகளின் தவறுகளுக்கு இளவர் கூட்டாளியினைக் கடப்பாட் டிற்கு உள்ளாக்க முடியும்.

**மோசடியினாலோ திரித்துக் காட்டலினாலோ கூட்டாண்மை**

ஒப்பந்தம் போன்றே கூட்டாண்மையில் மற்றைய கூட்டாளிகளின் மோசடியினாலோ, திரித்துக் காட்டலினாலோ மேற்கொள்ளப்படுகின்ற உடன்பாட்டினைக் கூட்டாளி ஒருவர் முறித்துக் கொள்ளலாம். அத்தகையவருக்கான உரிமைகள் பற்றி பி. 52 விளக்குகிறது.

**மூன்றும் பேர்களுடன் கூட்டாளிகளின் உறவுத் தன்மைகள்**

நிறுமத் தொழிலின் அனைத்துக் காரியங்களுக்கும் கூட்டாளி ஒருவர் நிறுமத்தின் முகவராக (Agent) உள்ளார். எஞ்சியுள்ள கூட்டாளிகளுக்காகவும், அவர்கள் பொருட்டாகவும் தொழில் புரிய எந்தவொரு கூட்டாளிக்கும் உரிமையுண்டு. ஒருவர் மற்றவருக்கு முதலராகவும் (Principal) முகவராகவும் (Agent) இருக்கின்றார். முகவரின் செயலுக்கு முதலர் எங்ஙனம் பொறுப்பாகின்றாரோ, அவ்வாறே தொழிலுக்காக ஒரு கூட்டாளி மேற்கொள்ளும் ஒப்பந்தத்திற்கு அடுத்த கூட்டாளி கட்டுப்படுகிறார் (In Baird's Case (1870)).

இ. கூ. சட்டத்தின் பிரிவு 19-ல் ஒரு கூட்டாளிக்கு அளிக்கப்பட்டுள்ள உட்கிடை அதிகாரம் பற்றி (Implied Authority) கூறப்பட்டுள்ளது. நிறுமத்தினால் நடத்தப்படும் தொழிலில் கூட்டாளி ஒருவரின் செயல் அன்றாட நடைமுறைகளில் ஒன்றானதாக இருப்பின், அத்தகைய கூட்டுத் தொழிலில் அச் செயல் பழக்கமான முறையில் நடப்பிக்கப்பட்டிருப்பின், அத்தகைய அவருடைய செயல் கூட்டாண்மையிலுள்ள மற்ற உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தும். அத்தகைய அவருடைய அதிகாரம் தோற்ற (Apparent) அல்லது உட்கிடை (Implied) அல்லது வெளித் தோற்றமான (Ostensible) அதிகாரம் என்றழைக்கப்படும்.

மூன்றும் பேர்களுடன் கூட்டாண்மை மேற்கொள்ளும் நடவடிக்கைகளில் செயல் எதுவும் சரி உண்மையான அதிகாரத்திற்குட்பட்ட தா வெளித் தோற்றமான அதிகார வரம்பிற்குட்பட்டதா என்றறிய வேண்டும். ஒவ்வொரு கூட்டாளியும், நிறுமத்தினால் நடத்தப்பட்ட செயல்கள் அனைத்திற்கும் அவர் கூட்டாண்மையில் இருக்கும்போது மற்றக் கூட்டாளிகள் அனைவருடன் கூட்டு சேர்ந்தும் தனித்தும் கடப்பாட்டிற்குள்ளாவார். கூட்டாளி ஒருவரின் வெளித்தோற்ற அதிகாரத்தினைக் கூட்டாளிகளிடையே ஏற்படும் உடன்பாட்டினால் கட்டுப்படுத்தப்படுமானால், அதுபற்றி மூன்றும்பேர் அறிந்திருந்தால் மட்டும் அத்தகைய அளவில் கட்டுப்படுவார்.

இ. கூ. சட்டத்தின் பி. 19 (2)-ல் உட்கிடை அல்லது வெளித் தோற்ற அதிகாரத்திற்குட்படாத செயல்கள் சிலவற்றைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. நிறுமத்தின்மீது மோசடியாகவோ, மற்றக் கூட்டாளியின் இசைவுடன் உள்ள காரியத்தைத் தவிர ஏனைய நிறும நடவடிக்கைகளில் எதுபற்றியும் வழக்கமான செயல் புரிந்து வரும் எந்த ஒரு கூட்டாளிக்கும் கொடுக்கும் அறிக்கை யானது, நிறுமத்திற்குற் தரப்படும் அறிக்கையாகவே கொள்ளப் படும் (பி. 24). அன்றுடத் தொழில் நடவடிக்கைகளில் கூட்டாளி ஒருவரால் தொழில் பற்றிச் செய்யப்படுகின்ற ஒத்தேற்பு (Admission) அல்லது விண்ணப்பம் (Representation) நிறுமத்திற்கு எதிரான சான்றுகக் கொள்ளப்படும் (பி. 23),

உள்வருகின்ற வெளியேறுகின்ற கூட்டாளிகள் (In Coming and out Going Partners)

கூட்டாண்மையிலுள்ள அனைத்துக் கூட்டாளிகளின் இசை வின்றி எந்த ஒரு நபரும் கூட்டாளியாக அறிமுகம் ஆகிப் புகுத்தப்பட முடியாது என்பதை முன்னரே கண்டுள்ளோம். அறிமுகமான கூட்டாளி அவரது சேர்க்கைக்கு முன்பாக நிறுமத் தினல் மேற்கொள்ளப்பட்ட எச் செயல்களுக்கும் பொறுப்பாக மாட்டார் என்று இ. கூ. சட்டத்தின் பி. (31) கூறுகிறது.

அனைத்துக் கூட்டாளிகளின் இசைவுடன் கூட்டாளிகளிடையே உண்டான எழுத்து மூல உடன்பாட்டின்படி அல்லது விருப்பு முறிக்கூட்டில் உள்ள ஒருவர் மற்றவர்களுக்குத் தன் ஓய்வு பெறும் எண்ணத்தை அறிவிப்பு மூலம் செய்தும் ஒரு கூட்டாளி தன்னைக் கூட்டாண்மையினின்றும் விடுவித்துக் கொள்ளலாம். உடன் கூட் டாளிகள் பெரும்பான்மையராக இருந்து முடிவு செய்யினும், ஒரு கூட்டாளியினை விலக்க முடியாது.

கூட்டாளிகளிடையே அதற்கான உடன்பாடு இருப்பினும் அத்தகைய உடன்பாட்டினை நல்லெண்ணத்தில் நிறைவேற்றிடி னும் ஒரு கூட்டாளியினை விலக்க இயலும் என்று இ. கூ. சட்டத் தின் 33-வது பிரிவு கூறுகிறது.

நொடிப்பு நிலைக்குள்ளானவராகக் கூட்டாளி ஒருவர் நீதித் தீர்ப்புக் குள்ளானல் (Adjudication) அந்நாளிலிருந்து அவர் கூட்டாண்மையிலிருந்து விடுபட்டவராவார். கூட்டாளி ஒருவரின் நொடிப்பு நிலைக்கான நீதித் தீர்ப்பினல் நிறுமம் கலைக்கப்படக் கூடாது என்று கூட்டாளிகளிடையே ஒப்பந்தம் ஏற்பட்டிருப்பின், அந்நாளுக்குப் பின்னர் நிறுமத்தின் எச்செயலுக்கும் நொடிப்பு நிலையரின் சொத்தினைப் கடப்பாட்டிற்குள்ளாக்க முடியாது.

(பி. 34). கூட்டாளி ஒருவர் இறப்பினால் நிறுமம் கலைக்கப்பட மாட்டாது என்று கூட்டாளிகளிடையே உடன்பாடு ஏற்படு மானால், இறந்த கூட்டாளியின் சொத்தினை, அவர் இறந்த நாளுக்குப் பின்னர் நிறுமத்தின் செயல்களுக்குப் பொறுப்பாக்க இயலாது (பி. 35). சில கட்டுவரம்புகட்குட்பட்டு வெளியேறும் கூட்டாளி நிறுமத்திற்குப் போட்டியான தொழில் ஒன்றினைச் செய்யலாம் (பி. 36). ஓய்வு பெற்ற கூட்டாளியும், இறந்த கூட்டாளியின் பிரதிநிதியும் தங்களுடைய கணக்குகள் தீர்க்கப் படாத வரையில், அந்நாளுக்குப் பின்னர் நிறுமத்தின் நலன் களுக்கு உரிமை கொண்டாட முடியும் (பி. 37). கூட்டாண்மை யின் அமைப்பில் மாறுதல்கள் ஏற்படுகின்ற நாளுக்குப் பின்னர் நடைபெறும் தொழில் விவரங்களைப் பொறுத்து, முன்னர்த் தொழில் விவரங்களுக்கென நிறுமத்திற்கு அல்லது மூன்றாம் பேருக்கும் கொடுக்கப்பட்ட தொடர் பொறுப்புறுதியினை (Continuing Guarantee) மாறான உடன்பாடு ஏற்படாத வரையில், மறித்தழிக்கலாம் (Revoked) (பி. 38).

**கூட்டாளியின் கடப்பாட்டிற்கு முடிவு காணல் :** கூட்டாளி ஒருவரின் கடப்பாடானது சில வழிகளினால் முடிவு பெறும்.

(1) புத்தீடு (Novation)

ஓய்வுபெறும் கூட்டாளி, மூன்றாம்பேர் கடனாளர்கள் (Third Party Creditors) அவர் ஓய்வு பெற்றபின் எஞ்சி நிற்கும் கூட்டாளிகள், ஆகிய மூவரிடையே ஏற்படும் முக்கூட்டு உடன் பாட்டினால், ஓய்வுபெறும் கூட்டாளி ஒருவர் தான் இருந்த போது உண்டான செயல் பொறுப்புகளினின்றும் விடுபடலாம் (பி. 32 (2) ),

(2) பொது அறிவிப்பு (Public Notice)

இ. கூ. சட்டத்தின் பி. 45-ல் நிறுமக் கலைப்புப் பற்றிய பொது அறிவிப்பினைச் செய்கின்ற சட்டப்பிணைப்பு ஒவ்வொரு கூட்டாளிக்கும் உண்டு என்று சொல்லப்படுகிறது. அத்தகைய பொது அறிவிப்பினை எந்த ஒரு கூட்டாளியும் கொடுக்கலாம். அத்தகைய பொது அறிவிப்பு வெளியாகும் வரை மூன்றாம் பேர்களுக்கு ஒவ்வொரு கூட்டாளியும் அவர்களுடைய செயல் களுக்குக் கட்டுப்படுவர்.

நிறுமம் கலைக்கப்பட்ட பின்னரும், அதன் விவகாரங்களை முடிவுக்குக் (Wind up) கொண்டு வரும் வரையில், அதன் சார்பில் பல செயல்கள் புரியவேண்டிவரும். அத்தகைய செயல்களுக்காகக்

கூட்டாளிகளின் கட்டுப்பாடு தொடர்வது, அவசியமாகிறது. இது பற்றி இ. கூ. சட்டத்தின் 47-வது பிரிவில் கூறப்பட்டுள்ளது.

Maniappa Pillai *vs*. Anthoni Sami Mudaliar (1949) 2. M. L. J. 725. என்ற வழக்கில், கூட்டாண்மைக் கலைப்பினால் முடிவுக்கு வந்த பின்னர்க் கூட்டாளிகளிடையே எந்தவித நம்பக உறவும் நீடிக்க வழியில்லை என்று தீர்ப்பவிக்கப்பட்டது.

**நிறுமக் கலைப்பு (Dissoultion of a Firm)**

நிறுமம் ஒன்றன் கூட்டாண்மையில் உள்ள கூட்டாளிகளிடையே உண்டாகும் கலைப்பினை "நிறுமக் கலைப்பு" என்று (பி. 39)-ல் கூறப்படுகிறது. இரண்டே கூட்டாளிகள் கொண்ட நிறுமத்தில் தவிர, கூட்டாண்மைக் கலைப்பு நிறுமக் கலைப்பாகாது. கூட்டாளிகளின் இசைவுடன் அல்லது கூட்டாளிகளிடையே ஏற்படும் ஒப்பந்தத்தின்படி நிறுவம் கலைக்கப்படலாம் (பி. 40).

**நிறுமக் கட்டாயக் கலைப்பு (Compulsory Dissoultion of the Firm)**

அனைத்துக் கூட்டாளிகள் அல்லது அவர்களில் ஒருவர் நொடிப்பு நிலைக்கு உள்ளானதாக நீதித் தீர்ப்பு வழங்கியபோது, நிறுமம் கட்டாயக் கலைப்புக்குள்ளாகும்.

நடத்திவரும் தொழில் அல்லது கூட்டாளிகள் கூட்டாண்மையில் தொடர்கின்ற நிலை ஏதேனும் ஒரு நிகழ்ச்சி காரணம் பற்றிச் சட்ட விரோதமானதாகக் கருதப்படும்போது நிறுமம் கட்டாயக் கலைப்புக்குள்ளாகும். ஆனால் கூட்டாண்மையானது ஒன்றிற்கு மேற்பட்ட பல தொழில்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருப்பின், அவற்றில் ஒன்று சட்ட முரணானதாக அறிவிக்கப்படினும், ஏனைய சட்ட நெறியான தொழில்கள் தொடர்வது தடுக்கப்பட மாட்டாது என்று இ. கூ. சட்டத்தின் 41-வது பிரிவு அறிவிக்கிறது.

**குறிப்பிட்ட நிகழ்வடைவுகளினால் கலைப்பு (Dissolution on The Happening of Certain Contingencies)**

மாறான ஒப்பந்தம் இல்லாத நிலையில், கீழ்க்காண்பவைகளினால் நிறுமம் கலைப்புக்குள்ளாகும்.

(1) குறிப்பிட்ட கால அளவிற்கென ஏற்பட்ட நிறுமம் அக்கால அளவின் முடிவில் ;

(2) ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட தொழில்கள் தொடர ஏற்பட்டிருப்பின் அத்தகையவை முற்றுப் பெற்ற பின்னர் ;

(3) கூட்டாளி ஒருவரின் இறப்பினுல் ;

(4) கூட்டாளி ஒருவர் நொடிப்பு நிலையராக நீதித் தீர்ப்பு வழங்கப்பட்ட பின்னர் நிறுமம் கலைப்புக்குள்ளாகும்.

**விருப்பு முறிக் கூட்டுக் கலைப்பு (Dissolution of Partnership at Will)**

கூட்டு வாணிக ஒப்பந்தத்தில் அது எவ்வளவு நாள் நீடிக்க வேண்டுமென்ருே, எப்பொழுது முடிய வேண்டுமென்ருே எழுதப் படவில்லை எனில் அது "விருப்பு முறிக் கூட்டு" எனப்படும், என்று பிரிவு 7 கூறுகிறது. இக்கூட்டிலுள்ள கூட்டாளி ஒருவர் நிறுமக் கலைப்பிற்கான தன் எண்ணத்தை ஏனைய கூட்டாளி களுக்கு அறிக்கை (Notice) மூலமாகத் தெரிவித்திடின் அறிவிக்கையில் காணப்படும் நாளிலிருந்தோ அத்தகைய அறிக்கை கொடுத்த நாளிலிருந்தோ விருப்பு முறிக் கூட்டுக் கலைக்கப்படும், என்று பிரிவு 43-ல் காணப்படுகிறது.

**நீதி மன்றத்தின் வாயிலாகக் கலைப்பு (Dissolution Through Court)**

கூட்டாளி ஒருவர் உரிமையியல் வழக்குத் (Suit) தொடர்ந் தால், நீதிமன்றம் கீழ்க்காணும் காரணங்களுக்காக நிறுமக் கலைப்புக்கு ஆணை வழங்கும்.

(1) கூட்டாளி ஒருவர் பித்து நிலை எய்திடின் ;

(2) கூட்டாளி ஒருவர் தம் கடமைகளை எவ்வழியிலும் ஆற்ற முடியாமையை நிலையாக அடைந்தபோது ;

(3) தொழிலின் தன்மையைக் கருத்தில் கொள்ளுகின்ற போது, கூட்டாளி ஒருவரின் குற்ற நடத்தையினுல் (Guilty of Conduct) தொழில் தொடர்வது பாதிக்கப்படுமானுல்;

(4) நிறுமக் காரியங்களில் அல்லது தொழில் நடத்துவதில் கூட்டாளி ஒருவர் வேண்டுமென்றே அல்லது தொடர்ந்து உடன் பாட்டு முறிவு நடவடிக்கைகளைச் செய்வதனுல் ஏனைய கூட்டாளி கள் தொடர்ந்து கூட்டாண்மைத் தொழிலில் நியாயமாக ஈடுபட முடியாத நிலையில் ;

(5) நிறுமத்தில் தனக்குள்ள நலனை அல்லது தன் பங்கினை மூன்ரும் பேர் ஒருவருக்குக் குற்றச் சார்த்து மூலம், உரிமை இயல் வழக்கில் பெற விட்டுவிட்டால் அல்லது நிலவரி நிலுவை களுக்கான மீட்பின் பொருட்டு விற்க அனுமதித்திடின் அல்லது கூட்டாளி ஒருவரின் நிலவரி பாக்கிக்காக விற்க அனுமதிப்பின், இவற்றில் எதற்கு வழி வகுத்திடும் நிலையிலும் ;

(6) நிறுமத் தொழிலினை இழப்பின்றி நடத்த இயலாத போது ; அல்லது,

(7) நியாயமானதும், நேர்மை நெறியின்பாற்பட்டதும் எந்த ஒரு காரணத்திற்காகவும் நிறுமம் கலைக்கப்படவேண்டும் என்று நீதி மன்றம் நிர்ணயிக்குமானால் அதற்காக நிறுமத்தைக் கலைத்து நீதி மன்றம் தீர்ப்பு வழங்கும்.

### நிறும முடிவு (Windingup of the Firm)

நிறுமக் கலைப்பு கூட்டாளிகளிடையே உள்ள சட்ட உறவைத் துண்டிக்கப் பயன்பட்டிருப்பினும், அதுவே நிறுமக் காரியங்களை முடித்து விட்டதாகக் கருத முடியாது. நிறுமம் ஒன்றை முடிவுக்குக் கொணர மற்றவர்கள் நிறுமத்திற்குச் செலுத்த வேண்டியவைகளைப் பெறவும், மற்றவர்களுக்கு நிறுமம் செலுத்த வேண்டிய கடன் பாக்கிகளைச் செலுத்தவும் அல்லது மேற்கொண்ட ஒப்பந்தங்கள் நிறைவேற ஆற்ற வேண்டிய கடப்பாடுகளை நிறைவேற்றவும் செய்தல் வேண்டும். தொழில் நிலுவைகள், நிறுமத்தின் சொத்துகள் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கடனாளர்களுக்குச் செலுத்த வேண்டியதைச் செலுத்திய பின்னர், மிகுதியுள்ளதைக் கூட்டாளிகளிடையே விகிதப் பங்கு போடவும் செய்தல் வேண்டும். மேற்கூறியவைகளை நிறைவேற்றிட "நிறும முடிவு" (Windingup of the Firm) நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்.

### கூட்டாளியின் பற்றுரிமை (Partner's Lien)

நிறுமக் கடன்களைச் செலுத்த கூட்டாண்மைச் சொத்துகளை உடன்படுத்தும் கூட்டாளி ஒருவரின் உரிமை ; பின்னர் எஞ்சுகின்ற சொத்திருப்புகளில் முறையான பங்குபெற வேண்டி, ஏனைய கூட்டாளிகளின் பங்கிற்கான தொகையினின்றும் அவரால் நிறுமத்திற்குச் செலுத்தப்பட வேண்டிய பாக்கிகளைக் கழித்துக் கொள்ளுகின்ற உரிமை ; இரண்டும் கூட்டாளியின் பற்றுரிமை என்று கூறப்படுகிறது.

### கணக்கு நிலை (Settlement of Accounts)

இழப்புகளை ஈடுசெய்ய தொழிலில் அடைந்த நலன்களை முதலிலும், அடுத்ததாக நிறுமத்தின் முதலி (Capital)னின்றும், இறுதியாக கூட்டாளிகள் ஒவ்வொருவரும் நலனில் பங்கு பெறும் விகிதாச்சாரத்திலும் வழிவகை கொள்ள வேண்டும். சொத்திருப்புகளைப் பங்கீட்டளிக்க முறையொன்று வகுக்கப்பட்டுள்ளது.

முறையாகக் கடனாளர்களுக்கு நிறுமக் கடன்களைச் செலுத்தியும், முன்பணம் செலுத்திய கூட்டாளிகளுக்குச் செலுத்திய விகித

அளவிலும் முதலீடு (Capital) செய்த கூட்டாளிக்கு அதன் விகித அளவிலும், எஞ்சியுள்ளதைக் கூட்டாளிகளிடையே பிரித்தும் பங்கீடு செய்ய வேண்டும் என்று பிரிவு 48-ல் கூறப்பட்டுள்ளது.

**நிறுமக் கடன்கள், தனிக் கடன்கள், செலுத்துதல்**

நிறுமக் கடன்களும் கூட்டாளியின் தனிக் கடன்களும் இணைந்துள்ள நிலையில், முதலில் நிறுமக் கடன்களைச் செலுத்த நிறுமச் சொத்துகளை உட்படுத்தியும், பின்னர் எஞ்சி ஏதேனும் இருக்குமானால், கூட்டாளியின் தனிக் கடன்களுக்காக அவருடைய பங்கினை உட்படுத்தவோ அவருக்குச் செலுத்தவோ செய்தல் வேண்டும். கூட்டாளியின் தனிச் சொத்தினை அவரின் தனிக் கடன்களுக்கு உட்படுத்தி எஞ்சி நிற்கும் நிலுவையினை நிறுமக் கடன்களுக்குட்படுத்த வேண்டும் என்று பிரிவு 49 தெளிவாக்கியுள்ளது.

**கலைப்புக்குப் பின்னர் "வாணிக நற்பெயர்" விற்றல் (Sale of Good Will After Dissolution)**

மக்கள் ஆதரவினால் வியாபாரத்திற்கு விளையும் நற்பெயரினை "வாணிக நற்பெயர்" என்று கூறுவர். இது முதலீடு, சரக்கு, இருப்பு முதலியவற்றின் மதிப்பிற்கெல்லாம் அப்பாற்பட்டது. கூட்டாண்மையில் இத்தகைய வாணிக நற்பெயர், சொத்திருப்பாகக் கொள்ளப்படும் என்பதனைச் சட்டம் தெளிவாக்கியுள்ளது. பி. 55 (1)-ல் நிறுமக் கலைப்புக்குப் பின்னர் கணக்குநிலை ஒப்பில், கூட்டாளிகளிடை ஏற்படும் ஒப்பந்தத்தின் அடிப்படையில், வாணிக நற்பெயர் சொத்திருப்பில் சேர்க்கப்பட்டுத் தனியாகவோ, நிறுமத்தின் ஏனைய சொத்துக்களுடன் சேர்த்தோ விற்கப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

இவ்விதமான நற்பெயரை விற்ற பின்னர், கூட்டாளி ஒருவர், நற்பெயர் வாங்கியவருக்குப் போட்டியாக அத்தொழிலினை நடத்தவும், அதற்கான விளம்பரம் செய்யவும் முடியும். ஆனால் அக்கூட்டாளி நற்பெயர் வாங்கியவருடன் தான் கலைப்பிற்குள்ளான நிறுமத்தின் பெயரை பயன்படுத்துவதில்லையென்றும், நிறுமத் தொழிலின் பிரதிநிதியாகத் தன்னை அறிமுகப்படுத்துவதில்லை என்றும், அல்லது கலைப்பிற்கு முன்னர் நிறுமத்தின் வாடிக்கையாளர்களாக இருந்தவரை வேண்டுவதில்லை என்றும் ஒப்பந்தம் ஒன்றினை மேற்கொண்ட பின்னரே தொழில் நடத்தலாம் என்று பிரிவு 55 (2) வழிவகை செய்துள்ளது.

**நிறுமங்கள் பதிவு (Rigistration of Firm)**

பிரிவு 58 நிறுமம் ஒன்று தன்னைப் பதிவு செய்து கொள்ளும் முறையினைக் கூறுகின்றது.

நிர்ணயிக்கப்பட்ட படிவத்தில் (Form) கீழ்க்காணும் விவரங்கள் தந்து அதனுடன் நிர்ணயிக்கப்பட்ட தொகையினையும் செலுத்தி ; நிறுமத்தின் எல்லைக்குட்டபதிவாளரிடம் நிறுமத்தைப் பதிவு செய்து கொள்ளலாம்.

1. நிறுமப் பெயர்.
2. நிறுமத்தின் முதன்மை அலுவலக இடத்தின் பெயர்.
3. அதே தொழிலினை நடத்தும் கிளை நிறுவனங்கள் உள்ள இடங்களின் பெயர்.
4. நிறுமக் கூட்டில் கூட்டாளிகள் சேர்ந்த நாட்கள்.
5. கூட்டாளிகளின் நிலையான முகவரிகள்.
6. நிறுமக் கால அளவு.

பிரிவு 58-ன்படி அனைத்தும் நிறைவாக்கப்பட்டிருப்பதாகப் பதிவாளர் மன நிறைவு அடைவாரானல், நிறுமப் பதிவேட்டில் நிறுமத்தின் பெயரைப் பதிந்து, அறிவிப்புச் செய்வார்.

பதிவின்மையின் விளைவு (Effect of Non Registration)

நீதி எல்லைக்குட்பட்ட நீதிமன்றம் ஒன்றில் உரிமைகளை வேண்டிப் பதிவு செய்யாத நிறுமம் ஒன்று உரிமை இயல் வழக்குத் தொடர இயலாது. ஒப்பந்தத்தின் அடிப்படையிலோ, கூட்டாண்மைச் சட்டத்தின் அடிப்படையிலோ எழும் உரிமைகளை, நிறுமத்திற்கெதிராகவோ, எந்த ஒரு சார்த்துக் கூட்டாளிக்கு **(Alleged Partner)** எதிராகவோ, மூன்றும் நபருக்கெதிராகவோ, நிலை நிறுத்த, நிறுமம் பதிவாகியிருக்க வேண்டும் என்று பிரிவு 69 கூறுகின்றது. நிறுமத்திற்கெதிராகத் தொடரப்பட்ட உரிமை இயல் வழக்கு ஒன்றில் எதிரிடைவாத பாத்தியதைகொள்ள நிறுமம் பதிவு செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.

Pannuchami Gounder *vs.* Muthusami Gounder — என்ற வழக்கில் சென்னை உயர்நீதி மன்ற முழு ஆயம் (Full Bench) இதனை நன்கு விளக்கியுள்ளது.

இந்தியாவில் அலுவலகம் கொள்ளாத நிறுமத்தின் உரிமைகளைப் பதிவின்மை பாதிப்பதில்லை. ரூபாய் 100-க்குக் கீழாக உள்ள உரிமை இயல் வழக்குகளின் பதிவின்மை பாதிக்காது. நிறுமக் கலைப்புக்கான வழக்கு பற்றியோ, கலைக்கப்பட்ட நிறுமத்தில் தன் பங்கிற்கான வழக்கினைத் தொடரவோ உள்ள கூட்டாளியின்

உரிமையினைப் பதிவின்மை பாதிப்பதில்லை. பதிவாகாத நிறுமத்தின் நொடிப்பு நிலைக் கூட்டாளியின் சொத்தினை அடைய நொடிப்பு நிலையர் சொத்தாட்சி அலுவலர் (Official Assignee) அல்லது வழக்குறு சொத்துப் பேணுநரால் (Receiver) முடியும். பதிவாகாத நிறுமத்தின்மீது மூன்றும்பேர் வழக்காட இயலும். ஒப்பந்தத்தின்பாற்படாத உரிமை ஒன்றனைப் பதிவாகாத நிறுமத்தால் நிலைநாட்ட இயலும்.

வழக்குரை (Plaint) ஒன்றினைத் தாக்கல் செய்த நாளில் பதிவாகாமலும் பின்னர்ப் பதிவுசெய்யப்பட்டதுமான நிறுமம் ஒன்றனை உரிமை இயல் வழக்குத் தொடர அனுமதிப்பது பற்றிப் பல்வேறு உயர்நீதி மன்றங்களிடையிலும், சென்னை உயர்நீதி மன்றத்திலேயே உள்ள கற்றறிந்த நீதிபதிகளிடையேயும் கருத்து வேறுபாடுகள் காணப்பட்டன.

**Subramania Mudaliar** *vs.* **East Asiatic Company Ltd. 1936.** உரிமை இயல் வழக்கு வேண்டித் தொடரப்பட்ட நாளில் ஏற்பட்டிருந்த குறைபாட்டினைப் பின்னர்ப் பதிவாக்குவதன் மூலம் நிவர்த்தி செய்ய முடியாது என்று மேற்சொன்ன வழக்கில் உயர் நீதி மன்றம் தீர்ப்பளித்தது.

**Varadarajulu Naidu** *vs.* **Rajamanickka Mudaliar 1937.** இவ்வழக்கில் பதிவாக்கப்பட்ட நிறுமத்தினால் தொடரப்பட்ட வழக்கினைச் செல்லுநிலையாக்கலாம் என்று தீர்ப்பு வழங்கப் பட்டது.

**Punnayya** *vs.* **Batten A. I. R. 1948 MAD. 44.** இவ்வழக்கில் பதிவாகாமல் இருப்பினும் நிறுமம் கலைக்கப்பட்ட பின்னர்க் கூட்டாளி ஒருவர் தனது பங்கில் சேரவேண்டிய கடனுக்காக வழக்குத் தொடர இயலும் என்று தீர்வு காணப்பட்டது.

# 6. மாற்று முறையாவணங்கள்

## (Negotiable Instruments)

வாணிகத்துறை வளர்ந்துவருகிறது. அதனுல் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் தமக்கிடையே கொண்டு கொடுத்துக் கொள்ளவேண்டிய நிலேயும் பெருகிவருகிறது. அவர்கள் அவ்வாறு தங்களுக்கிடையே கணக்கை விரைவாக முடித்துக் கொள் வதற்கும் அதற்கான பணத்தைக் கொடுப்பதற்கும் கொள்வதற்கு முள்ள ஓர் எளிய முறைதான் மாற்று (மாற்றிக் கொடுக்கப்படக் கூடிய) முறையாவணம் என்பது. முறையாவணம் என்ருல் ஒரு குறிப்பிட்ட முறையில் எழுதித்தரும் ஆவணமாகும். பணத்தைக் கொடுப்பதற்கோ கொள்வதற்கோ இப்படிப்பட்ட முறையா வணம் ஒன்றை உருவாக்கி அதை மாற்றிக் கொடுத்துக் கொள்ளல் ஆகும். இந்த எளிய முறையானது, இன்றைய வேகமான நாகரிகச் சமூகத்திற்கு, அதிலும் குறிப்பாக வாணிகத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்குப் பேருதவியாக அமைந்துள்ளது. எனவே, அதைப்பற்றியச் சட்டத்தை அறிந்துகொள்வது மிகவும் தேவை யானதும் பயனுள்ளது மாகும்.

**மாற்று முறையாவணம் என்ருல் என்ன ?**

மாற்று முறையாவணம் என்ருல் என்ன என்பதைச் சற்று விரிவாக ஈண்டுக் காண்போம்.

நீதிபதி வாலஸ் அவர்கள் அதைப்பற்றிக் கூறியுள்ள வரை வுரையை (Definition)க் கவனிப்போம்.

மாற்று முறையாவணம் என்ருல் "அதற்குரிய மதிப்பை (பொருளாகவோ, பணமாகவோ)த் தந்து நல்ல நோக்கத்துடன் அதை ஏற்றுக்கொள்பவரானவர் கொண்டடைகின்ற சொத்து" என்றும், "எவரிடமிருந்து அதை அவர் ஏற்றுக்கொள்கின்ருரோ

அவரிடம் அச்சொத்துக்களுக்குள்ள உரிமையில் குறைபாடு யாதேனும் இருப்பினுங்கூட, ஏற்றுக் கொள்பவர் அச் சொத்தினைக் கொண்டடைவார்" என்றும் விளக்கியுள்ளார். மேலும், அக் கூற்றிலிருந்து அறிவது என்னவெனில், அத்தகு முறையாவணமானது அதனுடைய உண்மையான உரிமையாளர், அதில் அடங்கியுள்ள ஒப்பந்தத்தை அல்லது மேற்கொள்ளலே அம்முறையாவணத்தை வெறுமனே ஒப்படைப்பதன் மூலங்கூட மாற்றிக் கொடுத்துவிடக் கூடிய நிலையினதாக அல்லது நிலையில் உள்ளதாக இருந்தாலன்றி அது மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதாக ஆகாது' என்றும் விரிவாக விளக்கியுள்ளார். எடுத்துக்காட்டாக, கடனுறுதிச் சீட்டு (Promissory Note), மாற்றுச்சீட்டு (Bill of Exchange), காசோலே (Cheque) போன்றவையெல்லாம் மாற்று (மாற்றிக் கொடுக்கப்படக் கூடிய) முறையாவணங்களாகும்.

இன்னும் தெளிவாகச் சொல்வதானல், மாற்றிக் கொடுக்கப் படக்கூடிய அந்தத் தன்மையோடு கூடியதும் நீதிமன்றமொன்றில் நடவடிக்கை தொடர்வதன் மூலம் மட்டுமே வலியுறுத்திப் பெறக் கூடியதுமான ஒரு கோருரிமை (Chose in Action) மாற்றிக் கொடுக்கப் படக்கூடிய ஒரு முறையாவணம் ஆகும். மற்றச் சாதாரண கோருரிமைகளுக்கு, மாற்றிக் கொடுக்கப் படக்கூடிய தன்மை கிடையாது. எவ்வாறெனில் சாதாரண கோருரிமையை உரிமை மாற்றடைவாகப் (Transfer) பெற்ற ஒருவர், அதை அவ்வாறு மாற்றிக் கொடுத்தவருக்குள்ள உரிமைகளைவிட அதிகமாகவோ சிறப்பாகவோ உரிமைகளைக் கோரிட முடியாது. ஏனெனில், "தான் பெற்றிருப்பதை விடச் சிறந்த உரிமைத் தகுதியை எவரும் மாற்றிக் கொடுக்க முடியாது"

("Nemo dat quod non Habet"—No one can Convey a better title than what he has) என்னும் பொருள்களின் உரிமை மாற்ற விதியானது அத்தகு கோருரிமைகளுக்குப் பொருந்துகிறது என்பதுதான். ஆக, நீதிமன்ற நடவடிக்கை வழி வலியுறுத்திப் பெறலாகும் ஒரு கோருரிமைக்கு ஒருநபர் தகுதிபெற்றிருக்கின்றாரெனில் அவரது உரிமையைத் தகுதியில், வன்முறையாலோ, மோசடியாலோ- செல்வாக்கைத் தவருகப் பயன் படுத்துவதாலோ, குறைபாடு யாதேனும் இருந்தால், அக்கோருரிமையை உரிமைமாற்றடைவாகப் பெற்றவரும் அந்தக் குறைபாட்டுக்குட்பட்டு அவ்வுரிமையில் ஒரு பகுதியைப் பெறுபவராவார். ஆனல் இந்த விதிக்கு மாற்று முறையாவணமானது ஒரு விதிவிலக்காகும்.

நல்ல நோக்கத்துடன் உரிய மதிப்பைத் தந்து பெற்ற மாற்று முறையாவணம் ஒன்றன் உடைமையுரிமையர் (Bonafide holder for Value) அதை மாற்றித் தந்தவரது உரிமைத் தகுதியில் குறைபாடு இருந்தாலுங்கூட, அதனுல் சற்றும் பாதிக்கப்படாமல், அம்முறையாவணத்தில் என்ன காணப்படுகிறதோ அந்த உரிமைகள் அனைத்தையும் பெறத் தகுதியுடையவராவார். மேலும், அம்முறையாவணத்தின் சொத்துரிமையை மாற்றிக் கொடுப்பதற்கு எவ்வித வழிமுறைகளும் தேவையில்லை. அதை வெறுமனே ஒருவருக்கு ஒப்படைப்புச் செய்தால்கூட, மாற்றிக் கொடுத்ததாக ஆகும். இந்த இரண்டு தன்மைகள் மட்டுமே மாற்றிக் கொடுக்கும் நிலையை உருவாக்குகின்றன. நீதிமன்ற நடவடிக்கை வழி வலியுறுத்திப் பெறலாகும் ஒரு கோருரிமைக்கு அந்தத் தன்மைகள் இருப்பின், அது மாற்றிக் கொடுக்கப்படக் கூடிய முறையாவணம் ஆகும்.

எனவே, மாற்று முறையாவணம் என்ருல், பணம் அல்லது நாணயத்தின் தன்மைகளைக் கொண்ட ஒரு பொருள் ஆகும்; அத்துடன் அஃது ஓர் ஒப்பந்தம் அல்லது நீதிமன்ற நடவடிக்கை வழி வலியுறுத்திப் பெறலாகும் ஒரு கோருரிமையுமாகும்.

**மாற்று முறையாவணத்தின் இன்றியமையாத கூறுகள் (அம்சங்கள்)**

மாற்று முறையாவணத்திற்குச் சில இன்றியமையாத கூறுகள் (அம்சங்கள்) உள்ளன. அவற்றை ஈண்டுக் காண்போம்.

1. அது பணஞ் செலுத்துவதற்குச் செய்யப்படும் ஓர் ஒப்பந்தமாகும்.

2. அதில் அடங்கியுள்ள சொத்தானது வெறுமனே அதை ஒப்படைப்புச் செய்வதாலோ, அதன் மீது மேற்குறிப்புச் செய்து ஒப்படைப்புச் செய்வதாலோ, அதாவது எழுத்து மூலமாக அல்லது முத்திரை ஒட்டுதல் (Stamped) போன்ற எந்த வழிமுறையும் இல்லாமலேயே கைக்குக் கை மாறுதல் ஆவதாகும்.

3. உரிய மதிப்புப்பெற்று மாற்றிக் கொடுக்கும் நல்ல நோக்குடைய மாற்றிக் கொடுப்பவர், மாற்றிக் கொடுக்கப் பெற்றவரின் உரிமைத் தகுதியிலோ, அந்த முறையாவணத்தை அதற்கு முன்னர்ப் பெற்றிருந்த வேறு எந்த நபரின் உரிமைத் தகுதியிலோ குறைபாடு யாதேனும் இருந்தாலும், அதனுலும் பாதிக்கப்படுவதில்லை.

4. மாற்றிக் கொடுக்கப்பட்ட முறையாவணத்தைப் பெற்ற ஒருவர் தனது சொந்தப் பெயரிலேயே வழக்கிடலாம்.

5. அதை, அது செலுத்தப்பட வேண்டிய முதிர்ச்சியுறுங் காலம் காணும்வரை, வரம்பின்றி மாற்றிக் கொடுத்துக்கொண்டே இருக்கலாம்.

6. அது பணம் போன்றதுதான். எவ்வாறெனில் (செலுத்து வதற்கென முறையாவணத்தில் உறுதி செய்யப்பட்ட காலத்திற் கும் முன்னரே கூட) எந்தக் கணத்திலும் சிறிதளவு கழிவுத் தொகை தந்து, பணத்தைப் பெற முடியும்.

7. எளிதில் அதை நிரூபிக்கவும் முடியும். நிற்க அதற்குச் சாட்சியம் சம்மந்தப்பட்ட தனி விதிகளும் இருக்கின்றன. அஃதா வது அதன்கீழ் மறுபயன் செலுத்தப்பட்டிருக்கிறது என்று கருதிக் கொள்ளப்படும். மேற்குறிப்புச் செய்யப்படாத தொகைகள் செலுத்தப்படவில்லை; எந்த நாளன்று அதை நிறைவேற்றப்பட் டிருக்க வேண்டுமோ அன்றே அது நிறைவேற்றப் பட்டுள்ளது என்பன போன்றவை அவ்விதிகள்.

8. அது, முறையாவணத்தின் உடைமையுரிமையைத் தாமத மற்ற செலுத்தத்தை எதிர்பார்க்குமாறு செய்கிறது. ஏனெனில் அதைச் செலுத்தாமையினால் மதிப்பு மறுக்கப்படுவதாவது, அதை நிறைவேற்றுபவர்களாகவோ மேற்குறிப்புச் செய்யப் பட்டுப் பெற்றவர்களாகவோ இல்வாறு அதற்குத் தரப்பினர்க ளாகஇருக்கின்ற எல்லா நபர்களுடைய நாணயச் செல்வாக்கை அழிப்பதாக ஆகும். அதனால் சாதரரணமாகத் தாமதமில்லாமல் அது செலுத்தப்படுவதை எதிர்பார்ப்பதென்பது இயல்பே.

மேலே கூறப்பட்ட கூறுகளை மாற்று முறையாவணங்கள் யாவற்றிலும் காணலாம். யாவரும் அறிந்தவைகளான கடனு றுதிச்சீட்டு, மாற்றுச்சீட்டு, காசோலை ஆகியவை அல்லாமல், கால வளர்சிக்கும், தொழில் ஏற்றத்திற்கும் ஏற்ப, புதியவகை முறையாவணங்களும் அவை வணிக சமூகத்தில் நன்கு கையாளப் பட்டு வருவனவுமாயின், நீதிமன்றத்தால் ஏற்றுக் கொள்ளப்படக் கூடும். இவ்வாறு அண்மையில், **பெச்சுவானாலேண்ட் எக்ஸ்ப்ளொ ரேஷன் கம்பெனிக்கும் லண்டன் டிரேடிங் வங்கிக்கும்** இடையே யான வழக்கில், கொணர்பவருக்குச் செலுத்தப்படலாகும் கடன் பத்திரங்களும், புதிய வர்த்தக வழக்காறு காரணமாக, அத் தகைய முறையாவணமெனத் தீர்ப்புரைக்கப்பட்டுள்ளது.

இங்கிலாந்துச் சட்டத்தின்படி, பின்வரும் முறையாவணங்கள் மாற்று முறையாவணங்களாக அறிவிக்கப்பட்டுள்ளன. அவை யாவன :

1. கருவூலச் சீட்டுகள் (Treasury Bills)

2. வங்கிச் சீட்டுகள் (Bank Notes)

3. அயல்நாட்டு அரசாங்கங்களின் மூலப்பத்திரங்கள் (Script of Foreign Govts) (அவை வழங்கப்பட்ட நாட்டுச் சட்டப்படி மாற்றிக் கொடுக்கப்படக் கூடியவையாயிருப்பின்,)

4. லாபப் பங்குரிமைச் சீட்டுகள் (Dividend Warrants)

5. பங்குரிமைச் சீட்டுகள் (Share Warrants)

6. மாற்றுச்சீட்டுக் கொணர்பவர்களுக்குச் செலுத்தப் படலாகும் கடன்பத்திரங்கள் (Debentures Payable to Bearers)

### சட்டத்தின் வரலாறு

மாற்று முறையாவணங்கள் தொடர்பான சட்டம், இந்தியாவில் தற்போது நிலவும் 1881-ம் ஆண்டின் மாற்று முறையாவணங்களின் சட்டமாகும். அதற்கு முன்னர் இருந்த சட்டங்களையெல்லாம் தொகுத்து 1881-ம் ஆண்டுச் சட்டமானது, திருத்தித் தொகுத்து இயற்றப்பட்டது.

அச்சட்டம், கடனுறுதிச் சீட்டு, மாற்றுச்சீட்டு மற்றும் காசோலை பற்றியே கூறுகின்றது என்றாலும், உள்நாட்டில் வழக்கத்திலிருந்து வரும் 'உண்டியம்' (Hundis) போன்றவற்றிற்கும் அது பொருந்துவதாகும். இந்திய வங்கியாளர்களுக்குத் தெரிந்ததும், காலத்தே மதிக்கப்பட்டுவந்த மாற்று முறையாவணமும் இந்த 'உண்டியம்' ஒன்றுதான். தற்போதைய சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னரே இந்த உண்டியம் குறித்த சட்டத்தை இந்திய நீதிமன்றங்கள் பயன்படுத்தி வந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு மற்றும் காசோலை போன்ற முறையாவணங்கள் மேற்கத்திய கண்டுபிடிப்புகளாகும். அவை சம்பந்தப்பட்ட சட்டம் இங்கிலாந்தில் 17-ம் நூற்றாண்டின் மத்தியில்தான் நிலைபெறத் தொடங்கியது. இறுதியாக அச் சட்டம் தொகுக்கப்பெற்று, 1882-ம் ஆண்டின் மாற்றுச் சீட்டுகள் சட்டமாக நிறைவேற்றப்பட்டது. அச் சட்டத்தையொட்டித்தான் இந்தியச் சட்டமும் நிறைவேற்றப்பட்டது. 1881-ம் ஆண்டு இந்தியச் சட்டமே, தற்போது நிலவும் சட்டமாகும். இனி அதைப்பற்றி விளக்கமாகக் காண்போம்.

## தோற்றுவாய்

சட்டத்தின் தோற்றுவாயின்படி, யாவரும் அறிந்த மாற்று முறையாவணங்களான கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு மற்றும் காசோலைத் தொடர்பான சட்டத்தை வரைவுரை செய்வதுடன் தற்போதைய சட்டமானது திருத்தியும் அமைக்கப்பட்டுள்ளது.

சட்டத்தின் பிரிவு 13 (1) ஆனது, மாற்றுமுறையாவணத்தை வரைவுரை செய்கையில், கட்டளை பெற்றவருக்கோ கொணர்பவருக்கோ செலுத்தப்படக்கூடிய ஒரு கடனுறுதிச் சீட்டை அல்லது மாற்றுச் சீட்டை அல்லது காசோலையைக் குறிக்கிறது.

இந்தியா முழுவதற்கும் அளாவி நிற்கும் இந்தச் சட்டமானது நாட்டின் உட்பகுதி மொழி வழங்கும் இடங்களில் வட்டார வழக்காறுகளைப் பாதிப்பதில்லை. அதனால் உண்டியங்களுக்கு இந்தச் சட்டத்தின் வகையங்கள் பொருந்தச் செய்யப்படுவதில்லை. மாறுகத் தனிப்பட்ட வழக்கங்கள் எவற்றிற்கு அவ்வுண்டியங்கள் உட்பட்டனவோ அவையே கருத்தில் கொள்ளப்படும். ஆனால் அத்தகைய வட்டார வழக்காறு ஏதும் இல்லையெனில், இச் சட்டமே உண்டியங்களுக்குப் பொருந்தும், அது மட்டுமன்றி, தரப்பினர்கள் விரும்பினால், வட்டார முறையாவணங்கள் குறித்த தம் தொடர்பை இந்தச் சட்டத்தின் மூலமே அறுதியிட்டுக் கொள்வதென எழுத்து மூலம் தீர்மானித்துக் கொள்ளலாம். அப்போதும் வட்டார வழக்காறு பொருந்தாமல், இந்தச் சட்டமே அத்தகைய முறையாவணங்களுக்கும் பொருந்தும்.

இந்தச் சட்டமானது 1934-ம் ஆண்டு இந்திய இருப்பு வங்கிச் சட்டத்தின் 31-ம் பிரிவைப் பாதிக்காது. உரிமையுடன் கேட்கப்படும்போது கொணர்பவருக்குச் செலுத்தப்படக் கூடிய மாற்றுச் சீட்டு, உண்டியங்கள், கடனுறுதிச் சீட்டு அல்லது மேற்கோள் சீட்டு (Engagements for Payments) ஆகியவற்றைப் பணத்தைச் செலுத்துவதற்காக எழுதித் தருவதையோ ஏற்றுக் கொள்வதையோ, உருவாக்கித் தருவதையோ, வழங்குவதையோ அப்பிரிவு தடைசெய்கிறது. அப்பிரிவின் வரம்புரையானது, அது காசோலைக்குப் பொருந்தாது என்றும் குறிப்பிடுகிறது. மேலும் அந்த இந்திய இருப்பு வங்கிச் சட்டத்தின் 62-ம் பிரிவானது அவ்வாறு தடை செய்யப்பட்ட முறையாவணங்களை வெளியிடுவதையோ வழங்குவதையோ ஒரு குற்றமென்றும் ஆக்கியுள்ளது. இதற்குக் காரணம், தாள் நாணய விநியோகிப்பை அரசாங்கமே ஏற்று நடத்துவதைக் காக்கும் பொருட்டுத்தான். இதனால்தான் மாற்று முறையாவணங்கள் சட்டத்தின் 4-ம் பிரிவும் மிகத் தெளி

வாகத் தாள் நாணயத்தை (ரூபாய்த் தாள் போன்றவை) கடனுறுதிச் சீட்டின் வரைவுரையிலிருந்து நீக்கியிருக்கிறது.

மாற்று முறையாவணச் சட்டத்தையும் இருப்பு வங்கிச் சட்டத்தையும் 31-ம் பிரிவையும் சேர்த்துவைத்துப் படிக்கும்போது பின்வரும் விளைவுகளைக் காணலாம்.

1. குறிப்பிட்ட ஒரு நபருக்கோ, அவரது கட்டளை பெற்றவருக்கோ செலுத்தப்படக் கூடிய ஒரு மாற்றுச் சீட்டோ கடனுறுதிச் சீட்டோ (அஃதாவது கொணர்பவருக்குச் செலுத்தப் படக் கூடியதன்று) உரிமையுடன் கேட்கும்போது செலுத்தப்படுவதாகச் செய்யப்படலாம்.

2. ஒரு மாற்றுச் சீட்டை அல்லது கடனுறுதிச் சீட்டைக் கொணர்பவருக்குச் செலுத்தப்படக் கூடியதாகச் செய்யலாம். ஆனால், ஒரு நிச்சயமான தேதி அல்லது நிகழ்வுக்குப் பிறகு (அஃதாவது உரிமையுடன் கேட்கப்படும்போது அன்று) செலுத்தப் படக் கூடியதாகச் செய்யப்பட்டால், அவ்வாறு செய்யலாம்.

3. எப்போதுமே சரி, உரிமையுடன் கேட்கப்படும்போது செலுத்தப்படவேண்டிய ஒரு காசோலையைக் கொணர்பவருக்குச் செலுத்தப்படக் கூடியதாகச் செய்யலாம்.

4. மேலே சொன்ன விதிகள் எல்லாமே தனிப்பட்ட நபருக்குத்தான் பொருந்துமேயன்றி, இந்திய அரசுக்கு அன்று. ஏனெனில், உரிமையுடன் கேட்கும்போது கொணர்பவருக்குச் செலுத்தப்படக்கூடிய சீட்டுகளை அரசானது வழங்க இயலும். அரசின் அந்த உரிமைகள் மேலே சொன்ன விதியின்படி பாதுகாக்கப் படுகின்றன.

**வரைவுரைகள் (Definitions)**

இனி, இந்தச் சட்டம் வரைவுரை செய்கின்ற சொற்களைப் பார்ப்போம்.

**வங்கியர் (Banker)**

"வங்கியர் என்பது வங்கியராகச் செயல்புரியும் எந்த ஒரு நபரையும் மற்றும் எந்த ஒரு அஞ்சலகச் சேமிப்பு வங்கியையும் உள்ளடக்கும்" என்று பிரிவு (3) கூறுகிறது. நடத்துபவர் தனிப்பட்ட நபராய் இருந்தாலும் சரி, ஒரு கூட்டுருமம் (Corporation) ஆக இருந்தாலும் சரி, எதுவுமே வங்கியர் என்றே பொதுவாக அழைக்கப்படுகின்றன. மேற்படி பிரிவானது வங்கியர் யார் என வரைவுரை செய்யவில்லை. எனினும் வங்கியர் என்றால் தனது நடைமுறை அலுவலில் பணத்தைப் பெற்றுக் கொள்பவரும், அதை யாரிடமிருந்து யாவர் பொருட்டுத் தாம் பெற்றுக் கொள்

கிருரோ அவர் வழங்கும் காசோலையை மதிப்பதன் மூலம் பணத்தைத் திரும்பச் செலுத்துகின்ற வருமான ஒருவர் ஆவார். பணத்தில் போக்குவரத்து நிகழ்த்துபவராக, பணத்தைப் பெறுபவரும், கட்டுபவருமாக, அந்த வியாபாரத்தில் நலன் (லாபம்) பெறும் மாற்றுச் சீட்டுகளை மாற்றிக் கொடுப்பவராக அவ்வங்கியர் இருத்தல் வேண்டும்.

ஓர் அரசாங்கக் கருவூலமானது, அதன்மீது செலுத்தத்திற்கான கட்டளை ஒன்றைச் செய்யக்கூடு மென்ருலும் அது வங்கியாகாது. காரணம் அக்கருவூலத்தின் நோக்கம் நலன் (லாபம்) பெறுவது அன்று என்பதுதான்.

**வங்கியியல் (Banking)** என்ருல் என்ன? 1949-ம் ஆண்டு வங்கியியல் பங்கமைப்புகளின் சட்டம், அதன் 5 (1)-ம் பிரிவில் இவ்வாறு உரைக்கிறது : "வங்கியியல் என்ருல், பொதுமக்களிடமிருந்து பணவைப்புத் தொகைகளைக் கடன் கொடுப்பதற்காகவோ, முதலீடு செய்வதற்காகவோ ஏற்றுக்கொண்டு, உரிமையுடன் கேட்கப்படும்போதோ, மற்றவாருே அதைத் திரும்பச் செலுத்துவதும், காசோலை, வரைவு, கட்டளை போன்றவை மூலம் அவ்வைப்புத் தொகைகளைத் திரும்ப வாங்கிக் கொள்வதுமாகும்". வங்கியில் பங்கமைப்பு என்ருல் இந்தியாவில் வங்கியியல் வியாபாரத்தை நடத்துகின்ற எந்த ஒரு பங்கமைப்பு நிறுவனமும் (Company) என்று பொருள்.

ஆனுல், பொருள்கள் தயாரிப்பதில் ஈடுபட்டுள்ள அல்லது எந்த வர்த்தகத்தையேனும் ஏற்று நடத்துகின்ற எந்த ஒரு பங்கமைப்பு நிறுவனமும் சரி, அதன் வியாபாரத்திற்குத் தேவையான நிதியைத் திரட்டுவதற்காகப் பொது மக்களிடமிருந்து பணவைப்புத்தொகையை ஏற்றுக் கொள்ளுமாயின், அவை வங்கியியல் வியாபாரத்தை நடத்துவதாகக் கருதப்படக் கூடாது என்பதையும் வங்கியியல் பங்கமைப்பு நிறுவனச் சட்டம் விளக்குகிறது.

### கடனுறுதிச் சீட்டு (Promissory Note)

மாற்று முறையாவணச் சட்டத்தின் 4-ம் பிரிவு, கடனுறுதிச் சீட்டைப் பின் வருமாறு வரைவுரை செய்கிறது :

"ஒரு கடனுறுதிச் சீட்டு என்பது நிச்சயித்த ஒரு நபருக்கோ, அவரது கட்டளையைப் பெற்றவருக்கோ, முறையாவணத்தைக் கொணர்பவருக்கோ நிச்சயித்த ஒரு பணத்தொகையை மட்டுமே செலுத்த, கட்டுவரம்பற்ற ஒரு மேற்கொள்ளலை எழுதி, அதை

எழுதித் தருபவர் கையொப்பமிட்டளிக்கின்றது அடங்கிய எழுத்து மூலமான (வங்கிச் சீட்டோ, தாள் நாணயமோ அல்லாத) ஒரு முறையாவணமாகும்''.

கடனுறுதிச் சீட்டின் படிவமானது கீழ்க் காணுமாறு இருக்கும் :

சென்னை

22-1-1973

உரிமையுடன் கேட்கப்படும்போது திரு. முருகன் அவர்களுக்கோ, அவரது கட்டளையைப் பெற்ற வேறொருவருக்கோ, பெற்றுக்கொண்ட மதிப்பினுக்காக ரூபாய் 500 (எழுத்தால் ரூபாய் ஐந்நூறு மட்டும்) ஆண்டுக்கு 6% வட்டியுடன் செலுத்திட நான் இதன்வழி உறுதி கூறுகிறேன்.

அஞ்சல் தலைகள்

(ஒ-ம்) போ. இனியன்

செல்லும் நிலையதாகும் ஒரு கடனுறுதிச் சீட்டிற்குக் கீழ்க் காணும் இன்றியமையாத கூறுகள் (அம்சங்கள்) இருத்தல் வேண்டும்.

(1) அது எழுத்து மூலமாக இருக்கவேண்டும். அதை மையினால் எழுதியதாகவோ பென்சிலால் எழுதியதாகவோ, ஏன் அச்சிடப்பட்டதாகக்கூட இருந்திடலாம்.

(2) செலுத்துவதற்கு கட்டுவரம்பற்ற ஓர் உறுதிமொழி இருக்கவேண்டும். கடனுறுதிச்சீட்டின் உயிர்நாடியே இந்த கட்டுவரம்பற்ற மேற்கொள்ளல் என்னும் கூறு (அம்சம்)தான். எனவே வெறுமனே ஒரு கடனை ஒத்துக்கொள்வதோ, செலுத்துவதற்கான உறுதிமொழியோ, ஏதாவதொரு கட்டுவரம்பிற்குட்பட்டதாகவோ — நிகழ்வு ஒன்று, அது நடந்தாலும் சரி நடக்காமற் போனாலும் சரி அதைப் பொறுத்ததாகவோ இருந்தால், அது

கடனுறுதிச்சீட்டு ஆகாது. ஆக. "நான் உங்களுக்குத் தரவேண்டும்" (IOU) என்று சொல்வது கடனின் ஒப்புதலே தவிரக், கடனுறுதிச் சீட்டு ஆகாது. நிச்சயித்த ஒரு காலத்திற்குப் பின்னர் செலுத்துவது என்று தரும் உறுதிமொழியானது, கட்டுவரம்பற்ற உறுதிமொழியாகும். ஆனல் உறுதிமொழி தரப்பட்ட தொகை ஒரு நிலையான காலத்தின்போதோ, அதற்கு முன்போ செலுத்தப் படவேண்டியதாயின், அதில் நிச்சயமில்லாத தன்மை இருப்பதால் அது கடனுறுதிச்சீட்டு என்று வில்லியம்சனுக்கும் ரைடருக்குமிடையேயான வழக்கில் தீர்ப்புரைக்கப்பட்டது (1963 I. Q. B. 89).

செலுத்துவதற்கான மேற்கொள்ளல் ஏதுமின்றித் திரும்பச் செலுத்துவதற்குரிய கட்டுவரம்புகள் மட்டும் அடங்கியுள்ள பணத்திற்கான பற்றுச்சீட்டான ஆவணமொன்று (அந்த மேற்கொள்ளலை அதிலுள்ள சொற்களிலிருந்து ஊகிக்கப்படவேண்டும் என்று வாதாடிய போதும்) கடனுறுதிச் சீட்டு அன்று என்று முகமது அக்பர் கானுக்கும் அத்தர்சிங்குக்கும் பிறருக்குமிடையேயான வழக்கில் இங்கிலாந்தின் உச்ச நீதிமன்றம் (Privy Council) தீர்ப்பு வழங்கியது.

(3) அதை எழுதித் தருவர் (Maker) அதில் கையொப்பம் இடல் வேண்டும். அவர் எழுத்தறிவற்றவராயின், கையொப்பமிடும் தம் கருத்தைக்குறிக்க, கைப் பெருவிரல் முத்திரையோ பிற முத்திரையோ இடலாம். அக் கையொப்பத்தை மையினலோ பென்சிலாலோ, அச்சினலோ ஏன் இரப்பர் முத்திரையினல்கூட இடலாம்.

(4) சீட்டை நிறைவேற்றுபவர் (Executant) அல்லது எழுதித் தருபவர் நிச்சயமானவராக இருத்தல் வேண்டும். எழுதித் தருபவராகக் கடப்பாடுடைய நபர் யார் என்பதை அச்சீட்டானது அதன் முகப்பிலேயோ, அல்லது அதிலிருந்து புரிந்துக் கொள்ளக் கூடிய வகையிலேயோ காட்டவேண்டும். இந்த விதி, குறிப்பாக மிகவும் இன்றியமையாததாகும். ஏனெனில் முகவர் ஒருவர் தம் முதலருக்காகக் கடனுறுதிச் சீட்டில் கையொப்பமிடுகையில். அவர் முகவராகக் கையொப்பமிடாவிடில், முதலர் கட்டுப்படுத்தப்படுபவராக மாட்டார்; மாருக முகவர் மட்டுமே, தானே கடப்பாடுடையவராவார். ஒரு கடனுறுதிச் சீட்டை அதன் கீழ்த் தாங்கள் கூட்டாகவும் தனித்தனியாகவும் கடப்பாடுடையவராக இருக்கப் போவதாயின், இருவரோ இருவருக்கு மேற்பட்டவரோ அதை எழுதித் தரலாம். அவ்வாறன்றி வேறுவகையில் கடப்பாடுடையவராக இருக்கப் போவதாயின், ஒரு கடனுறுதிச்சீட்டை அவர்கள் நிறைவேற்றிட முடியாது. ஒரு கடனுறுதிச். சீட்டில் கண்டிருந்த

படி, அது இருவர் கூட்டாகச் சேர்ந்து நிறைவேற்ற வேண்டிய தாக இருந்தது. ஆனால் அவர்களுள் ஒருவர் மட்டுமே அதை நிறைவேற்றினர். அந்த வழக்கில் அந்த நபருக்கு எதிராகக்கூட அதை வலியுறுத்தி நிறைவேற்றச் செய்ய முடியாது என்று தீர்ப் பளிக்கப்பட்டது. அமிர்தத்திற்கும் நஞ்சகவுண்டனுக்குமிடையே யான வழக்கு 26 M. C. J. 257 ஆனல் அதுவே "செலுத்திட நான் உறுதி கூறிகிறேன்" என்றிருந்த ஒரு சீட்டில் இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்டவர்கள் கையொப்பமிட்டிருந்தபோது, அது கூட்டாகவும் தனித்தனியாகவும் எழுதித்தரப்பட்ட சீட்டு என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

(5) தரப்படும் உறுதிமொழியானது நிச்சயமான பணத் தொகையைச் செலுத்துவதாக இருத்தல் வேண்டும். அஃதாவது கடனுறுதிச்சீட்டின் முக்கியமான கூறுகளில் (அம்சங்களில்) ஒன்று என்னவென்றல், பணத்தை மட்டுமே செலுத்துவதான உறுதி மொழியாக அது இருப்பதுடன், அந்தத் தொகையும் நிச்சயமான தாக இருத்தல் வேண்டும். ஆகவே ரூபாய் 1000/-ம் மற்றும் இன்னும் சில தொகைகளும் செலுத்துவதாகத் தரப்படும் உறுதி மொழியானது, கடனுறுதிச்சீட்டைச் செல்லுநிலையாக்காது. ஏனெனில் இங்கே உறுதிமொழியப்பட்ட தொகை நிச்சயமான தாக இல்லை என்பதுதான். இவ்வாறே, பணத்துடன் அல்லது பணத்திற்குப் பதிலாகக் கேழ்வரகையோ பிற பொருட்களையோ ஒப்படைப்பதாகச் செய்துதரப்படும் உறுதிமொழியும் கடனுறுதிச் சீட்டு ஆகாது.

(6) பெற்றுக்கொள்பவரும் (Payee) நிச்சயமானவராக இருக்கவேண்டும். தரப்படும் உறுதிமொழியும் எவருக்கு அது தரப்படுகிறதோ (அவர்தான் பெற்றுக்கொள்பவர்) அவருடை பெயர் கடனுறுதிச்சீட்டில் இருத்தல் வேண்டும். பெற்றுக்கொள் பவர் பற்றி நிச்சயமாக விவரிக்கப் படவில்லை யெனில், அக் கடனு றுதிச்சீட்டு செல்லு நிலையாகாது. கடனுறுதிச்சீட்டில் நிறை வேற்றப்பட வேண்டிய இடம், தேதி மற்றும் மறுபயன் (Conside-ration) தரப்படுகின்ற முறை ஆகியவைபற்றிக் குறிப்பிடப்பட வில்லையெனில். அதற்காக அது செல்லுநிலையாகாது என்பதன்று. நடைமுறை வசதிக்காக அத்தகவல்களையும் சீட்டில் குறிப்பிடுவது நன்று. ஏனெனில், பின்னல் வழக்கொன்று நீதி மன்றத்துக்கு வருமாயின், எந்தத் தேதியில் அச்சீட்டு நிறைவேற்றப்பட்டிருக்க வேண்டும்; காலவரையறையைக் கடந்து விட்டதா என்று முடிவு செய்வதற்கும், இடத்தைக் குறிப்பிடுகையில் அவ்வழக்கை அது மேற்கொள்வதற்கு உரிய ஆள்வரை (Jurisdiction) அதற்கு இருக்கிறதா என்று நீதிமன்றம் முடிவெடுப்பதற்கும் அத் தகவல் கள் துணை செய்யும்.

வங்கிச் சீட்டும் (Bank Note) நாணயச் சீட்டும் (Currency Note) அவை கடனுறுதிச்சீட்டுக்குள்ள கூறுகளைப் (அம்சங்களை) பெற்றிருப்பினும், அவை தனிச்சிறப்பாகக் கடனுறுதிச் சீட்டின் வரைவுரையிலிருந்து விலக்கப்பட்டுள்ளன. ஏனெனில் அவை பணத்திற்கான பொறுப்புப்பத்திரமாக அல்லாமல் பணமாகவே கருதப்படுவதுதான். அத்துடன், வங்கிச் சீட்டை எந்தத் தனிப் பட்ட நபரும் வழங்க முடியாது. இந்திய இருப்பு வங்கிக்கு மட்டுமே அந்த அதிகாரமுண்டு.

அரசாங்க கடனுறுதிச்சீட்டு ஒரு கடனுறுதிச்சீட்டுத்தான். அது, இந்தச் சட்டத்தின் கீழ்தான் வரும். ஆனால் அதை மேற் குறிப்புச் செய்வது, புதுப்பிப்பது (Renewal) போன்ற காரியங்கள் இந்தச் சட்டத்தின்கீழ் அல்லாமல் இந்தியப் பொறுப்புறுதி (Securities) ஆவணங்கள் சட்டம் X (1920) என்னும் சட்டத்திற்கு உட்பட்டு செய்யப்பட வேண்டியவை ஆகும்.

இன்னுமொரு முக்கியமான கூறு (அம்சம்) என்னவென்றால் ஒரு கடனுறுதிச் சீட்டுக்குப் போதுமான — அதாவது முத்திரைச் சட்டத்தின்கீழ்க் குறிப்பிடப்பட்ட முத்திரைகளை ஒட்டவேண்டும். இல்லாவிடில் அச்சீட்டு செல்லுநிலையாகாது. அது மட்டுமன்று, கடப்பாட்டுக்கு அதை ஓர் ஒப்புதலாகக்கூடக் காட்டிட முடியாது.

முத்திரைகள் ஒட்டப்படாமையால் சாட்சியத்தில் ஒரு கட னுறுதிச் சீட்டு ஏற்கப்படவில்லையெனில், பெற்றுக் கொள்பவ ரானவர் தாம் முதலில் செய்த மறுபயனின்மீது வழக்குத் தொடுக்க முடியுமா என்னும் கேள்வி இன்னமும் ஒருமுகமாக விடையளிக்கப்படாமலே கிடக்கிறது. இதுகுறித்து இரு வேறு பட்ட கருத்துகள் நிலவி வருகின்றன.

சேக் அக்பருக்கும்-சேக் கானுக்குமிடையேயான வழக்கில் (7 Cal 256) பின்வருமாறு தீர்ப்பளிக்கப்பட்டது: "விற்ற பொருளுக் காகவோ கடன் கொடுத்த பணத்திற்காகவோ, பணத்தைத் திரும்பப் பெறுவதற்கு வழக்கு மூலமானது (Cause of Action) முழுமையானதாயிருப்பின், அதற்குப் பிறகு கடன்பட்டவர் கட னுறுதிச் சீட்டோ மாற்றுச் சீட்டோ தந்து, அவ்வாறே கடன் கொடுத்தவரும் கடன்பட்டவரை மூன்றும் ஆளுக்குக் கடப்படும் வகையில் செய்ய, அச் சீட்டை மாற்றிக் கொடுத்துவிடவில்லை என்றால், அப்போது, உரிய முத்திரைகள் ஒட்டப்படவில்லை என் பதற்காக சாட்சியத்தில் அச்சீட்டு ஏற்கப்படாதபோது கடன் கொடுத்தவரானவர் அந்தச் சீட்டை ஏற்காமல் தள்ளி விட்டு முதலில் தந்த கடன் அல்லது மறுபயன் மீது வழக்குத் தொடுக்

கலாம்'' என்பதே அத் தீர்ப்பு. ஆனல் கடன் கொடுப்பதும் கடனுறுதிச் சீட்டு நிறைவேற்றப்படுவதும் ஒரு நேரத்தில் நிகழ்வன வாயின், அப்போது அந்தச் சீட்டிலிருந்து வழக்கு மூலத்தைத் தனித்துப் பிரித்துக்காட்ட இயலாத நிலையில், எப்படித் தீர்ப்பளிப்பது என்று மிகவும் இடர்ப்பாடாக இருந்து வந்தது. அது போன்ற நேர்வுகளில், கடன் கொடுத்தவர் முத்திரை ஒட்டவே படாத அல்லது போதுமான அளவு ஒட்டப்படாத சீட்டை ஏற்க மறுத்து, முதலில் மறுபயன்மீது வழக்குத் தொடுக்க இயலுமா என்பது குறித்துப்பல்வேறு உயர்நீதி மன்றங்களுக்கிடையே கருத்து வேறுபாடு இருந்தது. சென்னை உயர்நீதி மன்றம் அதன் பெரும் பான்மைக் கருத்துப்படி (ஐவருக்கு நால்வர்) இந்த வினவானது எந்தச் சூழல்களில் அந்தச் சீட்டு நிறைவேற்றப்பட்டது என்பதைப் பொறுத்தது என்று முடிவெடுத்தது. முன்னரே இருந்து வந்த ஒரு கடனுக்காகவோ (Antecedent Debt) இணையான பொறுப்புறுதிக்காக (Collateral Security) அல்லது கட்டுவரம்புடன் கூடிய செலுத்தத்திற்காகவோ அச் சீட்டுத் தரப்பட்டதாயினும் அல்லது ஒப்பந்தத்தின் கட்டுவரம்புகள் அனைத்தையும் அது கொண்டதாக இல்லாதபோதும், ஒப்பந்தத்தின் உண்மையான இயல்பு (தன்மை) என்ன என்பதை நிரூபிக்கலாம். ஆயினும் அச் சீட்டானது ஒப்பந்தத்தின் கட்டுவரம்புகள் அனைத்தையும் கொண்டதாக இருந்து விட்டால், அப்போது கடன்மீதோ, முதலில் தந்த மறு பயன்மீதோ வழக்குத் தொடுக்க இயலாது; ஏனெனில் சாட்சியச் சட்டத்தின் 91-ம் பிரிவும் முத்திரைச் சட்டத்தின் 35-ம் பிரிவும் அதற்குக் குறுக்கே நிற்கின்றன என்று பெருமாள் செட்டியாருக்கும் காமாட்சி அம்மாளுக்குமிடையே ஆன வழக்கில் அது தீர்ப்புரைத்தது (I. L. R. 1938 சென்னை 933. F. B.).

**மாற்றுச் சீட்டு (Bill of Exchange)**

ஒரு மாற்றுச் சீட்டை பிரிவு-5 ஆனது பின்வருமாறு வரை வுரைக்கிறது:

"நிச்சயமான ஒரு நபருக்கு மட்டும் அல்லது அவரது கட்டளை பெற்றவருக்கு அல்லது முறைவயாவணத்தைக் கொணர்பவருக்கு மட்டும் ஒரு நிச்சயமான தொகை அல்லது பணத்தைச் செலுத்த நிச்சயமான ஒரு நபரை நெறிப்படுத்துகின்ற, எழுதித் தருபவரால் கையொப்பமிடப்பட்ட, கட்டுவரம்பற்ற ஒரு கட்டளை அடங்கியிருக்கிற எழுத்தினுலான ஒரு முறையாவணமே ஒரு மாற்றுச் சீட்டாகும்."

மாற்றுச் சீட்டை வரைவு (Draft) என்றும் அழைப்பர். ஒரு மாற்றுச் சீட்டானது பின்வருவது போன்று இருக்கும் :

| | |
|---|---|
| ரூ 1000/- | சென்னை-4 |
| (முத்திரை) | 12-12-1972 |

உரிமையுடன் கேட்கப்படும்போது எழிலனுக்கோ அவரது கட்டளை பெற்றவருக்கோ ரூ. 1000/- (ரூபாய் ஆயிரம்) மட்டும், மதிப்பைப் பெற்றுக் கொண்டதற்காகச் செலுத்துக.

திரு. செழியன், (ஒப்பம்) வளவன்

மதுரை-1.

இது உரிமையுடன் கேட்கப்படும்போது செலுத்தப்பட வேண்டிய ஒரு கட்டளைச் சீட்டாகும். இதுவே உரிமையுடன் கேட்கப்படும்போது 'On Demand' என்னும் சொற்களுக்குப் பதிலாக "தேதியிட்டதற்குப் பின் முப்பது நாளில் செலுத்துக", (30 days after Date) என்னும் சொற்கள் இருப்பின், அது ஒரு நிச்சயித்த காலத்தில் செலுத்தப்பட வேண்டிய ஒரு கட்டளைச் சீட்டாகும். இப்படிப்பட்ட சீட்டானது ஒரு குறிப்பிட்ட நபருக்குச் செலுத்தப்படுமாறு செய்யப்படுவதற்குப் பதிலாக, அதைக் கொணர்பவருக்குச் செலுத்தப்படுமாறு, அவ்வாறு அதில் குறிப்பிட்டுச் செய்திடலாம்.

ஒரு மாற்றுச் சீட்டிற்குள்ள முக்கியமான கூறுகள் (அம்சங்கள்) என்னென்ன ?

(i) முதலாவதாக, அது எழுத்து மூலமாக இருத்தல் வேண்டும்.

(ii) இரண்டாவதாக, அந்த முறையாவணத்திற்கு மூன்று தரப்பினர்கள் உண்டு. அஃதாவது :

(க) வரைபவர் (Drawer)

(ங) பெயரவர் (வரையப்படுபவர்) (Drawee)

(ச) பெறுபவர் (Payee) என்று முத்தரப்பினர்கள் இருக்க வேண்டும்.

அந்தக் கட்டளையானது நிச்சயமான ஒரு பணத் தொகையைச் செலுத்துகின்றதாக இருக்க வேண்டும்.

மேலே தரப்பட்ட படிவத்தில் சீட்டை எழுதித் தருகின்றவர் (வளவன்) வரைபவராவார். செலுத்துமாறு எவர் கட்டளையிடப் படுகின்றாரோ (செழியன்) அவர் பெயரவர் ஆவார். எந்த முறையாவணத்தில் எவருக்கு அல்லது எவரது கட்டளைப்படி பண மானது செலுத்தப்படுமாறு நெறிப்படுத்தப்படுகிறதோ அவர் (எழிலன்) பெறுபவர் ஆவார். பெறுபவர் அல்லது மேற் குறிப்புச் செய்யப்படின், மேற் குறிப்பாளி (Endorsee) சீட்டின் உடைமைக் குரியவர் (Holder) என்று அழைக்கப்படுவார்.

எழுத்து மூலமாக இருக்க வேண்டும், கட்டளையானது கட்டுவரம்பற்றதாக இருக்க வேண்டும். கட்டளையானது பணத்தைச் செலுத்துவதற்காக மட்டுமே இருத்தல் வேண்டும் என்பன போன்ற கூறுகள் கடனுறுதிச் சீட்டுக்குத் தேவைப் படுவன போன்றே இம் மாற்றுச் சீட்டுக்கும் பொருந்துவதாக இருப்பதைக் காணலாம். மாற்றுச் சீட்டுக்கு மூன்று தரப்பினர்கள் இருத்தல் வேண்டும் என்றாலும், அம்மூவர் அனைவருமே, வேறு வேறு நபர்களாக இருத்தல் வேண்டும் என்பதில்லை. ஒரே நபரே இருதரப்பினர்களாகவும் மூன்றாந் தரப்பினர் மட்டும் பிறிதொரு நபராகவும் இருக்கலாம். எடுத்துக்காட்டாக, அதே நபரே வரைபவராகவும் பெறுபவராகவும் இருத்தல் இயலும். அவ் வாறே, அதே நபரே பெயரவராகவும் பெறுபவராகவும் இருத்தல் இயலும். இந்த இரண்டு வகைகளிலும், முறையாவண மானது செல்லுநிலையாகின்ற ஒரு மாற்றுச் சீட்டுத்தான். ஆயினும், வரைபவரும் பெயரவரும் ஒரே நபராக இருப் பாரானால், அதாவது செலுத்தச் செய்யும் கட்டளையைத் தன் மீதே செய்து கொண்டு அதை மாற்றிக் கொடுத்தால் அது ஐயப்பாட்டிற்கிடமின்றி செல்லுநிலையாகும், ஒரு மாற்று முறை யாவணம் தான் என்றாலும் அம் முறையாவணத்தின் உடைமை யுரிமையார், தன் விருப்பத் தேர்வின் (Option) மீது அதை ஒரு கடனுறுதிச் சீட்டாகவோ, ஒரு மாற்றுச் சீட்டாகவோ கருதிக் கொள்ளலாம். அதற்குப் பின் அது, அவர் எவ்வாறு கருதுகின்றாரோ அவ்வாறாகும். இது போன்றே பெயரவர் ஒரு கற்பனை நபராகவோ (Fictitious) ஒப்பந்தத்தில் ஈடுபடத் தகுதி யற்றவராகவோ இருப்பின், அம் முறையாவணத்தின் உடைமை வுரிமையார்கள் அதை ஒரு கடனுறுதிச் சீட்டாகவோ, ஒரு மாற்றுச் சீட்டாகவோ கருதி ஏற்கலாம். இவ்வாறு கடனுறுதிச் சீட்டாகவோ மாற்றுச் சீட்டாகவோ கருதி ஏற்கப்படுகின்ற

முறையாவணங்கள் தாம் "தெளிவற்ற முறையாவணங்கள்" (Ambiguous Instruments) என்றழைக்கப்படுவனவாகும்.

"பணத்தை" ஒரு கற்பனை நபராகவோ, இல்லாத ஒரு நபராகவோ சொல்ல முடியாதாகையால், பணத்தைச் செலுத்துக "கட்டளை பெற்றவருக்குச் செலுத்துக" என்ற சொற்கள் அடங்கியுள்ள ஒரு முறையாவணமானது ஒரு மாற்றுச்சீட்டு ஆகாது. ஏனெனில் குறித்துரைத்த ஒரு நபர் அல்லது கொணர்பவரின் கட்டளைக்கு நெறிப்படுத்தப்பட்டதாக அது இல்லை. இவ்வாறே "பணம்செலுத்தக் கட்டளை பெற்றவருக்குச் செலுத்துக" என்னுஞ் சொற்கள் எழுதப்பட்ட ஒரு காசோலையானது செல்லுதிலையாகும் ஒரு காசோலையன்று என்று தீர்ப்பளிக்கப்பட்டது. காரணம், குறித்துரைத்த ஒரு நபர் அல்லது கொணர்பவருக்கெனச் செலுத்தப்பட வேண்டியதாக அது குறிப்பிடாதது தான். (நார்த் அண்டு சவுத் இன்சூரன்ஸ் கம்பெனிக்கும் நேஷனல் ப்ரொவின்ஷியல் வங்கிக்கும் இடையேயான வழக்கு (1936) I. K. B. 328.)

சீட்டுகளானவை பொருள்களுக்கு எதிராக வரையப்பட்டு வர்த்தகச் சரக்குச் சீட்டுடன் மாற்றிக் கொடுக்கப்படுவதை அடிக்கடி காண்கிறோம். பெயரவரால் ஏற்றுக் கொள்ளப்படும்வரை அவ்வாறு அது மாற்றப்பட்டுக்கொண்டே இருக்கும். பெயரவர் ஏற்றுக்கொள்ள ஒருகால் மறுத்தால், அப்போது அது ஒரு பொறுப்புப் பத்திரமாக உடைமைக் குரியவருக்கு விளங்கும். ஏற்கப்பட்டுவிட்டால், உரிமைத் தகுதிப் பத்திரமானது, ஏற்றுக் கொள்பவரால் நிறுத்திக் கொள்ளப்பட்டு, உடைமைவுரிமையருக்கு ஏற்றுக் கொள்ளப்படும் சீட்டானது திருப்பியனுப்பப் படுகின்றது. இந்தவகைச் சீட்டுகள்தான், "ஏற்கப்படுவதன் மீதான ஆவணங்கள்" (Documents on Acceptance) என்றழைக்கப்படுகின்றன.

ஒரு மாற்றுச் சீட்டை வரைவதனால் விளைவ தென்ன? ஒரு சீட்டை வெறுமனே வரைவதனால் மட்டுமே கடனை மாற்றுரிமை செய்துவிட்டதாகவோ, பெயரவருக்கும், பெறுபவருக்கும் இடையே ஒப்பந்த உறவை உருவாக்கி விட்டதாகவோ ஆகிவிடுவதில்லை. தன்னிடம் வரைபவரது பணத்தை வைத்திருக்கும் போதே பெயரவர் சீட்டை ஏற்க மறுப்பின், முறையாவணத்தின் உடமையுரிமையருக்குள்ள ஒரே உரிமை யாதெனில் வரைபவருக்கும் முந்தைய மேற்குறிப்பாளிகளுக்கும் எதிராக நடவடிக்கை தொடர்வதேயன்றி பெயரவருக்கு எதிராக அன்று. பெயரவர் சீட்டை ஏற்றுக்கொள்ளின், அவர் அப்போது

"ஏற்பவர்" என அழைக்கப்படுகிறார்; அப்போது அவர் ஒரு முதன்மைக் கடனாளியாகக் கடப்பட்டவராகிறார். வரைபவரானவர் சீட்டை ஏற்கிறபோது மட்டுமே, ஒப்பந்த உறவானது உருவாகின்றது.

தொகுப்புச் சீட்டுகள் (Bills in Sets)

பொதுவாகவே அந்நியச் சீட்டுகள் தொகுப்புகளாகத்தான் வரையப்படுகின்றன. அஃதாவது பகுதிகளாக அவை வரையப்படுகின்றன. ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனி எண் தரப்படும், ஒவ்வொன்றிலும், மற்ற பகுதிகள் செலுத்தப்படாமல் இருக்கும் வரை இப் பகுதி செலுத்தப்பட்டுக்கொண்டே இருக்கவேண்டும் என்று அதில் வகையம் ஒன்று அடங்கியிருக்கும். எல்லாப் பகுதிகளுமாகச் சேர்ந்து ஒரு தொகுப்பு ஆகும். கட்டுகள் அனைத்தும் சேர்ந்து ஒரு சீட்டு ஆகும். ஒரு சீட்டைச் செலுத்திவிட்டால் மொத்தத் தொகுப்புகளையும் தீர்த்ததுவாக ஆகும். ஏற்பு செய்வதென்பதை அவற்றில் ஒன்றினைத்தான் செய்ய வேண்டும். பெயரவர் ஒன்றுக்கு மேற்பட்ட பகுதிகளை ஏற்பு செய்தால், அவரும் மேற்குறிப்பாளியும் அவை தனித்தனி பகுதி சீட்டுகள் போலக் கடப்பாடுடையவராவார்கள். முதலாவது பகுதியின் உரிய முறை உடைமையுரிமையரான ஒருவர், மற்ற எல்லாப் பகுதிகளுக்கும் உரிமைத் தகுதியுடையவராவார். மற்ற பகுதிகளின் உரிய முறை உடைமையுரிமையர்களுக்கு எதிராக சீட்டில் குறிக்கப்படும் பணத்திற்கும் அவர் உரிமைத் தகுதியுடையவராவார் (பிரிவுகள் 132, 133-ல் காண்க).

தொகுப்பாகத் தரப்படும் சீட்டு பின்வருவது போன்று இருக்கும்:

| | |
|---|---|
| £ 500 | கோவை |
| (ஆவண அஞ்சல் தலை) | 1-2-1973 |

இந்த மாறுகொள்ளலின் (Exchange) முதலாவது பகுதியைப் பார்த்ததற்குப் பின் ஆறு மாதங்களுக்குள் (அதே தேதியிட்ட அதே மாறு கொள்ளலின் இரண்டாம் மூன்றும் பகுதிகள் இன்னும் செலுத்தப்படவில்லை) வழுதிக்கோ அவரது கட்டளைப்படியோ, மதிப்பைப் பெற்றுக் கொண்டதற்காக £ 500/- (எழுத்தால் பவுண்டுகள் ஐந்நூறு மட்டும்) செலுத்துக.

திரு. வில்சன் அவர்கள், (ஒப்பம்) கிள்ளி
லண்டன்.

கடனுறுதிச் சீட்டையும் மாற்றுச் சீட்டையும் கவனித்த நாம் அவற்றிற்கிடையேயுள்ள வேறுபாட்டைப் பின்வருமாறு ஒப்பு நோக்கி அறியலாம்.

| கடனுறுதிச் சீட்டு | மாற்றுச் சீட்டு |
|---|---|
| 1. இதற்கு இரண்டு தரப்பினர்கள் மட்டுமே உண்டு (அஃதாவது எழுதித் தருபவரும் பெறுபவருமாக). | 1. இதற்கு மூன்றுதரப்பினர்கள் உண்டு. அஃதாவது வரைபவர், பெயரவர் மற்றும் பெறுபவர். |
| 2. இது, செலுத்திட கட்டுவரம்பற்ற ஓர் உறுதிமொழியைக் கொண்டது. | 2. இது, பெற்றுக் கொள்பவருக்குத் தொகையைச் செலுத்துமாறு வரையப்படுவருக்கு கட்டுவரம்பற்ற ஒரு கட்டளையைக் கொண்டது. |
| 3. எழுதித் தருபவர் ஒரு முதன்மைக் கடனாளியாக (Principal Debtor) முழுக்க முழுக்க கடப்பாடுடையவராவார். | 3. பெயரவரால் சீட்டானது ஏற்கப்படும் வரைக்கும், வரைபவர்தான் முதன்மைக் கடனாளியாகக் கடப்பாடுடையவர் ஆவார். ஆனால் ஏற்புக்குப் பின் வரைப்வராவர் ஒரு பொறுப்பாக நிற்பவராகவும் (Surety) ஏற்பவர் முதன்மைக் கடனாளியாகவும் கடப்பாடுடையவராகின்றனர். |
| 4. செலுத்தத்திற்காகச் சீட்டை முன்னிடலானது (Presentment) எழுதித் தருபவரைக் கடப்பாடுடையவராக்கிடத் தேவையில்லை; ஆனால் மேற்குறிப்பாளரைக் கடப்பாடுடையவராக்கிடத் தேவையாகும். ஒரு குறிப்பிட்ட இடத்தில் செலுத்தப்படுவதாகச் செய்யப்படின், எழுதித்தருபவரைக் கூடக் கடப்பாடுடையவராக்கிட அந்த இடத்தில் அதை முன்னிடச் செய்தல் வேண்டும். | 4. ஏற்பானது தேவையாயின், ஏற்புக்குச் சீட்டை முன்னிடச் செய்ய வேண்டும். அதேபோல் செலுத்தத்திற்கும், வரைபவரையும், மேற்குறிப்பாளர்களையும் கடப்பாடுடையவர்களாக்கிட முன்னிடச் செய்ய வேண்டும். |
| 5. ஏற்பு செய்தல்; மறுத்துரைக்கு மேலே ஏற்பு செய்தல்; தொகுப்புச் சீட்டுகள் இவற்றின் தொடர்பான வகையங்களெல்லாம் கடனுறுதிச் சீட்டுக்குப் பொருந்துவன அல்ல. | 5. அவ்வகையங்கள் மாற்றுச் சீட்டுக்குப் பொருந்துவனவாகும். |

**உண்டியங்கள் (Hundis)**

இந்தச் சட்டத்தின் நிறைவேற்றத்துக்குப் பல நாட்களுக்கு முன்பே இந்தியாவில் வர்த்தகமானது செழிப்புற்றிருந்த காலத்தில், வணிகத் துறையினர் பணத்தை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் பாதுகாப்பாக அனுப்பி வைப்பதற்கு ஒரு முறையைக் கையாண்டு வந்தனர். அதுதான் உண்டியம் என்னும் முறையாவணம்.

உண்டியம் என்பது, இந்தியாவிலிருந்து உள்நாட்டு வணிகர்களின் வழக்கத்தின்படி வட்டார மொழியொன்றில் வரையப்பட்ட ஒரு மாற்றுச் சீட்டு ஆகும். உண்டியத்தை வரைபவர் 'ஷராப்' அல்லது 'நாறுவதி' என்றழைக்கப்படுவார். அவர், இப்போது வங்கியர் என்கிறோமே கிட்டத்தட்ட அவரைப் போன்றவராவார். பெற்றுக் கொள்பவர் 'ரக்சயதாணி' என்று அழைக்கப்படுவார்.

உண்டியங்களில் பல்வேறு வகைகள் உள்ளன. அவற்றில் சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

1. **ஷா ஜோஹி உண்டியம் (Shah Jogi)**

'ஷா' என்றழைக்கப்படும் மதிப்பிற்குரிய சீட்டின் உடைமை உரிமையர் ஒருவருக்கு அவருக்கு மட்டுமே செலுத்தப்படக்கூடியது இந்த உண்டியம். 'ஷா' ஆனவர், அச் சீட்டை முன்னிடச் செய்து அதை மேற்குறிப்புச் செய்தாலன்றி, பெயரவரால் அதுசெலுத்தப் படவேண்டியதில்லை. ஆயினும் அது 'ஷா'வின் கைகளைச் சென்றடைகின்ற வரைக்கும், மேற்குறிப்புச் செய்யாமலேயே எத்தனைக் கைகளில் வேண்டுமானாலும் அது மாறலாம். இந்த வகை உண்டியங்களுக்குள்ள வழக்கத்தின்படி, இந்த உண்டியம் மோசடி செய்யப்பட்டதாகவோ:- திருடப்பட்ட ஒன்றாகவோ நிரூபணமானால், செலுத்தப்பெற்ற 'ஷா' ஆனவர், அவருக்குச் செலுத்தப் பட்ட தொகையை வட்டியுடன் சேர்த்துத் திரும்பச் செலுத்தக் கடமைப்பட்டவராவார். ஆனால் உண்மையான வரைபவரை அல்லது மோசடியைச் செய்த நபரை அவர் கொண்டு வந்து காட்டினால், அப்போது அவருக்கு அந்தக் கடப்பாடு கிடையாது.

2. **ஜோக்மி (Jokmi) உண்டியம்**

இது, கலமொன்றில் ஏற்றியனுப்பப்பட்ட பொருள்களுக்கெதிராக வரையப்படும் ஓர் உண்டியமாகும். இந்த உண்டியமானது, இதை வரைபவரால் இதை ஒரு தொகைக்காக (அதாவது தரகுத் தொகையைக் கழித்துக் கொண்டு) வாங்கிக் கொள்

கின்ற-இழப்புக் கெதிராக அதைக் காப்புறுதி செய்கின்ற ஒரு நபருக்கு மாற்றிக் கொடுக்கப்படுகிறது. பொருள்கள் பாதுகாப்பாக வந்து சேரும்போது மட்டுமே, உண்டியத்தின் முழு மதிப்பையும், பொருள் அனுப்பப்படுவோரிடமிருந்து அவர் திரும்பப் பெற முடியும். இழப்பு அல்லது அழிவின் காரணமாக அப்பொருள்கள் சேரவேண்டிய இடத்தை அடையவில்லையென்றால், பொருள் அனுப்பப்படுவோர், உண்டியத்தின் மதிப்பைச் செலுத்த வேண்டிய அவசியமில்லை. அதுபோன்றே பொருளை அனுப்பியோரும் தான் பெற்ற பணத்தைத் திரும்பச் செலுத்த வேண்டியதும் தேவையன்று. காரணம் பொருள்கள் காப்புறுதி (Insured) செய்யப்பட்டிருப்பது தான்.

3. நாம் ஜாக் உண்டியம் (Nam Jog)

இது, சீட்டில் எவருடைய பெயர் குறிக்கப்பட்டுள்ளதோ அவருக்கு அல்லது அவரது கட்டளை பெற்றவருக்கு மட்டுமே செலுத்தப்படலாகின்ற உண்டியமாகும். அப் பெயரானது சீட்டில் போதுமான அளவுக்கு விரிவாக வருணிக்கப்பட்டிருப்பின் அந்த நபருக்கு மட்டுமே செலுத்தப்படக் கூடியதாகும். அதை மேற்குறிப்பு செய்திட முடியாது. ஆனால் பெற்றுக் கொள்பவரைப் பற்றிய முழு வருணனை தரப்படவில்லையெனில், அப்போது அதனை மேற்குறிப்பு செய்திட இயலும்.

4. ஜவாபி (Jawabee) உண்டியம்

இந்த உண்டியம் எவ்வாறு வரையப்படுகிறது என்று காண்போம்:

செலுத்த விரும்புகின்ற நபரானவர் பெறுபவருக்கு எழுதுவதுடன் அக் கடிதத்தை ஒரு வங்கியாளரிடம் ஒப்படைப்புச் செய்கிறார். வங்கியாளர், அதைப் பெறுபவரது இருப்பிடத்திற்கு அண்மையிலுள்ள தனது தொடர்பாளர்களுள் ஒருவருக்கு மேற்குறிப்புச் செய்கின்றார்; அல்லது மேற்கொண்டு மாற்றிக் கொடுக்கின்றார். அக் கடிதம் வந்து சேர்ந்ததும், அது பெறுபவருக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. அதை அவர் கவனித்து பதில் தரும் முறையில் தனது பற்றுச் சீட்டொன்றைத் தருகின்றார். அப்பற்றுச் சீட்டானது எவரெவர் வழியாக வந்ததோ, அவரவர் மூலமாகவே, வரைபவருக்கு மீண்டும் அனுப்பி வைக்கப்படுகின்றது.

5. ஜிக்ரி சிட் (Zikri Chit)

இது ஒரு பாதுகாப்புக் கடிதமாகும். ஒருக்கால் உண்டியம் ஏற்கப்படவில்லையென்றால், அப்போது பயன்படுத்துவதற்காக அதை வைத்திருப்பவருக்கு அதற்கு முந்திய தரப்பினர் ஒருவரால் தரப்படுவதாகும்.

உண்டியலானது செலுத்தப்பட்டு, ரத்து செய்யப்படும்போது அதற்குக் கோக்கா (Khoka) என்று பெயரிட்டு அழைக்கப்படுகிறது.

காசோலே (Cheque)

காசோலையை, பிரிவு 6 ஆனது, இவ்வாறு வரைவுரைக்கிறது: "குறித்துரைத்த வங்கியாளர் ஒருவருக்கு வரையப்பட்டதும் உரிமைக் கேட்பின் மீதல்லாமல் வேறுவழியாகச் செலுத்தப்பட வேண்டுமெனத் தெரிவிக்கப்படாததுமான ஒரு மாற்றுச் சீட்டே, காசோலையாகும்".

எனவே, ஒரு காசோலையானது, ஒரு மாற்றுச் சீட்டிற்குரிய இன்றியமையாத கூறுகளைப் பெற்றிருப்பதுடன் இரண்டு கூடுதலான இன்றியமையாத கூறுகளையும் பெற்றிருக்கின்றது.

(i) அது எப்போதுமே, வங்கியாளருக்கே வரையப்படுவதாகும்.

(ii) அது எப்போதுமே, உரிமைக் கேட்பின்போதே செலுத்தப்பட வேண்டியதாகுமேயன்றி, முன்னிடப்பட்ட தேதியிலிருந்து சில காலத்திற்குப் பிறகு செலுத்தப்பட வேண்டியதன்று. பொதுவான வழக்கம் என்னவென்றால், மோசடி அல்லது ஏமாற்று வேலையைத் தடுப்பதற்காக, வங்கிகள் அவற்றிடம் தொகை வைத்திருப்பவர்களுக்கு வழங்கும் படிவங்களில்தான் காசோலைகள் எழுதப்படுகின்றன.

ஒரு காசோலைக்கும் ஒரு மாற்றுச் சீட்டுக்கும் உள்ள வேறுபாடுகளை ஈண்டுக் காணலாம்.

| காசோலை | மாற்றுச் சீட்டு |
|---|---|
| 1. வங்கியாளரின் கையிலுள்ள வரைபவரின் நிதியின் மீது இது வரையப்படுவதாக கருதப்படும். | 1. அப்படி கருதப்படுகிறநிலை ஈங்கில்லை. |
| 2. இதற்கு ஏற்பு செய்தல் (செலுத்தத்தைத் தவிர) எதுவும் தேவையில்லை. | 2. உரிமை கேட்பின்போது செலுத்தப் படுவதாக இருந்தாலன்றி இதற்கு ஏற்பு செய்தல் தேவை. |
| 3. எப்போதுமே இது ஒரு வங்கியாளருக்கே வரையப்படும். | 3. இதை எந்த நபருக்கும் வரையலாம். |
| 4. காசோலையை வரைந்தவருக்குத் தாமதத்தால் ஊறு | 4. மாற்றுச் சீட்டின் உடைமையுரிமையர் ஏற்புக்காகவோ, |

| காசோலை | மாற்றுச் சீட்டு |
|---|---|
| நேர்ந்தாலன்றி, அதன் உடமை யுரிமையர் தகுமான காலத் திற்குள் அதை முன்னிடத்தவறி விடுவதால், விடுவிக்கப்பட்டவ ராவதில்லை. | செலுத்தத்திற்காக முதிர்ச்சி யுறலின்போதோ அதை முன்னிடவில்லை யென்றால் வரை பவருக்கும் முந்தைய மேற்குறிப் பாளருக்கும் எதிராக அவருக் குள்ள தீர்வழியை (Remedy) அவர் இழந்து விடுகின்றார். |
| 5. இதற்குச் செலுத்தத்திற் காக மேற்கொண்டு அனுமதிக் கப்படும் நாட்கள் (Days of Grace) கிடையாது. எப்போது உரிமையுடன் கேட்கப்பட்டா லும் இது செலுத்தப்படுவ தாகும். | 5. உரிமை கேட்பின்போது தான் செலுத்தப்பட வேண்டும் என்று தெளிவாகத் தெரிவிக்கப் பட்டாலன்றி, ஒரு மாற்றுச் சீட்டுக்கு, செலுத்தத்திற்காக மேற்கொண்டு அனுமதிப்பு நாட்கள் மூன்று உண்டு. |
| 6. ஏற்புமறுத்தல் குறித்து அறிவிப்பு (Notice) ஏதும் தேவை யன்று. | 6. அத்தகைய அறிவிப்பானது முழுக்க முழுக்க தேவையான தாகும். |
| 7. இது ஒரு ரத்து செய்யப் படக் கூடிய கட்டளையாகும். செலுத்தத்திற்கு முன்பு எந்த நேரத்திலும், நிறுத்தச் சொல்லிக் கட்டளையிட்டு ரத்து செய்தல் இயலும். | 7. இங்கே சீட்டானது ஏற்கப் பட்டதற்குப் பின்பு, அத்தகு நிறுத்தமோ, ரத்து செய்தலோ செய்வதற்கில்லை. |

ஒரு காசோலையை வரைவதாலேயே, வங்கியாளரது கையிலுள்ள வரைபவரது (வாடிக்கையாளரது) பணங்களை மீளா மாற்றுரிமை (Assignment) செய்தளித்து விட்டதாக ஆகிவிடாது. எனவே வங்கியாளர் அக் காசோலையின் மீது பணஞ்செலுத்த மறுத்தாலுங் கூட, பெறுபவர் அவருக்கெதிராக நடவடிக்கை தொடரத் தீர்வழி கிடையாது. வரைபவருக்கு எதிராகத்தான் பெறுபவர் நடவடிக்கை தொடரலாம். ஆயினும், பெறுபவர் உரிய காலத்தில் காசோலையை வங்கியிடம் முன்னிட விட்டு விட்டாலும், அந்தக் காலத்திற்குள் வங்கியே மூடப்பட்டு விட்டாலும் வரைபவரானவர் கடப்பாட்டிலிருந்து விடுபட்டவ ராகிறார். அப்போது பெறுபவர் வங்கிக்கெதிரான கடனாளர் களின் வரிசையில் நிற்பார். காசோலையில் முன் சென்ற (Post Dated) ஒரு தேதியையோ அல்லது பின்வரும் ஒரு தேதியையோ

(Post Dated) இடலாம்; ஆனால் அது மோசடி செய்வதற்காக அவ்வாறு செய்யப்பட்டதாக இருத்தல் கூடாது.

### வங்கிக்கும் வாடிக்கையாளருக்குமிடையே உள்ள உறவு

வங்கியில் பணத்தை வைப்புச் செய்ததுமே, கடனளிக்கும் வாடிக்கையாளருக்குமுள்ள தொடர்பானது கடனளிக்கும் (Debtor) கடனாளருக்குமுள்ள (Creditor) உறவாகிவிடுகிறது; ஆனால் அந்த உறவானது பொறுப்புரிமையருக்கும் (Trustee) பொறுப்புரிமை நலத்திற்குரியவருக்கும் (Beneficiary) உள்ளதான உறவு அன்று. வங்கியானது அப்படிப்பட்ட பணங்களைத்தான் பயன்படுத்திக் கொள்ளலாம். அதற்காக அது கணக்குக்காட்ட வேண்டியதில்லை. ஆனால் ஒரேஒரு கட்டுவரம்பு உண்டு. அஃதாவது அதற்கும் வாடிக்கையாளருக்குமிடையே உடன்பாடு கொண்டவாறு பணத்தை திரும்பச் செலுத்த, வங்கி கடம்பட்டதாகும். தனியான முறையில் வங்கியைப் பொறுப்புரிமையராக்கும் உடன்பாடு கொள்ளல் வேறு; ஆனால் அவ்வாறில்லாதவிடத்து, உறவானது கடனளிக்கும் கடனாளருக்கும் உள்ளதுதான். (சாந்தி பிரசாத்துக்கும் டைரக்டர் அஃப் என்ஃபோர்ஸ்மெண்டுக்கும் இடையேயான வழக்கில்-AIR 1962 S. C. 1964)

### உரிமைக் கேட்பு வரைவு (Demand Draft) அல்லது வங்கிவரைவு (Bank Draft)

ஒரு வங்கியானது தனது கிளைகளில் ஒன்றனுக்கோ மற்றொரு வங்கிக்கோ காசோலை வடிவத்தில் வரையும் ஒரு கட்டளையே இது. உரிமைக் கேட்பு வரைவுரைகள் காசோலைகள் அன்று (காபிடல் அண்டு கவுண்டீஸ் வங்கிக்கும் கார்டனுக்கு மிடையேயான வழக்கு (1903. A. C. 240). ஆனால் அவற்றில் செய்யப்படும் மேற்குறிப்புகளில் ஏதேனும் ஏமாற்றம் அல்லது மோசடி நிகழ்ந்தால், அவற்றிலிருந்து வங்கிகளைக் காப்பாற்றும் பொருட்டு, அவை காசோலைகளாகவும் கருதப்பட்டு ஏற்கப்படுகின்றன. எனவே, சாதாரண காசோலைகளுக்குப் பொருந்துகிற 85-ம் பிரிவானது, உரிமைக்கேட்பு வரைவுகளின் செலுத்தத்திற்கும் பொருந்துவதாகச் செய்திருக்கின்றது.

### குறியிடல் (Marking) அல்லது சுருக்கொப்பமிடல் (Initialling)

காசோலை ஒன்று குறியிடப்பட்டாலும் அல்லது சுருக்கொப்பமிடப்பட்டாலும், அதன் பொருள் என்னவென்றால், வங்கியின் கைவிலுள்ள வரைபவரின் பணத்தின் மீது நல்ல எண்ணத்துடன் அது வரையப்படுகிறது என்பதாகும்.

**தேவைப் பெயரவர் (Drawee in case of need)**

ஒரு சீட்டிலோ அதன் மீதான எந்த ஒரு மேற்குறிப்பிலோ பெயரவரின் பெயருடன் கூட, வேறெந்த ஒரு நபரின் பெயரும் தரப்பட்டிருப்பின், அஃதாவது தேவைப்பட்டால் அவரை நாடலாம் என்பதற்காக அவ்வாறு குறிக்கப்பட்டிருப்பின் அத்தகைய நபர், "தேவைப் பெயரவர்" என்று அழைக்கப்படுவார். ஆங்கிலச் சட்டத்தில் "தேவைப் படுங்கால் குறிக்கப் படுபவர்" என்று அவர் அழைக்கப்படுகிறார். சீட்டானது ஏற்கப்படாமல் போனாலோ வழக்கமான முறைப்படி செலுத்தப்படாமற் போனாலோ, எவரை நாடவேண்டுமென வரைபவரோ, மேற்குறிப்பாளரோ குறிக்கின்றாரோ அந்தப் பெயரைச் சீட்டில் எழுதிவிடுவார்கள். இதில் ஆங்கிலச் சட்டத்திற்கும் இந்தியச் சட்டத்திற்கும் சில வேறுபாடுகள் இருக்கின்றன. தேவைப் பெயரவரை அணுகுவது, ஆங்கிலச் சட்டத்தின்படி, விருப்பத் தேர்வுக்குரியது. ஆனால் இந்தியச் சட்டப்படி, அது ஏற்புக் காயினும் சரி, அல்லது தேவைப்படுங்கால் பெயரவருக்குச் செலுத்தப் படுவதற்காயினும் சரி உடைமையுரிமையர் அச்சீட்டை முன்னிடச் செய்தல் வேண்டும். இல்லையெனில் உடைமையுரிமையருக்கு எவ்விதத் தீர்வழியும் கிடையாது. தேவைப் பெயரவர் மதிப்பு மறுத்தாலன்றி ஒரு சீட்டை மதிப்பு மறுக்கப்பட்டதாகச் சொல்ல முடியாது என்று பிரிவு 115 கூறுகிறது. இன்னொரு வேறுபாடு என்ன வென்றால், ஆங்கிலச் சட்டத்தின் படி, தேவைப்படுங்கால் குறிப்பிடப்படுபவரால் ஏற்கப் படுவதற்கு முன்பு அல்லது செலுத்தப் படுவதற்கு முன்பு, ஒரு சீட்டை மறுத்துரை செய்ய வேண்டும். ஆனால், இந்தியச் சட்டத்தின்படி, முன்னரே மறுத்துரை செய்ய வேண்டுமென்பது தேவையில்லை.

ஏற்பு செய்தல் : (Acceptance) சீட்டொன்றை வழங்கியதற்குப் பின்பு, அதன்உடைமை உரிமையர், வரைபவரின் கட்டளையை நிறைவேற்ற பெயரவர் சித்தமாக உள்ளாரா என்பதைக் கண்டறிவதற்காக அதை ஏற்பு செய்வதற்காக பெயரவருக்கு முன்னிட வேண்டும். பெயரவர் வரைபவரின் கட்டளையை ஏற்று நடப்பதற்கு இசைந்தால், அவர் அச்சீட்டை ஏற்பு செய்வதாகப்பொருள். அதை அவர் வெறுமனே சீட்டில் கையொப்பமிடுவதன் மூலமோ, "ஏற்கப்பட்டது" (Accepted) என்னும் சொல்லைச் சேர்த்தெழுதிக் கையொப்பமிடுவதன் மூலமோ தெரிவித்தல் ஆகும்.

பிரிவு 7 ஆனது, பின் வருமாறு கூறுகிறது: "பெயரவர் சீட்டின் மீதோ சீட்டு பல பகுதிகளாக இருப்பின், அவற்றில் ஒரு

பகுதியின் மீதோ தனது இசைவைக் கையொப்பமிட்டு அதன் உடைமை உரிமையருக்கு அவரது சார்பு பெற்ற யாதொரு வருக்கோ அதை ஒப்படைத்தாலோ அல்லது அவ்வாறு கையொப்ப மிட்டதைப் பற்றி அவருக்கு அறிவிப்புத் தந்திருந்தாலோ அவர் ஏற்பவர் என்று அழைக்கப்படுகிருர்."

எனவே செல்லுநிலேயாகும் ஓர் ஏற்பு செய்தலுக்குப் பின் வரும் கட்டுவரம்புகள் நிறைவேற்றப்பட்டிருத்தல் வேண்டும்.

1. அது எழுத்து மூலமாக இருக்க வேண்டும். ஆனல் அதில் பெயரவரின் இசைவைக் குறிக்கும் எந்த வார்த்தைகளும் அடங்கியிருத்தலாம். வெறுமனே கையொப்பமிட்டாலும் போது மானதே. ஆனல் பொதுவாக "ஏற்கப்பட்டது" என்னும் சொல்லேச் சீட்டின் முகப்பின்மீது குறுக்காக எழுதுவது வழக்கம்.

2. அதை பெயரவர் கையெழுத்திடல் வேண்டும். வெறும் வாய்மொழி வழி (Oral) ஏற்பு செய்தல் போதுமானதன்று. எனவே, நடத்தையின் மூலம் வாய்மொழியாகத் தெரிவிக்கின்ற ஏற்பானது, செல்லுநிலேயானதன்று. (ஜெகஜீவன் மாவ்ஜி வித்லா னிக்கும் ராஞ்சோத்தாஸ் மேகாஜிக்கும் இடையேயான வழக்கில் (1954) (S. C. J. 626).

3. ஏற்பும் கையொப்பமும் சீட்டின் மீதுதான் இருக்க வேண்டும். (முகப்பிலேனும் சரி அல்லது பின்புறத்திலேனும் சரி)

4. சீட்டை ஒப்படைப்பு செய்வதன்மூலம் ஏற்பை முற்றுப் பெறச் செய்ய வேண்டும்.

5. பெயரவர் அல்லது அவர்கள் பலராயின் அவர்களுள் சிலர் அல்லது அனைவரும், தேவைப் பெயரவர் அல்லது மதிப்பு தருவதற்காக ஏற்பவர் (Acceptor for honour) ஆகிய ஒருவர் மட்டுமே ஏற்பைச் செய்ய இயலுமே தவிர ஏனைய மற்ற எவரும் அல்லர் (பிரிவு 33).

6. பெயரவர்கள் பலராக இருப்பின் அவர்களில் ஒருவர் மட்டும் ஏற்பு செய்யின், அது மற்றவர்களால் ஏற்பு செய்யப் பட்டதாக ஆகாது. ஆனல் அவர்கள் கூட்டாளிகளாக இருந் தாலோ, ஏற்பு செய்கிறவர் மற்றவர்களின் முகவராக இருந் தாலோ அப்போது அது ஏற்பு செய்யப்பட்டது ஆகும். பெய ரவர்கள் அனைவராலும் சீட்டானது ஏற்கப்படாதபோது, ஏற் பானது கட்டுவரம்புக்குட்பட்டதாகும். அதன் உடைமை யுரிமையர் அதை ஏற்க வேண்டும் என்பது அவசியமன்று.

7. ஏற்பானது முழுமையானதாகவும் நிபந்தனையற்றதாக வும் இருத்தல் வேண்டும். கட்டுவரம்புடன் கூடிய ஓர் ஏற்பை இசைந்தேற்க, மாற்றுச் சீட்டை வைத்திருக்கும் ஒருவர் கட்டுப் பட்டவரல்லர்.

அஃதாவது (1) செலுத்தமானது ஒரு நிகழ்வின்போது என அஃது அறிவிக்கின்றபோது.

(2) செலுத்தப்பட வேண்டிய தொகையின் ஒரு பகுதியை மட்டுமே செலுத்த அது மேற்கொள்கிறபோது.

(3) இடத்தைக் குறித்து அது குறிப்பாகச் சொல்கிறபோ து

(4) சீட்டில் காணப்படாத காலத்தைக் குறித்து அது குறிப் பாகச் சொல்கிறபோது.

(5) பெயரவர் கூட்டாளிகளாக இல்லாதிருந்து அவர்களுள் சிலர் அதை ஏற்கும்போது.

ஆக இப்படிப்பட்ட நிலைகளில் அவர் அவ்வாறு ஏற்கக் கட்டுப் பட்டவரன்று. அப்படிப்பட்ட கட்டுவரம்புடன் கூடிய ஒரு சீட்டை, உடைமையுரிமையர் ஏற்கிறபோது, அதற்கோர் முந்திய தரப்பினர்களின் இசைவைப் பெறுதபோது, அவர்களுக்கெதிராகத் தனக்குள்ள உரிமைகளை அவர் இழந்து விடுகிறுர் (பிரிவு 86). சீட்டொன்றை ஏற்குமாறு மோசடி வழியால் ஏற்பவரானவர் தூண்டப்பட்டால், அவர் உரிய முறை உடைமையுரிமைய ருக்குத்தான் கடப்பாடுடையவரே அன்றி மற்ற வழியில் அதை உடைத்தாயிருப்பவர்களுக்கன்று. (எரஸ்பிக்கும் மூருக்கும் இடை யேயான வழக்கு (1940) I.K.B. 278.)

ஏற்புக்காக முன்னிடல் : (Presentment for Acceptance)

ஒரு மாற்றுச் சீட்டானது அதைக் கண்டதற்குப் பிறகு (After sight) செலுத்தப்பட வேண்டியதாகவோ அல்லது ஏற்புக் காக முன்னிடப்பட வேண்டுமெனச் சொல்லப்பட்டிருந்தாலோ பெயரவரின் இருப்பிடம் அல்லது அலுவலக இடம் தவிர்த்த வேறு எங்கேனும் செலுத்தப்பட வேண்டியது என்றோ இருப்பின், அதை ஏற்புக்காக முன்னிடச் செய்ய வேண்டும். முன்னிடப் படுவதற்கு காலத்தையோ இடத்தையோ அதில் குறித்துரைக்கப் படவில்லை என்ருல், அது வரையப்பட்டதற்குப் பின் தகுமான காலத்திற்குள் ஒரு அலுவல் நாளில் அலுவல் நேரத்தில் பெயர

வரிடம் அது முன்னிடப்பட வேண்டும். ஏற்புக்கு உரிமையுடன் கேட்கக்கூடிய தகுதிபெற்ற ஒரு தரப்பினர் அவ்வாறு அதை முன்னிடவில்லையெனில், அப்படித் தவறி விடுகிற நபருக்கு எந்தத் தரப்பினரும் கடப்பாடுடையவர் அல்லர். சீட்டானது கூட்டாளிகள் அல்லாத இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வரையப்படுபவர்களுக்கு எழுதப்பட்டிருப்பின், அவ்வனைவருக்கும் அது முன்னிடப்பட வேண்டும். ஆனால் அவர்கள் அனைவருடைய சார்பாகவும் எவரொருவரேனும் ஏற்பு செய்ய அங்கீகாரம் பெற்றிருப்பின், அப்போது அவர் அதை ஏற்கலாகும். பெயரவர் இறப்பின், அவரது சொந்தத் தெரிவாளரிடம் (Personal representative) சீட்டை முன்னிடலாகும். பெயரவர் நொடிப்பு நிலையராகிவிட்டால் (Bankrupt) உரிமை மாற்றம் பெறு நீதிமன்ற அலுவலர் (Official Assignee) வழக்குறு சொத்துப்பேணுநர் (Official Receiver) ஆகியவரிடம் சீட்டை முன்னிடலாம். சீட்டில், முன்னிடப்பட வேண்டிய இடங்குறித்து ஏதேனும் குறிப்பு இருந்தால், அந்த இடத்தில் அது முன்னிடப்பட வேண்டும். தகுமான தேடுதலுக்குப்பின் பெயரவர் காணப்படவில்லையெனில் சீட்டு மதிப்பு மறுக்கப்படுகிறது என்று பொருள்.

அதற்கென ஒரு வழக்காறோ உடன்பாடோ இருக்குமானால், அப்போது முன்னிடலைப் பதிவு அஞ்சல்வழி செய்தல் கூடும் (பிரிவு 61).

கண்டதற்குப்பின் நிச்சயமானதொரு காலத்திற்குள் செலுத்தப்படவேண்டிய ஒரு கடனுறுதிச் சீட்டும் அவ்வாறே காண்பதற்கு முன்னிடப்பட வேண்டும். அது தவறிவிட்டால், தவறி விடுகிற நபருக்கு எந்தத் தரப்பினரும் கடப்பாடுடையவர் அல்லர் (பிரிவு 62).

பிரிவு 63-ன்படி உடைமையுரிமையர் தேவைப்பட்டால் தான் ஏற்கலாமா வேண்டாமா என்று தீர்மானிப்பதற்கு பெயரவருக்குப் பொதுவிடுமுறை நாட்கள் தவிர்த்து 48 மணி நேரத்தை மேற்கொண்டு அனுமதிக்க வேண்டும்.

**ஏற்புக்காக முன்னிடப்படுவதை எப்போது தவிர்க்கலாம் ?**

1. தகுமான அளவில் தேடியும் பெயரவர் காணப்படாத போது,

2. பெயரவர் ஒப்பந்தம் செய்து கொள்ள தகுதியற்றவராயின்,

3. பெயரவர் ஒரு கற்பனை நபராக இருந்தால்,

4. பெயரவர் நொடிப்பு நிலையராகிவிட்டால் அல்லது இறந்து விட்டால்,

5. ஏற்புக்காக முன்னிடப்படுவது ஒழுங்கற்றதாக இருந்தாலும், அந்த ஒழுங்கீனத்தைத் தவிர மற்ற எந்த ஒரு காரணத்தின்மீதும் ஏற்பு மறுக்கப்படுகையில்.

ஆக, இப்படிப்பட்ட நிலைகளில் ஏற்புக்காக முன்னிடப்படுவதைத் தவிர்த்தல் கூடும்.

**ஏற்காமை மூலம் மதிப்பு மறுத்தல் (Dishonour by non acceptance)**

பின்வரும் நிலைகளில் மாற்றுச் சீட்டொன்று ஏற்காமை மூலம் மறுக்கப்பட்டதாகச் சொல்லப்படும்.

1. பெயரவரோ அல்லது கூட்டாளிகள் அல்லாத பெயரவர்கள் பலருள் ஒருவரோ, சீட்டை ஏற்புச் செய்ய உரிய முறையில் கேட்டுக் கொள்ளப்பட்டதன் பேரில் ஏற்புசெய்வதில் தவறுகிறபோதும்,

2. ஏற்புக்காக முன்னிடப்படுவதைத் தவிர்க்கும்போதும், சீட்டு ஏற்கப்படாதபோதும்,

3. பெயரவர் ஒப்பந்தம் செய்யத் தகுதியற்றவராக இருக்கும்போதும்,

4. ஏற்பானது கட்டுவரம்புக்குட்பட்டதாகவும் இருப்பின், மாற்றுச் சீட்டு மதிப்பு மறுக்கப்பட்டதாகப் பொருள்.

**மதிப்புத் தருவதற்காக ஏற்பவர் (Acceptor for Honour)**

ஏற்காமைக்காகவோ, மேம்பட்ட பொறுப்புறுதி (Better Security) தேவையென்பதற்காகவோ, மாற்றுச் சீட்டு ஒன்று மறுப்புக் குறிப்பு அல்லது மறுத்துரை செய்யப்பட்டிருந்து, அதற்கும் மேலாக யாதொரு நபரும் அதை ஏற்பு செய்தால், அதாவது வரைபவருக்கு மதிப்புத் தருவதற்காக ஏற்பு செய்தால், அல்லது மேற்குறிப்பாளர்களில் எவரொருவரது மதிப்புக்காகவும் ஏற்பு செய்தால், அந்த நபர், "மதிப்புத் தருவதற்காக ஏற்பவர்" என்று அழைக்கப் படுகிறார் (பிரிவு-7). அதன் மூலம் அவர் தானாகவே சீட்டுக்கு ஒரு தரப்பினராக ஆகிவிடுகிறார். அதாவது முதலில் பெயரவர், ஏற்க மறுத்தால் அல்லது போதிய பொறுப் புறுதிதர மறுத்தால், அவர் அவ்வாறு ஆகிவிடுகிறார்.

மதிப்புத் தருவதற்காக ஏற்பு செய்வதற்குப் பின் வரும் கூறுகள் அமைந்திருத்தல் வேண்டும் :

(1) சீட்டானது ஏற்புக்காக மறுப்புக் குறிப்புரை செய்யப் பட்டிருக்க வேண்டும், அல்லது, மேம்பட்ட பொறுப்புறுதி வேண்டி மறுத்துரை செய்யப்பட்டிருக்க வேண்டும்.

(2) மதிப்புத் தருவதற்காக ஏற்கின்ற நபரானவர் அந்த முறையாவணத்தின் கீழ் ஏற்கெனவே கடம்பட்டவராக இருத்தல் கூடாது.

(3) ஏற்பு செய்வதென்பது, உடமையுரிமையரின் இசைவுடன் செய்யப்பட வேண்டும்.

(4) அதைச் சீட்டின்மேல் எழுதுவதன் மூலம் செய்யப்பட வேண்டும்.

(5) மறுத்துரையின் கீழ் மறுத்துரை செய்யப்பட்ட சீட்டை வரைபவருக்கு மதிப்புத் தருவதற்காக அல்லது குறிப்பிட்ட ஒரு மேற்குறிப்பாளருக்கு மதிப்புத் தருவதற்காக, அல்லது பொதுவாக மதிப்புத்தருவதற்காத் தான் ஏற்பதாகத் தன் கைப் பட எழுதி அறிவிப்பதாக இருக்க வேண்டும்.

எந்த நபருடைய மதிப்புக்காக ஏற்கப்படுகிறது என்பது குறிக்கப்படவில்லையெனில், வரைபவரின் மதிப்புக்காகவே ஏற்கப் படுவதாகக் கொள்ளப்பட வேண்டும். (பிரிவுகள் 108 முதல் 110 வரை)

**அவ்வாறு ஏற்பவரது கடப்பாடு**

பின்வரும் கட்டுவரம்புகள் நிறைவேற்றப்பட்டால் தான். அவரைக் கடப்பாடுடையவராக்க முடியும் :

1. சீட்டானது முதிர்ச்சியுற்றதும். பெயரவர்பால் செலுத் தத்திற்காக முன்னிடப்பட்டிருக்க வேண்டும்.

2. அவரால் அது மதிப்பு மறுக்கப்பட்டிருக்க வேண்டும்.

3. அத்தகு மதிப்பு மறுப்புக்காகக் குறிப்புரை அல்லது மறுத்துரை செய்யப்பட்டிருக்க வேண்டும்.

**பெறுபவர் (Payee)**

எவருக்கு அல்லது எவரது கட்டளை பெற்றவருக்குப் பண மானது செலுத்தப்படுவதற்கு முறையாவணம் நெறிப்படுத்து கிறதோ, அம் முறையாவணத்தில் பெயர் சொல்லப்பட்ட அந் நபர்தான் 'பெறுபவர்' ஆவார் (பிரிவு 7.). இங்கே 'பெறுபவர்

என்பது மேற்குறிப்பாளியைக் குறிப்பது அன்று. மாறாக, வரைபவரால் சீட்டில் குறிப்பிட்டவரை மட்டுமே அவ்வாறு குறிக்கும். ஆனால் நடைமுறையில் இந்த வேறுபாடு காணப்படுவதில்லை. காரணம் பிரிவு 16 (2) ஆனது மேற்குறிப்பளிக்கும் இந்தச் சட்டம் பொருந்தும் என்று வகை செய்துள்ளதுதான்.

பெறுபவர் ஒரு கற்பனை நபராகவோ உண்மையில் அப்படியொருவர் இல்லாதவராகவோ இருப்பின் அப்போது கொணர்பவருக்குச் செலுத்தப்படவேண்டிய சீட்டாக அதைக் கருதிக் கொள்ள வேண்டும். அது போன்றே இருக்கின்ற நபர் ஒருவருக்கு வரையப்பட்டதாக இருப்பினுங்கூட அப்படிச் சொல்லப்பட்ட வரை வரைபவர் தன் மனத்தில் கருதியிருக்கவில்லையானால், அது கற்பனை நபருக்குச் செய்யப்பட்டதாகவே கருதப்படும். (பாங்க் ஆஃப் இங்கிலாந்துக்கும் வாக்லியானோ பிரதர்சுக்கும் இடையேயான வழக்கு (1891) A.C. 107.)

வரைபவர் பெறுபவரைத்தான் கருதியிருந்தார் என்றாலும், அது ஒரு மோசடியினால் தூண்டப்பட்டு அவர்தான் அவ்வாறு செய்திருப்பினுங்கூட, பெறுபவர் கற்பனை நபரல்லர். (நார்த் அண்டு சௌத் வேல்ஸ் பாங்குக்கும் மாக்பெத்துக்குமிடையே (1908) A.C. 137.)

ஒரு மாற்று முறையாவணத்தை இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட பெறுபவர்களுக்கோ, இரண்டு பேர்களாயின் ஒருவருக்கோ, பலராயிருப்பின் சிலருக்கோ செலுத்தப்படுமாறு செய்யப்படல் கூடும் பிரிவு 13 (2).

### மதிப்புத் தருவதற்காகச் செலுத்துபவர் (Payer for Honour)

நபரொருவர் தலையிட்டு, மதிப்புத் தருவதற்காகச் சீட்டொன்றை ஏற்பது போன்றே, செலுத்தப்படாமைக்காக மதிப்பு மறுத்துரைக்கப்பட்ட சீட்டொன்றை, அதன்மீது கடப்பாடுடைய எவரொருவரது மதிப்புக்காகவும் செலுத்தலாம்; அப்படிப்பட்ட செலுத்தம் தான் மதிப்புத் தருவதற்கான செலுத்தம் என்றும், அவ்வாறு செலுத்துகிற நபரை மதிப்புத் தருவதற்காகச் செலுத்துபவர் என்றும் அழைக்கப்படுகிறது.

### அவ்வாறு செலுத்தப்படுவதற்குத் தேவையான கூறுகள்

(1) சீட்டானது செலுத்தாமைக்காக மறுப்புக் குறிப்போ மறுத்துரையோ செய்யப்பட்டிருக்க வேண்டும்.

(2) எந்த நபரும் அஃதாவது ஏற்கெனவே அம் முறையா வணத்தின் கீழ் கடப்பாடுடையவர் உட்பட எவரொருவரும் செலுத்தத்தைச் செய்தல் ஆகும்.

(3) செலுத்தக் கடப்பாடுடைய ஒரு தரப்பினரின் மதிப்புக் காகச் செலுத்தப்படுவதாக அது இருக்க வேண்டும்.

(4) மதிப்பு மறுப்புக் குறிப்புச் சான்றுதி அலுவலரின் **(Notary Public)** முன்பு எந்தத் தரப்பினருக்காகச் செலுத்தம் செய்யப்படுகிறது என்பதைச் செலுத்துகிற நபரானவர் அறிவிக்க வேண்டும்.

(5) அப்படி அறிவிப்பதை அந்த அலுவலர் குறித்து வைத்துக் கொள்ள வேண்டும் (பிரிவு 113).

அவ்வாறு செலுத்துகிற நபரானவர் எவரது மதிப்பிற்காகச் செலுத்தினுரோ அவரிடமிருந்து, எல்லாப் பணத்தையும் வட்டியுடனும் மற்றும் அதற்காகத் தனக்குற்ற செலவுகளுடனும் சேர்த்து, திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

**உடைமை உரிமையர் (Holder)**

ஒரு கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலையின் உடைமையுரிமையர் என்ருல் அதைத் தன் சொந்தப் பெயரிலேயே உடைத்தாயிருப்பதற்கும், அதற்குத் தரப்பினர்களான வர்களிடமிருந்து பணத்தைப் பெறுவதற்கும் அல்லது அதன்மீது வரவேண்டிய தொகையை திரும்பப் பெறுவதற்கும் உரிமைத் தகுதி பெற்ற எந்த ஒரு நபரும் என்று பொருள். உறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ, காசோலையோ இழக்கப்படின் அல்லது அழிக்கப்படின், அத்தகு இழப்பு அல்லது அழிப்பின்போது அவ்வாறு உரிமைத் தகுதி பெற்றவர் அதன் உடைமை உரிமையரே (பிரிவு 8).

எனவே, உடைமையுரிமையர், முறையாவணத்தினை உடைத் தாயிருப்பதுடன் தனது சொந்தப் பெயரிலேயே பணத்தைத் திரும்பப் பெறும் உரிமையையும் பெற்றிருக்க வேண்டும். வெறும் உடைமையை மட்டும் பெற்று, உரிமையைப் பெற்றிரா தவர்கள், உடைமை உரிமையர் ஆகார். மேலும் முறையா வணத்தின்கீழ் பணம் பெற உண்மையில் உரிமைத் தகுதி பெற்ற வராகவும் ஆனுல் அவரது பெயர் அதில் காணப்படாததாகவுமுள்ள நபரை இந்த வரைவுரை நீக்கி விடுகிறது. காரணம் மற்ருெருவரின் பெயரில் செய்யும் அத்தகைய காரியங்கள் **(Benami transactions)** மாற்று முறையாவணச் சட்டத்திற்குப் பொருந்துவதில்லை.

ஆனால் அதே நேரத்தில் சட்டபூர்வமாக வருந்துறுகிற உரிமைகளை இது பாதிப்பதில்லை. எனவே சட்டமுறைத் தெரிவாளர் (Legal representative) அல்லது மீளா உரிமை மாற்றம் பெறுநீதிமன்ற அலுவலர் அல்லது வழக்குறு சொத்துப் பேணுநர் இதனால் பாதிக்கப்படுவதில்லை.

உரியமுறை உடைமையுரிமையர் (Holer in due Course)

மறுபயன் தந்து, (கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாயின்) கடனுறுதிச் சீட்டு மாற்றுச் சீட்டு அல்லது காசோலையினை உடைத்திருப்பவராகவோ (கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாயின்) பெறுபவராகவோ மேற்குறிப்பாளியாகவோ அதாவது அதில் குறிப்பிடப்பட்ட தொகை செலுத்தப்படவேண்டியாவ்தற்கு முன்பும், எவரிடமிருந்துதான் உரிமைத் தொகுதி பெற்றடைந்தாரோ அந்த நபரின் உரிமைத் தகுதியில் எந்தக் குறைபாடும் இருப்பதாகக் கருதத் தனக்குப் போதுமான காரணமில்லாதவராகவுமுள்ள எந்த ஒரு நபரும் உரிய முறை உடைமை உரிமையர் (Holder in due Course) ஆவார். உடைமை உரிமையர் என்பவர் வேறு; உரிய! முறை உடைமை உரிமையர் என்பவர் வேறு, உடைமை உரிமையர் எல்லாம் பின்னால் சொல்லப்பட்டவராக இருப்பதில்லை. உரிய முறை உடைமை உரிமையராக ஆகிறவர் மட்டுமே, அவருக்கு முந்தையவர்களின் உரிமைத் தகுதியில் என்ன குறைபாடுகள் இருந்தாலும், அவற்றிலிருந்து பாதுகாக்கப் படுகிறார்.

உரிய முறை உடைமை உரிமையர் பின்வரும் கட்டுவரம்புகளை நிறைவேற்றியாக வேண்டும் :

(1) முறையாவணத்தில் சொல்லப்பட்ட தொகை செலுத்தப்பட வேண்டியதாவதற்கு முன்பு, பிரிவு 8-ன் பொருளின்படி அவர் உடைமை உரிமையராக இருக்க வேண்டும். அதாவது முறையாவணத்தின் முதிர்ச்சியுறலுக்கு முன்பு அவ்வாறு ஆகியிருத்தல் வேண்டும்.

(2) மறுபயன் தந்து உடைமை உரிமையராக அவர் ஆனவராக இருக்க வேண்டும். அஃதாவது மோசடி அல்லது சட்ட முரணானது அல்லாத மதிப்புறு மறுபயன் தந்து, தான் பெறுபவராகவோ மேற் குறிப்பாளியாகவோ ஆகியிருத்தல் வேண்டும்.

(3) எவரிடமிருந்து தான் உரிமைத் தகுதி பெற்றாரோ அந் நபரின் உரிமைத் தகுதியில் குறைபாடு எதுவும் இருப்பாகத் தான் கருதுவதற்கு இடமில்லாத நிலையில், அவர் உடைமை

உரிமையராக ஆகியிருக்க வேண்டும். அதாவது தனக்கு எவர் மாற்றித் தந்தாரோ அவரது உரிமைத் தகுதியில் உள்ள குறைபாட்டை அவர் அறியாதவராக இருந்திருக்க வேண்டும். எனவே அதற்கு முந்தையவர்களின் உரிமைத் தகுதியில் குறைபாடு எதையும் அவர் அறிவாராயினும், அதனால் அவர் உரிய முறை உடைமை உரிமையராக ஆவது அற்றுப் போவதில்லை.

இந்தியச் சட்டப்படி, அவர் முறையாவணத்தை எடுத்துக் கொள்வதில் மட்டும் நேர்மையாக இருப்பதுடன் அமையாது, உரிமைத் தகுதியில் எந்தக் குறைபாடும் இல்லை என்பதைத் தனக்குத் தானே அவர் உறுதிப்படுத்திக் கொள்ளுதலும் தேவை.

இங்கிலாந்துச் சட்டத்தின்படி, முறையாவணத்தை நல்ல எண்ணத்துடன் எடுத்துக் கொண்டாலே போதுமானதாகும். அஃதாவது மதிப்புத் தந்து, உரிமைத் தகுதியிலுள்ள எந்தக் குறைபாட்டையும் பற்றி அறியாமல் அவ்வாறு செய்தால் போதுமானது. ஆனால் மோசடி, வன்முறை, அச்சமுறுத்தல் போன்ற சட்ட முரணான வழிகளாலோ சட்டத்திற்கொவ்வாத மறுபயனைத் தந்தோ பெறப்படும் உரிமைத் தகுதியைத்தான் குறைபாடுடையது எனச் சொல்லப்படுகிறது.

பிரிவு 53-ன் படி, உரியமுறை உடைமை உரிமையரிடமிருந்து உரிமைத் தகுதி பெறுகிற மாற்று முறையாவணமொன்றன் உடைமை உரிமையர் ஒருவர், உரியமுறை உடமை உரிமையரின் உரிமைகளையும் பெற்றவராகிறார். அஃதாவது மேற்குறிப்பாளி ஒருவர்கூட, அவர் மறுபயன் செலுத்தவில்லை யென்றாலும். உரியமுறை உடமை உரிமையரது உரிமைகளைப் பெறுவார். ஆனால் அதற்கு மேற்குறிப்பாளியானவர் உரியமுறை உடமையுரிமையராக ஆனவராக இருத்தல் வேண்டும்.

### மதிப்புத் தந்ததன் மூலம் உடமை உரிமையரானவர் (Holder for Value)

இவர் உரியமுறை உடைமை உரிமையரிலிருந்து வேறுபட்டவர். எந்தச் சீட்டுக்கும் ஏதாவதொரு காலத்திலேனும் தன்னாலோ மற்றொருவராலோ கூட மதிப்பைத் தந்திருந்து அதைப் பெற்றிருப்பின் அப்போது மதிப்புத் தந்ததன் மூலம் சீட்டின் உடைமை உரிமையர் ஆனவர் என்று பொருள்.

### உரியமுறை செலுத்தமாவது (Payment in due Course)

உரியமுறையில் செலுத்தமாவது என்றால்,

(i) முறையாவணத்தின் மேற்போக்கான பாங்கிற் கேற்ப வும்,

(ii) நல்ல எண்ணத்துடனும்

(iii) கவனமின்மை இல்லாமலும்

(iv) அதை உடைத்தாயிருக்கிற எந்த ஒரு நபருக்கும் மற்றும்

(v) அதில் குறிப்பிடப்பட்டுள்ள தொகையின் செலுத் தத்தைப்பெற அவர் உரிமைத்தகுதி பெற்றவர் அல்லர் என்று கருதுவதற்குத் தகுமான காரணத்தை வழங்காத சூழ்நிலைகளின் கீழ்ச் செலுத்தப் படுவதாகும் என்று பொருள் (பிரிவு 10).

முறையாவணமானது கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாயிருப்பின் அல்லது வெற்று மேற்குறிப்பு (Blank Endorsement) செய்யப்பட்டிருப்பின், அதன் மீது எல்லாத் தரப்பினர்களுக்குமான கடப்பாட்டிலிருந்து அதனை எழுதித் தருபவரோ, மேற்குறிப்பாளரோ விடுவிக்கப்படுபவர் ஆகிறார். எப்போது எனில் அவ்வாறு எழுதித் தருபவரோ, மேற்குறிப் பாளரோ அம் முறையாவணத்தின் மீது வந்து சேரவேண்டிய தொகையை உரியமுறையில் செலுத்தம் செய்கிறபோதும் விடுவிக்கப்பட்டவராவார்.

**செலுத்தாமைவழி மதிப்பு மறுத்தல் (Dishonour by non Payment)**

"உறுதிச் சீட்டை எழுதித்தருபவரோ, மாற்றுச் சீட்டை ஏற்பவரோ, காசோலையின் பெயரவரோ செலுத்துமாறு கேட்கப் பட்டதன்பேரில் செலுத்தத்தவறினால், அதைச் செலுத்தாமை யினால் அக்கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலை யானது மதிப்பு மறுக்கப்பட்டதாகச் சொல்லப்படும்" (பிரிவு 92).

**உள்நாட்டு முறையாவணம் (Inland Instrument)**

"ஒரு மாநிலத்தில் வரையப்பட்ட அல்லது எழுதித்தரப் பட்ட ஒரு மாநிலத்தில் குடியிருக்கின்ற எந்த ஒரு நபருக்கும் வரை யப்பட்டதாக அல்லது அம் மாநிலத்தில் செலுத்தப்பட வேண்டிய தாகச் செய்யப்படுகின்ற ஒரு கடனுறுதிக் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலை உள்நாட்டு முறையாவணம் என்று கொள்ளுதல் வேண்டும்" (பிரிவு. 11).

**அயல்நாட்டு முறையாவணம் (Foreign Instrument)**

"அவ்வாறு வரையப்படாத எழுதித்தரப்படாத அல்லது செலுத்துமாறு செய்யப்படாத அத்தகு முறையாவணம்

ஏதொன்றையும் அயல்நாட்டு முறையாவணமாகக் கொள்ளுதல் வேண்டும்'' (பிரிவு-12).

ஆக, உள்நாட்டு முறையாவண மென்பது, பின்வரும் இருவகையினவாக இருத்தல் ஆகும்.

(1) இந்தியாவில் வரையப்பட்டு, இந்தியாவில் குடியிருக்கும் ஒரு நபருக்கு வரையப்பட்டதாக உள்ள ஒரு மாற்றுச் சீட்டு, எடுத்துக்காட்டாக, சென்னை வியாபாரி ஒருவர் கல்கத்தா வியாபாரிக்கு வரையும் ஒரு மாற்றுச் சீட்டு. அது இந்தியாவிலோ வேறெங்குமோ செலுத்தப்படுவதாக இருக்கலாம்.

(2) இந்தியாவில் வரையப்பட்டு, இந்தியாவிலேயே செலுத்துமாறு செய்யப்படுவது, பெயரவர் இந்தியாவுக்கு வெளியே குடியிருப்பவராகவும் இருக்கலாம். எடுத்துக் காட்டாக சென்னை வியாபாரி ஒருவர் லண்டனிலுள்ள நபரொருவருக்கு வரைவது, அது கல்கத்தாவில் செலுத்தப்படுவதாக இருக்கலாம்,

அயல்நாட்டு முறையாவணங்களென்பவை ஐந்து வகைப் பட்டவையாகும். அவை வருமாறு :

(1) இந்தியாவில் வரையப்படுவது. அஃதாவது இந்தியாவுக்கு வெளியிலே வாழ்கிற நபருக்கு வரையப்பட்டு இந்தியாவிற்கு வெளியிலே செலுத்தப்படுமாறு செய்யப்படுவது.

(2) இந்தியாவிற்கு வெளியே வரையப்பட்டு இந்தியாவில் செலுத்துமாறு செய்யப்படுவது.

(3) இந்தியாவிற்கு வெளியே வரையப்பட்டு இந்தியாவிற்கு வெளியே குடியிருக்கிற எந்தவொரு நபருக்கும் வரைவது.

(4) இந்தியாவிற்கு வெளியே வரையபட்டு இந்தியாவில் குடியிருக்கிற ஒரு நபருக்கு வரையப்படுவது.

(5) இந்தியாவிற்கு வெளியிலே வரையப்பட்டு இந்தியாவிற்கு வெளியிலே செலுத்தப்படுமாறு செய்யப்படுவது.

இவ்வகை அயல்நாட்டு முறையாவணங்கள் தொகுப்புகளாகவே வரையப்படும். ஏனெனில், இழப்பு ஏற்படுவதைத் தடுப்பதற்காகவே அவ்வாறு செய்யப்படுகிறது.

**கட்டளை பெற்றவருக்குச் செலுத்தமாவது (Payable to order)**

ஒரு கடனுறுதிச் சீட்டு மாற்றுச் சீட்டு அல்லது காசோலையானது கட்டளை பெற்றவருக்கு, அவ்வாறு செலுத்தப்பட

வேண்டுமெனப் தெரிவிக்கின்ற அல்லது குறிப்பிட்ட நபருக்குச் செலுத்தப்பட வேண்டுமெனத் தெரிவிக்கின்றவாறு செலுத்தப்பட வேண்டிய ஒன்ருகும்; மற்றும் உரிமை மாற்றமடைவு செய்வதைத் தடைசெய்கின்ற அல்லது அது மாற்றப்படக்கூடாது என்னும் நோக்கத்தைக் குறிப்பாகத் தெரிவிக்கின்ற எந்தச் சொற்களையும் கொண்டதாக அது இருப்பதில்லை. (13 (1) விளக்கவுரை (i)-ஐப் பார்க்க)

**கொணர்பவருக்குச் செலுத்தமாவது (Payable to Bearer)**

ஒரு கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலையானது கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாகிற-அவ்வாறு செலுத்தப்பட வேண்டுமெனத் தெரிவிக்கின்ற அல்லது அதன் மீதான ஒரே ஒரு அல்லது கடைசி மேற்குறிப்பு வெற்று மேற்குறிப்பாக (Blank Endrosement) இருக்கின்ற ஒன்ருகும். (பிரிவு 13 (i) விளக்கவுரை (ii))

**குறித்துரைத்த நபரின் கட்டளைப் பெற்றவருக்குச் செலுத்தமாவது (Payable to the Order of a Specified Person)**

ஒரு கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ, காசோலையோ, மூலத்திலேயோ, மேற்குறிப்பு வழியாகவோ, குறித்துரைத்த நபர் ஒருவரது கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாகத் தெரிவிக்கப்படுமிடத்தும் அவருக்கோ, அவருடைய கட்டளைப் பெற்றவருக்கோ அன்றெனத் தெரிவிக்கப்படுமிடத்துங்கூட, அது அவருக்கு அல்லது அவரது விருப்பத் தேர்வின்படி, அவரது கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப் படுவதாக ஆகும். (பிரிவு 13 (i) விளக்கவுரை (iii)-யைப் பார்க்க)

எனவே, மேற்சொன்ன விளக்கவுரைகளின்படி, ஒரு கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலையானது, "'அ' அல்லது அவரது கட்டளைப் பெற்றவருக்குச் செலுத்துக" என்ருே "'அ' வுக்குச் செலுத்துக" என்ருே எவ்வாறிருப்பினும் அது மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதாகும். ஆனுல் அதுவே, "'அ' வுக்கு மட்டுமே செலுத்துக" என்று மாற்றிக் கொடுப்பதை வரையறை செய்யுமிடத்து, அல்லது "'அ' வுக்கு மட்டுமே செலுத்துக ; மற்ற எவருக்கு மன்று" என்றிருப்பினும், மாற்றிக் கொடுக்கின்ற உரிமையானது இற்றுப்போய் விடுகிறது. எனவே 'அ' ஆனவர் மற்றொருவருக்கு இச்சட்டத்தின் கீழ் அம்முறையாவணத்தை உரிமைமாற்றிக் கொடுக்க முடியாது.

**ஆவண மாற்றுதல் (Negotiation)**

"ஒரு கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ காசோலையோ, மற்ற எந்த ஒரு நபருக்கும், அவரை அதன் உடைமைவுரிமையாக

ஆக்கும் பொருட்டு, அவருக்கு மாற்றிக் கொடுக்கப்படுகிற போது, அம் முறையாவணமானது, ஆவண மாற்றுதல் செய்யப் படுவதாகச் சொல்லப்படுகிறது" (பிரிவு 14). முறையாவண மானது கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாயின் அல்லது கடைசி மேற்குறிப்பானது வெற்று மேற்குறிப்பாக இருப்பின், அதை வெறுமனே ஒப்படைப்புச் செய்வதன் மூலம், ஆவண மாற்றுதலைச் செய்யக்கூடும் (பிரிவு 48).

### மாற்றிக் கொடுப்பதும் மீளா மாற்றுரிமை செய்வதும் (Negotiability and Assignability)

மாற்றிக் கொடுப்பதென்பது மீளா மாற்றுரிமை செய்வதி லிருந்து வேறுபட்டதாகும். சொத்து மாற்றடைவுச் சட்டத்தின் பிரிவு 130-ன்படி வழக்கு தொடர்தகு பாத்தியதை (actionable claim) ஒன்றை மாற்றிக் கொடுத்தலாகும். ஆனால் தனியான ஒரு முறையாவணத்தின் மூலம் போதிய முத்திரையொட்டி எழுத்து மூலமாகவே அவ்வாறு செய்தல் கூடும். மாற்று முறை யாவணமும் ஒரு வழக்கு தொடர்தகு பாத்தியதையாக இருப்ப தால், அந்தச் சொத்து மாற்றடைவுச் சட்டத்தின்படியே மாற்றிக் கொடுத்தல் ஏலும்; அத்துடன் இந்தச் சட்டத்தின் (மாற்று முறையாவணங்கள் சட்டம்) கீழ், மேற்குறிப்பின் வழியும் மாற்றிக் கொடுக்கலாம், ஆனால் இவ்விரண்டிற்குமிடையே ஒரு முக்கியமான வேறுபாடு உளது. அஃதாவது சொத்து மாற் றடைவுச் சட்டத்தின் 130-வது பிரிவின்கீழ், மாற்றிக் கொடுப் பதன் மூலம், மாற்றிக் கொடுக்கப்பட்டவரானவர் மாற்றிக் கொடுப்பவரது உரிமைகள் அனைத்திற்கும் உரிமைத் தகுதி பெற்றவராவார். அதுவே இம் மாற்று முறையாவணங்கள் சட் டத்தின்கீழ் மேற்குறிப்பின்வழி, மேற்குறிப்பாளியானவர் அதில் அடங்கியுள்ள சொத்தினை மட்டுமே பெறுகிறார் (பிரிவு 50). அஃதாவது, முறையாவணத்தில் குறித்துரைத்த தொகையை அதன் தரப்பினர்களிடமிருந்து திரும்பப் பெறும் உரிமைகளை மட்டுமே பெறுகிறாரே அன்றி, மூல மறுபயனின் மீதான கடனை அவர் பெறுவதில்லை.

### மேற்குறிப்புச் செய்தல் (Indorsement)

(1) ஒரு முறையாவணத்தை எழுதித் தருபவர் அல்லது அதன் உடைமை உரிமையர்

(2) ஆவண மாற்றுதலுக்காக

(3) அதன் பின்புறத்தில் அல்லது முகப்பில் அல்லது அதனுடன் இணைக்கப்பட்டுள்ள துண்டுச் சீட்டில்

(4) எழுதித் தருவோர் என்ற முறையிலல்லாமல்

(5) கையொப்பமிடுகிறபோதும் அல்லது

(6) அதே நோக்கத்திற்காக, ஒரு மாற்று முறையாவணமாக முடிக்கப்பெறக் கருதப்பட்டுள்ள முத்திரை ஒட்டிய ஒரு தாளில் கையொப்பமிடுகிறபோதோ, அதை அவர் மேற்குறிப்பு செய்வதாகச் சொல்லப்படுவதுடன் அவர் மேற்குறிப்பாளர் (Endorser) என்றும் அழைக்கப்படுகிறார் (பிரிவு 15).

இப் பிரிவிலிருந்து, மேற்குறிப்புக்கெனப் படிவம் எதுவும் தேவையில்லை என்றும், வெறும் கையொப்பமே போதுமென்றும் தெளிவாகிறது. முறையாவணத்தைக் கையொப்பமிடுகிறவர், அதை மாற்றிக் கொடுக்கக் கருதியுள்ளாரா என்பதே முக்கியமாகக் கவனிக்கத் தக்கது.

மேற்குறிப்பினை, முறையாவணத்தின் பின்புறத்திலோ, முகப்பிலோ செய்யலாம். அல்லது ஒரு துண்டுச் சீட்டை இணைத்தும் அதில் அவ்வாறு செய்யலாம். மேற்குறிப்பை, எழுதித் தருபவரோ உடைமையுரிமையரோ மட்டுமே செய்யலாம்; மற்றவர் அல்லர். ஆனால் ஒருவருக்கு மேற்பட்டவராயிருப்பின், அனைவரும் மேற்குறிப்புச் செய்திடல் வேண்டும். மேற்குறிப்பாளியால் முறையாவணம் ஒப்படைப்பு செய்யப்படும்போது தான், மேற்குறிப்பு முற்றுப் பெறுகிறது (பிரிவு 46).

பெறுபவரது பெயர் தவறாக எழுதப்பட்டிருப்பின், முறையாவணத்தில் எவ்வாறு எழுதப்பட்டுள்ளதோ அவ்வாறே மேற்குறிப்புச் செய்யப்பட வேண்டும். வேண்டுமென நினைத்தால், தனது வழக்கமான கையொப்பத்தை அவர் அத்துடன் சேர்த்துப் போடலாம். மேற்குறிப்புச் செய்ததற்குப் பின்னரும் ஆனால் அதை ஒப்டைப்புச் செய்வதற்கு முன்னரும் மேற்குறிப்பாளர் இறப்பின், அவரது சட்டமுறைத் தெரிவாளரானவர் புதிதாக ஒரு மேற்குறிப்புச் செய்து அதை ஒப்படைப்பதன் மூலம் (வெறுமனே ஒப்படைப்பது மட்டும் போதாது) மாற்றிக் கொடுப்பதைச் செல்லுநிலையானதாகச் செய்யலாம்.

இன்னொன்றையும் இங்கே கவனத்தில் கொள்ளல் வேண்டும். முற்றுப்பெற்ற முறையாவணங்கள் (Completed) மட்டுமே மேற்குறிப்புச் செய்யப்படக் கூடும் என்பதன்று, முற்றுப் பெறாத முறையாவணங்களையும் மேற்குறிப்புச் செய்யலாம் (பிரிவு 20). ஆனால் மேற்குறிப்புச் செய்வதென்பது, முறையாவணத்தில்

கண்டுள்ள தொகை முழுவதற்குமாக இருக்க வேண்டுமே யன்றி, அதன் ஒரு பகுதிக்கு மட்டுமாக இருப்பின், அது சொல்லாது.

**வெற்று மேற்குறிப்பும் முற்று மேற்குறிப்பும் (Indorsement in Blank and Indorsement in Full)**

மேற்குறிப்பாளர் தமது பெயரை மட்டுமே கையொப்பமிடில், அம் மேற்குறிப்பு 'வெற்று மேற்குறிப்பு' ஆகும். ஆனல் அவரே அதில் கையொப்பமிடுவதுடன் குறித்துரைத்த நபர் ஒருவருக்கு அல்லது அவரது கட்டளை பெற்றவருக்குச் செலுத்துமாறும் நெறிப்படுத்தியிருப்பின் அந்த மேற்குறிப்பு 'முற்று மேற்குறிப்பு' (Indorsement in full) என்றழைக்கப்படும். அவ்வாறு குறித்துரைக்கப்படும் நபர் "மேற்குறிப்பாளி" (Endorsee) என்றழைக்கப்படுவார்.

பெறுபவரின் தொடர்பாக இந்தச் சட்டத்தில் காணும் வகையங்கள், தேவையான திருத்தங்களுடன், மேற்குறிப்பாளிக்கும் பொருந்துவதாகும் (பிரிவு 16).

**தனி மேற்குறிப்பு (Special endorsement) அல்லது முற்று மேற்குறிப்புக்கு எடுத்துக்காட்டுகள் :**

1. "மணியனுக்குச் செலுத்துக."
   (ஒ-ம்) கணியன்.

2. "மணியனுக்கு அல்லது அவரது கட்டளையைப் பெற்றவருக்குச் செலுத்துக."
   (ஒ-ம்) கணியன்.

மேற்குறிப்பானது வெற்ருக இருந்தாலும் முற்ருக இருந்தாலும் ஆவண மாற்றுதலை முற்றுப் பெறச் செய்வதற்காக, அதை ஒப்படைப்பு (Delivery) செய்தல் தேவையாகும்.

மேற்குறிப்புச் செய்தலில் சில வகைகள் உண்டு. அவை யாவன :

(1) வெற்று அல்லது பொதுவான முறை மேற்குறிப்பு (Blank or General)

(2) முற்று அல்லது தனியான முறை மேற்குறிப்பு (Full or Special)

(3) கட்டுப்படுத்துகின்ற மேற்குறிப்பு (Restrictive)

(4) கட்டுவரம்புக்குட்படு மேற்குறிப்பு (Conditional)

முதலிரண்டு வகைகளைப்பற்றி முதலிலேயே பார்த்தோம். இப்போது மூன்றுவது வகையைக் கவனிப்போம் :

**கட்டுப்படுத்துகின்ற மேற்குறிப்பு (Restrictive Endorsement)**

பிரிவு 50 ஆனது, கட்டுப்படுத்துகின்ற மேற்குறிப்பைப் பற்றி விவரிக்கின்றது. மேற்குறிப்பானது கட்டுப்படுத்துகின்ற தாக இல்லாவிடில், மேற்குறிப்பும் அதைத் தொடர்ந்த ஒப் படைப்பும் முறையாவணத்தில் கண்டுள்ள சொத்தினை மட்டு மல்லாமல் அதை மேலும் மாற்றிக் கொடுக்கின்ற உரிமையையும் மாற்றிக் கொடுக்கின்றது. இத்தகு மேற்குறிப்பைப் பின்வரும் வழிகளில் செய்யலாம் :

(1) இதில் அடங்கியுள்ளதை 'க' வுக்கு மட்டுமே செலுத்துக.

(2) எனது உபயோகத்திற்காக அல்லது எனது கணக்கின் மீது அல்லது பணத்தைத் திரட்டும் பொருட்டு 'க' வுக்குச் செலுத்துக.

(3) 'க' வின் கணக்கிற்காகக் 'க' வுக்குச் செலுத்துக.

முதலாவது எடுத்துக்காட்டில், மேற்குறிப்பானது மேற் கொண்டு மாற்றிக் கொடுப்பதைத் தடுத்துவிடுகிறது; தரப் பினர்களுக்கிடையே மட்டுமே அது செல்லுநிலையாகும்.

இரண்டாவதாகக் காட்டியபடி மேற்குறிப்பாளியானவர் மூன்றுவது பேருக்கு மாற்றிக் கொடுக்கவோ, தனக்கு மேற் குறிப்புச் செய்தவரைக் கடப்பாடுடையவராக ஆக்கவோ முடியாது. ஏனெனில் ஒரு தனி நோக்கத்திற்காக, அவரை மேற்குறிப்பாளரின் முகவராக அது ஆக்கியிருக்கிறது.

முன்றுவதாகக் காட்டியதில், உரிமைத் தகுதியானது, மேற் குறிப்பாளியிடத்தில் பொறுப்புரிமையராக (Trustee) வேறு ஒருவரது சார்பாக வைக்கப்பட்டிருக்கிறது. எனவே, மேற் கொண்டு அதை அவர் மாற்றிக் கொடுக்க முடியாது.

எனவே துவக்கத்தில் மாற்றிக்கொடுக்கப் படக் கூடியதாக இருக்கின்ற ஒரு முறையாவணமானது,

(i) அது கட்டுப்படுத்துகின்ற அளவில் மேற்குறிப்புச் செய்யப்படும் வரைக்கும். அல்லது,

(ii) முதிர்ச்சியுறலின்போதோ, அதற்குப் பிறகோ, ஆனல் அதற்குப் பிறகு அல்லாமல் அது செலுத்துப்படுகிற வரைக்கும்

அல்லது நிறைவேற்றப்படுகின்ற வரைக்கும், மாற்றிக் கொடுக்கப் படக்கூடிய தன்மையானது தொடர்ந்து நீடித்துக் கொண்டே யிருக்கிறது (பிரிவு 60).

### கட்டுவரம்புக்குட்பட்டு மேற்குறிப்பு (Conditional Endorsement)

பிரிவு 52 ஆனது, கட்டுவரம்புக்குட்படு மேற்குறிப்பைப் பற்றி விவரிக்கின்றது. ஒரு முறையாவணத்தின் மீது மேற் குறிப்புச் செய்பவர், மேற்குறிப்பில் சொற்கள் வழித் தெளிவாக, அதன் மீது தனது சொந்த கடப்பாட்டை நீக்கிக் கொள்வ தாகவோ அத்தகு கடப்பாட்டை அல்லது அதன்மீது வந்துசேர வேண்டிய தொகையைப்பெற மேற்குறிப்பாளியின் உரிமையை ஒரு குறித்துரைத்த நிகழ்வின் போதானதாகச் செய்வதாகவோ, அத்தகு நிகழ்வு எப்போதுமே நிகழாமல் போனாலும் அவ்வாறு செய்துக்கொள்ளலாம். அவ்வாறு. மேற்குறிப்புச் செய்பவ ரானவர் தனது கடப்பாட்டை நீக்கிக் கொண்டு பிறகு முறை யாவணத்தின் உடைமைவுரிமையராக ஆகுமிடத்து, இடையே யான மேற்குறிப்பாளர்களனைவரும் அவருக்குக் கடப்பாடுடையவர் ஆவர். அப்படிப்பட்ட மேற்குறிப்பு, 'கட்டுவரம்புக்குட்படு மேற் குறிப்பு' என அழைக்கப்பெறும். அதற்கு ஓர் எடுத்துக்காட்டு, "வேறுதுணை நாடாமல்", (ஒ-ம்) பூங்குன்றன், என்று மேற் குறிப்புச் செய்வதாகும்.

இப்படிப்பட்ட மேற்குறிப்பினால், முறையாவணத்தின்கீழ்ப் பூங்குன்றனுக்கு எந்தவிதக் கடப்பாடும் ஏற்படுவதில்லை. இது, கட்டுப்படுத்துகின்ற மேற்குறிப்பினின்று வேறுபட்டது. எப்படி யெனில், பின்னதானது, ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது நோக் கத்திற்கு முறையாவணம் மாற்றிக் கொடுக்கப்படுவதைக் கட்டுப் படுத்துகின்றது. ஆனால் கட்டுவரம்புக்குட்படு மேற்குறிப்போ மாற்றிக் கொடுப்பதைப் பாதிப்பதில்லை; மாறாக மேற்குறிப் பாளரின் கடப்பாட்டை நீக்கிவிடுகிறது அல்லது கட்டுவரம்புக்குட் படுவதாக்குகிறது.

### ஒப்படைப்பு (Delivery)

ஒரு முறையாவணமானது எழுதித் தரப்பட்டு, ஏற்கப்பட்டு அல்லது மேற்குறிப்புச் செய்யப்பட்டதன் பின்பு மற்றத் தரப் பினருக்கு, அவர் எந்த உரிமைகளையும் கொண்டடைவதற்கு முன்னதாகவே ஒப்படைப்புச் செய்யப்பட வேண்டும். எனவே, முறையாவணத்தின் ஒப்படைப்பு இல்லாமல் (அது மெய்ந் நிலையானதாகவோ (actual) கொள்நிலையானதாகவோ (Cons- tructive) எப்படியிருப்பினும் செல்லுநிலையான ஆவணமாற்று

தலாக ஆகாது. கொணர்பவருக்குச் செலுத்தப்படலாகும் ஒரு கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலைக்கு மேற் குறிப்பு எதுவும் தேவைப்படுவதில்லை என்பதுடன், அதை வெறு மனே ஒப்படைவுச் செய்வதன் மூலம் ஆவன மாற்றுதல் செய்யல் இயலும். ஆனல் இது கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாயின், மேற்குறிப்புச் செய்வதன் மூலமே (அது வெற்றுகவோ, முற்றுகவோ எதுவாக இருப்பினும் சரி) எதுவும் அவ்வாறு செய்து ஒப்படைப்பதன் மூலமே, மாற்றிக் கொடுக் கப்படக்கூடியதாகும்.

**மூன்றும் நபரின் பாதுகாப்பில் ஒப்படைப்புச் செய்ய உடன்பாடு (Escrow)**

ஒரு முறையாவணத்தை எழுதியோ, மேற்குறிப்புச் செய்தோ அத்துடன் ஒப்படைப்பும் செய்வதன் மூலம், மேற்குறிப்பாளிக்கு அதிலுள்ள சொத்து மாற்றிக் கொடுக்கப்படுகிறது என்றலும், அம் முறையாவணமானது கட்டுவரம்புக்குட்படுவதாகவோ ஒரு தனி நோக்கத்திற்காக மட்டுமோ ஒப்படைப்புச் செய்யப்படின், அதா வது அதிலுள்ள சொத்தினை அப்படியே உரிமை மாற்றிக் கொடுப் பதற்காக இல்லையென்றல் அதை மூன்றும் நபரின் பாதுகாப்பில் ஒப்படைப்புச் செய்ய செய்து கொள்ளும் உடன்பாடு (Escrow) என்று சொல்கிறோம். அப்போது அம் முறையாவணத்திலுள்ள சொத் தானது அந்த கட்டுவரம்புக்குட்பட்டு, மேற்குறிப்பாளிக்குக் கை மாறுகிறது. ஆனல் அதுவே உரியமுறை உடைமை உரிமை யரின் கைகளுக்கு வருமாயின், எந்தக் கட்டுவரம்புக்குட்பட்டு அது ஒப்படைப்புச் செய்யப்படுகிறதோ, அதற்கு எந்தச் சக்தியும் இல்லை என்பதுடன், அந்தக் கட்டுவரம்பை நிறைவேற்றுவிட்டா லும்கூட, அவரால் அது செல்லுறுத்தம் (enforcement) செய்யப் படல் ஆகும்.

**வெற்று மேற்குறிப்பை முற்று மேற்குறிப்பாக மாற்றுதல் (Conversion of Indorsement in blank into Indorsement in Full)**

வெற்று மேற்குறிப்புச் செய்யப்பட்ட ஒரு மாற்றுமுறை யாவணத்தின் உடைமை உரிமையர், தனது சொந்தப் பெயரைக் கையொப்பமிடாமல், மேற்குறிப்புச் செய்பவரின் கையொப்பத் திற்கு மேல், மற்ற எந்த ஒரு நபருக்கும் மேற்குறிப்பாளியாகச் செலுத்த நெறிப்படுத்தி எழுதுவதன்மூலம், வெற்று மேற் குறிப்பை மாற்றுதல் கூடும்; அதனல் உடைமை உரிமையர் மேற்குறிப்பாளர் ஒருவரது கடப்பாட்டைத் தான் உறுவதில்லை (பிரிவு 69).

எடுத்துக்காட்டாக இதைக் காண்போம். 'த'வுக்குச் செலுத்தப்பட வேண்டியதாக ஒரு சீட்டு வரையப்படுகிறதெனில், 'த'வும் தனது கையொப்பத்தை மட்டுமிட்டு, வெற்று மேற்குறிப்புச் செய்து, 'ம'வுக்கு ஒப்படைவுச் செய்யின், 'ம' ஆனவர் அச் சீட்டின் உடைமை உரிமையர் ஆகிருர். 'ம' ஆனவர் 'வ'வுக்குத் தன் கையொப்பமிடாமலே "'வ'வுக்கு அல்லது அவரது கட்டளைப் பெற்றவருக்குச் செலுத்துக," என்று மட்டுமே 'த'வின் கையொப்பத்திற்கு மேலே எழுதித், தனியாக மேற்குறிப்புச் செய்தல் இயலும். இந்த முறையின் அனுகூலம் என்னவென்ருல், 'த'விலிருந்து 'வ' வரை, 'ம'வை ஒரு மேற்குறிப்பாளருக்குண்டான கடமையை உறச் செய்யாமலேயே, முற்றுமேற்குறிப்பாக அது செயல்படுகிறது என்பதுதான்.

### வெற்று மேற்குறிப்புக்குப் பிறகு தனியான முறையில் (Special) மேற்குறிப்புச் செய்யப்படுவதன் விளைவு

"ஒரு மாற்றுமுறையாவணமானது, வெற்று மேற்குறிப்புச் செய்யப்பட்டதற்குப் பிறகு, முற்ருக மேற்குறிப்புச் செய்யப்படுகிறது எனில், அதன் தொகையை மேற்குறிப்பாளரிடமிருந்து முழுமையாக, எவருக்கு முற்ருக அது மேற்குறிப்புச் செய்யப்பட்டுள்ளதோ-எவர் அத்தகு நபர்வழி உரிமைத் தகுதி பெறுகின்ருரோ அவரால் அல்லாமல், மற்ற எவராலும் கோரிப்பெற முடியாது" (பிரிவு-55).

ஆங்கிலச் சட்ட விதியான "ஒரு முறை கொணர்பவர் தம் முறையாவணமாக இருப்பின், எப்போதுமே அது கொணர்பவர் முறையாவணமே" என்னும் விதி, இந்தியாவில் பின்பற்றப்படுவதில்லை. இந்தியாவில் நிலைவேறு. பின்வரும் எடுத்துக்காட்டால் அதனை விளக்கலாம்.

'அ' என்பவர் பெறுபவர். அவர் அச் சீட்டை வெற்று மேற்குறிப்புச் செய்து 'ஆ' வுக்கு ஒப்படைக்கின்ருர். 'ஆ' அதை மேலும் மாற்றி, வெற்று மேற்குறிப்புச் செய்து 'இ' க்குத் தருகிருர் 'இ' யானவர் முற்று மேற்குறிப்பு செய்து 'உ' அல்லது அவரது கட்டளை பெற்றவருக்கு மேற்குறிப்புச் செய்கிருர். 'உ' ஆனவர் மேற்குறிப்பு ஏதும் செய்யாமலேயே அதனை 'ஊ' என்பவருக்கு ஒப்படைப்புச் செய்கிருர். 'ஊ' ஆனவர் முறையாவணத்தைக் கொணர்பவர் என்கிற முறையில், வரைபவர் ஏற்பவர் அல்லது 'அ' அல்லது 'ஆ'வின் மீது வழக்குத் தொடுக்க உரிமைத் தகுதி பெற்றவராவர். ஆனுல் அவர் 'இ' அல்லது 'உ' மீது நடவடிக்கை தொடர முடியாது. 'உ' ஆனவர் 'இ' மீது வழக்கிட முடியும்; ஏனெனில் 'இ'யிடமிருந்து முற்று

மேற்குறிப்புச் செய்யப்பட்டே அதை அவர் பெற்றதுதான் அதற்குக் காரணம். 'உ' ஆனவர் மேற்குறிப்புச் செய்யாமலே 'ஊ' என்பவருக்கு மாற்றிக் கொடுப்பதற்குப் பதிலாக, ஒரு முறையான (Regular) மேற்குறிப்பு மூலம் மாற்றிக் கொடுத்திருந்தால் 'ஊ' ஆனவர் அவருக்கு முந்தைய எல்லாத் தரப்பினர் மீதும் வழக்குத் தொடுக்க இயலும்.

மேற்சொன்ன ஆங்கிலவிதி இங்கே பின்பற்றப்படுவது, பிரிவு 85(2)-ல் சொல்லப்படும் நிலையில் மட்டும்தான்.

### முற்றுப் பெறாத முறையாவணம் (Inchoate or Incomplete Instrument)

பிரிவு 70, இத்தகு முறையாவணம் பற்றி விவரிக்கின்றது. ஒரு முற்றுப் பெறாத முறையாவணம் என்பது. செலுத்தப்பட வேண்டிய தொகை அல்லது பெறுபவரின் பெயர் போன்ற விவரங்கள் எல்லாம் குறிப்பிடப்படாத அல்லது ஒரு பகுதி மட்டும் குறிப்பிடப்பட்டுள்ள, முத்திரையொட்டப்பட்ட தாளில் கையொப்பமிட்டும், வெற்றிடங்களை நிரப்பி ஒரு முற்றுப்பெற்ற முறையாவணமாக உருவாக்கக் கருதுகின்ற அத்துடன், பெயரவர் ஏற்பவர் மற்றும் மேற்குறிப்பாளர் ஆகியோரின் கடப்பாட்டையும் ஏற்கின்ற பேருக்கு ஒப்படைப்புச் செய்யப்படுகின்ற ஒரு முறையாவணமாகும்.

தெளிவற்ற முறையாவணத்தினின்றும் இது வேறுபட்டதாகும். தெளிவற்ற முறையாவணங்கள் குறித்து, நீதி மன்றங்களானவை அத்தகு முறையாவணம் செல்லுநிலையாகின்ற நிலைக்கு ஏற்பச் சாதகமாகப் பொருள் கொள்ளும். ஆனால் முற்றுப் பெறாத முறையாவணங்குறித்து, எவர் ஒப்படைக்கின்றாரோ அவரது அதிகாரத்திற்கேற்ப, வெற்றிடங்களை நிரப்பி. முற்றுப் பெற்ற முறையாவணமாக்கிக் கொள்ள, அதன் உடைமையுரிமையருக்குள்ள உரிமையினை நீதிமன்றங்கள் அங்கீகாரம் செய்கின்றன.

எனவே, வெற்றிடங்கள் நிரப்பப்பட்டதற்குப் பின்னரே கடப்பாடானது எழுகிறது. அத்துடன் எந்தத் தொகைக்கு அவ்வாறு செய்ய அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதோ, அதற்கு மேற்படாத அளவில், உரியமுறையில் உடைமையுரிமையராக ஆகிறவர் அன்றி வேறெவராலும் முற்றுப் பெறாத முறையாவணத்தை ஒப்படைப்புச் செய்கின்றவரை கடப்பாடுடையவராக்க முடியாது.

### தொகையானது எழுத்திலும் எண்ணிலும் வேறுவேறாகத் தெரிவிக்கப் பட்டால்

ஒரு முறையாவணத்தின் கீழ்ச் செலுத்தப்பட வேண்டிய தொகையானது எழுத்திலும் எண்ணிலும் வேறுவேறாகத் தெரி

விக்கப்பட்டால், எழுத்தில் தெரிவிக்கப்பட்ட தொகைதான் செலுத்தப்பட வேண்டியதாக ஆகும் (பிரிவு 18).

**'உரிமைக் கேட்பின்போது' (on demand). 'கண்டதும்' (At Sight), 'முன்னிடப்பட்டது' (on Presentment) மற்றும் 'கண்டதற்குப் பின்' (After Sight)**

செலுத்தத்திற்கு எந்தவிதக் காலமும் நிச்சயிக்கப்படவில்லையெனில், அப்படிப்பட்ட ஒரு கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டும் மற்றும் ஒரு காசோலையும் எப்போதுமே சரி உரிமைக் கேட்பின்போது செலுத்தப்பட வேண்டியவையாகும் (பிரிவு 19).

ஒரு கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டில் 'கண்டதும்' மற்றும் 'முன்னிடப்பட்டதும்' என்றால், 'உரிமைக்கேட்பின் போது' என்று பொருள். ஒரு கடனுறுதிச் சீட்டில் "கண்டதற்குப் பின்பு" என்றால், காண்பதற்கு முன்னிடப்பட்டதற்குப் பின்னர் என்றும், ஒரு மாற்றுச் சீட்டில் ஏற்புக்குப் பின்னர் அல்லது ஏற்காமைக்காக மறுப்புக் குறிப்புக்குப் பின்னர் அல்லது ஏற்காமைக்காக மறுத்துரை செய்யப்பட்டதற்குப் பின்னர் என்றும் பொருள் ஆகும் (பிரிவு 21).

'கண்டதும்' என்பதும் 'முன்னிடப்பட்டதும்' என்பதும் 'உரிமைக் கேட்பின்போது' என்று பொருள்படும் என்றாலும், அவற்றிற்கிடையே வித்தியாசம் ஒன்றுண்டு. அஃதாவது, கண்டதும் அல்லது முன்னிடப்பட்டதும் செலுத்தப்பட வேண்டியதாகிற ஒரு முறையாவணமானது. செலுத்தத்தை உரிமையுடன் கேட்பதற்கு முன்பு, அதை முன்னிட வேண்டும்; அத்துடன் வரையறைக் கால அளவானது அத்தகு முன்னிடப்படலிலிருந்தே தொடங்குகிறது. ஆனால், உரிமைக் கேட்பின்போது செலுத்தப்பட வேண்டியதாகிற ஒரு முறையாவணமானது உரிமைக் கேட்பு செய்யப்படலோ முன்னிடப்படலோ தேவையன்று. மற்றும் அது நிறைவேற்றப்படுகின்ற தேதியிலிருந்தே வரையறைக்கால அளவானது தொடங்குகிறது. இன்னும் சில முறையாவணங்கள் அவற்றைக் கண்டதற்குப் பிறகு செலுத்தப்பட வேண்டியவையாக இருக்கும். அப்படியாயின், அவை முதிர்ச்சியுறுதலின் போது செலுத்தப்பட வேண்டியவையாகும்,

**சலுகை விடுப்புக் காலம் (Usance)**

சலுகை விடுப்புக்காலமென்றால், ஒரு நாட்டில் வரையப்பட்டு, மற்றொரு நாட்டில் செலுத்தப்படுமாறு செய்யப்படுகிற (அதாவது இருநாடுகளின் வழக்காறுகளின் படியும்) சீட்டுகளின் செலுத்தத்திற்கு நிச்சயிக்கப்படும் காலம் என்பதாகும். இந்தச் சலுகை விடுப்புக்காலம் நாட்டுக்கு நாடு மாறுபட்டதாயிருக்கும்.

**முதிர்ச்சியுறுவதும் மேற்கொண்டு அனுமதிக்கப்படும் நாட்களும்**

ஒரு கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டு முதிர்ச்சியுறல் என்பது, என்று அது செலுத்தப்பட வேண்டியதாகிறதோ அந்தத் தேதியாகும். உரிமைக் கேட்பின்போது அல்லது கண்டதும் அல்லது முன்னிடப்பட்டதும் செலுத்தப்பட வேண்டியதாகத் தெரிவிக்கப்படாத ஒவ்வொரு கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டும்சரி, செலுத்தப்பட வேண்டுமெனத் தெரிவிக்கப்படுகிற நாளுக்குப்பின்பு, மூன்றும் நாளன்று முதிர்ச்சியுறுவதாகும் (பிரிவு 22).

இந்தப் பிரிவின்படி, உரிமைக் கேட்பின்போது செலுத்தப்படுதலில்லாத சீட்டுகள் மற்றும் உறுதிச் சீட்டுகளைப் பொறுத்துக் கடப்பாடுடைய நபருக்கு இரண்டு நாட்கள் கால அவகாசம் இருக்கிறது. அஃதாவது செலுத்தப்பட வேண்டுமெனத் தெரிவிக்கப்படுகிற தேதியைத் தள்ளிவிட்டு; முறையாவணமானது மூன்றும் நாளன்று முதிர்ச்சியுறுவதாகும்.

**முதிர்ச்சியுறுவதைக் கணக்கிடுவதற்கான விதிகள்**

இடப்பட்ட தேதிக்குப்பின் இத்தனை மாதங்களுக்குள் செலுத்தப்பட வேண்டுமெனத் தெரிவிக்கப்படுகிற ஒரு கடனுறுதிச் சீட்டோ அல்லது மாற்றுச் சீட்டோ, முறையாவணத்தின் தேதியுடன் ஒத்ததான மாதத்தின் அதே நாளுக்குப் பிறகு மூன்றும் நாளன்று முதிர்ச்சியுறுவதாகச் சொல்லப்படுகிறது. எந்த மாதத்தில் அந்தக் கால அளவு தீர்வடைகிறதோ அதற்கு அப்படிப்பட்ட நாள் இல்லையெனில், அத்தகு மாதத்தின் கடைசி நாளுக்குப் பிறகு மூன்றும் நாளன்று முதிர்ச்சியுறுவதாக அம்முறையாவணத்தைக் கொள்ளுதல் வேண்டும். கண்டதன்பின் அல்லது இடப்பட்ட தேதிக்குப்பின் இத்தனை நாட்களுக்குள் செலுத்தப்படலாகும் என்னும் ஒரு முறையாவணத்தின் முதிர்ச்சியுறல் தேதியைக் கணக்கிடுவதில், ஏற்புக்காக முன்னிடப்பட்ட தேதி, அல்லது அத்தேதியின் நாள் நீக்கப்படல் வேண்டும். முதிர்ச்சியுறு நாளானது ஒரு பொதும விடுமுறை (Public Holiday) நாளாயிருப்பின், முறையாவணமானது அதற்கு முந்திய அலுவல் நாளன்று அது செலுத்தப்பட வேண்டியதாகிறது. ஒரு பொதும விடுமுறை நாள் என்பதில், ஞாயிற்றுக்கிழமைகள், புத்தாண்டு நாள், கிறிஸ்துமஸ் திருநாள், அவற்றில் ஏதொரு நாளேனும் ஞாயிறாக இருந்துவிடின், அடுத்து வரும் திங்கட்கிழமையும், பெரிய வெள்ளிக்கிழமையும் மற்றும் மைய அரசு தனது அரசிதழ் வழி அறிவித்திடும் மற்ற எந்த நாளும் என்பவையும் அடங்கும். (பிரிவுகள் 23 முதல் 25 வரை காண்க)

**கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு மற்றும் காசோலைக்குத் தரப்பினர்கள் (Parties)**

**கடனுறுதிச் சீட்டு போன்றவற்றை எழுதித் தரும் தகுதியும் மேற் குறிப்புச் செய்யும் தகுதியும்**

ஒப்பந்தத்திற்குத் தேவையானது போன்றே, மாற்று முறை யாவணத்திற்கும், இதற்குத் தரப்பினராவதற்கு நபரொருவர் ஒப்பந்தத் தகுதி பெற்றிருத்தல் வேண்டும்.

பிரிவு 75, இத் தகுதி பற்றிப் பின்வருமாறு விளக்குகிறது :

"எந்தச் சட்டத்திற்குத் தான் உட்பட்டவரோ அதற்கு ஒப்ப ஒப்பந்தம் செய்து கொள்ளும் ஒவ்வொரு நபரும், ஒரு கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலையை எழுதித் தரல், வரைதல், ஏற்புச் செய்தல், மேற்குறிப்புச் செய்தல், ஒப்படைத் தல் மற்றும் ஆவணமாற்றுதல் ஆகியவற்றின்மூலம் தன்னையே கட்டுப்பட்டவராக்கிக் கொள்ளலும் தான் கட்டுப்பட்டவராக ஆக்கப்படுதலும் ஆகும்."

"உரிமை வயதுறாத இளவர் ஒருவர் (Minor) அத்தகு முறை யாவணத்தைத் தன்னைத் தவிர மற்றத் தரப்பினர் அனைவரையும் கட்டுப்படுத்துகின்ற அளவில், வரைதலும், மேற்குறிப்புச் செய் தலும், ஒப்படைப்புச் செய்தலும் மற்றும் ஆவணமாற்றம் செய் தலும் ஆகும்." ஆனால் இப் பிரிவானது, செல்லாற்றலிலுள்ள சட்டத்தின்கீழ்ச் செய்ய அதிகாரம் பெற்றிருக்கின்றவை நீங்கலாக மற்றப்படி அத்தகு முறையாவணத்தை எழுதித் தர, மேற் குறிப்புச் செய்ய அல்லது ஏற்புச் செய்ய, ஒரு கூட்டுரும (Corporation)த்திற்கு அதிகாரம் வழங்குவதாகக் கொள்ளப்படல் கூடாது.

இதிலிருந்து, உரிமை வயதுறாத ஒருவரையோ, பித்த நிலை யிலுள்ள ஒருவரையோ (Lunatic) எழுதித் தருபவராக, ஏற்பவ ராக அல்லது மேற்குறிப்பாளாராகக் கடப்பாடுடையவராக்குதல் முடியாது என்பது தெரிகிறது. அப்படிப்பட்டவர் வரைபவரா கவோ, மேற்குறிப்பாளராகவோ இருக்கையில், அதனால் முறை யாவணம் செல்லாது என்பதன்று, அது அவரைத் தவிர்த்து, ஏனைய அனைவரையும் கட்டுப்படுத்துவதாகும்.

மேற்படி பிரிவின் பின்பகுதியைப் படிக்கும்போது, பங்கமைப்பு ன்று. காசோலை ஒன்றை வழங்க அதிகாரம் கோர முடியாது — என்பது தெரிகிறது. மாற்று முறையாவணம் ஒன்றைப் பங்மைப்பானது வழங்குதற்கு அதற்குள்ள அதிகாரமானது, பங்கமைப்புச் சட்டத்(1913)தின் பிரிவு 89-ல் காணப்படுகிறது.

அதன்படி முறையாவணமானது, பங்கமைப்பின் பெயரில் அதனுல் அல்லது அதன் சார்பாக, எழுதித் தரப்பட்டோ வரையப் பட்டோ மேற்குறிப்புச் செய்யப்பட்டோ இருந்திருக்கவேண்டும். அதனைத் தெரிநிலையாகவோ (Expressly) உட்கிடையாகவோ (Implication) செய்யலாகும்.

(ஓரியால் இண்டஸ்ட்ரீஸ்க்கும் பம்பாய் மெர்க்கண்டைல் பாங்கிற்கு மிடையேயான வழக்கு (A. 112 - 1916 - S - C. 993)

ஒரு முறையாவணத்தை வரைய, ஏற்க அல்லது மேற்குறிப்புச் செய்ய முகவர் (Agent) ஒருவரை அமர்த்திக் கொள்ளலாம். ஆனுல் வியாபாரத்தை நடத்துவதற்கும் கடனைப்பெறுவதற்கும் தீர்ப்பதற்கும் அவருக்களிக்கப்படும் பொதுவான அதிகாரத்தை வைத்துக்கொண்டு, மாற்றுச்சீட்டை அவர் ஏற்பதோ — மேற் குறிப்புச் செய்வதோ அதாவது முதலரை (Principal)க் கட்டுப் படுத்தும் அளவில் செய்வது ஆகாது. அதுபோன்றே ஒரு மாற்றுச் சீட்டை வரைவதற்குத் தரப்படும் அதிகாரமானது, மேற்குறிப்புச் செய்வதற்கும் தரப்பட்டதாக ஆகாது (பிரிவு 27), மேலும் முகவர் கையொப்பம் இடுகிறபோது. தாம் முகவராகக் கையொப்பமிடுவதாகவே குறிப்பிட்டு கையொப்பமிடல் வேண்டும். இல்லையெனில் தாம் தனிப்பட்ட முறையில் அவர் கடப்பாடுடையவராக ஆகிவிடுகிறநிலை ஏற்படும்.

பின்வரும் வகைகளில் முகவரானவர் கையொப்பமிடில் தனிப் பட்ட கடப்பாடு அற்றவராக ஆகிருர்.

(1 'க' முதலர், அவரது முகவர் 'த' வினுல்

(2) 'க' வுக்காகத் 'த'

(3) 'த' வினுல் 'க'

(4) 'த', 'க' வுக்கான முகவர்

(5) 'த' வின் துணைநாடலின்றி 'க'

(6) 'க' வுக்காக — 'த'

(7) 'க' வின் அதிகாரம் பெற்ற 'த'

எனவே, 'த', 'க' வின் முகவர் என்று மட்டும் கையொப்ப மிடுவதனுல் மட்டுமே 'த' வானவர் ,கடப்பாடு அற்றவராகி விடு வதில்லை. காப்பாளர் (Guardian) ஒருவர் ஒரு கடனுறுதிச்சீட் டில், தான் காப்பாளர் என்னும் பொறுப்பில் நிரைவேற்றுவதாகக் குறிப்பிடவில்லையெனில், தனது சொந்தப் பெயரிலேயே (அஃதாவது உரிமைவயது உருதவரின் சார்பாக என்று சொல்

லாமல்) நிறைவேற்றினுல் அப்போது பணமானது உரிமை வயதுரு தவரின் அனுகூலத்திற்காக வாங்கியிருந்தாலுங்கூடத் தான் தனிப் பட்ட முறையிலேயே கடப்பாடுடையவராவார். காப்பாளர் காப்பாளராகவே கையொப்பமிடின், உரிமை வயதுருதவரின் நிலச் சொத்தானது, கடனுறுதிச் சீட்டில் அடங்கும் கடனைத் தீர்ப்பதற்குக் கடப்பாடுடையதாகும்.

**சட்டமுறைத் தெளிவாளர் (Legal Representative)**

**கையொப்பமிடுவதன் கடப்பாடு**

''இறந்த நபரொருவரின் சட்டமுறைத் தெரிவாளர் ஒருவர் கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலைக்குத்தான் கையொப்பமிடுகையில் தான் பெற்றேற்றுக் கொண்ட சொத் திருப்பின் அளவுக்குத்தான் தனது கடப்பாடு என்று தெளிவாக வரையறுத்துக் கொள்ளவில்லையெனில், தனிப்பட்ட முறையி லேயே கடப்பாடுடையவராவார்'' என்று பிரிவு 29 கூறுகிறது.

எனவே தனது சொந்தக் கடப்பாட்டை விலக்கிவிடுகிற ஒரு சட்டமுறைத் தெரிவாளரானவர், '''க'வின் சட்டமுறைத் தெரி வாளராகிய 'த'; அஃதாவது இறந்த 'க'வின் நிலச்சொத்துக்கு எதிராக மட்டுமே நாடப்படக் கூடியவர்'' என்று மட்டும் கையொப்பமிடுதல் நலம்.

**செலுத்தத்திற்காக முன்னிடப்படல் (Presentment for Payment)**

ஏற்கெனவே நாம் பார்த்தபடி, மாற்றுச் சீட்டொன்றை ஏற்காமையாலோ, ஏற்புக்குப் பின் செலுத்தாமையாலோ மதிப்பு மறுக்கப்படல் கூடும், கடனுறுதிச் சீட்டுகளுக்கும் காசோலை களுக்கும் ஏற்புத் தேவையில்லையாகையால், செலுத்தாமையால் மட்டுமே அவை மதிப்பு மறுக்கப்படக் கூடும்.

**செலுத்தத்திற்காக முன்னிடப்படல் :** பிரிவு 64, இதுபற்றி உரைப்ப தாவது :

ஒரு மாற்றுமுறையாவணமானது அதை எழுதித் தந்தவர் ஏற்றவர் அல்லது பெயரவரிடம் உடைமை உரிமையரால் அல்லது அவர் சார்பாக, செலுத்தம் பெறுவதற்காக முன்னிடப்படல் வேண்டும். தவறின், உடைமை உரிமையர் முறையாவணத்தின் மற்ற தரப்பினர்களுக்கு எதிராகத் தமக்குள்ள உரிமைகள் அனைத்தையும் இழக்க நேரிடும். உடன்பாடோ, வழக்காறோ ஏதுமிருப்பின், அப்போது செலுத்தத்திற்காகப் பதிவு அஞ்சல் வழி முன்னிடச் செய்யலாம்.

உண்டியம் அல்லது கண்டதும் செலுத்தப்பட வேண்டிய ஒரு சீட்டைப் பொறுத்த அளவில், ஏற்புக்காக முன்னிடப்படலும் செலுத்தமும் ஒரே நேர்வில் நடக்க வேண்டியனவாக அமைந்துள்ளன. எனவே பிரிவு 78-ன் கீழ்ச் செலுத்தத்தைப் பெற உரிமைத் தகுதி பெற்ற ஒருவர்தான், ஏற்புக்காக முன்னிடுவதற்கும் உரிமைத் தகுதி பெற்றவராகிறுர். இந்தப் பிரிவின் கீழ்ச் செலுத்தமானது உரியமுறையில் உடைமை உரிமையராக ஆகிறவருக்குத்தான் செய்யப்பட வேண்டும். பெறுபவரின் சார்பாக அதிகாரம் பெற்றிராத நபர் அதை முன்னிடச் செய்து, செலுத்தத்தையும் பெற்றுக் கொண்டால், அது ஏற்புக்காகச் செய்யப்பட்ட செல்லுபடியாகிற முன்னிடப்படல் ஆகாது. (ஜகஜீவன் மால்ஜிக்கும் ராஞ்சோத்தாஸ் மேக்ஜிக்கும் இடையேயான வழக்கு A. I. R. (1954) S. C. 554).

உரிமைக் கேட்பின்போது செலுத்தப்படலாகும் (ஆனுல் ஒரு குறிப்பிட்ட இடத்தில் செலுத்தப்படுவதாகாத) கடனுறுதிச் சீட்டானது, எழுதித் தருபவரைப் பிணையப்படுத்தும் பொருட்டு செலுத்தத்திற்காக முன்னிடப்படல் தேவையன்று (பிரிவு 64).

செலுத்தத்திற்காக முன்னிடப்படுவதை வழக்கமான அலுவல் நேரத்தில்தான் செய்யவேண்டும் (பிரிவு 65). ஒரு குறித்துரைத்த கால அளவிற்குப் பிறகு செலுத்தப்படலாகும் கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டாயின், முன்னிடல் என்பதை முதிர்ச்சியுறலின்போது செய்தல் வேண்டும் (பிரிவு 66).

ஒரு கடனுறுதிச் சீட்டின் கீழ் வரவேண்டிய தொகை, தவணைகளில் செலுத்தப் படுவதாயின், ஒவ்வொரு தவணைக்கென்றும் நிச்சயிக்கப்பட்ட தேதிக்குப் பின்னர் மூன்றுவது நாளில் அதை முன்னிட வேண்டும் (பிரிவு 67).

ஒரு கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ, காசோலையோ ஒரு குறித்துரைத்த இடத்திலன்றி (வேறெங்கும் செலுத்தப்படுவது அல்லாமல்) எழுதித் தரப்பட்டதாயின், வரையப்பட்டதாயின், ஏற்கப்பட்டதாயின், அந்த இடத்தில்தான் அதை முன்னிடச் செய்ய வேண்டும்; இல்லையெனில், மற்றத் தரப்பினர்கள் தம் கடப்பாட்டிலிருந்து விடுவிக்கப்பட்டவர்கள் ஆவார்கள். (பிரிவு 68).

ஒரு கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டானது ஒரு குறித்துரைத்த இடத்தில் செலுத்தப்படலாகும் என்று தெரிவிக்கப்பட்டிருப்பின், அந்த இடத்தில்தான் அதை முன்னிட வேண்டும்;

இல்லையெனில், எழுதித் தருபவர் அல்லது வரைபவர் மட்டுமே கடப்பாட்டிலிருந்து விடுவிப்புப் பெறுவர்; மற்றவர்கள் அல்லர் (பிரிவு 69).

குறித்துரைத்த ஓரிடத்தில்தான் செலுத்தப்படலாகுமெனத் தெரிவிக்கப்படாத ஒரு கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ எழுதித் தருபவர், பெயரவர் அல்லது ஏற்பவரின் அலுவல் இடத்தில் அல்லது அவர் வழக்கமாகக் குடியிருக்கும் இடத்தில் முன்னிடப்பட வேண்டும் (பிரிவு 70).

அப்படிப்பட்டவருக்கு நிலையானதொரு குடியிருப்பு இடம் இல்லையெனில், அவர் எங்குத் தென்படுகிறாரோ, அங்கு அவரிடம் நேர்முகமாக முன்னிடப்படல் ஆகும் (பிரிவு 71).

**வரைபவரை பிணையப்படுத்த காசோலையை முன்னிடல் :**

காசோலை ஒன்றை அது எந்த வங்கிக்கு வரையப்பட்டதோ அந்த வங்கியில் முன்னிடப்பட வேண்டும். அஃதாவது வரைபவருக்கும் வாங்கியவருக்குமான தொடர்புறவானது, வரைபவருக்குப் பாதகமாக மாறுவதற்கு முன்பு, அவ்வாறு செய்ய வேண்டும். இல்லையெனில் அவர் கடப்பாடுடையவர் அல்லர் (பிரிவு 72). இந்த விதியானது பிரிவு 84-க்கு உட்பட்டதாகச் செய்யப்பட்டுள்ளது. பிரிவு 84 என்ன சொல்கிறதெனப் பார்ப்போம்.

வழங்கப்பட்டதிலிருந்து தகுமான காலத்திற்குள் காசோலையானது முன்னிடப்படவில்லையெனில், வரைபவருக்கும் வங்கியில், அதுபோது போதுமான பணம் இருந்து (அஃதாவது காசோலை மதிப்புத் தரப்பட்டிருக்கக் கூடிய நிலையிலிருந்து) ஆனால் உடைமை உரிமையர் செய்த தாமத முன்னீட்டால் அதற்கிடையே வங்கியானது நடப்பதும் நின்று விடுகிறதெனில், அதனால் வரைபவருக்கும் இழப்பு ஏற்படுகிறதெனில், வரைபவரானவர், எந்த அளவுக்கு இழப்புற்றாரோ அந்த அளவிற்குக் கடப்பாடு அற்றவராகிறார்.

செலுத்துவதற்காக முன்னிடப்படுவதற்குத் தகுமான காலம் எது என்பது, முறையாவணத்தின் தன்மை, வாணிகத்தின் வழக்காறு போன்ற கூறுகளைப் பொறுத்ததாகும், அப்போது காசோலையின் உடமையுரிமையவருக்கும் வரைபவருக்கெதிராக உள்ள தீர்வழி கிடைப்பதில்லை. ஆனால் அத்தகைய கடப்பாடு விடுவிப்புப்பெறும் அளவிற்குப் பணத்தை வங்கியிடமிருந்து திரும்பப் பெறுவதற்கு அவர் உரிமைத்தகுதி பெற்றவராவார் (பிரிவு-84).

காசோலை ஒன்றிற்குத் தரப்பினரான எவரொருவரும் (அஃதாவது வரைபவரைத் தவிர்த்து) காசோலையானது அதை ஒப்படைத்ததற்குப் பின்பு தகுமான காலத்திற்குள் அவரால் முன்னிடப் படவில்லையெனில், கடப்பாடுடையவர் ஆகார் (பிரிவு 73).

பிரிவு 31-க்குட்பட்டு, உரிமைக்கேட்பின்போது செலுத்தப் படலாகிய ஒரு மாற்று முறையாவணம் செலுத்தத்திற்காக முன்னிடப்படுவது என்பதை, உடைமையுரிமையர் அதைப் பெற்றுக் கொண்டதற்குப் பின்னர் தகுமான காலத்திற்குள் செய்யவேண்டும் (பிரிவு 74).

ஏற்புக்காகவோ, செலுத்தத்திற்காகவோ முன்னிடப்படு வதை பெயரவருக்கு, எழுதித்தருபவருக்கு அல்லது ஏற்பவருக்கு அல்லது அவர்களில் எவர் ஒருவரேனும் இறந்திருப்பின், அவரது சட்டமுறைத் தெரிவாளருக்கு அல்லது அவர் நொடிப்பு நிலைய ராக அறிவிக்கப்பட்டிருப்பின், அவரது மீளா மாற்றுரிமையருக்கு (Assignee) முன்னிடச் செய்தல் கூடும் (பிரிவு 75).

செலுத்தத்திற்கோ ஏற்புக்கோ முன்னிடலைத் தகுமான காலத் திற்குள் செய்ய வேண்டுமெனச் சட்டம் கூறினுல் அப்படி முன் னிடுவதில் ஏற்படும் தாமதமானது, உடைமை உரிமையரின் கட்டுக்கு மீறிய சூழ்நிலையில் ஏற்படுமாயின், அல்லது அது அவரது தவருன் நடத்தை அல்லது கவனமின்மையால் ஏற்பட்டதன்று என்பதாயின் பொறுத்தேற்கப்படும். ஆனுல் அப்படிப்பட்ட தாமதத்திற்கு எது காரணமோ அது நீங்கியதும், தகுமான காலத்திற்குள் அதை முன்னிட வேண்டும் (பிரிவு 75 A).

**செலுத்தத்திற்கான முன்னிடப்படலானது எப்போது தேவையற்றதா கிறது ?**

பின்வரும் நிலைகளில் முறையாவணமொன்றைச் செலுத்தத் திற்காக முன்னிட வேண்டியது தேவையில்லை. அதை மதிப்பு மறுக்கப்பட்டதாகவே கருதிக் கொள்ளலாம்.

(1) எழுதித் தருபவர், வரைபவர் அல்லது ஏற்பவர் வேண்டு மென்றே முன்னிடப்படுவதைத் தடுக்கிறுர் என்றுல் அல்லது

(2) தனது அலுவல் நடக்கும் இடத்தில் முறையாவண மானது செலுத்தப்பட வேண்டியதாயிருந்து, அவர் ஒரு அலுவல் நாளில், அலுவல் நேரத்தில் அதை மூடிவிடுகிறுர் என்றுல், அல்லது

*(3)* மற்றொரு குறித்துரைத்த இடத்தில் செலுத்தப்படுவதாகச் செய்யப்பட்டிருந்து, அவரோ, அவரது முகவரோ வழக்கமான அலுவல் நேரத்தில் அந்த இடத்திற்கு வரவில்லையென்றால், அல்லது

*(4)* எந்த ஒரு குறிப்பிட்ட இடத்திலும் செலுத்தப்படுவதல்லாததாக முறையாவணமிருந்து, முறையாகத் தேடிப் பார்த்தும் அவரைக் காண முடியவில்லையென்றால். அல்லது

*(5)* யாரைப் பிணையப்படுத்த வேண்டுமோ அந்தத் தரப்பினர், முன்னிடப்படாமலேயே செலுத்துவதற்கு முன்வந்தால், அல்லது

*(6)* எந்தத் தரப்பினர் பிணையப்படுத்தப்பட வேண்டுமென விழையப்படுகிறதோ, அவர் முன்னிடப்படல் செய்யப்படவில்லை என்றறிந்தும், முறையாவணத்தின் கீழ்ச் செலுத்தப்பட வேண்டிய தொகையில் ஒரு பகுதியைச் செலுத்தினாலோ, அந்தப் பணத்தை மொத்தமாகவோ பகுதியாகவோ செலுத்த உறுதிமொழி தந்தாலோ, முன்னிடப்படுத்தலில் ஏற்பட்ட தாமதத்தைப் பயன்படுத்திக் கொண்டு தனது உரிமையை விட்டுக் கொடுத்தாலோ, அல்லது

*(7)* பெயரவரைக் கடப்பாடுடையவராக்க விழையப்படும்போது, அவர் அவ்வாறு முன்னிடப்படாததால் எந்த இழப்பும் உறாதபோது ஆக, இப்படிப்பட்ட நிலைகளில், முறையாவணம் செலுத்தப்படுவதற்காக முன்னிடப்படுவது தேவையில்லை; மாறாக அது மதிப்பு மறுக்கப்பட்டதாகவே கருதி ஏற்கப்படும்.

**மதிப்பு மறுப்பின் அறிவிப்பு (Notice of Dishonour)**

ஒரு மாற்றுச்சீட்டை அல்லது காசோலையை, வரைபவர் அல்லது மேற்குறிப்பாளர் அல்லது கடனுறுதிச் சீட்டின் மேற்குறிப்பாளர் அதன் உடைமையுரிமையரால், ஏற்காமையினால் அல்லது செலுத்தாமையினால் மதிப்பு மறுக்கப்பட்டதைப்பற்றி அறிவிப்பு ஒன்றை அவர்களுக்குத் தராமல், வழக்கிட முடியாது. ஆனால், மதிப்பு மறுப்பின் அறிவிப்பை, மதிப்பு மறுக்கப்பட்ட கடனுறுதிச் சீட்டு அல்லது மதிப்பு மறுக்கப்பட்ட மாற்றுச் சீட்டு அல்லது காசோலையின் பெயரவர் அல்லது ஏற்பவருக்குக் கொடுக்கத் தேவையில்லை. ஏனெனில், அவர்கள் அந்த முறையாவணத்தின்கீழ் முதன்மையாகவே கடப்பாடுடையவர்கள் (பிரிவு 93) ஆவார்கள்.

**அறிவிப்புப் படிவம் (Form of Notice)**

மதிப்பு மறுப்பின் அறிவிப்பும் படிவமானது, எந்த முறையிலும் இருக்கலாம். அந்த அறிவிப்புப்பெற உரிமைத் தகுதி பெற்ற நபருக்கு அல்லது அவரது முகவருக்கு அல்லது சட்ட முறைத் தெரிவாளருக்கு அதைக் கொடுக்கலாம். அது வாய்மொழியாகவும் இருக்கலாம்; எழுத்து வழியாகவும் இருக்கலாம். எழுத்து மூலமாக இருப்பதை அஞ்சல் வழியாகவும் அனுப்பிவைக்கலாம். ஆனால் பின்வரும் விவரங்கள் அதில் அடங்கியிருக்க வேண்டும்.

(1) முறையாவணம் பதிப்பு மறுக்கப்பட்டிருக்கிறது.

(2) எந்தவழி அல்லது வகையில் அது மதிப்பு மறுக்கப்பட்டுள்ளது.

(3) எவருக்கு அது கொடுக்கப்படுகிறதோ, அந்த நபர் கடப்பாடுடையவர் ஆவார், என்னும் விவரம்.

மதிப்பு மறுக்கப்பட்டதற்குப் பின்னர் தகுமான கால அளவிற்குள் அவ்வறிவிப்பை அவரது அலுவல் நடக்கும் இடத்திலோ, அப்படிப்பட்ட இடம் ஏதும் இல்லையெனில், அவரது இருப்பிடத்திலோ கொடுக்கப்படல் வேண்டும் (பிரிவு 94).

**யாரால் எவருக்கு அறிவிப்புக் கொடுக்கப்பட வேண்டும் ?**

மதிப்பு மறுக்கப்பட்ட அறிவிப்பை,

(1) கடனுறுதிச்சீட்டு, மாற்றுச்சீட்டு அல்லது காசோலையின் உடைமையுரிமையரோ,

(2) முறையாவணத்தின் கீழ்க் கடப்பாடுடைய யாரேனும் தரப்பினரோ,

(3) அவர்களுடைய முகவர்களோ, மற்றும் சட்டமுறைத் தெரிவிப்பாளர்களோ கொடுக்கலாம்.

அவ்வறிவிப்பை வரைபவருக்கும் மற்றும் உடைமையுரிமையர் எவரைக் கடப்பாடுடையவராகச் செய்ய விரும்புகிறாரோ அந்தத் தரப்பினர்கள் அனைவருக்கும் கொடுக்கப்பட வேண்டும். உடைமையுரிமையரானவர், அவர்களைத் தனித்தனியாகவும் கடப்பாடுடையவராகச் செய்ய விரும்பினால், அவர்களுள் ஒவ்வொருவருக்கும் அந்த அறிவிப்பை அனுப்புதல் வேண்டும். ஆனால் அவர்களைக் கூட்டாகக் கடப்பாடுடையவர்களாகச் செய்ய விழைந்தால்,

அவர்களுள் எவர் ஒருவருக்கு அறிவிப்பைக் கொடுத்தாலும் போதுமானதாகும் (பிரிவு 93). எவருக்கு அறிவிப்பு அனுப்பி வைக்கப்படுகிறதோ அந்தத் தரப்பினர் இறந்திருந்து அனுப்பு பவருக்கு அந்த விவரம் தெரியாதிருப்பின், அந்த அறிவிப்புப் போதுமானதாகும் (பிரிவு 97).

**எவ்வெப்போது மதிப்பு மறுப்பு அறிவிப்புக் கொடுக்கப்படத் தேவை யில்லை ?**

பின்வரும் நிலைகளில் மதிப்பு மறுப்பு அறிவிப்புக் கொடுக்கப் படத் தேவையில்லை :

(1) அறிவிப்புக்கு உரிமைத் தகுதி பெற்ற தரப்பினர் அதை வேண்டாமெனச் சொல்லி விட்டால்;

(2) வரைபவர் செலுத்தத்தை ரத்து செய்தபோது அவரைப் பிணையப்படுத்துவதற்காக;

(3) பிணையப்படுத்தப்பட்ட தரப்பினரானவர் அறிவிப்புத் தரப்படாததால், இழப்பு ஏதும் அனுபவிக்காதபோது;

(4) அறிவிப்புக்கு உரிமைத் தகுதி பெற்ற தரப்பினர் ஆனவர் உரிய வகையில் தேடிப்பார்க்கப்பட்ட பின்பும் கண்டு பிடிக்கப்பட முடியவில்லை யெனில் அல்லது, எவர் அறிவிப்புத் தந்தாக வேண்டுமோ அந்தத் தரப்பினர்; தனது சொந்தத் தவறு காரணமாக அல்லாமல், வேறுவழியால், அதைக் கொடுக்க இய லாத போது;

(5) ஏற்பவரும் ஒரு வரைபவராக இருக்கும்போது வரைப வரைப் பிணையப்படுத்த;

(6) மாற்றிக் கொடுக்கப்படமுடியாத ஒரு கடனுறுதிச் சீட்டாக இருப்பின்;

(7) அறிவிப்புக்கு உரிமைத்தகுதி பெற்ற தரப்பினர் உண்மைகளை அறிந்தும், கட்டுவரம்பின்றி, முறையாவணத்தின் கீழ்ச் செலுத்தப்பட வேண்டிய தொகையைச் செலுத்த உறுதி கூறுகிறபோது — ஆக, இப்படிப்பட்ட நிலைகளில் மதிப்பு மறுப்புப் பற்றிய அறிவிப்புக் கொடுக்கப்படத் தேவையில்லை. (பிரிவு 98).

**அறிவிப்புக் கொடுக்கப்படுவதற்கான காலம் (Time for Giving Notice)**

மதிப்பு மறுக்கப்படின் அதுபற்றி அறிப்பைத் தகுமான காலத் திற்குள் கொடுக்கவேண்டுமென ஏற்கெனவே கண்டோம். ஆனல்

அந்த அறிவிப்பைப் பெறுகின்ற எந்த நபரும் தமக்கு முந்தைய தரப்பினரைத் தமக்குக் கடப்பாடுடையவராக்கிட, அவருக்குத் தகுமான காலத்திற்குள் (அந்த நபர் வேறு ஒருவருக்காக அந்த அறிவிப்பைப் பெற்றிருந்தாலன்றி) மதிப்பு மறுக்கப்பட்ட அறிவிப்பைக் கொடுத்தாக வேண்டும் (பிரிவு 95).

முறையாவணமானது முன்னிடப்படுவதற்காக முகவர் ஒருவர்-பால் வைப்பு செய்யப்பட்டிருப்பின், தனது முதலருக்கு அறிவிப்புத் தருவதற்கு, முகவருக்கும் அதே அளவு காலத்தை எடுத்துக் கொள்வதற்கு உரிமைத் தகுதி உண்டு. அஃதாவது அவர் தான் மதிப்பு மறுப்பு அறிவிப்பைத் தருகின்ற உடைமை உரிமையராம் போன்று, அவ்வாறே, மதிப்பு மறுப்பு அறிவிப்புத் தருவதற்கு முதலருக்கும் அதே கால அளவு பெறுவதற்கு உரிமைத்தகுதி உண்டு (பிரிவு-96).

அஃதாவது முதலருக்கும் சரி, முகவருக்கும் சரி, தகுமான கால அளவு எடுத்துக் கொள்வதற்கு உரிமைத் தகுதி உண்டு, ஆனால் தகுமான கால அளவை எப்படி நிர்ணயிப்பது? அதை இப்போது பார்ப்போம்.

**தகுமான கால அளவு (Reasanable Time)**

ஏற்புக்காகவோ, செலுத்தத்திற்காகவோ முன்னிப்படுவதற்கு அல்லது மதிப்பு மறுப்பு அறிவிப்புக் கொடுப்பதற்கு அல்லது மதிப்புக் குறிப்புக்குத் தகுமான கால அளவானது, முறையாவணத்தின் தன்மை, அத்தகு முறையாவணங்களில் நடக்கும் லேவாதேவியில் வழக்கமான முறை ஆகியவற்றினைக் கருத்தில் கொண்டு, நிர்ணயிக்கப்படுகிறது. அப்படிக் கணக்கிடுவதில் பொதும விடுமுறை நாட்களைத் தள்ளிவிட வேண்டும் (பிரிவு 105).

அஃதாவது, தகுமான கால அளவு என்பது மாறுபடுவதாகும். உண்டியத்திற்குத் தகுமான கால அளவாக இருப்பது, காசோலைகளை முன்னிடுவதற்குத் தகுமான கால அளவாக, இருக்காது. இதுபோன்றே மாற்றுச் சீட்டுகளுக்கும் காசோலைகளுக்கும் அது மாறுபட்டதாகவே இருக்கும்.

**மதிப்பு மறுப்பு அறிவிப்புத் தருவதற்குத் தகுமான கால அளவு**

உடைமையுரிமையரும், எவருக்கு அறிவிப்புத் தரப்பட வேண்டுமோ அந்தத் தரப்பினரும் வேறு வேறு இடங்களில் வாழ்ந்து தொழில் நடத்துபவர்களாக இருப்பின், அடுத்த அஞ்சலில் அறிவிப்பை அனுப்பி வைத்ததுமே, அல்லது மதிப்பு

மறுக்கப்பட்டதற்கு அடுத்த நாளன்று அனுப்பி வைத்ததுமே, அவ்வறிவிப்புத் தகுமான கால அளவுக்குள் தரப்பட்டதாகவே கொள்ளப்படும். தரப்பினர்கள் அதே இடத்திலேயே வாழ்ந்து தொழில் நடத்துபவர்களாயின் மதிப்பு மறுக்கப்பட்டதற்கு மறுநாளுக்குள் அது சென்றடையுமாறு செய்யப்பட்டால், அது தகுமான காலத்திற்குள் தரப்பட்டதாகக் கருதப்படும் (பிரிவு 106).

**அறிவிப்பை மேற்கொண்டு அனுப்பிவைத்திடத் தேவைப்படும் தகுமான கால அளவு (Reasanable time for Transmitting Notice)**

மதிப்பு மறுக்கப்பட்டதன் அறிவிப்பைப் பெறுகின்ற ஒரு தரப்பினர், தமது முந்தைய தரப்பினருக் கெதிராகத் தனது உரிமைகளைச் செல்லுறுத்த விழைகின்றன. அவர், தானே உடைமை உரிமையராகயிருந்திருந்தால் தான் அவ்வாறு அறிவிப்புத்தர வேண்டியிருப்பின் எந்தக்கால அளவு தேவைப் படுமோ, அதே கால அளவிற்குள், தான் அதைப் பெற்றதற்குப் பிறகு, தான் மேற்கொண்டு அனுப்பி வைத்தால், தகுமான கால அளவிற்குள் அவர் மேற்கொண்டு அனுப்பி வைத்ததாகக் கருதிக் கொள்ளப்படும்.

**எழுதித் தருபவர், வரைபவர் மற்றும் ஏற்பவரின் கடப்பாடு**

**வரைபவரின் கடப்பாடு:** ஒரு மாற்றுச் சீட்டானது ஏற்காமை யின் மூலமோ, செலுத்தாமையின் மூலமோ மதிப்பு மறுக்கப் படலாம். மாற்றுச் சீட்டொன்று உரிமைக் கேட்பின்போதோ, அதைக் கண்டதுமோ செலுத்தப்பட வேண்டியதாயிருந்து, அது உரியமுறையில் முன்னிடப்பட்டபோது செலுத்தப்படவில்லை யென்றல், வரைபவரானவர், பெயரவரால் உரிய முறையில் செலுத்தப்பட்டால், பெறுபவர் எந்த நிலையில் இருப்பாரோ அந்த நிலையில் அவரை வைத்திடும் வகையில், பெறுபவருக்கு அந்தத் தொகைக்குக் கடப்பாடு உடையவராகிருர்.

முன்னிடப்பட்ட அல்லது ஏற்கப்பட்டதற்குப் பின்னர் சில காலத்திற்குள் செலுத்தப்படுவதாக அச் சீட்டு இருந்து, அது ஏற்கப்பட்டு ஆனல் செலுத்தப்படவில்லையெனில், முதன்மையான கடப்பாடு, ஏற்பவருடையதாகும்; வரைபவரின் கடப்பாடு அதற்கு அடுத்தபடியானதாகும். இதில் எந்த வகையாக இருந் தாலும், பெறுபவரோ அல்லது சீட்டின் உடைமை உரிமையரோ வரைபவருக்கு மதிப்பு மறுக்கப்பட்ட அறிவிப்பைத் தந்தால் மட்டுமே, வரைபவரைக் கடப்பாடு உடையவராக்க முடியும். இதனைப் பிரிவு 30 குறிப்பிட்டுக் கூறுகிறது. வரைபவருக்கு மதிப்பு மறுப்பின் அறிவிப்புத் தரப்படுவதை வலியுறுத்துவதன் நோக்கமே,

பெயரவருக்கெதிராகத் தனக்குள்ள உரிமைகளை அவர் பாது காத்துக் கொள்ள அவருக்கு வாய்ப்பளிப்பதற்காகத்தான்.

"ஒரு கடனுறுதிச் சீட்டு அல்லது காசோலையினை எழுதித் தருபவர், ஏற்பு செய்யப்படும்வரை மாற்றுச் சீட்டினை வரைபவர் மற்றும் ஏற்பவர் ஆகியோர், முரணான ஓர் ஒப்பந்தம் இல்லாத போது, முதன்மையான கடனாளிகளைப் போன்று கடப்பாடுடைய வர்களாவர்; அவ்வாறே மற்றத் தரப்பினர்களும், எழுதித் தருபவர், வரைபவர் அல்லது ஏற்பவருக்குப் பொறுப்பாக நிற் பவர்களாகக் கடப்பாடுடையவர்கள் ஆவர்" (பிரிவு 37).

"அவ்வாறு பொறுப்பாக நிற்பவர்களாகக் கடப்பாடுடைய தரப்பினர்களுக்கிடையே, முரணான ஓர் ஒப்பந்தம் இல்லாத போது, ஒவ்வொரு தரப்பாளரும், அடுத்துவரும் ஒவ்வொரு தரப்பாளருக்கு முதன்மையான கடனாளியைப் போன்று கடப் பாடுடையவர் ஆவார்" (பிரிவு 38).

"உறுதிச் சீட்டை எழுதித் தருபவரும், முதிர்ச்சியுறலுக்கு முன்னர், சீட்டை ஏற்பவரும் முரணான ஓர் ஒப்பந்தம் இல்லாத போது, முறையாவணத்தில் வெளிப்படையாகத் தெரிவிப்பதற் கேற்ப, அதில் குறித்துரைத்த தொகையை முதிர்ச்சியுறலின் போது செலுத்தக் கட்டுப்பட்டவராவதுடன், சீட்டை முதிர்ச்சி யுறலின் போதோ, அதற்குப் பிறகோ ஏற்பவரானவர், உடைமை யுரிமையருக்கு உரிமைக் கேட்பின் போது அத்தொகையைச் செலுத்தக் கட்டுப்பட்டவராவார். அப்படிச் செலுத்தத் தவறின் எழுதித் தருபவர் அல்லது ஏற்பவர் அவ்வுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டுக்குத் தரப்பினரான எவருக்கும் அன்னவர் அத்தகு தவறுதலால் இழப்பை அனுபவித்திருப்பின், அதற்கு ஈடுசெய்யக் கடப்பாடுடையவர் ஆவார்" (பிரிவு 32).

இந்தப் பிரிவிலிருந்து, முறையாவணத்தில் சொல்லப்பட்ட தரப்பினருக்கு மட்டுமே அல்லாது மற்ற எந்த நபருக்கும் செலுத்தப்படக் கூடாது என்றும், அதுவும் முதிர்ச்சியுறலின் போது மட்டுமே செலுத்தப்பட வேண்டும்; அதற்கு முன்னர் அன்று என்றும் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் எழுதித் தருபவர் அல்லது ஏற்பவரின் இந்தக் கடப்பாடானது, முரணான ஓர் ஒப்பந்தம் இல்லாதபோது மட்டுமேதான் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

**உதவி புரிவதற்கான சீட்டு (Accomodation Bill)**

உதவி புரிவதற்கான சீட்டு என்பது, எந்த மதிப்புறு பொருளை யும் பெறுமலே, நபரொருவர் தனது பெயரை வரைபவராகவோ,

ஏற்பவராகவோ, மேற்குறிப்புச் செய்பவராகவோ கையொப்ப மிட்டுவிடுகிற ஒரு சீட்டாகும். அஃதாவது கடன் தேவைப்படு கிற ஒரு நபருக்கு உதவுவதற்காக, அவரது நாணயத்தின்மீது, தன்னை அவ்வாறு ஆக்கிக் கொண்டு (அஃதாவது வரைபவராக, ஏற்பவராக அல்லது மேற்குறிப்புச் செய்பவராக) நபர் ஒருவர் கையொப்பமிடுகின்ற சீட்டு ஆகும். இப்படிப்பட்ட சீட்டில், எந்தத் தரப்பினர் உதவி புரியப்படுகிருரோ அவர், அம் முறை யாவணத்தின் பணத்தைச் செலுத்திஞல், அம் முறையாவணத் திற்குத் தரப்பினராக ஆன நபரிடமிருந்து (அஃதாவது தனக்கு உதவி புரிவதற்காக) அப் பணத்தைத் திரும்பப் பெற முடியாது; (பிரிவு 43 விளக்கவுரை 1); எனவே இது, பிரிவு 32-ல் சொல்லப் பட்ட விதிக்கு, ஒரு விலக்காகும். ஆனுல் உதவி புரிவதற்கான அத்தகைய முறையாவணமானது உரியமுறை உடைமை உரிமை யரின் கைகளுக்கு வருமாயின், அவர் எந்த முந்தைய தரப்பினரிட மிருந்தும் (அஃதாவது உதவி புரிவதற்காகக் கையொப்பமிட்ட நபர், உள்ளிட்டு) அதைத் திரும்பப் பெறமுடியும். (பிரிவு 59-க்கு வரம்புரையைக் காண்க).

**காசோலை வரையப்பட்டவரின் கடப்பாடு அல்லது வங்கியின் கடப்பாடு**

பிரிவு 31 பின்வருமாறு கூறுகின்றது :

"தனது கையில் வரைபவரின் நிதியை போதுமான அளவிற்கு வைத்திருக்கிற, காசோலையின் பெயரவர் (அஃதாவது காசோலை யைச் செலுத்துவதற்கு உரிய முறையில் பயன்படுத்துகிற அள வுக்கு நிதி வைத்திருப்பவர்) தான் அவ்வாறு வேண்டப்படுகையில் அக் காசோலைக்குப் பணம் செலுத்த வேண்டும்; அவ்வாறு செலுத்தத் தவறிஞல், அத்தகு தவறுதலால் வரைபவருக்கு ஏற்படும் எந்த இழப்பையும் அவர் ஈடுகட்ட வேண்டும்."

இதிலிருந்து என்ன தெரிகிறது என்ருல், காசோலை மதிப்பு மறுக்கப்படும்போது, வங்கியின் கடப்பாடு, வரைபவருக்குத் தானே அன்றிக் காசோலையை வைத்திருப்பவருக்கன்று என்பது தான். ஏனெனில், வங்கியருக்கும் வாடிக்கையாளருக்கும் உள்ள ஒப்பந்தமானது, கடனளிக்கும் கடனுளருக்கும் உள்ள உறவு என்பதோடு நிதியிருக்கின்றவரையில் வாடிக்கையாளர் வழங்கும் காசோலைகளை மதித்துப் பணம் செலுத்த வேண்டும் என்னும் கடப்பாடும் வங்கியருக்கு உள்ளது.

வங்கியானது வேண்டுமென்றே, காசோலை ஒன்றை மதிப்பு மறுத்ததென்ருல், அது இழப்பீடு செய்ய வேண்டிவரும்; இன்னும் சொன்ஞல் வாடிக்கையாளரானவர் தொழிலில் ஈடுபட்டவரா

யிருப்பின் அவ்விழப்பீட்டுத் தொகையானது, அதிகமாகச் செலுத்தப்பட வேண்டிவரும்.

ஆனால் ஒப்பந்தம் செய்து கொள்வதன் மூலம், வங்கியாளர் அனுமதிப்பின், வாடிக்கையாளர் தனக்கு இருக்கும் நிதிக்கும் மேலாக வங்கியின் பேரில் காசோலை வழங்கிப் பணத்தை எடுத்துக் கொள்ளலாம். அதற்கு இருப்பதற்கு மேலாக வாங்குதல் (Overdraft) என்று பெயர்.

**எவ்வப்போது வங்கியானது காசோலைக்கு மதிப்பு மறுக்கலாம்?**

(1) காசோலையைச் செலுத்துகின்ற அளவிற்கு, வங்கியில் போதுமான பணத்தை வாடிக்கையாளர் வைத்தில்லாத போது;

(2) காசோலையின் படிவமானது, சட்டப்படி ஐயத்திற்கு இட முண்டாக்குவதாயின்;

(3) காசோலையானது இன்னும் வராத, ஒரு தேதியிடப் பட்டிருந்து, அந்தத் தேதிக்கு முன்னர் அது முன்னிடப்படின்;

(4) காசோலையானது வங்கியின் அலுவல் நேரத்தில் முன்னிடப்படாத போது;

(5) வங்கியரிடமுள்ள நிதியானது, காசோலையைச் செலுத்துவதற்குப் பயன்படுத்த முடியாத நிலையில் — அந்த அளவில் உள்ள போது — எடுத்துக் காட்டாக பொறுப்பமைப் (Trust)பில் பணம் வைக்கப்பட்டிருந்து, அதனை மீறிய நிலையில் காசோலை வரையப்படும் போது;

(6) பாதிக்கக்கூடிய கருநிலைத் திருத்தங்கள் இருப்பின், அல்லது மேற்குறிப்பாளிகளின் கையொப்பங்கள் முறையாக இல்லாத போது;

(7) வரைபவர் நொடிப்பு நிலையராக நீதிமன்றத்தால் அறிவிக்கப்பட்டது பற்றி வங்கியானது அறிந்திருந்தால்;

(8) வாடிக்கையாளர் இறந்திருந்து, அது வங்கிக்கும் தெரிந்திருந்தால்;

(9) வரைபவர் பணஞ் செலுத்துவதை ரத்து செய்திருப்பின்;

(10) காசோலையானது வாடிக்கையாளர் கணக்கு வைத்திராத ஒரு கிளையில் முன்னிடப்பட்டால்;

(11) வாடிக்கையாளருக்குரிய நிதியிலிருந்து செலுத்தத்தைத் தடை செய்யும் ஒரு கட்டளையை நீதிமன்றத்திடமிருந்து வங்கியானது பெற்றிருந்தால்;

(12) வாடிக்கையாளரது நிதியைப் பற்றிடப் பொதுவான அதிகாரமொன்றை வங்கியானது பெற்றிருந்து, அப் பற்றீட்டைப் (Lien) பயன் படுத்தியதற்குப் பிறகு, வங்கியிடம் காசோலையைச் செலுத்தப் போதிய பணமில்லாத போது;

ஆகிய இப்படிப்பட்ட நிலைகளில் வங்கியானது வாடிக்கையாளர் வழங்குகிற காசோலையை மதித்துப் பணஞ் செலுத்தாதது தவறாகாது.

### மேற்குறிப்பாளரின் கடப்பாடு (Liability of an Endorser)

முரணான ஓர் ஒப்பந்தம் இல்லாதபோது, தனது கடப்பாட்டை நீக்கியிராத அல்லது அதை கட்டுவரம்புக்கு உட்படுவதாக ஆக்கியிராத மேற்குறிப்பாளர் ஒருவர், முதிர்ச்சியுறலுக்கு முன்பு, மதிப்பு மறுக்கப்படின், அதாவது பெயரவர், ஏற்பவர் அல்லது எழுதித் தருபவரால் மதிப்பு மறுக்கப்படின், அடுத்து அதன் உடைமை உரிமையர் ஒவ்வொருவருக்கும், அதனால் ஏற்படும் இழப்பினுக்கு ஈடுசெய்யக் கட்டுப்பட்டவராகிறார். ஆனால் அத்தகு மேற்குறிப்பாளருக்கு, மதிப்பு மறுப்பு அறிவிப்பானது கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். அப்படிப்பட்ட மதிப்பு மறுப்புக்குப் பின்பு, மேற்குறிப்பாளர் ஒவ்வொருவரும், உரிமைக் கேட்பின்போது செலுத்தப் படலாகும் ஒரு முறையாவணம் போன்றே அதன் மீது கடப்பாடுடையவர் ஆவார் (பிரிவு 35).

### வரைபவர் அல்லது மேற்குறிப்பாளரின் கடப்பாட்டிலிருந்து விடுவிப்பு (Discharge of Liability of a Drawer and Endorser)

(1) முன்னரே கூறியதைப்போன்று, மாற்றுச் சீட்டொன்றை ஏற்பவர், முதன்மைக் கடனாளி; மற்றத் தரப்பினர்கள் அவருக்குப் பொறுப்பாக நிற்பவர்கள் ஆவர். எனவே ஏற்கப்பட்ட சீட்டொன்றின் உடைமைவுரிமையர், ஏற்பவருடன் ஓர் உடன்பாடு கொண்டாலோ (அதாவது கடப்பாட்டிலிருந்து அவரை விடுவிப்பதாக) ஏற்பவருடன் கடனை விட்டுக் கொடுப்பதென ஒத்துப்போனாலோ, அதற்குக் கால அவகாசம்தர உறுதி தந்தாலோ, வழக்கிடுவதில்லையென உறுதிமொழி தந்தாலோ, மற்றத் தரப்பினர்களெல்லாம் கடப்பாட்டிலிருந்து விடுவிக்கப்பட்டவர் ஆகி விடுவர். ஆனால் ஏற்பவருக்கு அத்தகைய சாதக அனுகூலத்தை வழங்குகிறபோது, மற்றத் தரப்பினர்களைப் பிணையப்படுத்துகிற தனது உரிமையை ஒதுக்கி வவத்துக்கொள்வாராகில், அப்போது அவர்கள் கடப்பாட்டிலிருந்து விடுவிக்கப்படுவதில்லை (பிரிவு 39).

(2) மேற்குறிப்பாளரின் இசைவு இல்லாமலேயே மாற்று முறையாவணத்தின் உடைமைவுரிமையர் ஒருவர், முந்தைய தரப்பினர் ஒருவருக்கெதிராக, மேற்குறிப்பாளருக்குள்ள தீர் வழியை அழித்தால், அல்லது இல்லாதபடி குலைத்தால், மேற்குறிப்பாளர் அவ்வுடைமைவுரிமையருக்குள்ள கடப்பாட்டிலிருந்து விடுபட்டவராவார். அஃதாவது முறையாவணம் முதிர்ச்சியுறு தேதியில் செலுத்தப்பட்டு விட்டதுபோன்றே அவ்வாறு கடப்பாடு விடுபட்டுப் போகும் (பிரிவு 40).

**இழக்கப்பட்ட சீட்டின்படி (பிரதி) யொன்றைப் பெற உடமை உரிமையருக்குள்ள உரிமை (Holders right to a duplicate of a lost bill)**

செலுத்தப்படுவதற்குரிய காலம் வருவதற்கு முன்னரே மாற்று முறையாவணமொன்று இழக்கப்படின், அதன் உடைமை உரிமையருக்கு அதன்படி (பிரதி) யொன்றை வரைந்தவர் வழங்குதல் முறைதானே! ஆனல் வரைபவருக்கு என்ன தயக்கம் இருக்குமென்றால், இழக்கப்பட்ட முறையாவணமானது, உரிய முறையில் உடைமைவுரிமையராகிறவரின் கைகளுக்குச் சென்று கிடைத்துவிட்டால், அவர் தனக்கு எதிராக நடவடிக்கை எடுக்கக் கூடிய உரிமையைப் பெற்று விடுவாரே, அப்போது, இருமுறை கடப்பாடுடையவராகத் தான் செய்யப்பட்டு விடுவோமே என்பது தான் அந்தத் தயக்கம். இந்த இடையூற்றைத் தவிர்க்க, பிரிவு 45-A என்ன சொல்கிறது என்று பார்ப்போம்:

உடைமைவுரிமையர் வரைபவரை, படி (பிரதி) யொன்று தருமாறு கட்டாயப் படுத்தலாம்; ஆனல் இழக்கப்பட்ட சீட்டு மீண்டும் காணப்படின், எல்லா நபர்களுக்கும் எதிராக, வரைபவருக்கு இழப்பீடு செய்வதாகப் போதுமான பாதுகாப்பை- உறுதியை உடைமைவுரிமையர் வழங்க வேண்டுமென்று பிரிவு 45-A கூறுகிறது. இப் பிரிவு மாற்றுச் சீட்டுக்கு மட்டுந்தான் சேர்க்கப்பட்டதெனினும், நேர்மை நெறி அடிப்படையில், மற்ற வகை மாற்றுமுறையாவணங்கட்கும் இந்த விதி பயன்படுத்தப்பட்டு வருகிறது.

**மாற்று முறையாவணங்களுக்குரிய மறுபயன் (Consideration)**

ரான்னுக்கும் ஹஃப்ஸுக்கும் இடையேயான வழக்கில் இங்கிலாந்து நாடாளுமன்ற மேலவை (House of Lords) தந்த தீர்ப்புக்குப் பிறகு, தற்போது நிலையென்னவெனில், மாற்று முறையாவணம் போன்ற எழுத்து மூலமான ஒப்பந்தங்கட்குக் கூட, மறுபயனுனது இருக்க வேண்டும். அப்போதுதான் அதனைச் செல்லுறுத்த முடியும். இந்த முடிவானது பிரிவு 43-ல் காணக் கிடக்கிறது.

மறுபயன் இல்லாமலோ, தவறிவிடுகிற ஒரு மறுபயனுக்காகவோ எழுதித் தரப்படும், வரையப்படும், ஏற்கப்படும், மேற்குறிப்புச் செய்யப்படும் அல்லது மாற்றடைவு செய்யப்படும் ஒரு மாற்று முறையாவணமானது, அந்தத் தொடர்பிற்குரிய தரப்பினர்களுக்கிடையே செலுத்த வேண்டும் என்னும் கடப்பாட்டை உருவாக்குவதில்லை. அஃதாவது, எடுத்துக்காட்டாக, வரைபவருக்கும் பெற்றுக் கொள்பவருக்குமிடையே என்று கொண்டால், வாதியானவர் மறுபயன் செய்திருக்கிறார் என்று மெய்ப்பிக்கப்பட்டாலன்றிப் பணத்தை திரும்பப் பெறமுடியாது அவ்வாறே மறுபயனனது ஒரு பகுதி மட்டுமே செய்யப்பட்டிருப்பின், அந்த அளவிற்கு மட்டுமே பணத்தைத் திரும்பப் பெற இயலும்.

"நபரொருவர் எந்த ஒரு பகுதி மறுபயனாக மாற்று முறையாவண மொன்றைக் கையொப்பமிட்டுள்ளாரோ, அதனைப் பண முறையில் நிச்சயிக்கப்பட முடிவதாக இருந்து, அந்தப் பகுதியினை அவர் செய்யத் தவறிவிட்டால், அப்படிக் கையொப்ப மிடுகிறவருடன் உடனடித் தொடர்புறவு கொண்டுள்ள உடைமை உரிமையர் அவரிடமிருந்து பெற உரிமைத் தகுதி பெற்றுள்ள தொகையானது, அந்த அளவிற்கு விகிதாச்சாரமாகக் குறைந்து விடும்" (பிரிவு 45).

## சட்ட முரணனதும் மறுபயனும் (Illegality and Consideration)

சட்டப்படி மறுபயன் தேவை என்பது மட்டுமன்று, அது சட்டத்திற் கொத்ததாகவும் இருக்க வேண்டும். அவ்வாறே முறையாவணத்தைப் பெறுகிற வழிமுறையும் நியாயமானதாக இருக்க வேண்டும். பிரிவு 58 இதைப் பற்றிக் கூறும்போது, மாற்று முறையாவணமொன்று இழக்கப்பட்டாலோ, அதை எழுதித் தருபவர், ஏற்பவர் அல்லது அதன் உடைமைவுரிமையரிடமிருந்து குற்றம் அல்லது மோசடி என்று சொல்லத்தக்க வழிகளில் அது பெறப்பட்டாலோ, மறுபயனனது சட்ட முரணனதாக இருந்தாலோ, அதைக் காண்கிற நபரோ, அவ்வாறு அதைப் பெறுகிற நபரோ, மேற்குறிப்பாளியோ, அத்தகு எழுதித் தருபவர், ஏற்பவர் அல்லது உடைமைவுரிமையர் அல்லது அவ்வாறு உடைமைவுரிமையருக்கு முந்தைய தரப்பினர் ஒருவரிடமிருந்து முறையாவணத்தில் சொல்லப்பட்ட பணத்தைப் பெற உரிமைத் தகுதி பெற்றவராக மாட்டார். ஆனால் அதைப் பெற்றிருக்கிற நபர் உரியமுறையில் உடைமைவுரிமையராக இருப்பின், இந்த விதி அவருக்குப் பொருந்தாது.

**போலிக் கையொப்பமிடுதல் (Forgery)**

உரிமைத் தகுதியிலுள்ள குறைபாடுகளால், உரிய முறையில் உடைமையுரிமையரானவர் பாதிக்கப்படுவதில்லை என்கிற விதி, போலிச் செயல்களுக்குப் பொருந்துவதில்லை. இங்கிலாந்து மாற்றுச் சீட்டுச் சட்டத்தின் 24-வது பிரிவு இது பற்றி மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறது. போலிச் செயல், உரிமைத் தகுதியை உண்டாக்குவதில்லை என்பதே விதி. ஆனால் நமது இந்தியச் சட்டம் இதுபற்றித் தெரிநிலையாக ஏதும் சொல்ல வில்லையென்றாலும், இங்கிலாந்துச் சட்டத்தின் இவ்விதியே இங்கும் நிலவிவருகிறது. அஃதாவது, சீட்டிலுள்ள கையொப்பமானது போலியானதாயினும் அல்லது சம்பந்தப்பட்டவரின் அதிகாரம் பெறாமல் அவ்வாறு கையொப்பம் இடப்பட்டாலும், அது ஒரு போலிச் செயல் தான்.

கூட்டாக வரைபவர்கள் இருப்பின், அவ்வாறு செய்வதில் ஒருவரது கையொப்பம் சரியானதாக இல்லையென்றாலும்கூட, வங்கியானது, அத்தகைய காசோலையைச் செலுத்துவதற்குக் கட்டுப்பட்டதன்று.

"போலிச் செயலால், உரிமைத் தகுதி உண்டாவதில்லை" என்னும் விதிக்கு இரண்டு விலக்குகள் இருக்கின்றன. அவை, பிரிவு 85 மற்றும் 85-A வில் உள்ளவையாகும். இந்தப் பிரிவுகள், வங்கியரின் பொறுப்பிலிருந்து அவர்களை விடுவிக்க, வாணிக நலன் பொருட்டுச் செய்யப்பட்டன வாகும்.

ஒரு காசோலையானது கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப் பட வேண்டிய தாயின், பெறுபவரோ அவரது சார்பாகவோ மேற்குறிப்புச் செய்யப்படின், பெயரவர் அதாவது வங்கிய ரானவர், உரியமுறையில் அதைச் செலுத்துவதன் மூலம், விடு விக்கப் பட்டவராகிறார். அஃதாவது மேற்குறிப்புச் செய்பவரின் கையொப்பமானது முறையாவணத்தில் சொல்லப்பட்ட அந்த நபரே போட்டதாயிருப்பின், அது போலியானதாயிருப்பினுங் கூட, அந்த மேற்குறிப்பில் ஒழுங்கீனமானதோ சந்தேகத்தை விளைக்கக் கூடியதோ ஏதுமில்லையென்றாலுங் கூட, உரியமுறையில் செலுத்துவதன் மூலம் வங்கியர் தன் கடப்பாட்டிலிருந்து விடு பட்டு விடுகிறார்.

**(கார்லசுக்கும் பிளாக்வெல்லுக்கும் இடையேயான வழக்கு-1877,2 C. P. D. 151)**

போலிக் கையொப்பமிட்ட ஒரு முறையாவணத்தின்கீழ் கோரு வதன் மூலம் செலுத்தத்தைப் பெறுகின்ற நபரானவர், உண்மை

யான உரிமையாளருக்கு அந்தப் பணத்தைத் திருப்பிச் செலுத்தக் கடப்பாடுடையவராவார்.

(கோல்ட்மேன்னுக்கும் காக்சுக்குமிடையேயான வழக்கு—1924.40 T. C. R. 744)

இச் சட்டத்தின் 1934-ம் ஆண்டு திருத்தத்தினுல், துணைப் பிரிவு (2) ஆனது மேற்படி பிரிவுக்குச் சேர்க்கப்பட்டது. இத் துணைப் பிரிவு வங்கிகளுக்கு இன்னுமொரு சலுகையைத் தந்திருக்கிறது.

"ஒரு காசோலையானது துவக்கத்தில் கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாகத் தெரிவிக்கப்பட்டிருந்தால், அதைக் கொணர்பவருக்கு உரிய முறையில் செலுத்துவதன் மூலம் பெயரவர் தன் கடப்பாட்டிலிருந்து விடுபட்டவராகிருர். அஃதாவது அக் காசோலையின்மீது முற்று அல்லது வெற்று மேற்குறிப்புக் காணப்பட்டாலும் அல்லது அம் மேற்குறிப்பானது மேற்கொண்டு மாற்றிக் கொடுப்பதைத் தடையூறு செய்வதாகவோ தடுத்தே விடுவதாகவோ இருந்தாலுங்கூட, கொணர்பவருக்கு உரியமுறையில் செலுத்தப்பட்டதாக இருப்பின் வரைபவருக்குக் கடப்பாடு கிடையாது."

இந்தத் திருத்த உப பிரிவின் காரணமாக, இந்தியச் சட்டமும், இங்கிலாந்துச் சட்டத்தின் விதியான "ஒரு முறை கொணர்புவர்-காசோலையாயின், எப்போதுமே அது கொணர்பவர் காசோலை தான்" என்னும் விதிக்கேற்ப அமைந்துவிட்டது. எனவே கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டிய காசோலைகளாயிருப்பின், மேற்குறிப்புக்கள் எப்படியிருப்பினும் அவற்றைப் பற்றிக் கவலைப் படாமல், அக் காசோலைகளை வங்கியர் செலுத்தலாம். ஆனுல் தொடக்கத்தில் காசோலையானது கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாயிருந்து, மேற்குறிப்பினுல், கொணர்பவர் காசோலையாக மாற்றப்பட்டால், இந்தத் துணைப்பிரிவு அதற்குத் துணைநிற்காது.

பிரிவு 85-A ஆனது, பிரிவு 85-ல் சொல்லப்பட்ட விதியை வங்கி வரைவு (அஃதாவது உரிமைக் கேட்பு வரைவு)களுக்குப் பொருந்தச் செய்கிறது. உரிமைக் கேட்பு வரைவு என்பது வங்கியின் ஒரு கிளையினுல் மற்றொரு கிளையின் மீது வரையப் பட்டதும், உரிமைக் கேட்பின்போது செலுத்தப்பட வேண்டியதுமான ஒரு மாற்றுச் சீட்டோ காசோலையோ ஆகும்.

இந்த 85-A என்னும் சேர்க்கைப் பிரிவின் விளைவு என்னவென்ருல், வங்கியரின் வரைவும், இந்தச் சட்டத்தின் பொருளுக்குள், ஒரு காசோலையாகப் பொருள்படும் என்பது தான்.

**காசோலை ஒன்றுக்குப் பணம் செலுத்துவதில், வங்கியருக்குள்ள கடமை**

பணஞ் செலுத்துவதானது உரியமுறையில் செய்யப்பட்டதாக இருந்தால் தான் அஃதாவது நல்ல எண்ணத்துடனும் கவனமின்மை இல்லாமலும் செய்யப்பட்டால் மட்டுமே, வங்கியரைப் பிரிவு 85 ஆனது காப்பாற்றும். எனவே, ஒரு காசோலையானது அது வரையப்பட்டுப் பல காலத்திற்குப் பிறகு முன்னிடப்படுகிறது என்ருல், வங்கியரின் நடைமுறை வழக்கம் என்னவெனில், அதற்குப் பணஞ்செலுத்த மறுப்பதுதான்.

அவ்வாறே வங்கியரானவர் தன் வாடிக்கையாளர் தந்துள்ள குறிப்பிட்ட கட்டளைகளுக்குட்பட்டே நடக்கவேண்டும். காட்டாக முதலரின் சார்பாகச் செயலுறு அதிகாரம் (Power of Attorney முகவர் ஒருவர் தனது முதலரின் கணக்கிலிருந்து பணத்தை எடுத்துத் தன் சொந்தக் கணக்கில் சேர்த்துக் கொண்டால், அதற்கு வங்கியரும் அனுமதித்தால், அப்போது வங்கியருக்குப் பாதுகாப்புக் கிடையாது.

நிற்க, எப்போது வங்கியருக்குப் பாதுகாப்பு உண்டு என்ருல் மேற்குறிப்பாளரின் கையொப்பம் போலியானதாக இருக்கும் போது மட்டுமே ; ஆனல் வரைபவரின் கையொப்பமே போலியாகப் போடப்பட்டிருப்பின் அப்போது, அதைச் சரியாக உணர்ந்தறியும் பொருப்பு வங்கியருக்கு உண்டு. இல்லையெனில், வங்கியர் அதற்கு ஈடுகட்ட வேண்டிவரும்.

**வங்கிக்கு, வாடிக்கையாளரது கடமை**

லண்டன் ஜாயிண்ட ஸ்டாக் பாங்குக்கும் மாக்மில்லனுக்குமிடையேயான (1918-A.C. 777) வழக்கில், வாடிக்கையாளரானவர் வங்கியர் சரியானபடி செயலாற்றுவதற்கு ஒத்த வகையில் தனது கடமையையும் தகுமான அளவில் கவனத்துடன் செய்யவேண்டும்; மீறி, காசோலை ஒன்றை வரைகிறபோது, அதனை மோசடி செய்வதற்கு ஏதுவாகிற வகையில் வரைகிறபோது, அதனுல் இழப்பு ஏதேனும் ஏற்பட்டால் வாடிக்கையாளரே அதற்குப் பொருப்பாளியாவார் என்று தீர்ப்புரைக்கப்பட்டது. ஆனல்,

கலோனியல் பாங்கு ஆஃப் ஆஸ்திரேலியாவுக்கும் மார்சலுக்குமிடையேயான வழக்கில் ஒரு காசோலையில் இடைவெளிவிட்டு அதை வரைந்ததாலேயே ஏமாற்று மோசடி செய்கின்ற ஒருவருக்கு அது

வாய்ப்பாகிவிட்டது என்றும் அதனால் வாடிக்கையாளர் தமது கடமையிலிருந்து தவறிவிட்டார் என்றும் சொல்லிவிடமுடியாது என்று இங்கிலாந்தின் உச்ச நீதிமன்றமானது தீர்ப்புரைத்தது.

இந்தியாவிலோ மாக்மில்லன் வழக்கில் இங்கிலாந்தின் நாடாளுமன்ற மேலவை வழங்கிய தீர்ப்பே பின்பற்றப்பட்டது.

**மதிப்பு மறுக்கப்பட்ட பிறகோ, தொகை செலுத்தப்பட வேண்டியதாகும் போதோ கொண்டடையப்பெறும் முறையாவணம் (Instrument acquired after dishonour or when overdue)**

பிரிவு 60-ன் படி, முதிர்ச்சியுறலுக்குப் பின்பு மேற்குறிப்பாளியை, உரியமுறையில் உடைமையுரிமையராக ஆக்குவதற்காக ஒரு மாற்று முறையாவணத்தை செல்லுநிலையில் மாற்றிக்கொடுக்க முடியாது என்றாலும், அதனால் மேற்குறிப்பே செய்யமுடியாது என்பதன்று என்று தெரிகிறது. அதனால் ஏற்படும் ஒரே விளைவு என்னவென்றால், மதிப்பு மறுக்கப்பட்டதற்குப் பிறகு, அதைக் கொண்டடைகிற உடைமையுரிமையரானவர், அவருக்கு எவர் மாற்றிக் கொடுத்தாரோ அவரது உரிமைகளை மட்டுமே மற்றத் தரப்பினர்களுக்கு எதிராகப் பெற்றவராவார் (பிரிவு 59). அஃதாவது அப்படி உடைமையுரிமையரானவர், உரியமுறையில் அவ்வாறு ஆனவர் ஆகார். இந்தப் பிரிவின் விதிவிலக்கு என்ன சொல்கிறது எனில் நல்ல எண்ணத்துடனும், மறுபயன் செய்தும் முதிர்ச்சியுறலுக்குப் பின்பு, உடைமையுரிமையராக ஆகிற ஒருவரை, அவர் தனது முந்தைய தரப்பினர் எவரிடமிருந்தும் அத் தொகையைத் திரும்பப் பெறுவதைத் தடைசெய்வதில்லை என்பதைத்தான்.

**செலுத்தத்திற்காக முன்னிடப்படும் சீட்டைக் கவனமின்மையுடன் நடத்தும் வங்கிகளின் கடப்பாடு**

பிரிவு 77 பின்வருமாறு கூறுகிறது:

"ஒரு குறித்துரைத்த வங்கியில் செலுத்தப்பட வேண்டுமென ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு மாற்றுச் சீட்டானது, அங்கே உரிய முறையில் முன்னிடப்பட்டு, மதிப்பு மறுக்கப்பட்டாலோ, வங்கியர் கவனமின்மையால் அல்லது சரிவர நடத்தாமையால் அச் சீட்டுகளைப் புறக்கணித்தாலோ, தன்னிடம் வைத்துக் கொண்டாலோ, அதனால் உடைமையுரிமையருக்கு இழப்பு ஏற்பட்டால், அவருக்கு அந்த இழப்புக்காக வங்கியர் ஈடுகட்டியாக வேண்டும்".

வங்கியின் வாடிக்கையாளர் ஒருவர், அதனுடன் கணக்கு வைத்திருந்து சீட்டொன்றை, ஏற்புச் செய்கையில், அந்த வங்கியில் அது செலுத்தப்பட வேண்டியதாக ஏற்புச் செய்யலாம். ஆனால்

அதற்கென அப்படியொரு ஓர் உடன்பாடு, இல்லையெனில், வங்கியர் அதற்கு மதிப்புச் செலுத்தக் கட்டுப்பட்டவரல்லர். ஆனால், வாடிக்கையாளரது ஏற்பின் அதிகாரத்தின் பேரில் கூடத் தான் விரும்பினால் வங்கியர் மதிப்புக் கொடுத்து பணம் செலுத்தலாம். வங்கியானது செலுத்தத்திற்காக வரும் சீட்டொன்றை மதிப்பு மறுப்புச் செய்தால், அதைக் கவனத்துடன் வைத்திருந்து, அதே நிலையில் திருப்பியனுப்ப வேண்டும். இல்லையெனில் தனது கவனமின்மையால் அதன் உடைமையுரிமையருக்கு ஏதேனும் இழப்பு ஏற்பட்டிருப்பின், அதை ஈடுசெய்யும் கடப்பாடு வங்கியருக்குண்டு.

**செலுத்தத்தைப்பற்றியும் வட்டியைப் பற்றியும்**

மாற்று முறையாவணம் ஒன்றை அது செல்லுநிலையாவதற்கும் மற்றும் எழுதித் தருபவர் அல்லது ஏற்பவரைக் கடப்பாட்டிலிருந்து விடுவிப்பதற்குமாக, அதன் உடைமையுரிமையருக்குச் செலுத்தப்பட வேண்டும் (பிரிவு 78). எனவே முறையாவணத்தில் பெயர் காணப்படாத நபரொருவருக்கு அவரே உண்மையான உரிமையாளராக இருந்தாலுங்கூட செலுத்துவதானது எழுதித் தருபவர் அல்லது ஏற்பவரைக் கடப்பாட்டிலிருந்து விடுவிக்காது. கடனுறுதிச் சீட்டு அல்லது மாற்றுச் சீட்டு ஒன்றில் வட்டியானது குறித்துரைக்கப்பட்டிருப்பின், முறையாவணத்தின் தேதியிலிருந்து அத்தகு பணத்தைப் பெற்றடைகிற வரைக்குமோ, அத்தகு தொகையை மீட்க வழக்கிட்டதற்குப் பிறகு நீதிமன்றம் நெறியப்படுத்துகிற அந்தத் தேதி வரைக்குமோ முதல் தொகையின் மீது அந்த விகிதத்தில் கணக்கிடப்படவேண்டும் (பிரிவு 79).

வட்டியானது குறித்துரைக்கப்படவில்லையெனில், ஆண்டுக்கு ஆறு விழுக்காடு என்னும் விகிதத்தில் அது அளிக்கப்பட வேண்டும். கடப்பாடுடையவராகச் செய்யப்படுவதிலிருந்து, மேற்குறிப்பாளர் தான் மதிப்பு மறுப்பு அறிவிப்புப் பெற்றதிலிருந்து வட்டியைச் செலுத்திட வேண்டும் (பிரிவு 80).

முறையாவணம் ஒன்றன்கீழ் செலுத்திடக் கடப்பாடுடைய எந்த ஒரு நபரும் செலுத்தத்திற்கு முன்பு அதைத் தனக்குக் காட்டப்பெற உரிமைத் தகுதி பெற்றவராவதுடன், செலுத்தத்திற்குப் பிறகு தனக்கு ஒப்படைக்கப் பெறவும் அல்லது முறையாவணமானது இழக்கப்பட்டாலோ, கொண்டுவர முடியாது போனாலோ, தனக்கு எதிராக எழும் எந்த மேற்கொண்டகோருரிமைக்கும் எதிராகத் தான் ஈடுசெய்யப் பெறவும் உரிமைத் தகுதி பெற்றவராவார் (பிரிவு 81).

**உறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு மாற்றும் காசோலைகளின் மீது கடப்பாட்டிலிருந்து விடுவிப்புப் பெறுவது பற்றி**

ஒரு மாற்று முறையாவணத்தை எழுதித் தருபவர், ஏற்பவர் அல்லது மேற்குறிப்புச் செய்பவர், பின்வரும் வழிகளில் கடப்பாட்டிலிருந்து விடுவிக்கப்படலாம்.

**(1) ரத்து செய்வதன் வழி விடுவிப்பு (Discharge by Cancellation)**

(அ) ரத்து செய்வதன் வழி (by Cancellation)

(ஆ) விட்டு விடுவதன் வழி (by Release)

(இ) செலுத்துவதன் வழி (by Payment)

**(அ) ரத்து செய்வதன் வழி (by Cancellation)**

ஏற்பவர் அல்லது மேற்குறிப்புச் செய்பவரின் பெயரை, அவரை விடுவிப்பதற்கு என்னும் நோக்கத்துடன் அதன் உடைமை உரிமையர் ரத்து செய்கிறார் எனில், அவ்வாறு ரத்து செய்பவருக்கும் உடைமையுரிமையருக்கும் மற்றும் அவர்கீழ் கோருரிமை செய்கிற அனைத்துத் தரப்பினர்களுக்கும் கடப்பாடுறுவதிலிருந்து, அவர்கள் விடுவிப்புப் பெறுகின்றனர்.

**(ஆ) விட்டுவிடுவதன் வழி (By Release)**

அவ்வாறு விடுவிப்பு அறிவிப்பை அறிந்த பிறகு, அத்தகு உடைமையுரிமையின் கீழ் உரிமைத் தகுதி பெற்றுறுகின்ற அனைத்துத் தரப்பினர்களுக்கும் மற்றும் எழுதித் தருபவர், ஏற்பவர் அல்லது மேற்குறிப்பாளரைப் பிறவாறாக விடுவிடுப்புச் செய்கின்ற உடைமையுரிமையருக்கும் கடப்பாடுறுவதிலிருந்து விடுவிப்புப் பெறுகின்றனர்.

**(இ) செலுத்தத்தின் வழி (By Payment)**

முறையாவணமானது கொணர்பவருக்குச் செலுத்தப்பட வேண்டியதாக இருந்து அல்லது வெற்று மேற்குறிப்புச் செய்யப்பட்டதாயிருந்து அதன் மீது செலுத்தப்பட வேண்டிய தொகையை உரியமுறையில் எழுதித் தருபவரோ, ஏற்பவரோ மேற்குறிப்புச் செய்பவரோ செலுத்தத்தைச் செய்யின், அம்முறையாவணத்தின் எல்லாத் தரப்பினர்களுக்குமான கடப்பாட்டிலிருந்து அவர்கள் விடுப்புப் பெறுகின்றனர்.

**(2) பெயரவருக்கு, ஏற்புக்காக 48 மணி நேரத்திற்கு மேலாக அனுமதிப்பதின் வழிவிடுப்பு**

உடைமையுரிமையர் பெயரவருக்கு பொதுமை விடுமுறை நாட்கள் நீங்கலாக, 48 மணி நேரத்திற்கு மேலாக அனுமதித்

தால். அந்த அனுமதிக்கு ஒத்துக் கொள்ளாத முந்திய தரப்பினர்கள் அனைவருக்கும் எதிராக உடைமையுரிமையர் தனக்குள்ள தீர்வழியை இழந்து விடுகிறார்.

**(3) காசோலையானது உரியவாறு முன்னிடப்படாமல் அதனால் வரைபவர் இழப்பு உற்றால்**

இது பற்றிய சட்டம், பிரிவு 84-ல் உள்ளது. முன்னரே இது விளக்கப்பட்டுள்ளது.

**(4) சில மேற்குறிப்புகள் போலியானாலும், காசோலையானது உரிய முறையில் செலுத்தப்படும்போது**

இது குறித்த வகையங்களான பிரிவு 85-ம் பிரிவு 85-A வும் முன்னரே விளக்கப்பட்டுள்ளன.

**(5) ஏற்பானது தகுதிக்குட்படுத்தப்பட்டதாயின் அல்லது வரம்பிடப்பட்டதாயின் (When acceptance is qualified or limited)**

நிறைவில்லாத ஏற்பாக இருப்பினும், அல்லது சீட்டில் சொல்லப்பட்ட தொகையின் ஒரு பகுதிக்கு மட்டும் வரம்பிடப்பட்டதாயினும், அல்லது செலுத்தத்திற்காக வேறு இடம் அல்லது காலத்தை ஏற்கெனவே சொன்னதற்குப் பதிலாகச் சேர்த்திருந்தாலும், அல்லது பெயரவர்கள் கூட்டாளிகளாக இல்லாதபோது, கூட்டாளிகள் அல்லாத பெயரவர்கள் கையொப்பமிட்டதாயின் அதற்கு மாற்றுச் சீட்டின் உடைமை உரிமையர் ஒத்துப்போவதாயின் அத்தகு ஏற்புக்கு எவருடைய இசைவைப் பெறவில்லையோ, அந்த முந்தைய தரப்பாளர்கள் அனைவரும் உடைமை உரிமையருக்கு எதிராகவும், அவருக்குக் கீழே கோருரிமை செய்கின்றவர்களுக்கு எதிராகவும் உடைமை உரிமையர் தந்த அறிவிப்பின் மீது அத்தகு இசைவுக்கு அவர்கள் ஒத்துக் கொண்டாலன்றி விடுவிக்கப்படுகின்றவர் ஆகின்றனர் (பிரிவு 86).

**(6) பாதிக்கக்கூடிய கருநிலைத் திருத்தம் (Material alteration)**

ஒரு மாற்றுமுறையாவணத்தில் கருநிலைத் திருத்தம் ஒன்று பாதிக்கக்கூடிய அளவில் செய்யப்படின் அத்தகு திருத்தத்தைச் செய்கிறபோது, அம் முறையாவணத்தை எழுதித் தருகிறபோது அதற்குத் தரப்பினராக இருக்கின்றவரும் அத் திருத்தத்திற்கு ஒத்துக்கொள்ளாதவருமானவருக்கும் எதிராக, அத் திருத்தமானது தொடக்கத்திலிருந்த தரப்பினர்களின் பொது நோக்கத்தை நிறைவேற்றுவதற்கென்றே அது செய்யப்பட்டாலன்றி அத் திருத்தம்பற்றி அறியாமல் அதன் உடைமை உரிமையரின் கையில் கூட, அது செல்லுநிலையானதாகாது.

அத்தகைய திருத்தத்தை மேற்குறிப்பாளி செய்தால், அது மேற்குறிப்பாளரை மறுபயனைப் பொறுத்துக்கூட, எல்லாக் கடப்பாடுகளில் இருந்தும் விடுவித்து விடுகின்றது.

நிறைவுறு முறையாவணங்களில் வெற்றிடங்களை நிரப்புதல், அல்லது வெற்று மேற்குறிப்பை ஒரு முற்று மேற்குறிப்பாக மாற்றுதல், அல்லது ஏற்பொன்றைத் தகுதிக்குட்படச் செய்தல் அல்லது காசோலை ஒன்றன்மீது மூலக் குறுக்கே கோடிடல் (Crossing) போன்றவை கருநிலைத் திருத்தங்கள் அல்ல (பிரிவு 87). ஆனால் ஒரு கருநிலைத் திருத்தமானது, தற்செயலாகச் செய்யப்படின், அதனால் முறையாவணமானது செல்லாநிலையாக்கப்படுவதில்லை. அவ்வாறே கருநிலைத் திருத்தமொன்றை மூன்றுந் தரப்பினர் செய்யின் அஃதாவது உடைமை உரிமையரின் தவறுதலால் அல்லாமல் அவ்வாறு நடந்திருப்பின், அப்போது முறையாவணமானது செல்லாநிலையதாக்கப்படுவதில்லை.

### கருநிலைத் திருத்தத்திற்கு எடுத்துக்காட்டுகள்

பின்வரும் ஏதேனும் ஒன்றில் திருத்தங்கள் செய்யப்படின், அவை கருநிலைத் திருத்தங்களாகும். (1) தேதி (2) வரையும் நேரம் (3) செலுத்தும் இடம் (4) செலுத்தப்பட வேண்டிய தொகை (5) செலுத்தும் மூலம் (Medium of Payment) (6) வட்டி வீதம் (7) முறையாவணத்திற்கு எத்தனைத் தரப்பினர்கள் (8) தரப்பினர்களின் தொடர்புறவு (Relations) (9) சட்டத்தின் தன்மை (Legal character).

கருநிலைத் திருத்தத்தைப் பாதிக்கக்கூடிய அளவிற்குச் செய்துள்ள தரப்பினர், அம் முறையாவணத்தின்மீது வழக்கிட முடியாது. மேற்குறிப்பாளி அத் திருத்தத்தைச் செய்திருந்தாலும், தொடக்க மறுபயனின்மீது கூட மேற்குறிப்பாளர் மீது வழக்கிட முடியாது. ஆனால் பெறுபவரோ, வரைபவரோ அத்தகு திருத்தத்தைச் செய்திருப்பின் தொடக்க மறுபயனின்மீது அவர் வழக்குத் தொடுக்க முடியுமா என்று இந்தப் பிரிவு கூறவில்லை. ஆயினும் திருத்தமானது மோசடியானதாக இல்லையெனில், பெறுபவரோ, வரைபவரோ, முறையாவணமே செல்லாததாயினும் கூடத் தொடக்க மறுபயன்மீது வழக்கிட அனுமதிக்கப்படுவார்.

ஏற்பவரோ, மேற்குறிப்பாளரோ முறையாவணத்தில், முன்பு ஏதோ திருத்தம் இருப்பினும்கூட தனது ஏற்பினால் கட்டுப்பட்டவராவார். ஆனால் கருநிலைத் திருத்தமானது தெளிவாக வெளிப்படையாகத் தெரியவில்லை எனில் செலுத்தமும் முறையாவணத்தின் வெளிப்படையான பாங்கின் படிக்கும் உரியமுறையிலும்

செலுத்தப்பட்டதாயின் அஃதாவது செலுத்தக் கடப்பாடுடைய ஒரு நபரால் அவ்வாறு செலுத்தப்பட்டதாயின், அஃது எல்லாக் கடப்பாடுகளிலிருந்தும் அத்தகு நபரை விடுவித்தல் வேண்டும்.

**(7) முதிர்ச்சியுற்றதற்குப் பிறகு, ஏற்பவரின் கைகளுக்குச் சீட்டானது வருகிறபோது**

மாற்றிக் கொடுக்கப்பட்டிருக்கிற ஒரு மாற்றுச் சீட்டானது முதிர்ச்சியுறலின்போது அல்லது அதற்குப் பிறகு ஏற்பவர் ஒருவரால் அவரது சொத்து உரிமையில் வைத்திருக்கப்பட்டால், அதன் மீதான செயல் உரிமைகள் அனைத்தும் அகற்றப்பட்டு விடுகின்றன (பிரிவு 90).

**மறுப்புக் குறிப்பு (Noting) பற்றியும் மறுத்துரை (Protest) பற்றியும்**

**மறுப்புக் குறிப்பு (Noting)**

ஒரு கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ ஏற்காமையால் அல்லது செலுத்தாயையால் மதிப்பு மறுக்கப்பட்டிருப்பின், உடைமைவுரிமையர் அம் மதிப்பு மறுக்கப்பட்டதை மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவரால் (Noting Public) அம் முறையாவணத்தின் மீதோ, அதனுடன் இணைக்கப்பட்ட ஒரு துண்டுச் சீட்டின் மீதோ, அவை இரண்டிலுமோ, மறுப்புக் குறிப்பைச் செய்யப்பெறல் ஆகும்.

அப்படிப்பட்ட மறுப்புக் குறிப்பானது, மதிப்பு மறுக்கப்பட்டதற்குப் பின்பு, தகுமான காலத்திற்குள் செய்யப்பட வேண்டும். அத்துடன் மதிப்பு மறுக்கப்பட்ட தேதி அதற்குக் காரணம் (அப்படி ஏதேனும் இருப்பின்) அல்லது அம் முறையாவணமானது தெரிநிலையாகவே மதிப்பு மறுக்கப்படவில்லை யெனில், உடைமைவுரிமையர் அதை மதிப்பு மறுக்கப் பட்டதாகக் கருதுவதற்கான காரணம் மற்றும் மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவரின் கட்டணங்கள் ஆகியவற்றையும் குறித்துரைக்க வேண்டும் (பிரிவு 99).

**மறுத்துரை (Protest)**

ஏற்காமையாலோ, செலுத்தாமையாலோ, கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ மதிப்பு மறுக்கப்பட்டிருப்பின், உடைமையுரிமையர், தகுமான காலத்திற்குள், அம் மதிப்பு மறுக்கப்பட்டதை மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவரால் குறித்துக் கொள்ளப்படுமாறும் சான்றுறுதி வழங்கப்படுமாறும் செய்து கொள்ளலாம். அத்தகு சான்றிதழே மறுத்துரை என வழங்கப் பெறுகிறது.

**மேம்பட்ட பொறுப்புறுதிக்காக (Better Security) மறுத்துரை செய்தல்**

மாற்றுச் சீட்டினை ஏற்பவர் ஒருவர் நொடிப்பு நிலையராகி யிருந்தாலோ, சீட்டின் முதிர்சிக்கு முன்பு அவரது நாணயத் தன்மையானது வெளிப்படையாகவே பழிச் சாட்டப்பட்டிருந் தாலோ, உடைமைவுரிமையர் தகுமான காலத்திற்குள், ஏற்ப வரிடம் மேம்பட்ட பொறுப்புறுதி கேட்குமாறு மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவலரைச் செய்யலாம். அப்படிக் கேட்டு மறுக்கப் பட்டால், தகுமான காலத்திற்குள் அந்த விவரங்களைக் குறித்துக் கொள்ளுமாறும் மற்றும் அதற்குச் சான்றுறுதி வழங்குமாறும் அவ்வலுவலரை அவர் கேட்டுக்கொள்ளலாம். அப்படிப்பட்ட சான்றிதழ்தான் மேம்பட்ட பொறுப்புறுதிக்காக மறுத்துரை செய்தல் என்று அழைக்கப்படுகிறது (பிரிவு 100).

உடைமையுரிமையர், தான் மதிப்பு தருவதைப்பற்றி அறி விப்பு தருவதுடன், சீட்டு மறுத்துரை செய்யப்படுவதையும் செய்ய லாம். ஓர் உள்நாட்டுச் சீட்டானது மறுத்துரைக்கப்படல் ஆகாது. ஆனால் பிரிவு 104-ன் படி அயல் நாட்டுச் சீட்டானது மதிப்பு மறுப்புக்காக எந்த இடத்தில் வரையப்படுகிறதோ, அந்த இடத்துச் சட்டத்தின்படி அவ்வாறு தேவைப்பட்டால் மறுத்துரை செய்யப்பட்டாக வேண்டும்.

மறுத்துரை என்பது ஏதோ ஒரு வழிமுறை என்பது அன்று. மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவரானவர், முறையாவணத் தின் மீதோ, ஒரு துண்டுச் சீட்டிலோ, இரண்டிலுமோ, குறித்து வைத்திடும் ஒரு குறித்துரைதான். மறுப்புக் குறிப்புச் செய்யப் பட்டதற்குப் பின்பு, நிதானமாக அவ்வலுவலர் மறுத்துரையை வரைந்து கொள்ளலாம்.

அவ்வாறு அவர் தயாரிக்கின்ற ஒரு படிவச்சான்றிதழ்தான் மறுத்துரையாகும். அதாவது மேம்பட்ட பொறுப்புறுதிக்காக, ஏற்காமையாலோ, செலுத்தாமையாலோ, மதிப்பு மறுக்கப் படுவதைச் சரியானதென்று உறுதிக் கையொப்பமிட்டு அவ் வலுவலர் தருவார். அதுவே மறுத்துரைச் சான்றிதழ் ஆகும். மறுப்புக் குறிப்புக்கு, மறுத்துரையின் விளைவு இல்லை என்றாலும், பல அனுகூலங்கள் உள்ளன. அவற்றை ஈண்டுக் காண்போம்.

**மறுப்புக் குறிப்பின் அனுகூலங்கள்**

(1) ஒரு குறித்துரைத்த காலத்திற்குள் சீட்டொன்று மறுத்துரை செய்யப்பட வேண்டியதாயின், அந்தக் காலத்திற்குள் மறுப்புக் குறிப்பு செய்து கொண்டாலே போதுமானதாகும்; மறுத்துரையைப் பின்னால் வரைந்து கொள்ளப்பெறலாம்.

*(2)* மறுப்புக் குறிப்புக்குப் பிறகு பிரிவு 108-ன் கீழ் மதிப்பு தருவதற்காக ஒரு சீட்டை ஏற்பு செய்யலாம். அப்போது மறுத்துரை தேவையன்று.

*(3)* மறுத்துரை செய்யப்படவில்லை என்றாலும் கூட மறுப்புக் குறிப்புக்குப் பிறகு, மதிப்பு தருவதாகச் செலுத்தம் கூடச் செய்யலாம்.

இவைதான் மறுப்புக் குறிப்புக்குரிய அனுகூலங்களாகும்.

**மறுத்துரையின் அனுகூலங்கள்**

பிரிவு 119-ன்படி நீதி மன்றமானது மறுத்துரை மெய்ப்பிக்கப் பட்டதும், அந்த நிலை மெய்ப்பிக்கப்படாதவரை மதிப்பு மறுக்கப்பட்டதாகவே கொள்ளுதல் வேண்டும். மறுத்துரைக்கு இதைத் தவிர, இன்னுஞ் சில அனுகூலங்களும் உள்ளன. அவை பின் வருவனவாகும் :

*(1)* சீட்டொன்றை மதிப்புத் தருவதற்காக ஏற்புச் செய்யவோ, செலுத்தம் செய்யவோ இயலுமாறு செய்கிறது.

*(2)* முன்னிடப்பட்டதற்கும் மற்றும் மதிப்பு மறுக்கப்பட்டதற்குமான நம்பகமான சான்றளிப்புக்கு வகை செய்வதுடன், உடைமையுரிமையர் தனக்குள்ள தீர்வழியை விரைவில் பெறவும் இயலுமாறு செய்கிறது.

மாற்றுச் சீட்டொன்று மறுத்துரை செய்யப் பட்டதற்குப் பிறகு, அத்தகு மறுத்துரை பற்றிய அறிவிப்பினை, மதிப்பு மறுக்கப் பட்டதற்கான அறிவிப்புக்குப் பதிலாக, ஆனால் அதே கட்டுவரம்புகளுக்குட்பட்டுக் கொடுக்க வேண்டும். ஆனால் மறுத்துரை பற்றிய அறிவிப்பை, மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவலர் கொடுத்திடலாம். *(பிரிவு 102).*

பெயரவரின் குடியிருப்பு இடம் அல்லாத ஓர் இடத்தில் செலுத்தப்படுமாறு மாற்றுச் சீட்டொன்று வரையப்பட்டு, அஃது ஏற்காமையினால் மதிப்பு மறுக்கப்பட்டால், பெயரவருக்கு மேற் கொண்டும் முன்னிடல் செய்யாமலே செலுத்தத்திற்காகக் குறித்துரைக்கப்பட்ட இடத்தில், அது முதிர்ச்சியுறலுக்கு முன்பு அல்லது முதிர்ச்சியுறலின்போது செலுத்தப்பட்டால் அன்றி, செலுத்தத்திற்காக மறுத்துரை செய்யப்படவேண்டும்.

**மறுத்துரையின் உள்ளடங்கியவை**

மறுத்துரை ஒன்றில் பின்வரும் விவரங்கள் அடங்கி இருக்க வேண்டும். அவையாவன :

(1) அது முறையாவணத்தையே கொண்டிருக்க வேண்டும்; அல்லது முறையாவணத்தில் இருப்பது அப்படியே எழுதப்பட்ட தாகவும், மற்றும் அதன் மீது எழுதப்பட்ட அல்லது அச்சடிக்கப் பட்ட ஒவ்வொன்றையும், கொண்டிருப்பதாகவும் இருக்க வேண்டும்.

(2) மறுத்துரையானது எந்த நபருக்காக மற்றும் எந்த நபருக்கெதிராக முறையாவணமானது மறுத்துரை செய்யப் பட்டிருக்கிறதோ அவர்களின் பெயர்களைக் கொண்டிருத்தல் வேண்டும்.

(3) மறுத்துரையானது எந்த நபரிடமிருந்து செலுத்தமோ, ஏற்போ, மேம்பட்ட பொறுப்புறுதியோ, மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவலரால் உரிமையுடன் கேட்கப்பட்டது என்ற ஓர் அறிக்கையையோ (Statement) அதற்கு அவர் தந்த பதிலின் கட்டுவரைகளையோ (அவ்வாறு ஏதேனும் இருப்பின்) அவர் அதற்குப் பதிலேதும் தரவில்லை அல்லது அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று ஓர் அறிக்கையையோ கொண்டித்தல் வேண்டும்.

(4) உறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ மதிப்பு மறுக்கப் பட்டால், மதிப்பு மறுக்கப்பட்ட இடமும் காலமும் ; மேம்பட்ட பொறுப்புறுதி மறுக்கப்பட்டால் அது மறுக்கப்பட்ட இடமும் காலமும் மறுத்துரையில் அடங்கியிருக்க வேண்டும்.

(5) மறுத்துரையைச் செய்கின்ற, மறுப்புக் குறிப்புச் சான்றுறுதி அலுவலரது கையொப்பமும் மறுத்துரையில் இருக்க வேண்டும்.

(6) மதிப்புத் தருவதற்காக ஏற்கப் படுவதாயினும் அல்லது செலுத்தப் படுவதாயினும், அத்தகு ஏற்பு அல்லது செலுத்த மானது எவரால் அல்லது எவருக்காக மற்றும் எந்த முறையில் அவ்வாறு முனையப்பட்டு செய்யப்படுகிறதோ அந்த நபருடைய பெயர் மறுத்துரையில் இருக்க வேண்டும் (பிரிவு 101).

மேலே (3)-ல் குறிப்பிடப்பட்ட உரிமைக் கேட்பை மறுப்புச் குறிப்புச் சான்றுறுதி அலுவலரானவர் தானே நேர்முகமாகவோ, தனது எழுத்தர் மூலமாகவோ பதிவு அஞ்சல் மூலம் அனுப்பிட அதிகாரம் பெற்றிருப்பின் அவ்வாறு அனுப்பியோ செய்திடல் இயலும்.

நிறையீடு பற்றிய விதிகள் (Rules as to Compensation)

ஒரு மாற்று முறையாவணம் மதிப்பு மறுக்கப் படுகிறபோது நிறையீடு தருவதுபற்றிய விதிகளைப் பிரிவு 117 ஆனது பின் வருமாறு கூறுகிறது.

ஒரு கடனுறுதிச் சீட்டு, மாற்றுச் சீட்டு அல்லது காசோலை மதிப்பு மறுக்கப்படுகையில், உடைமைவுரிமையருக்கோ மேற் குறிப்பாளிக்கோ, கடப்பாடுடைய எந்த ஒரு தரப்பாளரும் செலுத்த வேண்டிய நிறையீடானது பின்வரும் விதிகளால் நிர்ணயிக்கப்பட வேண்டும்:

(1) முறையாவணத்தின் மீது வந்துசேர வேண்டிய தொகை யுடன் அதை முன்னிட, மறுப்புக் குறிப்புச் செய்ய மற்றும் அதை மறுத்துரை செய்வதற்கு நியாயமாக ஆன செலவுத் தொகையையும் சேர்த்துப் பெற உடைமைவுரிமையருக்கு உரிமைத் தகுதியுண்டு.

(2) பிணையஞ் செய்யப்பட்ட நபரானவர் முறையாவணம் எங்குச் செலுத்தப் படுவதாகச் செய்யப்பட்டதோ அந்த இடம் அல்லாத வேறொரு இடத்தில் குடியிருப்பவராக இருப்பின், அவ்விரண்டு இடங்களுக்கு மிடையேயான மாறுகொள் விதத்தில் (Rate of Exchange) அத்தகு தொகையைப்பெற உடைமை உரிமையருக்கு உரிமைத் தகுதியுண்டு.

(3) கடப்பாடுடைய மேற்குறிப்பாளர் ஒருவர் செத்தப்பட வேண்டிய தொகையைச் செலுத்தியிருப்பின் அவ்வாறு செலுத்தப் பட்ட தொகைக்கும் செலுத்தப்பட்ட தேதியிலிருந்து திரும்பப் பெறுகிற வரைக்கும் ஆண்டொன்றுக்கு ஆறு விழுக்காடு வீதம் வட்டிக்கும் அவர் உரிமைத் தகுதி பெறுவதுடன், மதிப்பு மறுக்கப்பட்டதாலும் செலுத்தத்தாலும் அவருக்கு ஏற்பட்ட செலவுகளையும் சேர்த்துப்பெற மேற்குறிப்பாளருக்கு உரிமைத் தகுதியுண்டு.

(4) பிணையஞ் செய்யப்பட்ட நபரும் அத்தகு மேற்குறிப் பாளரும், வேறுவேறு இடங்களில் குடியிருப்பவராக இருப்பின் அவ்விரண்டு இடங்களுக்குமிடையே நிலவுகின்ற மாறுகொள் வீதத்தில் அத்தகு தொகையைப்பெற, மேற்குறிப்புச் செய்ப வருக்கு உரிமைத் தகுதியுண்டு.

(5) நிறையீடு பெற உரிமைத்தகுதி பெற்ற தரப்பின ரானவர், தனக்குச் சேர வேண்டிய தொகைக்காகவும் மற்றும் நியாயமான முறையில் தனக்கு ஆன செலவுத் தொகைக்

காகவுஞ் சேர்த்து, கண்டதும் அல்லது உரிமைக் கேட்பின்போது செலுத்தப்படலாம். சீட்டொன்றைத் தனக்கு நிறையீடு செய்யக் கடப்பாடுடைய தரப்பினருக்கு வரையலாம். அத்தகு சீட்டுடன் மதிப்பு மறுக்கப்பட்டு மறுத்துரைக்கப்பட்ட (அப்படி இருந்தால்) முறையாவணத்தையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். அத்தகு சீட்டானது மதிப்பு மறுக்கப்படின் மதிப்பு மறுக்கின்ற தரப்பினர் மூலச் சீட்டைப் போன்றே அதே வகையில் அதற்கு நிறையீடு செய்யக் கடப்பாடுடையவர் ஆவார்.

(5)-ல் சொல்லப்பட்ட சீட்டுக்கு மறுவரைவு (Re-draft) என்று பெயர். அம் மறுவரைவு மதிப்பு மறுக்கப் பட்டால், அது மூலச் சீட்டாக இருப்பின் என்ன விலைவுகள் ஏற்படுமோ, அதே விளைவுகளே இம் மறுவரைவுக்கும் ஏற்படும்.

சாட்சியத்தின் தனி விதிகள் (Special Rules of Evidence)

மாற்று முறையாவணங்கள் வாணிக சமூகத்தில் நன்கு புழக்கத்தில் இருந்து வருவதற்குக் காரணமே, அவற்றிற்குரிய தனியான சிறப்புச் சலுக்கைகளும், சாட்சிய விதிகளும்தான். இந்தச் சட்டத்தின்படி, பின்வரும் தனி சாட்சிய விதிகள் அம் முறையாவணங்களுக்கு உள்ளன.

(i) மாற்று முறையாவணங்கள் குறித்துக் கொள்கின்ற துணிபு (Presumption)

வேறு விதமாக மெய்ப்பிக்கப் பட்டாலன்றிப் பின்வரும் துணிபுகளை மாற்றுமுறையாவணங்கள் குறித்து மேற்கொள்ளுதல் வேண்டும்.

(அ) ஒவ்வொரு மாற்று முறையாவணமும் சரி, மறுபயனுக்காகவே, அவ்வாறு எழுதித் தரப்பட்டது, ஏற்கப்பட்டது அல்லது மேற்குறிப்புச் செய்யப்பட்டது என்று துணிபு கொள்ளல்.

(ஆ) முறையாவணத்தின் மீது காணப்படும் தேதிதான் அது வரையப்பட்ட தேதி என்று துணிபு கொள்ளல்.

(இ) ஒவ்வொரு மாற்றுச் சீட்டும் தகுமான காலத்திற்குள்ளாகவும் அது முதிர்ச்சியுறுவதற்கு முன்பாகவும் ஏற்பு செய்யப்பட்டது என்று துணிபு கொள்ளல்.

(ஈ) முறையாவணத்தின் உரிமை மாற்றம் ஒவ்வொன்றுமே முதிர்ச்சியுறுதலுக்கு முன்பு ஏற்பட்டது என்று துணிபு கொள்ளல்.

(உ) முறையாவணத்தின் மீது தோன்றுகின்ற மேற்குறிப்புகள் எத்த வரிசையில் அவை தோன்றுகின்றனவோ, அவ்வித

வரிசைக் கிரமமாகவே செய்யப்பட்டிருக்கின்றன என்று துணிபு கொள்ளல்.

(ஊ) இழக்கப்பட்ட மாற்று முறையாவணமொன்று போதுமான முத்திரை ஒட்டப்பெற்றிருந்தது என்று துணிபு கொள்ளல்

(எ) முறையாவணத்தின் உடைமைவுரிமையர் உரிய முறையில் உடைமைவுரிமையர் என்று துணிபு கொள்ளல். ஆனால் அதைச் சட்டப்படி உரிமையாளரிடமிருந்தோ, அதைச் சட்டப்படி பாதுகாத்து வைத்திருக்கும் மற்ற எந்த நபரிடமிருந்தோ, குற்றம் அல்லது மோசடி என்று சொல்லக் கூடிய வகையில் பெற்றிருந்தாலும் சரி, அல்லது எழுதித் தருபவர் அல்லது ஏற்பவரிடமிருந்து குற்றம் என்னும் வகையிலோ சட்ட முரணான மறுபயனுக்காகவோ பெற்றிருந்தாலும் சரி உடைமைவுரிமையர் தான் உரியமுறையில் உடைமைவுரிமையரானவர் என்று மெய்பித்தாக வேண்டியிருக்கும்.

சண்முக ராஜேஸ்வர சேதுபதிக்கும், சிதம்பரம் செட்டியாருக்குமிடையேயான வழக்கில் (1938) (I.M.L.J. 597 (P. c) ஒரு கடனுறுதிச் சீட்டானது கொடுக்கப் பட்டிருப்பின், மறுபயன் இருப்பதாகவே துணிபு கொள்ளல் வேண்டும் என்றும், மறுபயன் கைமாறவில்லை என்று மெய்ப்பிப்பது, அதை எழுதித் தந்தவருக்குரிய பொறுப்பு என்றும் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

இந்தச் சட்டத்தின் 118ஆம் பிரிவானது மாற்றுமுறையாவணங்களுக்குப் பொருந்துகிற தனி சாட்சிய விதி ஒன்றை வகுத்திருக்கிறது. அஃதாவது சட்ட முறையில் துணிபு கொள்ளலே அஃது.

எதிர்வாதிக்குச் சில பொருள்களைத் தான் விற்றதாகவும் அப்பொருளுக்கு மறுபயனுகக் கடனுறுதிச் சீட்டொன்று நிறைவேற்றப்பட்டதாகவும், விற்கப்பட்ட பொருள்கள் தனது உடைமையில் இருந்ததைக் காட்டுவதற்குப் பொருத்தமான கணக்குப் பேரேடுகள் தன்னிடம் உள்ளன என்றும் ஒரு குறிப்பிட்ட மறுபயனுக்காகத்தான் அவ்விற்பனையே செய்யப்பட்டது என்றும் சொல்லுகிற வாதி (Plaintiff) ஒருவர், அப்படிப்பட்ட கணக்குப் பேரேடுகளைக் கொண்டுவந்து காட்டுதல் வேண்டும்.

அவ்வாறு காட்டாமல் வாதி தன்னிடமே வைத்துக்கொள்வாராயின், அவருக்குப் பாதமாகத் துணிபு கொள்ள நீதிமன்றத்திற்கு இயலும் என்று பிரிவு 114 கூறுகிறது.

ஆனல் சில சூழ்நிலைகளில் இத்துணிபை மறுத்துரைத்தலும் கூடும். அஃது பிரிவு 118-ன் கீழ் செய்யப்படுவதாகும். (சுந்தன் லாலுக்கும் கஸ்டோடியன் எவாக்வி பிராப்பர்ட்டிக்கு மிடையேயான வழக்கு A. I. R. 1961 Sc 1316).

பிரிவு 118-ன் கீழ் சொல்லப்படும் துணிபுகள் மாற்று முறையாவணங்கள் தொடர்பான சில சாட்சியத் தனி விதிகளை வகுக்கின்றனவாயினும், தரப்பினர்களுக்கு ஆதரவாகவோ எதிர்ப்பாகவோ அவை இயங்குகின்றனவே அன்றி அத்தரப்பினர்களின் கீழே கோருரிமை செய்கின்ற நபர்களுக்குப் பொதுவாக அவை பொருந்துவதில்லை.

(2) மறுத்துரை நிருபணத்தின் மீது துணிபு (Presumption on Proof of Protest)

மதிப்பு மறுக்கப்பட்ட முறையாவணத்தின் மீதான ஒரு வழக்கில், மறுத்துரை மெய்பிக்கப்படுவதன் மீது மதிப்பு மறுக்கப்பட்ட உண்மையை நீதிமன்றமானது, அதற்குமாருக நிருபிக்கப்படும் வரை துணிபு கொள்ளல் வேண்டும் (பிரிவு 119).

(3) முறையாவணமொன்று தொடக்கத்தில் (Originally) செல்லுநிலையில் இருந்ததை மறுப்பதை முரண்தடையாய்ச் செய்தல் (Estoppel)

கடனுறுதிச் சீட்டை எழுதித் தருபவர், மாற்றுச் சீட்டை அல்லது காசோலையை வரைபவர், மற்றும் வரைபவரின் மதிப்புக்காக மாற்றுச் சீட்டொன்றை ஏற்பவர் ஆகியோர், உரியமுறை உடைமைவுரிமையர், கொண்டுவரும் வழக்கொன்றில், தொடக்கத்தில் எழுதித் தரப்பட்ட அல்லது வரையப்பட்ட முறையாவணத்தின் செல்லுநிலையை மறுப்பதை முரண்தடை செய்தல் வேண்டும் (பிரிவு 120).

(4) மேற்குறிப்புச் செய்வதற்குப் பெற்றுக் கொள்பவருக்குள்ள தகுதியை மறுப்பதை முரண்தடை செய்தல்

கடனுறுதிச் சீட்டை எழுதித் தருபவரும் மற்றும் கட்டளை பெற்றவருக்குச் செலுத்தப்படலாகும் சீட்டொன்றினை ஏற்பவரும், அச் சீட்டுகளின் தேதியின்போது, பெற்றுக் கொள்பவருக்கு அதை மேற்குறிப்புச் செய்வதற்குள்ள தகுதியை மறுப்பதை முரண்தடை செய்தல் வேண்டும் (பிரிவு 121).

(5) முந்தைய தரப்பாளர் ஒருவரது தகுதி அல்லது கையொப்பத்தை மறுப்பதை முரண்தடை செய்தல்.

மாற்று முறையாவணத்தை மேற்குறிப்புச் செய்கின்ற ஒருவர், அதன் மீதான வழக்கில், அதற்கு முந்தைய தரப்பினராக

இருந்த எவ்வொருவரது கையொப்பத்தையும் சரி அல்லது ஒப்பந்தம் செய்து கொள்ளும் தகுதியையும் சரி என்று மறுப்பதனை முரண்தடை செய்தல் வேண்டும் (பிரிவு 122).

**பன்னாட்டுச் சட்டத்தின் விதிகள் (Rules of International Law)**

**(1) அயல் நாட்டு முறையாவணத்தை எழுதித் தருபவர், ஏற்பவர் அல்லது மேற்குறிப்புச் செய்பவரின் கடப்பாடு பற்றிய சட்டம்**

முரணான ஓர் ஒப்பந்தம் இல்லாதபோது அயல் நாட்டுக் கடனுறுதிச் சீட்டொன்றை மாற்றுச் சீட்டை அல்லது காசோலை எழுதித் தருகிற அல்லது வரைகிற ஒருவரது கடப்பாடானது, அவர் எங்கு அதை எழுதித் தந்தாரோ, அந்த இடத்தின் சட்டத்தினால்தான் அதன் முக்கியமான கூறுகள் ஆளப்பெறும். அவ்வாறே ஏற்பவர் மற்றும் மேற்குறிப்பாளரது கடப்பாடு களானவை, எங்கு முறையாவணமானது செலுத்தப்படுமாறு செய்யப்படுகிறதோ, அந்த இடத்தின் சட்டத்தினால் ஆளப்பெறும் (பிரிவு 134).

**(2) செலுத்துகிற இடத்தின் சட்டமே மதிப்பு மறுக்கப்படுவதையும் ஆளும்**

எந்த இடத்தில் எழுதித்தரப்படுகிறதோ, மேற்குறிப்புச் செய்யப்படுகிறதோ அதற்கு வேறுபட்ட ஓர் இடத்தில் செலுத்தப் படுமாறு, ஒரு கடனுறுதிச் சீட்டோ, மாற்றுச் சீட்டோ, காசோலையோ செய்யப்படும்போது, எங்கு அது செலுத்துமாறு செய்யப்படுகிறதோ அந்த இடத்தினது சட்டந்தான், எப்படிச் செய்தால் அது மதிப்பு மறுப்பதாகும் மற்றும் மதிப்பு மறுப்பிற்கு எந்தவித அறிவிப்பு போதுமானது என்பவற்றை நிர்ணயிப்ப தாகும் (பிரிவு 135).

**(3) இந்தியச் சட்டத்திற்கு உட்பட்டு இந்தியாவிற்குப் புறத்தே எழுதித் தரப்பட்ட முறையாவணம்.**

இந்தியாவிற்குப் புறத்தே, ஆனால் இந்தியச் சட்டத்தின் படி, எழுதித்தரப்பட்ட, வரையப்பட்ட, ஏற்கப்பட்ட அல்லது மேற்குறிப்புச் செய்யப்பட்ட ஒரு மாற்று முறையாவணமானது எந்த நாட்டில் உடன்பாடு செய்து கொள்ளப்படுகிறதோ அந்த நாட்டின் சட்டத்தின்படி அவ்வுடன்பாடு செல்லுநிலையது ஆகு மென்றால், அதனால் அதையடுத்து இந்தியாவில் செய்யப்படும் ஏற்பு அல்லது மேற்குறிப்பை அது செல்லா நிலையாக்குவதில்லை (பிரிவு 136).

(4) அயல் நாட்டுச் சட்டத்தைக் குறித்துத் துணிபு கொள்ளல்

கடனுறுதிச் சீட்டுகள், மாற்றுச் சீட்டுகள் மற்றும் காசோலைகள் பொறுத்த எந்த ஓர் அயல் நாட்டின் சட்டமும் இந்தியாவின் சட்டம் போன்றே, அதாவது, அதற்கு மாறாக மெய்ப்பிக்கப்படும் வரைக்கும் துணிபு கொள்ளல் வேண்டும் (பிரிவு 137).

குறுக்குக் கோடிடப்பட்ட காசோலைகள் பற்றி (of Crossed Cheques)

காசோலையை வைத்திருப்பவர்கள் எந்த வங்கிக்கு அது வரையப்பட்டதோ அந்த வங்கியில் கொடுத்துப் பணம் பெறுதலைப் பற்றி முன்னரே கவனித்தோம். அத்தகைய காசோலை திறந்த காசோலை (Open Cheque) என அழைக்கப்படும்.

ஆனால் அதில் ஒரு குறை இருக்கிறது. அஃதாவது அதனை எளிதில் மோசடி செய்து அல்லது போலிக் கையொப்பம், இடுவதின் மூலம், வாடிக்கையாளருக்கும், வங்கிற்கும் இழப்பை ஏற்படுத்த அதில் வாய்ப்பிருக்கிறது.

அப்படிப்பட்ட நிலையைத் தவிர்ப்பதற்கும் காசோலையின் உடைமைவுரிமையரைக் காப்பாற்றுவதற்கும் குறுக்குக் கோடிடல் (Crossing) புகுத்தப்பட்டது. இங்கிலாந்துச் சட்டத்தால் புகுத்தப்பட்ட இது நமது மாற்று முறையாவணச் சட்டத்திலும் சேர்க்கப்பட்டுள்ளது.

இணைக்கோடிடல் இருவகைப்படும். அவை

(1) பொதுவான முறையில் குறுக்குக் கோடிடல் (General Crossing)

(2) தனியான முறையில் குறுக்குக் கோடிடல் (Special Crossing)

பொதுவான முறையில் குறுக்குக்கோடு இடுவதின் மூலம் அக் காசோலைக்கு வங்கியில் கொணர்பவர் கையில் பணம் செலுத்த வேண்டாமென்றும், ஒரு வங்கி மூலமே அதைச் செலுத்த வேண்டுமென்றும் வங்கியருக்கு நெறிப்படுத்துவதாகும். இவ்வாறு குறுக்குக்கோடு இடுவதால் "மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதல்ல" (Not Negotiable) என்னும் சொற்கள் சேர்க்கப் பட்டாலன்றி, அது மாற்றுதல் தன்மையை இழப்பதில்லை.

தனியான முறையில் குறுக்குக் கோடிடலில் எந்த வங்கிக்குக் காசோலை வரையப்பட்டதோ அந்த வங்கியானது, அந்தக் குறுக்கு இணைக் கோட்டிற்குள் எந்த வங்கியின் பெயர் தனியாகக் குறிக்கப்பட்டுள்ளதோ, அந்த வங்கியல்லாமல் மற்றொருவருக்குச் செலுத்திட முடியாது. எனவே பொதுவான முறையில்

குறுக்குக் கோடிடலில் காசோலையின் உடைமைவுரிமையர் தான் வங்கியொன்றில் கணக்கு வைத்திருந்தால் அன்றிப் பணத்தைப் பெறமுடியாது ; அவ்வாறே அத்தகு கணக்கு வைத்திருக்கிற ஒரு நபருக்கு மாற்றிக் கொடுக்கவும் முடியாது. தனியான முறையில் குறுக்குக் கோட்டினை இட்டு விட்டால் காசோலையின் உடைமை உரிமையர், எந்த வங்கியின் பெயரானது இணைக் கோட்டிற்குள் குறிக்கப்பட்டுள்ளதோ அந்த வங்கியுடன் கணக்கு வைத்திருக்க வேண்டும், அல்லது அந்த வங்கியுடன் கணக்கு வைத்திருக்கிற நபரொருவருக்கு அதை மாற்றிக் கொடுத்திட வேண்டும்.

**"பெற்றுக்கொள்பவரின் கணக்குக்கு" (Account Payee)**

சில காசோலைகளில் "பெற்றுக் கொள்பவரின் கணக்குக்கு" அல்லது 'பெற்றுக் கொள்பவரின் கணக்கிற்கு மட்டும்' என்னுஞ் சொற்கள் குறுக்குக் கோடிடலுடன் சேர்த்து எழுதப்படுவதைப் பார்க்கிறோம். அந்தச் சொற்களைச் சேர்ப்பதனால், அதனை மாற்றும் தன்மை தடை செய்யப்படுவதில்லை. ஆனால் அதன் உண்மையான நோக்கம் என்னவென்றால், திருட்டு அல்லது இழப்பிலிருந்து வரைபவரைக் காப்பாற்றுவது தான். இந்தச் சொற்கள் எதைக் குறிக்கின்றன என்றால், பெற்றுக்கொள்கின்ற வங்கியானது பெறுகின்றவரின் கணக்கை வைத்திருக்கிற வங்கிற்கு மட்டுமே காசோலையிலுள்ள பணத்தைச் செலுத்த வேண்டுமென்று வரைபவர் விரும்புவதைத்தான். ஆனால் ஒரு வங்கியானது மற்றொரு வங்கியின் சார்பாகக் காசோலை ஒன்றைத் திரட்டிப் (Collection) பணமாக்குகிறது என்றால், அந்த வங்கியானது காசோலையின் அந்தப் பணத்தைப் பெறுபவரின் கணக்கில் சேர்க்கிறதா என்று பார்க்கவேண்டிய கட்டாயம் கிடையாது.

**பொதுவான முறையில் குறுக்குக் கோடிடப்படும் காசோலைகள்**

இவற்றைப் பற்றி பிரிவு 123 பின்வருமாறு வகுத்துரைக்கின்றது.

"ஒரு காசோலையானது அதன் முகப்பிற்கு மேல் குறுக்காக "... & பங்கமைப்பு" என்னும் சொற்களைக் கொண்டிருந்தாலோ, அதன் சுருக்கம் எதனையும் இரு இணைக்கோடுகளுக்கிடையே கொண்டிருந்தாலோ, வெறுமனே இரண்டு இணைக்கோடுகளை (Parrel Transverse lines) மட்டுமே கொண்டிருந்தாலும் அஃதாவது "மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதன்று" என்னுஞ் சொற்களுடனே அன்றி அவை இல்லாமலோ, அச் சேர்க்கையானது ஒரு குறுக்குக் கோடிடல் என்று கொள்ளப்படல் வேண்டும் ; அந்தக் காசோலையைக் "குறுக்குக் கோடிடப்பட்டது என்று கொள்ளுதல் வேண்டும்."

எனவே பொதுவான முறையில் ஒரு குறுக்குக் கோடிடல் என்பதைப் பின்வரும் ஐந்து வழிகளில் எந்த வழியேனும் செய்திடலாம். அவை யாவன:

(1)



(2)




(3)




(4)



(5)

—பெற்றுக் கொள்பவரின் கணக்கிற்கு—
மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதன்று

ஆனல் குறுக்குக் கோடிடல்களிலேயே மிகவும் எளிமையான வழி, இரண்டு இணையான கோடுகளைக் காசோலையின் முகப்பின் மீது இடது மூலையின் குறுக்கே இடுதல்தான். எனவே ஒரே ஒரு கோடு மட்டும் இட்டாலோ; இணைக்கோடுகளின்று "மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதன்று" அல்லது "பெற்றுக் கொள்பவரின் கணக்கிற்கு" என்னும் சொற்கள் மட்டுமே எழுதப்பட்டாலோ, அவை காசோலையைக் குறுக்கிணைக் கோடிட்டதாக ஆகா.

**தனியான முறையில் குறுக்குக் கோடிடப்பட்ட காசோலை**

இதைப்பற்றிப் பிரிவு 124 பின்வருமாறு கூறுகிறது :

"ஒரு காசோலையானது, வங்கியரின் பெயருடன் சேர்த்து "மாற்றிக் கொடுக்கப்படக் கூடியது அன்று" என்னும் சொற்களுடனே; அவை இல்லாமலோ, அதன் முகப்பின் மீது குறுக்கே பெற்றிருக்குமாயின், அந்தச் சேர்க்கையைக் குறுக்குக் கோடிடலாகக் கொள்ளப்படல் வேண்டும். ' அந்தக் காசோலையையும் தனியான முறையில் குறுக்குக் கோடிடப்பட்டதாகக் கொள்வதுடன், அந்த வங்கியருக்குக் குறுக்குக் கோடிடப்படலும் வேண்டும்."

இந்தத் தனியான முறைக் குறுக்குக் கோடிடலில் இரண்டு இணைக்கோடுகள் இன்றியமையாதவையல்ல. ஆனல் நடைமுறை வழக்கத்தில் அவ்வாறு கோடிடப்படுதல் உண்டு. எனினும் முக்கியமாக என்ன தேவை என்றால், எந்த வங்கியருக்கு அது செலுத்தப்பட வேண்டுமோ அந்த வங்கியரின் பெயரைக் காசோலையின் மீது குறுக்கே எழுதப்பட வேண்டுமென்பதுதான்.

காட்டாக, தனியான முறை குறுக்குக் கோடிடலைப் பின்வரும் வழிகளில் எவ்வகையிலேனும் செய்திடலாம் :

(1)

ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா,
சென்னை.

(2)

ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா, சென்னை.

(3)

—பெற்றுக் கொள்பவரின் கணக்கிற்கு—
ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா, சென்னை.

(4)

—மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதன்று—
ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா, சென்னை.

**வழங்கியதற்குப் பிறகு குறுக்குக் கோடிடல்**

கருநிலைத் திருத்தங்களைக் குறித்த விதிக்கு, பிரிவு 125 ஒரு விலக்கு என்பதை முன்னரே கண்டோம். பிரிவு 125 என்ன கூறுகிறது என்று பார்ப்போம்.

"காசோலை ஒன்று குறுக்குக் கோடிடப்படாமல் இருந்தால் அதன் உடைமைவுரிமையர் அதைப் பொதுவான முறையிலோ தனியான முறையிலோ குறுக்குக் கோடிடலாம்.

ஒரு காசோலையானது பொதுவான முறையில் குறுக்குக் கோடிடப்பட்டால், அதன் உடைமைவுரிமையர் தனியான முறையில் அதன் மீது குறுக்குக் கோடு இடலாம்.

ஒரு காசோலையானது பொதுவான முறையிலோ தனியான முறையிலோ குறுக்குக் கோடிடப்பட்டிருப்பின், அதன் உடைமையுரிமையர் "மாற்றிக் கொடுக்கப்படக் கூடியது அன்று" என்னும் சொற்களைச் சேர்த்திடலாம்.

ஒரு காசோலையானது தனியான முறையில் குறுக்குக் கோடிடப் பட்டிருப்பின், எந்த வங்கியருக்கு அது எவ்வாறு இடப்பட்டதோ அந்த வங்கியரானவர் மற்றொரு வங்கியருக்கோ தனது முகவருக்கோ, அப் பணத்தைத் திரட்டுவதற்காகத் தனியான முறையில் மீண்டும் அதன் மீது குறுக்குக் கோடிடலாம் (பிரிவு 125).

ஒரு காசோலையானது தொடக்கத்தில் குறுக்குக் கோடிடப் படாதிருந்து, பின்னால் உடைமையுரிமையரால் அவ்வாறு செய்யப் பட்டிருப்பின் (அஃதாவது பொதுவான முறையிலோ, தனியான முறையிலோ) அது பாதிக்கக் கூடிய ஒரு கருநிலைத் திருத்த

மாகாது. ஆனால் ஒரு முறை அவ்வாறு குறுக்குக் கோடிடப்படின், அது காசோலையின் கருநிலைப் பகுதியாகும். எனவே அதனை திருத்துவது என்பது மேற்கண்டவாறு செய்தாலன்றிப் பாதிக்கக் கூடிய கருநிலைத் திருத்தமாகும்.

ஒரு காசோலையைத் தனியான முறையில் குறுக்குக் கோடிடல் என்பதை ஒரே ஒரு முறைதான் (அஃதாவது வங்கியருக்கு அது எவ்வாறு செய்யப்பட்டால் அவர் தனியான முறையில் மற்றொரு வங்கியருக்கு அல்லது தன் முகவருக்குத் திரட்டுவதற்காகக் குறுக்குக் கோடிடலாம் என்பதைத் தவிர்த்து) செய்திடமுடியும்.

இங்கிலாந்தில் குறுக்குக் கோடிடப்படாத அல்லது பொதுவான முறையில் குறுக்குக் கோடிடப்பட்ட காசோலையானது அதில் கண்ட பணத்தைத் திரட்டுவதற்காக வங்கியருக்கு அனுப்பப்படும்போது, அவ் வங்கியரானவர் அதைத் தன் பெயருக்கே தனியான முறையில் குறுக்குக் கோடிட்டுக் கொள்ளலாம். வங்கியின் கணக்கெழுத்தர்கள் மோசடி ஏதும் செய்துவிடாமல் தடுத்துக் கொள்ளவே இம்முறை அங்குப் பின் பற்றப் படுகிறது.

அங்குள்ள மாற்றுச் சீட்டுகள் சட்டத்தின் பிரிவு 77(6), இதற்கு வகை செய்திருக்கிறது. ஆனால் இந்தியச் சட்டத்தின்படி, திரட்டுகின்ற பணியை ஏற்றுள்ள வங்கியரானவர், அவரே முறை ஆவணத்தின் உடைமையுரிமையராகவும் இருந்தாலன்றி அவ்வாறு செய்திட முடியாது.

**குறுக்குக் கோடிடப்பட்ட காசோலைகளுக்குப் பணம் செலுத்தல்**

பிரிவு 126 பின்வருமாறு கூறுகிறது:

"காசோலை ஒன்று பொதுவான முறையில் குறுக்குக் கோடிடப் படின், எந்த வங்கியருக்கு அது வரையப்பட்டதோ அவர், அதை மற்றொரு வங்கியர் அல்லாத மற்ற எவருக்கும் செலுத்துதல் கூடாது."

"காசோலை ஒன்று தனியான முறையில் குறுக்குக் கோடிடப் படின் எந்த வங்கியருக்கு அது வரையப்பட்டதோ அவ்வங்கியர் எந்த வங்கியருக்கு அவ்வாறு இது இடப்பட்டுள்ளதோ அவருக்கோ அவரது முகவருக்கோ (அதில் கண்ட பணத்தைத் திரட்டும் பொருட்டு) அல்லாமல் வேறு வழியில் செலுத்துதல் கூடாது".

**ஒரு முறைக்கு மேற்பட்டுத் தனியான முறையில் குறுக்குக் கோடிடப் பட்ட காசோலைக்குப் பணம் செலுத்துதல்**

காசோலை ஒன்றன் மீது ஒரு முறைக்கு மேலாகத் தனியான முறையில் குறுக்குக் கோடிடக் கூடாது என்று முன்னரே

கண்டோம். அவ்விதி மீறப்படுகின்றபோது விளைவு என்ன? அதற்குப் பிரிவு 127 பின் வருமாறு விளக்கம் தருகிறது :

"ஒரு காசோலையானது ஒன்றுக்கு மேற்பட்ட வங்கியருக்குத் தனியான முறையில் குறுக்குக் கோடிடப்பட்டால் (திரட்டும் பொருட்டு முகவர் ஒருவருக்கு அவ்வாறு இடப்பட்டனுப்புவதைத் தவிர்த்து) எந்த வங்கியருக்கு அது வரையப்பட்டதோ அவ் வங்கியர் அதற்குப் பணம் செலுத்த மறுத்தே ஆகவேண்டும்".

**குறுக்குக் கோடிடப்பட்ட காசோலைக்கு உரியமுறையில் பணம் செலுத்துதல்**

திறந்த ஒரு காசோலைக்குப் பணம் செலுத்துவது போன்று வங்கியர் உரியமுறையில் பணம் செலுத்துகிறபோதும், அவர் கடப்பாட்டிலிருந்து விடுபடுகிறார். குறுக்குக் கோடிடப்பட்ட காசோலையைப் பொறுத்துங் கூட, உரியமுறையில் அதற்குச் செலுத்துகிறபோது அவர் கடப்பாட்டிலிருந்து அறவே விலக்குப் பெறுகிறார். ஆனால் பிரிவு 128-ல் கண்ட வகையங்களை நிறைவு செய்தால்தான், அது உரியமுறையில் செலுத்தப்பட்டதாகக் கொள்ளப்படும்.

**குறுக்குக் கோடிடப்பட்ட காசோலை ஒன்றிற்கு உரியமுறையில் அல்லாமல் பிறவாறாகச் செலுத்தல்**

"ஒரு வங்கியருக்கல்லாமல் பொதுவான முறையில் குறுக்குக் கோடிடப்பட்ட காசோலைக்கு, அல்லது எந்த வங்கியருக்கு அவ்வாறு இது இடப்பட்டதோ அந்த வங்கியர் அல்லது அவருடைய முகவருக்கு பணத்தைத் திரட்டும் பொருட்டு தனியான முறையில் குறுக்குக் கோடிடப்பட்ட காசோலைக்கோ, பணம் செலுத்துகிற வங்கியரானவர், அவ்வாறு செலுத்தப் பட்டதனால் ஏற்படும் எந்த இழப்பினுக்கும் காசோலையின் உண்மையான உரிமையாளருக்குக் கடப்பாடு உடையவராவார்" (பிரிவு 122).

**"மாற்றிக் கொடுக்கப்படக் கூடியது அன்று" என்னுஞ் சொற்களைக் கொண்ட காசோலை.**

இச் சொற்களைக் காசோலை ஒன்று கொண்டிருப்பதன் விளைவு என்னவென்றால், காசோலையானது மாற்றிக் கொடுக்கப்பட முடியாததாவதுதான். அஃதாவது மேற்குறிப்பாளி அதுபோது அதன் மேற்குறிப்பாளரைவிட மேம்பட்ட உரிமைத்தகுதி பெற முடியாது. ஆனால் அதனால் மேற்குறிப்பே செய்திட முடியாது என்று பொருளன்று. மேற்குறிப்பாளியின் நிலை எதுவாக இருக்கு

மெனில், நீதி மன்ற நடவடிக்கை மூலம் மட்டுமே வலியுறுத்திப் பெறக்கூடிய ஒரு கோருரிமையை உரிமை மாற்றடைவாகப் பெற்றவரது நிலையதாகவே இருக்கும்.

**பணம் திரட்டுகின்ற வங்கியரின் கடப்பாடு**

காசோலைகளின் மீது குறுக்குக் கோடு இடப்படுவதனுல் தங்களது வாடிக்கையாளர்களுக்காக, அக் காசோலைகளின் பணத்தைத் திரட்டுகின்ற கூடுதலான ஒரு கடமை வங்கியருக்கு ஏற்பட்டுள்ளது. இப்படியிருக்கையில் காசோலையின் உடைமை உரிமையர் உண்மையான உரிமையாளராக இல்லாதபோது நல்ல எண்ணத்துடன் அதைத் திரட்டுகின்ற வங்கியின் நிலை என்ன?

பொதுவான சட்டத்தின் கீழ், அவ்வாறு திரட்டுகிறவர், உண்மையான உரியவருக்கு இழப்பீடு செலுத்த வேண்டிவரும். எனவே இந்த நிலையிலிருந்து பெயரவரான வங்கியரைப் பாது காக்க, அப் பொதுச் சட்டமே இதற்கும் பொருந்துமாறு செய்யப்பட்டுள்ளது.

ஆனுல் ஒன்று, அத்தகு காசோலைகள் வங்கியரின் உடைமைக்கு வருவதற்கு முன்பே, அவ்வாறு குறுக்குக் கோடிடப்பட்டிருக்க வேண்டும். அக் காசோலைகளைப் பெற்றுக் கொண்டதற்குப் பிறகு அவ்வாறு தான் குறுக்குக் கோடிட்டுக் கொள்ளும் வங்கிக்கு அந்தப் பாதுகாப்பு கிடையாது. இது பிரிவு 131-ல் விளக்கப் படுகிறது.

புதிதாகச் சேர்க்கப்பட்ட பிரிவு 131A ஆனது, குறுக்குக் கோடிட்ட காசோலைகள் தொடர்பான வகையங்களை, வரைவு களுக்கும் பொருந்தச் செய்துள்ளது.

ஒரு முக்கியமான கூறுதனைக் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும். அஃதாவது அவ்வாறு திரட்டுகின்ற வங்கியரானவர், கவனமின்மை இல்லாமல் செயற்பட்டிருக்க வேண்டும்.

கவனமின்மையை (Negligence) நிர்ணயிப்பது என்பது அந்தந்த வழக்கின் கூறுகளைப் பொறுத்து வேறுபடுவதாகும். எந் தெந்த வகைகளில் வங்கி கவனமின்மையாக இருந்துள்ளது என் பதைப் பின்வரும் வழக்குகளில் முடிவு செய்யப்பட்டுள்ளது.

(1) வாடிக்கையாளரது அடையாளக் குறிப்பு (Identify) அவரது வேலை அல்லது எவரிடம் அவர் வேலை செய்கிருர் போன்ற விவரங்களை விசாரித்தறியாமலே, வங்கியானது கணக்கு ஒன்றைத் துவக்க அனுமதித்தால், அது வங்கியின் கவனமின்மையாகும்.

ஹாம்ஸ்ட்டெட் கார்டியன்சுக்கும் பார்க்ஸ்லேஸ் வங்கிக்குமிடையேயான வழக்கு (1923, 39 TLR 229)

(2) தனது வாடிக்கையாளரின் முதலாளியானவர் மூன்றுவது தரப்பினர் ஒருவருக்கு அல்லது கொணர்பவருக்கு வரைந்த காசோலை ஒன்றைத் தனது வாடிக்கையாளருக்காக, அவருக்குக் காசோலைக்குள்ள உரிமையைப்பற்றி விசாரிக்காமலேயே, அக் காசோலையின் பணச் செலுத்தத்தை வங்கியானது பெற்றுக் கொண்டால் அது வங்கியின் கவனமின்மைதான் என்று லாயிட்ஸ் வங்கிக்கும் சவோரிக்குமிடையேயான வழக்கில் (1933 AC 201) தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

(3) காசோலை ஒன்று தன் வாடிக்கையாளர் வகிக்கும் பதவிப் பெயரில் (Designation) வரையப்பட்டிருந்தாலோ, அவரது முதலாளியின் பெயருக்கு வரையப்பட்டிருந்தாலோ, அதற்குத் தனது வாடிக்கையாளருக்குள்ள உரிமைத் தகுதியைப் பற்றி விசாரித்து அறியாமலேயே, அவருக்காக அக் காசோலையின் பணச் செலுத்தத்தைப் பெறுகின்ற வங்கியானது கவனமின்மை யாகச் செயற்பட்டுள்ளதாக அண்டர்வுட்டுக்கும் பாங்க் ஆஃப் லிவர்பூல் அண்டு மார்ட்டின்ஸ் லிட்டுக்கும் இடையேயான வழக்கில் (1924 I. K. B. 775) தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

(4) ஒரு மூன்றும் தரப்பினருக்குக்காகத், தன் வாடிக்கை யாளரானவர் தன் சொந்தப் பெயருக்கே வரைந்து கொண்ட காசோலை ஒன்றன் பணச் செலுத்தத்தை, அதற்குத் தன் வாடிக்கையாளருக்குள்ள உரிமைத் தகுதி பற்றி விசாறித்தறி யாமல். வங்கியானது பெற்றுக்கொண்டால், அது கவனமின்மை யின் செயல்தான் என்று மாரிசனுக்கும் லண்டன் கவுண்ட்டி அண்டு வெஸ்ட்மினிஸ்டர் வங்கிக்குமிடையேயான வழக்கில் (1914 3 K. B. 356) தீர்ப்புரைக்கப்பட்டது.

(5) அவ்வப்போது தன் வாடிக்கையாளரது கணக்கைக் கவனித்து அது சரியானதாக உள்ளதா அல்லது சந்தேகத்திற்கிட மிருக்கிறதா என்று வங்கியானது கவனித்துவரத் தவறிவிட்டால் அஃது ஒரு வகைக் கவனமின்மைச் செயல்தான் என்று லாயிட்ஸ் வங்கிக்கும் சார்ட்டர்ட் பாங்க் ஆஃப் இந்தியாவுக்கும் இடையேயான வழக்கில் (1929 I K. B. 40) தீர்ப்புரைக்கப்பட்டுள்ளது.

(6) காசோலை ஒன்றில் "பெற்றுக் கொள்பவரின் கணக் கிற்கு" என்பன போன்ற சொற்கள் இருப்பதைக் கவனிப்பதனைப் புறக்கணித்து விட்டு, அவர் இல்லாத மற்றொரு நபரின் கணக்

கிற்குத் தொகையைப் பெற்றுக் கொள்கின்ற வங்கியானது கவன மின்மை உடையதாகும்.

(7) ஒரு பங்கமைப்புக்குச் செலுத்தப்பட வேண்டிய காசோலை ஒன்றன் தொகையை அதன் நிருவாக இயக்குநரின் (Managing Director) தனிப்பட்ட கணக்கில் வங்கி சேர்க்கு மாயின், அஃதும் ஒரு கவனமின்மையால் ஏற்படும் செயல் தான்.

(8) காசோலையில் எழுதப்பட்டுள்ள பெறுபவரின் பெயருக்கும், மேற்குறிப்பில் எழுதப்பட்டுள்ள பெறுபவரின் பெயருக்குமிடையே உள்ள வித்தியாசத்தை வங்கியானது கவனிக்கத் தவறுமாயின் அதுவும் கவனமின்மை செயலென்றே கொள்ளப்படும்.

பிரிவு 131-க்கு விளக்கவுரை ஒன்று 1922-ல் சேர்க்கப் பட்டது. இதன்படி தற்போதைய நிலை என்னவென்றால், வாடிக்கையாளர் ஒருவர் பணம் திரட்டும் பொருட்டு தனது வங்கியில் காசோலையைச் செலுத்துகிறபோது. அக் காசோலையின் பணத்தைத் திரட்டுவதற்கு முன்பே, வாடிக்கையாளரது கணக்கில் அத்தொகையை வங்கியானது சேர்ப்பதாலேயே மதிப்புத் தருவதற்காக உடைமைவுரிமையராக ஆன வங்கியை அது ஆக்கி விடுவதில்லை.

ஆனால் ஒன்று, பணத்தைத் திரட்டுவதற்கு முன்பே, தன் காசோலைகளின் மீது பணத்தை எடுக்க வாடிக்கையாளர் அனுமதிக்கப்பட வேண்டும் என்னும் ஓர் உடன்படிக்கை யிருப்பின் அதன்படி வங்கியானது நடக்க வேண்டும்.

அப்போதுதான் அது வங்கியை, மதிப்புத் தருவதற்காக அக் காசோலையின் உடைமைவுரிமையராக ஆக்கும். (அண்டர் வுட்டுக்கும் பார்க்லேஸ் வங்கிக்கு மிடையேயான வழக்கு (1924 I. K. B. 799).

இந்தியச் சட்டக் குழுவின் பரிந்துரைகள்.

இந்தியச் சட்டக் குழு தனது 11-வது அறிக்கையில் (26-9-1958) இம் முறையாவணங்கள் சட்டங்குறித்துப் பல்வேறு பரிந்துரைகளைச் செய்துள்ளது. இந்தச் சட்டத்தில் செய்யப்பட வேண்டிய பல திருத்தங்களைப் பற்றி அப் பரிந்துரைகள் அமைந்துள்ளன.

# வழக்குப் பட்டியல்

## (TABLE OF CASES)

### A



### B

C



D

E



F



G

I



J



K



L

M



N

## O



## P



## R

S



T

## U



## V



## W

# மேற்கோள் நூல் பட்டியல்

## (BIBILOGRAPHY)

1. The Law of Contract — G. C. Chesire & C. H. S. Fifoot

2. Anson's Law of Contract – Edited by A. G. Guest

3. Pollock & Mulla—On Indian Contract and Specific Relief Acts — Edited by Jeevan Lal Kapur

4. The Indian Contract Act — Noshirvan H. Jhabvala

5. Handbook on Contracts & Negotiable Instruments — E. Venkatesam

6. Case Book on The Law of Contract — G. M. Sen

7. Pollock & Mulla—On The Sale of Goods Act and The Partnership Act — Denis Nowell Pritt

8. Law Lexicon

# கலைச்சொற்கள்

(ஆங்கிலம்—தமிழ்)

## A

Ab initio — அடிமுதலே
Absolute — முழுமையான ; நிபந்தனையற்ற
Acceptance — ஏற்பு
Accepted — ஏற்கப்பட்டது
Acceptor — ஏற்பவர்
Acceptor for Honour — மதிப்பு தருவதற்காக ஏற்பவர்
Access — அணுகும் வாய்ப்பு
Accomodation bill — உதவி புரிவதற்கான சீட்டு
Accord and Satisfaction — ஒத்திசையும் உளநிறைவும்
Account — பற்றுவரவுக் கணக்கு
Account Payee — பெற்றுக் கொள்பவர் கணக்கு
Account Settled — கட்டிய கணக்கு ; ஒப்பிய கணக்கு
Account Stated — காட்டிய கணக்கு
Accretion — நிலச் சேர்மானம் ; நிலச்சேர்வு
Acquired — கொண்டடையப் பெற்ற
Acquisition (of Land) — நில எடுப்பு
Act — செயல் ; செய்சட்டம் ; இயந்திய சட்டம்
Act of God — தெய்வச் செயல்
Actio Personalis Moritur Cum Persona — ஆள் நிலை வழக்கு ஆளுடன் மடியும்
Actionable Claim — தொடர்தகு பாத்தியம்
Actual — நடைமுறையிலான
Adjudication — நீதித் தீர்ப்பு
Admission — ஒத்தேற்பு
Advance — முன் பணம்
Advocate — வழக்கறிஞர் ; அட்வகேட்
After sight — கண்ட பிறகு
Agent — முகவர் ; ஏஜெண்ட்
Alien — அன்னிய நாட்டவர்

| | |
|---|---|
| Alienation | — மாற்றுக்கம் |
| Ambassador | — தூதர் |
| Ambiguous | — தெளிவற்ற |
| Antecedent debt | — முன்னமே இருந்து வந்த கடன் |
| Ante-Dated | — முன் சென்ற தேதி |
| Appeal | — மேன்முறையீடு |
| Arrears | — நிலுவை |
| Articles of Association | — செயல் முறை விதிகள் |
| Ascent | — ஏறுமுறை |
| Ascertained | — அறுதி செய்யப்பெற்ற |
| Assembly | — சட்டம் ; அவை |
| Assets | — சொத்திருப்பு |
| Assign | — உரிமை மாற்று |
| Assignability | — மீளா மாற்றுரிமை செய்வது |
| Assignment | — மீளா மாற்றுரிமை |
| Auction | — ஏலம் |

## B

| | |
|---|---|
| Bailee | — ஒப்படை பெறுபவர் |
| Bailment | — ஒப்படைவு |
| Balance sheet | — ஐந்தொகை |
| Bank Draft | — வங்கி வரைவு |
| Banker | — வங்கியர் |
| Banking | — வங்கியல் |
| Bank Notes | — வங்கிச் சீட்டுகள் |
| Bankrupt | — நொடிப்பு நிலையர் ; இன்சால் வென்ட் |
| Bearer | — கொணர்பவர் |
| Benami transactions | — மற்றொருவர் பெயரில் செய்யும் காரியங்கள் |
| Bench Full | — முழு ஆயம் |
| Beneficial Interest | — பயன் பெறும் பாத்தியதை |
| Beneficiary | — பயனுளி |
| Bid | — ஏலம் கேட்டல் |
| Bills of Exchange | — மாற்றுச் சீட்டு |
| Bill in sets | — தொகுப்புச் சீட்டுகள் |
| Blank Endorsement | — வெற்று மேற்குறிப்பு |
| Bonafide | — நல்ல நோக்கத்துடன் |
| Breach of Covenant or Contract | — ஒப்பந்த மீறுகை |
| Burden | — பொறுப்புச் சுமை |

# C

| | | |
|---|---|---|
| Carrier | — | சரக்கேற்றி |
| Cash | — | பணம் |
| Cancellation | — | ரத்து செய்தல் |
| Cause of Action | — | வாக்கு மூலம் |
| Caveat Emptor | — | வாங்குபவனே விழித்திரு |
| Certain | — | நிச்சயமான |
| Cestui Que Trust | — | பொறுப்புரிமைப் பயனாளி |
| Champerty and Maintenance | — | பங்குவிழை வழக்குதவி |
| Charge | — | குற்றச்சார்த்து |
| Cheque | — | காசோலை |
| Chose in Action | — | வழக்குரிமைப் பொருள் |
| Chose in Possesion | — | கையுரிமைப் பொருள் |
| Claim | — | பாத்தியதை ; கோருரிமை |
| Client | — | கட்சிக்காரர் |
| Coercion | — | வலுக்கட்டாயம் |
| Collateral Security | — | துணைப் பிணையம் |
| Collection | — | பணத்தைத் திரட்டுதல் |
| Commision | — | தரகு |
| Common Law | — | இயற்றாச் சட்டம் |
| Company | — | நிறுமம் |
| Compensation | — | நிறையீடு |
| Competent | — | தகுதி வாய்ந்த |
| Completed | — | முற்றுப் பெற்ற |
| Composition | — | கடன் தீர்வு உடன்பாடு |
| Compromise | — | ஒத்திசைவு |
| Concealment | — | மறைவடக்கம் |
| Conciliation | — | இசைவிணக்கம் |
| Condition, Precedent | — | முன் நிபந்தனை |
| Condition, Subsequent | — | பின் நிபந்தனை |
| Conditional | — | நிபந்தனைக்குட்பட்டு |
| Confirmation | — | உறுதியாக்கம் |
| Consensus Ad Idem | — | கருத்தொருமை |
| Consent | — | இசைவு |
| Consideration | — | மறு பயன் |
| Constructive | — | கொள் நிலையான |
| Contingent | — | நிகழ்வடைவான |
| Contract | — | ஒப்பந்தம் |
| Contract, Contingent | — | நிகழ்வுசார் ஒப்பந்தம் |

Contract, Bilateral — இருதலை ஒப்பந்தம்
Contract, Unilateral — ஒருதலை ஒப்பந்தம்
Contract, Express — வெளிப்படை ஒப்பந்தம்
Contract, Implied — உட்கிடை ஒப்பந்தம்
Contract, Executory — நிறைவேற்ற வேண்டிய ஒப்பந்தம்
Contract, Executed — நிறைவேறிய ஒப்பந்தம்
Contract, Severable — பிரி நிலை ஒப்பந்தம்
Contract, Void — இல்லா நிலை ஒப்பந்தம்
Contract, Voidable — தவிர்தகு ஒப்பந்தம்
Contract for Sale — விற்பனைக்கான ஒப்பந்தம்
Contract of Guarantee — பொறுப்புறுதி ஒப்பந்தம்
Contract of Indemnity — ஈட்டுறுதி ஒப்பந்தம்
Contractor — ஒப்பந்தப் பணியர்
Contribution (To Mortage Debt) — அடைமான விகிதப் பொறுப்பு
Conversion — மாற்றுதல்
Conveyance — மாற்றளிப்பு
Corporation — கூட்டுரு
Corporation Aggregate — கூட்டுருக் குழுமம்
Corporation Sole — கூட்டுருத் தனிமம்
Corporeal — பருவியலான
Counter-Claim — எதிர் பாத்தியம்
Covenant — வரைமொழி உடன்பாடு
Creditor — கடன் கொடுத்தவர்
Crossing — குறுக்குக் கோடிடல்
Custom — வழக்கம்

## D

Damages — இழப்பீடு
Days of Grace — மேற்கொண்டு அனுமதிக்கப் படும் நாட்கள்
De Facto — நிகழ்வு நிலை
Debentures — கடனீட்டுப் பத்திரங்கள்
Debt — கடன்
Debtor — கடனாளி
Decree — தீர்ப்பாணை
Deed — ஒப்பாவணம்
Defect, Latent — உட்கிடைக் குறைபாடு
Defect, Patent — வெளிப்படைக் குறைபாடு

| | | |
|---|---|---|
| Dejure | — | சட்டநிலை |
| Delegatus Non Potest Delegare | — | அளிப்படைவு அதிகாரத்தை மீட்டளிக்க இயலாது |
| Delivery | — | உடைமை ஒப்படைப்பு |
| Demand | — | உரிமைக் கேட்பு |
| Demand Draft | — | உரிமைக் கேட்பு வரைவு |
| Deposit | — | வைப்புத் தொகை |
| Director | — | இயக்குநர் |
| Discharge | — | விடுவிப்பு |
| Discretion | — | விடுவிப்புத் தேர்வு ; உளத் தேர்வு யுக்தம் |
| Dishonour | — | மதிப்பு மறுத்தல் |
| Dishonour by payment | — | செலுத்தாமை வழி மதிப்பு மறுத்தல் |
| Designation | — | பதவிப் பெயர் |
| Dissolution | — | கலைப்பு |
| Dividend warrent | — | இலாபப் பங்குரிமைச் சீட்டு |
| Document | — | ஆவணம் |
| Draft | — | வரைவு |
| Drawee | — | பெயரவர் |
| Drawee incase of need | — | தேவைப்படுங்கால் வரையப் படுபவர் |
| Drawer | — | வரைபவர் |
| Duress | — | உடற்கட்டாயம் |

## E

| | | |
|---|---|---|
| Embassy | — | தூதரகம் |
| Enactment | — | செல்சட்டம் ; இயற்றியச் சட்டம் |
| Endorsee | — | மேலெழுத்துப் பெறுபவர் |
| Endorsement | — | மேற்குறிப்பு செய்தல் |
| Enboresment in blank | — | வெற்று மேற்குறிப்பு |
| Endoresment in Full | — | முற்று மேற்குறிப்பு |
| Endorser | — | மேலெழுதுபவர் |
| Enforcement | — | செல்லுறுத்தம் செய்தல் |
| Engagements for Payments | — | செலுத்திட மேற் கொள் சீட்டு |
| Envoy | — | தூதுவர் |
| Equity | — | நேர்மை நெறி |
| Escrow | — | மூன்றும் நபரின் பாதுகாப்பில் ஒப்படைவு செய்ய உடன்பாடு |

Estate — செல்வம் ; நிலச்சொத்து
Estoppel — முரண்தடை
Evidence — சான்று ; சாட்சியம்
Exchange — பரிமாற்றம் ; பரிவர்த்தனை
Executant — நிறைவேற்றுபவர்
Execution — நிறைவேற்றம்
Executor — நிறைவேற்றாளர்
Exemption — விலக்களிப்பு
Ex Nudo Pacto Non Oritur Actio — மறுபயனில்லா ஒப்பந்தத்து உறுபயனில்லை வழக்குரிமை
Exoneration — பொறுப்பு நீக்கம்
Express — வெளிப்படை

## F

Fact — பொருண்மை
F ctitions — கற்பனையில்
Firm — நிறுமம்
Force — வன் தாக்கு
Foreign Instrument — அயல்நாட்டு முறையாவணம்
Forgery — போலிக் கையொப்பமிடல்
For Value received — பெற்றுக் கொண்ட மதிப்பினுக்காக
Fraud — மோசடி

## G

General Crossing — பொதுவான முறையில் குறுக்குக் கோடிடல்
Gift — கொடை
Gift Mortis Causa — இறக்கும்தறுவாய்க் கொடை
Good faith — நல்லெண்ணம்
Good will — வாணிக நற்பெயர்
Governed — ஆளப்பெற்ற
Government — அரசு
Guarantee — பொறுப்புறுதி ; உத்திரவாதம்
Guardian — காப்பாளர்

## H

High Court — உயர்நீதிமன்றம்
Hire-Purchase System — தவணைமுறைக் கிரயம்
Holder — வைத்திருப்பவர்

Holder for Value — மதிப்பு தந்ததன் மூலம் உடைமைவுரிமையர்
Holder in due cours — உரிய முறையில் உடைமை உரிமையர்
House of Lords — இங்கிலாந்து நாடாளுமன்ற மேலவை
Hundi — உண்டியம்

## I

Identificat on — அடையாளம் காட்டல்
Identification Parade — ஆட்காட்டணி
Identity — அடையாளக் குறிப்பு
Idiot — பிறவி மந்தன்
Ignorantia Legis — சட்டம் பற்றிய அறியாமை
Neminem Excuast (Ignorantia Legis Hand Excuast; Ignorantia Legis Non-Excuast) — மன்னிக்க இயலாது
Illegal — சட்ட முரணுன
Imovable Property — நிலையியல் சொத்து ; தாவர சொத்து
Impossiblity of Performance — நிறைவேற்ற இயலாமை
Inchoate — முற்றுப்பெருத
Incorporeal — நுண்ணியலான
Indemnity — ஈட்டுறுதி செய்
Initialling — சுருக்கொப்பமிடல்
Injunction — உறுத்துக் கட்டளை
Inland instrument — உள்நாட்டு முறையாவணம்
In Personam — நபர் சுட்டிய
Inplication — உட்கிடையாக
In Rem — பொருள் சுட்டிய
Insanity — பித்துநிலை
Insure — காப்புறுதி. செய்
In the case of — நேர்வில்
Irrevocable — முறிக்க முடியாத

## J

Jaint and Several Liability — கூட்டுத் தனித்தனி பொறுப்பு
Joint family, Hindu — இந்து கூட்டுக் குடும்பம்
Judge — நீதிபதி ; நடுவர்
Jurisdiction — அதிகார வரம்பு

## L

Lawyer — வழக்கறிஞர்
Legal Character — சட்டத்தின் தன்மை
Legal Representative — சட்டமுறைத் தெரிவாளர்
Liability — பொறுப்பு நிலை
Licence — உரிமம்
Lien — பற்றீடு ; பற்றுரிமை
Limited — வரம்பிடப்பட்ட
L quidated — அறுதியிட்ட
Liquidator — கலைப்பதிகாரி
Lucid Interval — பித்து இடைத்தெளிவு
Lunatic — பித்தர்

## M

Maintenace — ஜீவனும்சம்
Majority — உரிமை வயது
Maker — எழுதித் தருபவர்
Managing Director — நிருவாக இயக்குநர்
Marking — குறியிடல்
Maturity — முதிர்ச்சியுறல்
Medium of Payment — செலுத்தும் மூலம்
Minor — உரிமை வயதுறாதவர்
Misfeasance — முறைப்பிழை
Mistake — தவறு
Mistake of fact — பொருண்மைத் தவறு
Mistake of Law — சட்டத் தவறு
Mortgage — அடைமானம்

## N

Nationality — நாட்டுரிமை நலம்
Negligence — கவனமின்மை
Negotiable Instruments — மாற்று முறையாவணம்
Negotiablity — மீளா மாற்றுரிமை செய்வது
Negotiation — ஆவணமாற்றுதல்
Non-acceptance — ஏற்காமை
Non Est Factum, Plea of — ஆவணப்பிழை வாதம்
Non Feasance — செய்யாப் பிழை
Notary Public — சான்றுறுதி அதிகாரி
Notice (Knowledge or Cognizance) — அறிவிக்கை

Noting — மறுப்புக் குறிப்புச் செய்தல்
Not-negotiable — மாற்றிக் கொடுக்கப்படக் கூடியதன்று
Novation — புத்திடு
Nudum Pactum — வெற்றுடன்பாடு

## O

Obi'er D'ctum — தீர்ப்பின் புறவுரை
Obligation (Legal) — சட்டப் பிணைப்பு
Offer — முனைவு
Official Assignee — சொத்தாட்சி அதிகாரி
Official Receiver — வழக்குறு சொத்துப் பேணுநர்
Onerous gift — பொறுப்பிணை கொடை
Open Cheque — திறந்த காசோலை
Option — விருப்பத் தேர்வு
Ora! — வாய்வழி
Order — கட்டளைப் பெற்றவர்
Over Act — கருத்துரு செயல்
Over Draft — இருப்பதற்கு மேலாக வாங்குதல்
Over Ruled — விலக்கி
Owner — உரிமையாளர்
Ownership — சொத்துரிமை

## P

Papper Currency — தாள் நாணயம்
Partners — கூட்டாளிகள்
Parties — வழக்காடிகள்
Partnership — கூட்டாண்மை
Partnersh p (At will) — விருப்பு முறிக் கூட்டு
Pa·t Consideration — முந்தை மறு பயன்
Payer of attorney — முதலர் சார்பாகச் செல்லு அதிகாரம்
Pawn — அடகு
Pawn Broker — அடகு வாணிகர்
Payable — செலுத்தப்படலாகிய
Payee — பெறுபவர்
Payer — செலுத்துபவர்

Payment — செலுத்தம்
Percentage — விழுக்காடு
Performance — நிறைவேற்றம்
Person — நபர்
Personal Law — இன முறைச் சட்டம்
Plaintiff — வாதி
Plea — எதிர் உரை
Plead — வாதிடு
Positive Law — அரசுறுத்துச் சட்டம்
Possesion — உடைமை
Post dated — பின்வரு தேதி
Preamble — தோற்றுவாய்
Precedent — முன்தீர்ப்பு முறை
Presentment — முன்னிடல்
Presumption — துணிபு
Principal — கடன் முதல்
Principal Debtor — முதன்மைக் கடனாளி
Privity of Contract — ஒப்பந்தச் சார்புறவு
Privy Council — இங்கிலாந்தின் உச்ச நீதிமன்றம்
Promise — உறுதியுரை
Promissory Note — கடனுறுதிச் சீட்டு
Promulgation — அமுலாக்கச் சாற்றுகை
Proof — சான்றுறுதி
Proposal — புரிவுரை
Property, Corporeal — பருப்பொருட் சொத்து
Prospectus — திட்ட அறிவிப்பு
Protest — மறுத்துரை
Proved — மெய்ப்பிக்கப்பட்டது
Proviso — கூட்டுவாசகம்
Public Documents — பொது ஆவணங்கள்

## Q

Qualified — வரையுடைய
Qualified Acceptance — மாற்றியேற்பு
Quantan Meruit — பணித்தகு தொகை
Quasi Contrct — ஒப்பந்தப் போல்வு
Quid Pro Quo — மறு பயன்

## R

Rate of Exchange — மாறுகொள் வீதம்
Receipt — பற்றுச்சீட்டு
Receiver — பேணுநர்

Re-draft — மறு வரைவு
Rectification — திருத்தமைப்பு
Regulations — ஒழுங்குமுறை
Refree — குறிக்கப்படுபவர்
Relations — தொடர்புறவுகள்
Relationship — உறவு
Release — பொறுப்பு நீக்கம்
Relief — மாற்றீடு
Remedy — தீர்வழி
Renewal — புதுப்பிப்பது
Repeal — சட்ட ரத்து
Reprieve — தண்டனை நிறுத்தி வைப்பு
Repugnant — முரணான
Rescission — இறுத்தம்
Restrictive — கட்டுப்படுத்துகின்ற
Reversioner — பின்னுடைவுரிமையர்
Revocation — பின்னழிப்பு
Right — உரிமை
Rule — விதி

## S

Schedule — பின் இணைவு; பின்னிணைப் பட்டி
Scripts — மூலப் புத்திரங்கள்
Security — பிணையம்
Seller's Lien — விற்பவர் பற்றுரிமை
Set-off (Plea of) — எதிரிடை வாதம்
Settlement of Accounts — கணக்கு நிலை ஒப்பு; கட்டிய கணக்கு ஒப்ட
Share — பங்கு
Share Warrent — பங்கு உரிமைச் சீட்டு
Solicitor — சட்ட முகவர்
Soverign — இறை
Special Crossing — தனியான முறையில் குறுக்குக் கோடிடல்
Specific Performance, Doctrine of — 'ஏற்றது ஆற்றுக' எனும் கொள்கை
Specific Relief — குறித்த வகை மாற்றீடு
Stamp — ஆவண அஞ்சல் தலை
Statement — அறிக்கை

Status — தகுநிலை
Status Quio — உள்ள நிலை
Succession — உரிமை இறக்கம்
Sue — வழக்கிடல்
Suggestio Falsi — பொய்மைக் குறிப்பு
Suit — உரிமை இயல் வழக்கு
Surety — பிணையாள்

T

Tender — அளிப்பு முனைவு
Third Party — மூன்றுமவர்
Tort — உரிமைத் தீங்கு
Transfer — உரிமை மாற்றடைவு
Transferor — மாற்றிக்கொடுப்பவர்
Transmit — மேற்கொண்டு அனுப்பிவை
Treasury Bill — கருவூலச் சீட்டுகள்
Trust — பொறுப்பமைப்பு
Trustee — பொறுப்புரிமையர்

U

Uberrimae fidei — முழு நம்பிக்கையில் எழுகிற
Unconditional — நிபந்தனையற்ற
Undertaking — மேற்கொள்ளல்
Uudue influence — தகாநிலை வற்புறுத்தம்
Usage — வழக்காறு
Usance — சலுகை விடுப்புக் காலம்

V

Valid — செல்லு நிலையது
Void — இல்லா நிலையது
Voidable — தவிர்தகு

W

Wager — பகடைப் பணயம்
Waiver — உரிமை விடுப்பு
Writ — நீதிப் பேராணை

———